என்பதனாலும், " ஆழ்த்துதி யார்வமுஞ் செற்றமு நீக்கிய வச்சுதனே " (திருநூற்றந்தாதி-20) என்பதனாலும். " உவத்தல் காய்தலுன் திருவுளத்து ஒன்றும் நீ இலை" (மேருமந். 128) என்பதனாலும் நன்கு விளங்கும். இடும்பை - பிறவித் துன்பங்கள். அவை மனோ துக்கமும், ஆகந்துக துக்கமும், சரீர துக்கமும், சுவபாவ துக்கமும் என நான்காம். அவற்றுள், மனோ துக்கம் என்பது மனதில் உண்டாகும் துக்கம்; ஆகந்துக துக்கம் என்பது ஒன்றைநினைக்க அதற்கு விபரீதமாய் வேறொன்று வருவதால் உண்டாகும் துக்கம்; சரீர துக்கம் என்பது உடம்பில் உண்டாகின்ற துன்பத்தால் வரும் துக்கம்; சுவபாவ துக்கம் என்பது நரககதி, விலங்குகதி, மக்கட்கதி, தேவகதி ஆகிய நான்கு கதிகளுள் பிறக்கும் உயிர்களுக்கு அந்தந்தக் கதிகளுக்கு இயற்கையாய் உண்டாகும் துக்கம்.

" மனத்திடைப் பிறக்குந் துன்பம், வந்துறும் அவற்றின் துன்பம்,
தனுத்தனில் பிறக்கும் தன்பம், தான் இயல் பாய துன்பம்
எனச்சொலப் பட்ட நான்கும் யாவர்க்கும் ஆகும் " —(மேருமந். 473)

5. இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(இ - ள்.) : காதிவினை என்றும் அகாதிவினை என்றும் சொல்லப்படும் இரண்டு வினையுஞ் சேரா, மெய்யாய் இருக்கிற சுவாமியினுடைய கீர்த்தியை விரும்பித் தோத்திரம் பண்ணுகிறவர்களுக்கு ; (எ - று.).

(வி - ரை.) : காதிவினை - ஆன்மாவின் சுவபாவ குணங்களாகிய அநந்த ஞானம் (கடையிலா அறிவு), அநந்த தர்சனம் (கடையிலாக் காட்சி), அநந்த சுகம் (கடையிலா இன்பம்), அநந்த வீர்யம் (கடையிலா வீரியம்) என்பனவற்றை மறைக்கும் கர்மங்கள். இவை முறையே ஞான ஆவரணீயம், தரிசன ஆவரணீயம், மோஹநீயம், அந்தராயம் எனப்படும். அகாதிவினை ஆன்மா பற்பல சரீர தோற்றங்களை எடுப்பதற்கும், தேவகதி, மக்கட்கதி, விலங்குகதி, நரககதி ஆகிய கதிகளில் பிறந்து தனக்குக் குறிப்பிட்ட காலம்வரை வாழ்தற்கும், இன்ப துன்பங்களை அனுபவித்தற்கும், உயர்ந்த அல்லது தாழ்ந்த வம்சங்களில் தோன்றுவதற்கும் காரணமாம். இவை நாமகர்மம், ஆயுஷ்ய கர்மம், வேதநீயம், கோத்திரம் என நான்கு.

இருவினையும் மயக்கமாகிற இருள் நிறைந்த சம்சாரத்தில் உயிரைப் பிறக்கச் செய்தலின், அவற்றை ' இருள்சேர் இருவினை ' என்றார்.

இக்குறளிற் காணப்படும் கருத்து :

" இருள்புரி உலகஞ்சேரா இயல்நெறி பயந்த பெம்மான்
பொருள்புரி விழவுகாண்பார் புண்ணிய உலகங் காண்பார் "

என்று சூளாமணி துறவுச் சருக்கம் 27-ஆம் செய்யுளிலும்,

" இருள்புரி வினைகள் சேரா இறைவனது அறத்தை எய்தின்
மருள்செய வருவ துண்டோ வானவர் இன்பம் அல்லால் "

என்று யசோதர காவியம் 5-ஆம் சருக்கம் 46-ஆம் செய்யுளிலும் வருதல் காண்க.

"கொய்சகஞ் சேருடையு மறுசுவை யூணுமொண் பூணுமொன் ஞரைவெல்லும் படையும் படைவிழி யாருமில் லாத பரம் பரரே" (திருநூற். 48) இறைவனும். இவற்றையுடையார் மக்களிற் சிறந்தோரல்லர். ஈண்டு இறைவன் என்றது கடையிலா அறிவு முதலிய குணங்களையுடைய அருகனையே குறிக்கும். காமம், வெகுளி, மயக்கம் ஆகியவற்றை உடைய தெய்வம் உண்மைத் தெய்வமாகாது. " இறைமைக் குணங்கள் இலராயினுரை உடையரெனக்கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள்சேரா வாகலின், அவை முற்றவும் உடைய இறைவன் புகழே பொருள் சேர் புகழ் எனப்பட்டது " என்றார் பரிமேலழகரும்.

6. பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

(இ - ள்.) : மெய், வாய், மூக்கு, கண், செவி என்று சொல்லப்பட்ட ஐந்து பொறிகளை வழியாகவுடைய [1]மித்யை அறுத்தவன் சொன்ன குற்றமில்லாத நெறியிலே வழுவாமல் நடந்தவர்கள் ஒருகாலமும் அழிவில்லாமல் இருக்கிற மோக்ஷத்திலே எந்தக் காலமும் வாழ்வார்கள் ; (எ - று.).

(வி - ரை.) : பொறிவாயில் ஐந்தவித்தான் அருகக் கடவுளே. இக்கருத்து, " ஐவரை வென்றோன் " (சிலப். நாடு காண் காதை : 198), "பொறிவாயில் ஐந்தவித்த புனிதன் நீயே" (சீவசம். 1-29), " பொறிவரம் பாகிய புண்ணிய முதல்வனை " (சீவக சிந்தாமணி : 2563), " பொறியிலா அறிவன்நீ " (மேருமந். 1000) ஆகிய நூற்களிலும் வருதல் காண்க.

---

[1]மித்யை - அஞ்ஞானம். ஆசையை என்பது பாடபேதம்.

ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கநெறி - ஐம்பொறிகளையும் வென்ற அருகக் கடவுளால் உபதேசிக்கப்பட்டதும் அஹிம்ஸா தருமத்தை அடிப்படையாக உடையதும் யாதொரு குற்றமும் இல்லாததும் இல்லறம் துறவறம் ஆகிய இரண்டு பேதங்களை உடையதும் ஆன நல்லொழுக்கமாம்.

7. தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.

(இ - ள்.) : ஒரு வஸ்துவுந் தனக்குச் சரியல்லாமல் இருக்கிற ஜினேசுவரனுடைய பாதங்களைச் சேர்ந்தவர்களுக்கு மனத்தின் துக்கங்களைப் போக்கடிக்கலாம் ; சேராதவர்களுக்கு மனத்தின் துக்கங்களைப் போக்கடிக்கப் போகாது ; (எ - று.).

(வி - ரை.) : அருகக் கடவுள் [1]உபமாதீதன் ஆதலால் இக்குறளில் அவனையே "தனக்குவமையில்லாதான்" என்றார். "முனிமை முகடாய மூவா முதல்வன், தனிமைத் தலைமை தனது தான் என்ப" என்னும் சீவகசிந்தாமணி, 1609-ஆம் செய்யுளடிகளையும் நோக்குக. திருக்குறள் ஆசிரியர் என்று போற்றப்படும் ஸ்ரீ குந்தகுந்தாச்சாரியர் தாம் பிராகிருத பாஷையில் இயற்றியருளிய "சமயசாரம்" என்னும் அத்யாத்ம சாஸ்திரத்தின் ஆரம்பத்தில் கடவுள் வணக்கஞ் சொல்லும் காதையில் இறைவனை "அணோவமம்" (உவமையில்லாதவன்) என்று கூறுகின்றார். (எ)

8. அறஆழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவுஆழி நீந்தல் அரிது

(இ-ள்.) : தரும சக்கரத்தை முத்திரையாகவுடைய சினேசுவரன் பாதங்களைச் சேர்ந்தவர்களுக்குப் பிறப்பென்னுங் கடலைக் கடக்கலாம் ; சேராதவர்களுக்குப் பிறவிக் கடலைக் கடக்கப் போகாது ; (எ - று.).

(வி - ரை.) : "அறஆழி அந்தணன்" என்னும் பெயர் அருகபரமனுக்கே உரியது. ஜைன நூல்களில் இப் பெயர் அடிக்கடி வழங்கப்படுதலைக் காணலாம். "அறவாழி யண்ணல் இவனென்பர்" என்றார் சிந்தாமணியில் (சீவகசிந். 1611). "அருளோடெழும் அறவாழி

[1] உபமா அதீதன்—உவமானத்திற்கு அப்பாற்பட்டவன்; ஒப்புமையில்லாதவன்.

அப்பா" (திருநூற்-5.) என்பதையும், "அறஆழி கொண்டே வென்ற அந்தணனே" (திருநூற்-27.) என்பதையும் "தரும சக்கரத் தலைவனாக" (பஞ்சகலியாண அகவல், திருப்பாமாலை) என்பதையும் நோக்குக. பிறவுஆழி - பிறப்பாகிய கடல்; 'வேழப் பிறவும்' என்பதற்கு யானைப் பிறவியும் என்றும் (பெருங் கதை - ருச. அசு.), "பிறவாழி கரைகண் டாரே" (வில்லிபார தம்: கிருட்டிணன் தூது - 1.) என்பதற்குப் பிறவியாகிய கடலைக் கடந்தவரே என்றும் பெரியோர் பொருள் கூறியிருத்தல் காண்க.

9. கோள்இல் பொறியின் குணம் இலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

(இ-ள்.): சுவாமிக்கு எட்டுக் குணங்களாவன: அநந்த ஞானம், அநந்த தரிசனம், அநந்த வீரியம், அநந்த சுகம், நிர் நாமம், நிர் கோத்திரம், நிராயுஷ்யம், சகல சம்யக்த்வம் என்பன. இந்த எட்டுக் குணங்களையுடைய சருவக்கியன் பாதங்களை வணங்காத தலைகள் பிராணனில்லாமல் செத்துக் கிடக்கிற பிணத்தோர்டே சரி; (எ - று.).

(வி - ரை.): எண் குணத்தான் - எட்டுக் குணங்களையுடைய சித்தபரமேஷ்டி. "அஷ்ட குணசம்யுக்தன்" என்றார் வடநூலார். அருகத் பரமேஷ்டியாய் அநந்தஞானம், அநந்த தரிசனம், அநந்த வீரியம், அநந்த சுகம் ஆகிய நான்கு குணங்களுடைய பரமாத்மன் அகாதிகர்மங்களைக் கெடுத்து பரிநிர்வாண பதவியையடையும் பொழுது நிர்நாமம், நிர்கோத்ரம், நிராயுஷ்யம், சகல சம்யக்த்வம் ஆகிய வேறு நான்கு குணங்களையுமடைந்து சித்த பரமேஷ்டியா கின்றான். தமிழ்ப் பாஷையில் சிறந்த காவியங்களுள் ஒன்றாகிய சிலப்பதிகாரத்தில் "எண் குணத்தான்" என்னும் பெயர் இளங் கோவடிகளால் சித்தபர மேட்டியைக் குறிப்பதற்கு உபயோகப் பட் டுள்ளது. அவர் அந்தப் பெயரைத் தம் நூலில் கூறப்பட்டுள்ள வேறு எந்தத் தெய்வத்திற்கும் உபயோகப் படுத்தாமலிருப்பது கவ னிக்கத்தக்கது. அஃதன்றியும், இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் நாடுகாண் காதையில் சாரணர் வாயிலாகவும் கவுந்தியடிகள் வாயி லாகவும் அருகக் கடவுளைத் தோத்திரம் செய்யும் பொழுது பகவன் அறிவன், மலர்மிசை நடந்தோன், தருமமுதல்வன், தலைவன், வேத முதல்வன், பரமன், இறைவன், ஐவரை வென்றோன், பெரியவன், சுயம்பு, பண்ணவன், எண்குணன், ஆகிய பெயர்களையும் இன்னும் பல உயர்ந்த பெயர்களையும் கூறியிருத்தலை நோக்குக.

"தம்பத்தின் மேற்புழை ஏழுள ஆக்கித் தமித்து வைத்த
கும்பத்தி னேடு நிகரொக்கு மாங்குனிப் பின்றியைந்தாம்
பம்பத்தி காயம் பணித்தபி ரான்பசுந் தாமரைத்தாள்
செம்பத்தி யால்வணங் காச்சிறி யார்தஞ் சிரத்திரளே."

(திருநூற்-23.) என்பதை ஒப்பிடுக.

**10. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவனடி சேரா தவர்.[1]**

(இ-ள்) சுவாமியுடைய பாதங்களைச் சேர்ந்தவர்கள் பிறவியென்னுங் கடலைக் கடப்பார்கள்; சுவாமி பாதங்களைச் சேராதார்கள் பிறவிக்கடலைக் கடக்க மாட்டார்கள் (ஏ-று)

(வி-ரை) இறைவன்-தீர்த்தங்கரன்; ஜீவன்கள் சம்சாரமாகிற சமுத்திரத்தைத் தாண்டுவதற்கு தர்மோபதேசமாகின்ற புணையை அருளியவன், நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் ஆகிய மோக்ஷ மார்க்கத்தை அருளிய தீர்த்தங்கர பரமதேவனாகிய இறைவனுடைய பாதங்களாகிய புணையைச் சேர்ந்தவர்களே பிறவிப் பெருங்கடலை நீந்தமுடியும். சேராதவர்கள் நீந்தமுடியாதென்பதாம். "ஆழ்கடற் புணையினன்னவறிவரன் சரணடைந்தான்" (சிந்தா. 380) என்பதையும், "வேதனைக் கடலின் தனிப்புணை" (திருக். 40) என்பதையும், "வீசுடல மெறிதிறையின் மேவுகடன் மருவுபுணை" (திருக். 53) என்பதையும் நோக்குக. (கo)

கடவுள் வாழ்த்து என்னும் இவ்வதிகாரத்துள் அருகசரணமும் சித்த சரணமும் அடங்கியுள்ளனவென்றும், நீத்தார்பெருமை என்னும் அதிகாரத்துள் சாது சரணமும், அறன்வலியுறுத்தல் என்னும் அதிகாரத்துள் தரும சரணமும் கூறப்பெற்றுள்ளன என்றும் ஜைன சமயப்பெரியோர் கூறுவர். திருத்தக்க தேவரும் சீவக சிந்தாமணியுள் நான்கு சரணத்தையும் கூறுகின்றார். சீவகசிந்தாமணியின் உரையாசிரியர் ஆகிய நச்சினார்க்கினியர், "மூவா முதலா" என்னும் செய்யுளின் உரையில், "இஃது அருக சரணம், சித்த சரணம், சாது சரணம், தன்ம சரணம் என்னும் நான்கினுள், சித்த சரண" மென்றும், "செம்பொன் வரைமேல்" என்னும் செய்யுளுரையில், "இஃது அருக சரணம்" என்றும், "பன்மாண் குணங் கட்கிடனாய்" என்னும் செய்யுளுரையில், "இது தன்ம சரணமும் சாது சரணமும் கூறிற்று" என்றும் கூறியிருத்தல் நோக்கத் தக்கது.

---

[1] சேராதார் பரிமேலழகர் பாடம்.



இஃதன்றியும் திருக்குறள் ஆசிரியரான ஸ்ரீகுந்த குந்தாச்சாரியர் தாம் இயற்றியருளிய "தச பக்தி" என்னும் பிராகிருத நூலுள் இந்த நான்கு சரணங்களையே கூறியிருத்தல் கவனிக்கத் தக்கது.

அஃதாவது,

"சத்தாரி சரணம் பவ்வஜ்ஜாமி
அரஹந்த சரணம் பவ்வஜ்ஜாமி
சித்த சரணம் பவ்வஜ்ஜாமி
சாது சரணம் பவ்வஜ்ஜாமி
கேவலி பண்ணத்தோ தம்மோ சரணம் பவ்வஜ்ஜாமி"

என்பதாம்.

இந் நான்கும் மங்கள மென்கிறார்

"சத்தாரி மங்களம்
அரஹந்த மங்களம்
சித்த மங்களம்
சாஹூ மங்களம்
கேவலி பண்ணத்தோ தம்மோ மங்களம்

இன்னும் இந் நான்கும் உலகத்தில் உத்தம மானவை எனறும கூறுகின்றார்.

"சத்தாரிலோகுத்தமா
அரஹந்தலோகுத்தமா
சித்த லோகுத்தமா
சாஹூ லோகுத்தமா
கேவலி பண்ணத்தோ தம்மோ லோகுத்தமா

## 2. வான் சிறப்பு*

அஃதாவது, ஆகாசத்திலே மேகங்கள் வந்து பெய்யப் பட்ட மழையினது நன்மையைச் சொல்லுகிறோம் என்பதாம்.

**11. வானின் றுலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று.**

(இ - ள்.) : மழை, காலங்களிலே பெய்து வருகிறபடியினாலே பூலோகம் நன்றாயிருக்கும் ; ஆனபடியினால், அந்த மழை இந்த உலகத்திற்கு அமிர்தம் என்று சொல்லப்படும் (எ-று.)

(வி - ரை.) : ஈண்டு உலகம் என்பது உயிர்களை. சீவன்கள் தம்தம் வினைக்கீடாகப் பிறப்புக்களை எடுத்துச் சம்சாரத்தில் வாழ்ந்து வருதலால் அவை நிலைபெற்று வருகின்றன. அமிழ்தம் உண்டவர்கள் சாவாது நித்தியமாய் இருத்தல்போல உலகத்திலுள்ள சீவன்கள் நிலைபெற்று வாழ்வதற்கு அனுகூலமாயிருக்கின்ற மழையை அமிழ்தம் என்றார். (க)

**12. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை.**

(இ - ள்) : உண்பவர்களுக்கு உண்ணத்தக்க வஸ்துவை நல்ல உணவாக உண்டாக்கி அதை உண்கிறவர்களுக்குத் தானும் உணவாகி நிற்கும் மழை (எ-று.).

---

*வான்சிறப்பு. ஜைன சமய சம்பிரதாயப்படி இவ்வதிகாரம் நான்காவதாக இருத்தல்வேண்டும் என்று கூறுவர். அறம், பொருள், இன்பங்கள் நடத்தற்கு மழை ஏதுவாதலால் அதன் சிறப்பைக் கூறும் அதிகாரமே அறம், பொருள், இன்பங்களை விரித்துக் கூறும் இந்நூற்குப் பாயிரமாயிற்று. செந்தமிழ்மொழியில் இயற்றப்பெற்ற பழைய காப்பியம் ஐந்தனுள் முதலதாகிய சிலப்பதிகாரத்தில், திங்களையும், ஞாயிற்றையும் வாழ்த்தி, "மாமழை போற்றுதும், மாமழை போற்றுதும்" என்று மழையை வாழ்த்தியிருப்பது காண்க. சீவக சிந்தாமணியுள் திருத்தக்கதேவர், ஏமாங்கதநாட்டின அணி கூறுமிடத்து முதலில் அந்நாட்டில் பெய்யும் மழையின் சிறப்பையே கூறுகின்றார்.

(வி-ரை): தானும் உணவாகி நிற்பதாவது: தண்ணீராய்ப் பருகப்படுதல். உயிர்களது பசியை உணவுப் பொருள்களாலும் தாகத்தைத் தண்ணீராலும் நீக்குதலின், அவ்வுயிர்கள் உலகத்து நிலைபெற்று வருகின்றன. (உ)

**13. விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியன்உலகத்(து)**
**உள்நின் றுடற்றும் பசி.**

(இ-ள்.): மழை, வேண்டின காலத்திலே, பெய்யாமற் போனால், சமுத்திரம் சூழ்ந்திருக்கப்பட்ட பெரிய பூமியிலே இருக்கிற மனிதரைப் பசி வாதித்துக் கொல்லும் (எ-று.).

(வி-ரை.): உயர்திணைமனிதரைக் கூறினமையின் அஃறிணைக்கும் இஃது ஒக்கும். சமுத்திரத்தினால் பயனில்லை என்பதைக் காட்ட 'விரிநீர் வியனுலகத்து' என்றார். உணவில்லாவிடின் உயிர்கள் பசியால் இறக்கும் என்பதாம். இது மழை பெய்யாது பொய்ப்பதால் உண்டாகும் தீமை கூறுகின்றது. இதனை [1]'அநாவிருஷ்டி' என்பர் வடநூலார். மிகுத்துப் பெய்தலாகிய [2]அதிவிருஷ்டியை "கெடுப்பதூஉம்" என்னும் பாட்டில் கூறுகின்றார். (ங)

**14. ஏரின் உழாஅர் உழவர் ; புயலென்னும்**
**வாரி வளங்குன்றிக் கால்.**

(இ-ள்.): மழை பெய்யாத காலத்திலே, உழுகிறவர்கள் ஏருழுகிறதுமுதலான காரியங்களைச் செய்யமாட்டார்கள் (எ-று.).

(வி-ரை.): இதனால் உழவிற்கு மழை அவசியம் என்பது பெற்றாம். (ச)

**15. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே**
**எடுப்பதூஉம் எல்லாம் மழை.**

(இ-ள்.): பூமியிலே வாழ்கின்றவரைத் தான் அதிகமாகப் பெய்து கெடுத்தற்கும், கெட்டபேரைத் திரும்பிப் பிழைக்கத்தக்கவராகத் தான் அளவாகப் பெய்து இரக்ஷித்தற்கும் வல்லது மழை (எ-று.).

---

[1] அநாவிருஷ்டி - மழை பெய்யாமை.

[2] அதிவிருஷ்டி - மழை மிகுதியாகப் பெய்தல்.

(வி - ரை) : "பூமியிலே வாழ்கின்றவரைத் தான் பெய்யாமல் கெடுத்தற்கும் அவ்வாறு கெட்டபேரைத் தான் பெய்து உயரச் செய்வதற்கும் வல்லது மழை" என்பது கர்ணபரம்பரையான பழைய உரை. மழையே பெய்யாதபொழுது மழை கெடுக்கின்றது என்று கூறுவது பொருந்தாதன்றோ? "விண்ணின்று பொய்ப் பின்" என்னும் பாட்டில் மழை பெய்யாது பொய்த்தலின் கெடுதியைக் கூறினாராகலின் இப்பாட்டில் மிகுத்துப் பெய்தலின் கெடுதியைக் கூறுகின்றார் என்னலாம். (ரு)

**16. விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே**
**பசும்புல் தலைகாண் பரிது.**

(இ - ள்.) : ஆகாயத்திலே இருந்து மழைத்தூறல் விழுந்தால்அல்லாமல் பூமியிலே பச்சைப் புல்லைக் காண்கிறதும் அருமை (எ-று.).

(வி - ரை) : மழை பெய்யாவிடில் ஓரறிவு உயிராகிய பசும்புல்லும் தோன்றாது என்பதாம். (சா)

**17. நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் ; தடிந்தெழிலி**
**தான்நல்கா தாகி விடின்.**

(இ - ள்.) : அளவில்லாமல் இருக்கிற சமுத்திரமும் மழை பெய்யாத காலத்திலே குறைந்துபோம்; மழை பெய்தால் நிறைந்திருக்கும் (எ-று.).

(வி - ரை) : மேகம் கடலைக் குறைத்து மழையாய்ப் பெய்தல், "கலங்கு தெண்டிரை மேய்ந்து கனமழை..............வானிரைத்து மணந்து சொரிந்தவே" (சீவக சிந். 32 - 33) என்பதனால் அறிக. (எ)

**18. சிறப்பொடு பூசனை செல்லாது ; வானம்**
**வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.**

(இ - ள்) : மழை பெய்யாத காலத்திலே சுவாமிகளுக்கும் தேவர்களுக்கும் சிறப்பும் பூஜையும் நடவா. ஆனபடியினால் சகலமானபேருக்கும் மழை வேண்டும் (எ-று.).

(வி - ரை) : பூசனை இன்னதென்பது "தண்மதிபோல் முக்குடைக்கீழ்த் தாதைபாதம், பூவே, புகை, சாந்தம், சுண்ணம்,

விளக்குஇவற்றால் புனைதல்நாளும், ஏவாஇவை பிறவும் பூசனை யென்று ஈண்டிய நூல்கரை கண்டாரே " (சீவக சிந். 1547) என்ப தனால் விளங்கும். (அ)

**19. தானம் தவம்இரண்டும் தங்கா ; வியன்உலகம்
வானம் வழங்கா தெனின்.**

(இ - ள்) : ஆகாயத்திலிருந்து மழை பெய்யாவிட்டால் இந்த உலகத்திலே தானமும் தவமும் இல்லாமல் போய்விடும் ; (எ-று.)

(வி - ரை) தானம் இன்னதென்பது : "படநாகம் தோலுரித் தால் போல்துறந்து கண்டவர்மெய் பனிப்ப நோற்றிட்டு, உடலுக ஐம்பொறியும் வென்றார்க்கு உவந்துஈதல் தானமாகும்" (சீவக சிந் : 1546) என்பதனாலும், தவம் இன்னதென்பது : " ஓவாது இரண்டு உவவும் அட்டமியும் பட்டினிவிட்டு ஒழுக்கம் காத்தல் தாவாத் தவம் என்றார் " (சீவக சிந் : 1547) என்பதனாலும் அறிய லாகும். தானம் இல்லறத்தையும், தவம் துறவறத்தையும் குறிக்கும். (க)

**20. நீரின்று அமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.**

(இ - ள்) எப்படிப்பட்டவர்களுக்கும் தண்ணீர் இல்லா மல் ஒரு காரியமும் ஆகாது. அந்தத் தண்ணீரும் ஆகாயத்திலே மேகங்கள் கொடுத்தாலல்லாமல் இல்லை ; (எ-று.)

(வி - ரை) " நீரை இன்றி அமையாது உலகாயின், யாவர்க் கும் மழையைஇன்றி ஒழுக்கம் நடவாது " என்பது பழைய உரை. மழை இல்லையேல் விளைவு இல்லை. விளைவு இல்லையேல் பஞ்சம் மிகும். பஞ்சம் மிகவே மக்கள் பசியாலும் பிணியாலும் வருந்தித் தம் ஒழுக்கத்தை இழப்பர்.

ஒழுக்கம் இத்தகையது என்பதை :

" உள்பொருள் இதுஎன உணர்தல் ஞானமாம்
தெள்ளிதின் அப்பொருள் தெளிதல் காட்சியாம்
விள்ளற இருமையும் விளங்கத் தன்னுளே
எள்ளிதின் தரித்தலே ஒழுக்கம் என்பவே "

(சீவக சிந் : 2845) என்றும்,

" ஒழுக்கமே அன்றித் தங்கள் உள்ளுணர்வு அழிக்கும் மட்டும்
புழுப்பயில் தேனும் அன்றிப் பிறவற்றின் புண்ணும் மாந்தி
விழுப்பயன் இழுக்கும் மாந்தர் வெறுவிலங் குஎன்று மிக்கார்
பழித்தன ஒழித்தல் சீலம் பார்மிசை யவர்கட்கு என்றும் "

(சீவக சிந் : 2822) என்றும், " இடநாகத் தீந்தேனும் தெண்மட்டும் உயிர்க்குழாம் ஈண்டி நிற்றற்கு இடன்ஆகும் ஊனும்இவை துறத்தலே சீலம் " (சீவக சிந் : 1546) என்றும் அழகுறப் பணித்தார் திருத்தக்கதேவர்.

மேலும் அவர், சிந்தாமணியுள் உயிர்க்குத் துணை என்று கூறும் நல்தானம், சீலம், நடுங்காத் தவம், அறிவர் சிறப்பு இந்நான்குமே இந்த மூன்று குறட்பாக்களிலும் (18, 19, 20) கூறப்பெற்றிருத்தல் கவனிக்கத் தக்கது.

ஒழுக்கு என்பதற்கு ஒழுக்கம், விரதம் என்று பொருள் கொண்டார் மணக்குடவர். இவை மூன்று பாட்டானும் மழையின்மையால் இரண்டு அறமும் கெடும் என்று கூறினர். (கo)

---

## 3. நீத்தார் பெருமை*

அஃதாவது, சகல ஆசாபாசங்களையும் விட்டுத் துறந்து தபசு பண்ணுகின்ற முனீசுவரர்கள் பெருமையைச் சொல்லுகின்றதாகும்.

**21.** ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

(இ - ள்.) : தபசுக்கு உரியவான நல்ல ஒழுக்கங்களிலே நின்று தபசு பண்ணுகிறவர்கள்பெருமையைப் பெரியவாயிருக்கிற பல வஸ்துக்களிலும் தபசே பெரியதென்று சகலமான நூல்களும் சொல்லும் (எ - று.).

(வி - ரை.) : " பரமாகத்தின் துணிவுநீத்தாருடைய பெருமை' மேலான பத்துத் தர்மங்களை வேண்டும் " என்பது கர்ணபரம்பரையான ஜைன உரை. விழுப்பத்து - உத்தமமாகிய பத்து. ' விழுக்குடி ' (சிலப் : 23 - 40) என்பது காண்க. தருமம் பத்தாவன :—

1. உத்தம க்ஷமை - தன்னை அறுத்தாலும் அறுப்பவனுக்கு நிழலைத் தருகின்ற மரத்தைப்போல, தனக்கு யார் என்ன துன்பங்

*நீத்தார் பெருமை கூறும்முகத்தான் சாதுசரணம் கூறுகின்றார்.

களைச் செய்தாலும் அவற்றைப் பொறுத்துக்கொண்டு துன்பம் செய்தவர்கள் நன்மையை யடையும்படி தர்மோபதேசம் செய்தல்.

2. உத்தம மார்த்தவம் : மனதில் கர்வமில்லாமல் வணக்க முடையவனாய் எல்லா உயிர்களிடத்தும் சமத்வீபாவமா யிருத்தல்.

3. உத்தம ஆர்ஜவம் : உள்ளும் புறமும் இரத்தினதீபத்துக் குச் சமானமாகி மேலான பரிணமத்தோடிருத்தல்.

4. உத்தம சத்தியம் : உயிர்களுக்கு உறுதி பயப்பனவாகிய உண்மைமொழிகளையே பேசுதல்.

5. உத்தம சவுசம் ; மேன்மையான பரிசுத்த தர்மகுணம்.

6. உத்தம சம்யமம் : அறுவகைப் பொறிவழி படர்ச்சிநீங்கி அறுவகைக் காயங்களையுடைய சீவன்களைத் தயவோடு உபசரித்தல்.

7. உத்தம தபசு : பாஹ்ய தவம் ஆறு, அப்யந்தரதவம் ஆறு ஆகிய பன்னிரண்டு தவத்தையும் செய்தல்.

8. உத்தம ஆகிஞ்சன்யம்: யாதொரு பரிக்கிரகங்களின்மேலும் பற்றின்றித் துறக்கின்ற பரிணமம்.

9. உத்தமத் தியாகம் : பரமாகமங்களை வியாக்கியானம் பண்ணிஅருளும் சாஸ்திரதான சக்தி

10. உத்தம பிரம்மசரியம் : ஸ்திரீகளைத் துதித்தலும் அவர் களை விரும்பிப் பார்த்தலும், அவர்களுடன் பரிகாசமாக நகைத்த லும் ஆகிய பரிணமங்களினின்றும் நீங்கிப் பரிசுத்த மனத்தை உடையனாயிருத்தல். (க)

## 22. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து இறந்தாரை எண்ணிக்கொண் டற்று.

(இ - ள்.): ஆசையைவிட்டுத் துறந்தவர்கள் பெருமைக்கு உவமை சொல்லப்போனால் வேத சாஸ்திரங்களினாலே சொல்லி முடியாது. பின்னை எப்படி என்றால், ஆசையை விடாமல் சம்ஸாரத்திலே யிருந்து இறந்து கெட்டுப்போனவரை நினைத் துக்கொள்ள வேண்டும் (எ - று.).

(வி - ரை.): முற்றும் துறந்தவர்களுடைய பெருமையை இவ் வளவென்று எண்ணிக் கூற முயல்வது உலகத்துப் பிறந்து இறந்த வர்களுடைய எண்ணிக்கையை அறியலுற்றதுபோலாம். அஃதா வது, இறந்தார் இத்துணையர் எனக் கூறுவது முடியாததுபோலத்

துறந்தவர் பெருமை இவ்வளவினது என்று கூற முடியாது என்பதாம். (உ)

23. இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

(இ - ள்.) : சம்ஸாரம், மோக்ஷம் என்கிற இரண்டினுடைய வகையும் தெரிந்து, ஆராய்ந்து பார்த்து அறிந்து, குற்றமுள்ள சம்ஸாரத்தைக் கெடுக்கிறதற்காகத் தபசைப் பண்ணப்பட்டவர்கள் பெருமை இந்த உலகத்திலே அதிகம் (எ-று.). (௩)

24. உரன்என்னுந் தோட்டியான் ஓர்ஐந்துங் காப்பான்
வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து.[1]

(இ - ள்.) : மனமென்கிற பலத்தினாலே ஐம்புலனாகிய மெய், வாய், மூக்கு, கண், செவி என்கின்றவற்றை ஆசையின் வழியே போகவொட்டாமல் அடக்கிக் காக்கிறவனே, எல்லா உலகத்திற்கும் மேலாயிருக்கிற மோக்ஷநிலத்திற்கு ஒரு விதையாம் ; (எ-று.). (௪)

25. ஐந்தவிந்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

(இ - ள்.) : ஐம்புலன்களையும் ஆசையின்வழியே போகாமல் அடக்கின ஜினனுடைய பெருமைக்குத் தேவலோகத்திலே தேவர்களுக்கெல்லாம் இராஜாவாய் இருக்கப்பட்ட தேவேந்திரனே கரி ; பின்னையொருவரும் சாட்சியல்லர் ; (எ-று.)

(வி - ரை) : ஐந்து இந்திரியங்களையும் வென்றவனுடைய பெருமைக்கு இந்திரனே போதுமான சான்று. பஞ்ச இந்திரியங்களையும் ஜெயித்தவனைத் தேவேந்திரன் முதலிய தேவர்கள் பூமிக்கு வந்து ஸமவஸரண மண்டலம் அமைப்பித்து வணங்கி அவனுக்குச் சிறப்புச் செய்கின்றார்கள் என்பது ஜைனசமயக் கொள்கை.

கேவலம் உற்பத்தி யாம்அள வேகிளர் பூசனைக்கென்று
எவல்இ யற்றும்அவ் விந்திர னுக்குமுன் என்குணத்தளம்

காவல ணைக்கவிப் பார்வளைப் பார்முளைப் பார்களைப்போன்
மூவுல கத்துள்ள நால்வகைத் தேவரு முன்னுவரே" (திருநூற் - சக)

என்னுஞ் செய்யுளைக் காண்க. (உ)

26. செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

(இ - ள்.) : மனுஷ ஜன்மத்திலே பிறந்தும் செய்கிறதற்கு அருமையாய் இருக்கிற தானம், தருமம், விரதம், தபசு இவைகளைச் செய்கிறவர்கள் பெரியோர். தானம் முதலிய செய்யாதவர்களும் எளியவாகிய சம்ஸாரகாரியங்களைச் செய்கிறவர்களும் சிறியர்; (எ-று.)

(வி - ரை.) : செயற்கு அரியவான செய்கைகளைச் செய்வாரே பெரியோர். அவற்றைச் செய்யமாட்டாதார் துறந்தாராயினும் சிறியோரே. செயற்கு அரியன - உட்பற்று, புறப்பற்று ஆகிய இருவகைத் தொடர்ப்பாடுகளையும் நீக்கி, நற்காட்சி, நன்ஞானம் நல்லொழுக்கம் ஆகிய வீட்டுநெறியில் பொருந்தி முற்றும் துறந்த முனிவர்களுடைய தவவொழுக்கத்தைச் சிறிதும் பழுதின்றி அனுஷ்டித்தல். (சு)

27. சுவைஒளி ஊறுஓசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு.

(இ - ள்.) : சுவையையறியும் நாவும், ஒளியை அறியும் கண்ணும், மேலே தட்டுப்பட்டதை அறியும் உடம்பும், சப்தத்தைக் கேட்கும் காதும், வாசனையை அறியும் மூக்கும் என்று சொல்லப்பட்ட ஐம்புலன்களுடைய வகையை அறிகிறவனிடத்திலே இருக்கும் உலகம்; (எ-று.).

ஐம்புலன்களின் வகை தெரிதலாவது :—வாயினால் தேன், கள், சாராயம், மாம்ஸம் முதலானவைகளைப் புசியாமல் நல்ல வஸ்துக்களைப் புசிக்கவேண்டும். கண்களினால் பரஸ்திரீ பரதனங்கள் முதலான பாபத்திற்குக் காரணமானவைகளைப் பாராமல், புண்ணியத்திற்குக் காரணமான தேவபூஜை முனீசுவரர் முதலானவர்களைப் பார்க்கவேண்டும். கை கால்களினால் பாபத்திற்குக் காரணமான காரியங்களைச் செய்யாமல், புண்ணியத்திற்குக் காரணமான காரியங்களைச் செய்யவேண்டும். காதுகளினாலே பாபத்துக்குக் காரண

மான வார்த்தை [1]விகதை முதலானவைகளைக் கேளாமல் புண்ணியத்திற்குக் காரணமான வார்த்தைகளையும், தர்மகதை முதலானவைகளையும் சுவாமிபேரிலே ஸ்தோத்திரங்களையும் கேட்கவேண்டும். மூக்கினாலே தெய்வ யோக்கியமான சுகந்தத்தை அறியவேண்டும்; துர்க்கந்தங்களை அறியவொண்ணாது. இப்படி நடக்கிறவர்களுக்காக மழைபெய்து உலகம் நிலைபெறும் என்பதாம்.

(வி - ரை.): ஐந்தின்வகை தெரிதலாவது-ஐம்பொறிகளினால் அறியப்படும் பொருள்களுள் எவ்வெவற்றை விடவேண்டும், எவ்வெவற்றைக் கொள்ளவேண்டும் என்று அறிதலாம். இதைப் பரமாகமம் அறிந்தார் ஹேயோபாதேய விஷயமென்பர். ஹேயோபாதேயங்களை ஒழுக்கத்தின்மூலம் விளக்கிக் காட்டியுள்ளார். இவ்வாறு ஐம்புலன்களின் வகை தெரிந்து ஒழுகுதல் நீத்தாரின் பெருமை என்பது புலப்படும். இக்குறளிற்குப் பரிமேலழகர் சாங்கிய தத்துவத்தை விரித்துக் கூறியுள்ளார். அவர் கூறுவது குறளாசிரியரின் கருத்தாதல் அரிது. ஐம்பொறிகளின் வகையை யறிந்து அவற்றை வென்று அளவில்லாத அறிவையுடையவன் உலகத்தைத் தன்வசம் உடையவனாய், பிறகு வீடு பெறுவான். இக்கருத்தையே,

"மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை அவாவினைக்—கைவாய்க்
கலங்காமற் காத்துய்க்கும் ஆற்றல் உடையான்
விலங்காது வீடு பெறும்"

என்னுஞ் (நாலடியார் - 59) செய்யுளும் கூறுவதைக் காண்க. (எ)

28. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

(இ - ள்.): மெய்யான வசனத்தையுடைய முனீசுவரர் பெருமை(யை) அவர்களாலே சொல்லப்பட்ட சாஸ்திரங்களே காட்டும். அதெப்படியென்றால், அவர்கள் சொன்ன சாஸ்திரம் பிரத்யக்ஷமான திருஷ்டாந்தமாய்ப் பலிக்கும்; (எ - று.).

(வி - ரை.): மறைமொழி யென்பது:—மகாமுனிகளால் அருளிச் செய்யப்பட்ட ஆகமமாகும். அவ்வாகமத்துக் கூறப்பட்ட விஷயங்கள் பிரத்தியக்ஷப் பிரமாணத்திற்கு ஒத்திருக்கும். இவ்வாறு

[1]விகதை - தீயகதை.

பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் அவர்கள் ஆகமத்தில் கூறியது உண்மை எனக் காட்டுவது அவர்களுடைய அறிவின் பெருமையை உணர்த்துவதாகும். நீத்தாருக்குத் தங்கள் தபோபலத்தினால் உண்டாகும் அவதிஞானம், மனப்பர்யயஞானம் என்னும் அதீந்திரிய விஷயங்களும் பிரத்தியக்ஷப் பிரமாணத்திற்கு ஒத்திருக்குமென்பது புலப்படும். (அ)

**29. குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி**
**கணமேயுங் காத்தல் அரிது.**

(இ-ள்.): தபசு, சத்தியம், ஆசையில்லாமை முதலிய நல்ல குணமான மலையின்மேலே ஏறி நின்ற முனிவர்களுக்குக் கோபம் வாராது; அந்தக் கோபம் வந்தாலும் அவர்கள் ஆத்ம பாவனையில் ஒருவராகி இயலுதலால் ஒரு க்ஷணமாத்திரப் பொழுதும் அதில் பொறுத்திருக்க மாட்டார்கள்; (எ-று).

(வி-ரை.): தவத்தின் அருமையும் பெருமையும் தோன்ற, முற்றும் துறந்த முனிவரை, 'குணமென்னுங் குன்று ஏறி நின்றார்' என்றார். "மாயமில் குணக்குன்றன்ன மாதவர்" (யசோதரகாவியம்: 23) என்பதைக் கவனிக்க. குணத்திற் சிறந்த பெரிய துறவிகளுக்கு வெகுளி தோன்றுவதேயில்லை. யாதானும் ஒரு காரணத்தால் வெகுளிதோன்றினும் அது வெகுசீக்கிரத்தில் மறைந்துவிடும். முனிவரது கோபம் கணத்தில் தோன்றி மறையும் என்பது கீழ்க் கண்ட சிந்தாமணி செய்யுளால் விளங்கும். "கலைவலார் நெஞ்சிற் காமமே போன்றும் கடவுளர் வெகுளியே போன்றும், உலைவிலார் நில்லா தொருபகலுள்ளே யுருப்பவிர் வெஞ்சுரங் கடந்தார்" (சீவக சிந்தா. 2107) என்பதை நோக்குக.

"சலியாமையும் பெருமையும் பற்றி, குணங்களைக் குன்றாக உருவகஞ் செய்தார். அநாதியாய் வருகின்றவாறுபற்றி ஒரோவழி வெகுளி தோன்றியபொழுதே அதனை மெய்யுணர்வு அழிக்குமாகலின் 'கணமேயும்' என்றும், நிறைமொழி மாந்தராகலின் 'காத்தலரிது' என்றுங் கூறினார்" என்பது பரிமேலழகர் உரை. இதுவே ஜைனசமயக் கருத்துமாகும். தவத்திற் சிறந்த முனிவர்களுக்கு வெகுளி தோன்றினாலும் அதனால் அவர்கள் தங்கள் நிலையில் சிறிதும் சலித்தலில்லை. அந்த வெகுளியும் ஆத்மனிடத்து அநாதியாய் வருகின்ற கருமவசத்தால் தோன்றுகின்றது. ஆனால் அந்த வெகுளியை அவர்களுடைய மெய்யுணர்வு அழித்தலால் அது உடனே மறைந்துவிடுகின்றது. அத்தகைய வெகுளி சஞ்ஜ்வலனக் குரோ

தம் எனப்படும். அது நீரில் கிழிக்கப்படும் கீற்றுப்போலத் தோன்றியவுடனே மறையுந் தன்மையை யுடையது.

**30. அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்.**

(இ - ள்.) : எல்லாச் சீவன்களிடத்திலேயும் தயை யுண்டாய், கொல்லாமை முதலாகிய தர்மங்களுடையவர்களாய் விரதங்களு முடையவர்களே அந்தணர் என்றும் பிராமணரென்றும் சொல்லப்படுவார் ; (எ - று.).

(வி - ரை.) : ஆசிரியர் இவ்வாறு அந்தணர் இலக்கணம் கூறி, ஒருவன் குணத்தினாலன்றிப் பிறப்பினால் பிராமணன் ஆகான் என்பதை வற்புறுத்தி யிருப்பது கவனிக்கத் தக்கது. அஹிம்ஸா தருமத்தை வழுவாது பூண்டொழுகலே பிராமணனுக்குரிய லக்ஷணமென்பது பரதேச்வர சக்ரவர்த்தி பிராம்மணகுலம் ஸ்ருஷ்டித்த வரலாற்றினால் புலப்படும்.

"இவ்வண்ணம் இப்பெற்றியவாகிய போகஸாதனங்களால் பூர்வக்ருத புண்ணியோதயத்தால் சாம்ராஜ்ய சுகம் அனுபவித்து இனிது செல்கின்றகாலத்து, சக்ரவர்த்தி தன்னுள்ளே கருதுவான் : 'நமது புஜபலத்தால் ஆர்ஜிதமாகி அபரிமிதமாகிய அர்த்தமெல்லாம் பரோபகாரார்த்தமாகப் பண்ணவேண்டுமாதற்கண், ஜினபதி பூஜையினையும் பாத்ரதானத்தினையும் பண்ணுதும் ; பாத்ரங்களுள் நிவ்ருத்தராகிய தபோதனர்கள் வஸ்துவாகனபூமியாதிகளை நம் பக்கல் பரிக்ரஹியார் ; க்ருகஸ்தருள் பாத்ரமாவார் யாவரோ' என்று நினைந்து, அதனைப் பரீக்ஷிப்பான்வேண்டி மகுடபத்தராகிய நரபதிகளை அழைத்து, 'நீர், உங்கள் உறவின்முறையாரையும் பரிஜனங்களையும் உங்கள் தேசத்தில் வசிக்கும் விசிஷ்டஜனங்களையும் கொண்டு பர்வதினத்து யான் பண்ணுகின்ற பகவத் அர்ஹத் பூஜைக்கு வருவீராமின்' என்று சொல்லி, அவர்களுக்கு விடை கொடுத்து, சக்ரவர்த்தியும் பர்வ திவசத்து, மலர்ந்த புஷ்பங்களாலும், நனைந்த அங்குரங்களாலும், சிவந்த தளிர்களாலும், விரிந்த கனிகளாலும் தன் செண்டுவெளியினைச் செறியப் பரப்புவித்தனன். அவ்வளவில், முன் போன ராஜாக்களும் கொடுவருகின்ற மகாஜனங்களோடுங்கூட மீண்டுவந்து மகாஜனத்தை ராஜாங்கணப் புறத்தே நிறுத்திப் புக்கு, சக்ரவர்த்தியை நமஸ்கரித்து, 'நாங்கள் நின்னேவல் செய்தோம்' என்று விஜ்ஞாபித்தபின், சக்ரவர்த்தி

யும் 'அவர்களை அழைமின்' என்ன, அவர்களிற் சிலர் புகுந்து சக்ரவர்த்தியை நமஸ்கரித்து நிற்ப, சக்ரவர்த்தி, 'இன்னமும் புறத்து நின்றார் உளரோ' என்று வினவ, அவர்களும் 'சிலர் உளர்' என்றுரைப்ப, 'அவர்களையும் அழைமின்' என்ன, அவர்களும் சக்ரவர்த்தியாஜ்ஞையால் ப்ராசுகமாகிய வழியினால் அழைத்துக் கொடுவந்து காட்டி நமஸ்கரிப்பித்தார்.

நமஸ்கரித்தவர்களைச் சக்ரவர்த்தி, 'நீங்கள் முன் புகுதாமற்குக் காரணம் என்?' என்று வினவ, புகுதாமற்கு இது காரணம் என்று விண்ணப்பஞ் செய்தார்: 'ராஜராஜனே, நின்னுடைய ராஜாங்கணம் புஷ்ப பல்லவாதிகளால் பரந்து கிடத்தலில், ஏகேந்திரிய ஜீவஹிம்ஸாநிவ்ருத்தரல்லேமாகிலும், இன்று பர்வமாதலில் அவற்றில் நிவ்ருத்தராகி உபவாசவிரதத்தையும் தரித்து, தயாலுக்களாகி ஸாவத்யதோஷத்திற்குப் பயப்பட்டுப் புகுதாதொழிந்தனம். நாங்கள் பகவான்திருவாய்மொழியிலே, அங்குரம் முதலாகிய ஹரிதங்களுள் அனந்த நிகோத ஜீவன்கள் உள என்று கேட்டறிதும் என்று அவர்கள் விண்ணப்பஞ் செய்தபின் சக்ரவர்த்தியும் அவர்களை அணுவ்ரததாரிகள் என நினைந்து, முன் புகுந்த மகாஜனத்தை நீக்கி, அவர்களுடைய பதினொரு குணஸ்தானங்களின் முறைமையாலே சம்மானம் பண்ணுதற்கு லக்ஷணமாகப் பத்மம் என்னும் நிதியினில் வாங்கிய சூத்திரங்களால் குணஸ்தான க்ரமத்தாலே ஒரு சூத்திரம் முதலாகப் பதினொரு சூத்திரமீராக யஜ்ஞோபவீதங்களை இட்டான். இட்டபின் கிரமத்தாலே சம்மானம் பண்ணி வஸ்துவாஹனம் பூமிகளைத் தானம்பண்ணி, ஏழாம் அங்கமாகிய உபாசகாத்யயனத்துள் அருளிச் செய்யப்பட்ட ஆரிய ஷட்கர்மங்களை விருத்தியாக உபதேசித்தான். இவ்வண்ணம் மனுவாகிய சக்ரவர்த்தி பிராமணரை ஸ்ருஷ்டித்து அவர்கட்கு யோக்கியமாகிய வ்ருத்திகளையும் க்ரியைகளையும் புண்ணியாக்கினிகளையும் உபதேசித்து, சம்மானத்தோடும்கூட தானங்களையும் பண்ணினான். ஆதிராஜன் இவ்வண்ணம் சம்மானம் பண்ணுதலில் லோகத்துள்ள ஜனங்களும் அன்றுமுதல் அவர்களுக்கு சம்மானம் பண்ணி, சத்பாத்திரம் என்று தானங்களையும் பண்ணினார்." (ஸ்ரீ புராணம் - பக்கம் : 131 - 136)

இந்நிகழ்ச்சியை உட்கொண்டே ஆசிரியர், "அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய், நின்றது மன்னவன் கோல்" என்னும் குறளைச் செய்திருத்தல் கவனிக்கத் தக்கது.

# 4. அறன் வலியுறுத்தல்*

அஃதாவது—மஹாமுனீசுவரர்களாலே சொல்லப்பட்டதாய் இம்மையிலே கீர்த்தியையும் மறுமையிலே மோக்ஷத்தையும் கொடுக்கப்பட்ட தருமத்தின் நன்மையைச் சொல்லுதலாம்.

**31. சிறப்பீனுஞ் செல்வமும் ஈனும் அறத்தினூங்**
**காக்கம் எவனோ உயிர்க்கு.**

(இ - ள்.) : இம்மையிலே கீர்த்தியையும் செல்வத்தையும் கொடுத்து, மறுமையிலே மோக்ஷத்தையும் கொடுக்கிறது தருமம். ஆனபடியினால் அந்தத் தருமத்தைப்பார்க்கிலும் அதிகமான பொருள் இந்த உலகத்திலே இல்லை : (எ-று.).

(வி - ரை.) : அறத்தின் பயனை,

"இரக்குந் தொழிலொழிந் தியாமே இனியிந்த வுழலகும்
புரக்கும் பொருளுடை யோம்புல வீர்வம்மின் பூமியெல்லாம்
நிரக்கும் பொருட்குவை யாவையும் நீர்நினை யாதவெலாம்
சுரக்கும் சுரபிகண் டீர்பிண்டி நாதன்றன் தொல்லறமே"—(திருநூற். 37)

என்பதனாலும்,

"தோன்றிமாய்ந் துலகம் மூன்றில் துயரெய்தும் உயிர்கள்தம்மை
ஈன்றதாய் போல ஓம்பி இன்பத்து ளிருத்தி நாதன்
மூன்றுல கிற்கு மாக்கி முடிவிலாத் தன்மை நல்கும்
ஆன்றநல் லறத்தைப் போலும் அரியதொன் றில்லை என்றான்"

—(மேருமந். 117)

என்பதனாலும் அறியலாகும்.

சீவன்கள் அடையக்கூடிய எல்லாப் பேறுகளிலும் மோக்ஷமே சிறந்ததாகலின் அது சிறப்பு எனப்பட்டது.

"ஈண்டு 'உயிர்' என்றது மக்களுயிரை ; சிறப்புஞ் செல்வமும் எய்துதற்கு உரியது அதுவேயாகலின்" என்றார் பரிமேலழகர்.

---

* இவ்வதிகாரம் தர்மசரணம் கூறுகின்றது.

மனிதனாகப் பிறந்து தவஞ் செய்தாலொழிய வீடு பெறல் முடியா தென்பது ஜைனசமயக் கொள்கை.

> " விதியினாற் கதிக ணான்கின் மேவினின் றார்க டம்முண்
> மதியினாற் பெரிய நீரார் மக்களாய் வந்து தோன்றி
> விதியினாற் றானம் பூசை மெய்த்தவஞ் செய்து வீட்டைக்
> கதிகளைக் கடந்து செல்வார் " —(மேருமந். 737)

என்னுஞ் செய்யுளை நோக்குக.

**32. அறத்தினூஉங் காக்கமும் இல்லை ; அதனை**
**மறத்தலினூஉங் கில்லையாம் கேடு.***

(இ - ள்.) : ஒருவனுக்குத் தருமம் செய்கிறதைப்பார்க்கி லும் அதிகமான செல்வம் இல்லை ; தருமத்தைச் செய்யாமல் இருக்கிறதைப் பார்க்கிலும் கேடு வேறே இல்லை. **தர்மம்** செய்யாவிட்டால் கெட்டுப்போவார்கள் ; (எ-று.).

(வி - ரை.) : உயர்ச்சியைத் தருவதை ஆக்கம் என்றார். ஆக்கமாவது, மேன்மேல் உயர்தல். அறத்தைவிட மேம்பட்ட ஆக் கம் வேறு இல்லை என்பதனைக் கீழ்க்கண்ட செய்யுள் வலியுறுத்தும்.

> " அறத்தினூங் காக்கம் இல்லை யென்பதும் இதனை ஆய்ந்து
> மறத்தினூங் கில்லை கேடும் என்பதும் மதித் திவர்தம்
> திறத்தினை அறிந்து கொண்மின் தீக்கதிப் பிறவி அஞ்சில்
> மறத்தைநீத் தறத்தோ டொன்றி வாழுமீர் வையத் தீரே "
> —(மேருமந். 747)

> " இளமையும் வனப்பும் நில்லா இன்பமும் நின்ற அல்ல
> வளமையும் வலிதும் நில்லா வாழ்வுநாள் நின்ற அல்ல
> களமகள் நேசம் நில்லா கைப்பொருள் கள்வர் கொள்வார்
> அளவிலா அறத்தின் மிக்க தியாதும்மற் றில்லை அன்றே "
> —(நரிவிருத்தம் : 14)

என்னும் செய்யுளையும் நோக்குக.

> " தோற்றஞ்சான் ஞாயிறு நாழியா வைகலுங்
> கூற்ற மளந்துநுந் நாளுண்ணும்—ஆற்ற
> அறஞ்செய் தருளுடையீ ராகுமின் யாரும்
> பிறந்தும் பிறவாதா ரில் "

என்னும் (நாலடியார் : 7) வெண்பாவைக் கவனிக்க. (உ)

---

* இல்லைகேடு—பரிமேலழகர் பாடம்.

**33.** ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல்.

*(இ - ள்.)* : தனக்கு இயன்றமாத்திரம்எல்லாம் தரு மத்தை விடாதே செய்யவேண்டும். தருமத்தைச் செய்யாதவ னுக்கு ஒரு பிரயோசனமும் இல்லை ; (எ - று.).

*(வி - ரை.)* : ஒல்லும் வகையாவது : தானம், பொருள் அள விற்கு ஏற்பவும், தவம், யாக்கை நிலைக்கு ஏற்பவும் செய்தலாம். "சக்திதஸ்தியாக தபஸ்" என்பது தத்வார்த்த சூத்திரம். அஃ தாவது, தியாகமும் தபசும் தன் சக்திக்குத் தக்கனவாய் இருக்க வேண்டும் என்பதாம். ஓவாது - இடைவிடாமல். செல்லும் வாயெல்லாம் - மனம் வாக்குக் காயம் ஆகியவற்றுன் முடியும் இடத் தெல்லாம். (௩)

**34.** மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர்மை பிற.*

*(இ - ள்.)* : ஒருவன் தன்னுடைய மனத்திலே குற்றம் இல்லாமலிருந்தானுகில் அவனுக்கு அதுவே தருமமாவது : மற்றவெல்லாம் வேஷமாத்திரம் : (எ - று.).

*(வி - ரை.)* : ஒருவன் தன் மனத்தில் மாசுடையவனுய் இருந் தால் அவன் சொல்லும் மொழிகளும், செய்யும் காரியங்களும் மாசு உடையனவாய்ப் பயனில்லாமற்போம். (௪)

**35.** அழுக்கா றவாவெகுளி இன்னுச்சொல் நான்கும்
இழுக்கா வியன்ற தறம்.

*(இ-ள்.)* : பிறருடைய செல்வத்தைப் பார்த்துப் பொறுப் பற்றுப்படுகிற அழுக்காறும், மனம் பொறிவழியே போகிற ஆசையாகிற அவாவும், ஒரு பொருள் நிமித்தமாகக் கோபித் துக்கொண்டு கடினவசனத்தைப் பேசுகிற கோபமும், துர் வசனங்களைப் பேசுகிறதும் ஆகிய இந்த நாலும் இல்லாமலிருக் கிறதே தருமம் என்பதாம். இவைகளுடனே கூடியிருக்கிற வன் செய்கிறது தருமம் அன்று ; (எ-று.).

---

* நீரபிற—என்பது பரிமேலழகர், மணக்குடவர் பாடம்.

**36.** †அன்றறிவோம் என்னு தறம்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்ருத் துணை.

(இ - ள்): நாம் இப்போது சிறியேம், இனிமேல் அந்திய காலங்களிலே தருமத்தைப் பண்ணுவோம் என்று எண்ண வேண்டாம். அஃது ஏன் என்ருல், ஆயுசு நிர்ணயமில்லை; ஓட்டைப்பானையில் வார்த்த தண்ணீர்போலப் போய்விடும். ஆனபடியினுல் நாள்தோறும் தருமத்தையும் விரதங்களையும் பண்ணவேண்டும்; தருமத்தைப் பண்ணினுல் அது சாகிற காலத்துக் கெடாத துணையாம்; (எ-று.).

(வி - ரை.): நாம் இப்பொழுது இளமையா யிருக்கின்ருேம். முதுமைப்பருவம் அடைந்து இறக்குந் தறுவாயில் அறத்தைச் செய்யலாம் என்று காலத்தை வீணே கழிக்காமல் நினைத்தபொழுதே அறத்தைச் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்யப்படும் அறம், நம் உயிர் உடம்பினின்று போங்காலத்து அதற்கு மறுபிறப்பில் அழியாத துணையாகும்.

"பேரஞர் இடும்பை எல்லாம் பிளந்திடும் பிறப்பு நீக்கும்
ஆர்அமிர்(து) அரிதிற் பெற்ரும் அதன்பயன் கோடல் தேற்ரும்
ஒருமஐம் பொறியும் ஓம்பி உளபகல் கழிந்த பின்றைக்
கூர்எரி கவரும் போழ்தில் கூடுமோ குறித்த எல்லாம்"—(சீவகசிந். 377)

என்னுஞ் செய்யுளை நோக்குக. நாம் வேற்றூருக்கு செல்லும் பொழுது அங்கே உதவியாயிருக்கும் என்று பொதிசோறு கொண்டுபோவதுபோல, சீவனுக்கும் மறுஜன்மத்தில் உதவுவதற்காக ஈண்டு அறத்தைச் செய்தல்வேண்டும்.

"வேற்றவர் இல்லா நுமர்ஊர்க்கே செல்லினும் வெகுண்டீர் போல
ஆற்றுணக் கொள்ளா தடிபுறத்து வைப்பீரே அல்லீர் போலும்
கூற்றம்கொண் டோடத் தமியே கொடுநெறிக்கட் செல்லும் போழ்தின்
ஆற்றுணக் கொள்ளீர் அழகலால் அறிவொன்றும் இலிரே போலும்"
—(சீவகசிந். 1550)

"உம்பர்தம் முலகி னுய்க்கு முலகினுக் கிறைமை யாக்கும்
வெம்பிய பிறப்பின் வாங்கி வீட்டின்கண் வைக்கும் மெய்யே
நம்பிநல் லறத்தைப் போலுந் துணையில்லை நமக்கு நாடின்"
—(மேருமந். 968)

---

†அன்றறிவாம்—பரிமே., மணக்கு. பாடம். அன்றறிவோம்—எல்லிஸ் (Ellis) துரையின் பாடம்.

" மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின் !
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியால்
நற்கா யுதிர்தலு முண்டு "

என்னும் (நாலடியார் : 19) செய்யுளையும் நோக்குக. (சு)

**37. அறத்தா றிதுவென வேண்டா சிவிகை**
**பொறுத்தானோ டூர்ந்தான் இடை.**

(இ - ள்.) : தருமத்தின் பலன் இப்படி என்று சாஸ்திரத்திலே சொல்லவேண்டா ; தண்டிகையைச் சுமக்கிறவன் தருமத்தைப் பண்ணாதவன் ; தண்டிகையில் ஏறிக்கொண்டு போகிறவன் தருமத்தைப் பண்ணினவன் ; (எ - று.).

**38. வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்**
**வாழ்நாள் வழிஅடைக்குங் கல்.**

(இ-ள்.) : ஒருவன் தன் வாழ்நாளை விருதாவில் கழிக்காமல் நாள்தோறும் தருமத்தைச் செய்வானாகில், அந்தத் தருமம் அவன் ஆயுசு மோக்ஷத்திற்கு ஏறுகிறதற்குத் தடையாகின்ற எமன் வருகிற வழியை அடைக்குங் கல்லாம் (எ-று.).

(வி - ரை.) : ஒருவன் இடைவிடாது நாள்தோறும் அறத்தைச் செய்வானாயின் அவ்வறத்தின் பயன் அவன் நால்வகைக் கதிகளுள் பிறந்து வாழ்வதற்கு ஏதுவாகிய ஆயுஷ்கர்மம் வந்து அடையாமல் தடுப்பதற்குச் சிறந்த கல்லாம். இது சம்வரை எனப்படும்.

திருக்குறளின் ஆசிரியராகிய ஸ்ரீ பகவான் குந்தகுந்தாசாரியர் தாம் எழுதியருளிய " ஸமயஸாரம் " என்னுங் கிரந்தத்துள் பின் வருமாறு கூறுகின்றார் :

பாவரூபங்களாகிய மித்யாத்வமும் அஞ்ஞானமும் அவிரத பரிணாமமும், யோகமும் என்றிவை அந்த ஞானவரணாதி கர்மங்களுக்குக் காரணங்களென்று ஸர்வஜ்ஞரால் சொல்லப்பட்டது.

சம்யக்தரிசன சாமக்கிரியினால் பிரத்யயங்களுக்கு அபாவமான விடத்து நிச்சயத்தினால் பேதஞானியினுக்கு பாவாஸ்ரவம் நிரோதம் ஆம். பாவாஸ்ரவம் அபாவமானவிடத்து ஞானவரணாதி திரவ்ய கர்மம் நிரோதமாம்.

திரவ்ய கர்மாஸ்ரவத்தினுடைய நிரோதத்தினால் இந்தச் சரீராதி நோகர்மங்களுக்கும் நிரோதம் ஆம். சரீராதிகளுடைய நிஸ்ஸேஷவிநாசத்தினால் பஞ்சப் பிரகாரமாகிய சம்ஸாரத்திற்கு நிர்மூலப்பிரளயம் ஆம். சகல சம்வரை சம்சாரவிநாசத்தினைப் பண்ணும் என்பதாம்.

எமன் வருகிற வழியாவது :—ஒரு ஜீவன் சம்சாரத்தில் பிறத்தலும் இறத்தலும் கூடிய நாற்கதிகளில் செலுத்தும் வழியாம். இவ்வழியில் செல்லும் உயிர் ஆயுஷ்ய முடிவில் ஒவ்வொரு தடவையும் இறத்தலானும் எமன் வரும்வழி என்றார். மோக்ஷமார்க்கம் இவ்வழிக்கு முற்றும் மாறானது. இவ்வழியில் செல்வதற்கு அவசியம் அறத்தின் துணை வேண்டும். அறம் துணை புரிகிறதாவது மோக்ஷ மார்க்கத்திற்கு மாறாகியதும் எமன் வரும் வழியுமாகிய சம்சார வழியை அடைத்து மோக்ஷத்திற்குச் செல்லும் ஒரே வழியில் சீவனைக் கொண்டுசென்று வீடுபெறச் செய்தலாம். (அ)

**39.** அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்
புறத்த புகழும் இல.

(இ - ள்.) : ஒருவனுக்குத் தருமத்துடனேகூடி வருகிறதே இன்பம்; அது அல்லாத பாபத்துடனே வருகிறதெல்லாம் சுகமில்லை, கீர்த்தியும் இல்லை. மறுமையில் நரகத்தை அடைவிக்கும் (எ-று.).

(வி - ரை.) : அறத்தோடு பொருந்தி வாழ்வதே இன்பத்தைத் தரும். அவ்வாறு அறத்தோடு பொருந்தாத வாழ்க்கை இறுதியில் துன்பத்தை ஈன்று புகழும் இல்லாமற் செய்யும். அறத்தோடுகூடிய வாழ்க்கை புகழும் உடைத்து என்பது பெற்றாம். இதனால் அறம் செய்வாரே இம்மைக்கு உரிய எல்லா நலனும் எய்திப் புகழும் எய்துவர் என்பது கூறப்பட்டது.

"உருவமும் அழகும்நல் ஒளியும் கீர்த்தியும்
செருஇடை வெல்வலத் திறலுஞ் சிந்தைசெய்
பொருள்அவை வருதலும் போக மும்நல்ல
திருவுடை யறததது செய்கை என்றனன்" —(மேருமந். 447)

என்பது காண்க.

**40.** செயற்பால தோரும் அறனே ஒருவற்
குயற்பால தோரும் பழி.

(இ - ள்) : ஒருவனுக்குச் செய்யத்தக்க காரியமாவது தருமமே. செய்யாமல் விடத்தக்க காரியமாவது பாவத்துடன் கூடியதே என்பதாம் (எ-று.).

(வி - ரை.) : பழிக்கப்படும் செய்கையைப் பழியென்றார், எப்பொழுதும் அறத்தோடு பொருந்திய காரியத்தையே செய்யவேண்டுமென்பதாம். (௪௰)

---

## 5. இல்வாழ்க்கை

அஃதாவது பெண்சாதியுடனே கூடி, வீட்டிலே இருந்து தருமத்தைப் பண்ணிக்கொண்டு வாழ்கிறது என்பதாம்.

**41. இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.**

(இ - ள்.) : இல்லறமாகிய சம்ஸாரத்திலே யிருந்து வாழ்கிறவன், பிரம்மசாரியாகி ஆசாரியரிடத்திலேயிருந்து படிக்கிறவர்களுக்கும், உத்கிருஷ்டபிண்ட விரதம் என்ற பதினோராம் நிலையில் கௌபீனமாத்திரத்துடனேகூடி ஜிநஸ்துதியிலே யிருக்கிற க்ஷுல்லகர்களுக்கும், சகலமான ஆசாபாசங்களை விட்டுத் துறந்து தபசு பண்ணுகிற மகாமுனிவர்களுக்கும் ஆகாரமும், ஔஷதமும், இருப்பிடமும், வஸ்திரமும்* முதலானவைகளைக் கொடுத்து, அவர்கள் விரதங்களைக் குறைபடவொட்டாமல் நடப்பிக்கவேண்டும். அப்படி நடப்பித்தால் அவன் அந்த மூன்று பேருக்கும் நல்ல துணை (எ-று.).

(வி - ரை.) : இயல்புடைய மூவராவார் : பிரம்மசாரி, க்ஷுல்லகன், மகாமுனி. **பிரம்மசாரி** : இவன் ஆசாரியருடனே யிருந்து பரமாகமங்களைக் கற்கின்றவன் ஆதலால் அவனுக்கு இல்லறத்தானுடைய உதவி வேண்டுவதாயிருக்கின்றது.

**க்ஷுல்லகன்** : இவன் முற்றும்துறந்த முனியைப்போலவே எல்லா விரதங்களையும் அனுஷ்டிக்கிறவன். ஆனால் ஓர் ஆடையைமட்டும்

---

* சாஸ்திரம் - பாடபேதம்.

உடுத்திக் கொண்டிருப்பவன். இவன் இலக்கணம் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது :

" வள்ளிய மலரும் சாந்தும் மணிபுனை கலனும் இன்றாய்
வெள்ளிய(து) உடைஒன் றாகி வென்றவர் உருவ மேலார்
கொள்ளியல் அமைந்த கோலக் குல்லக வேடம் " .

—(யசோதரகாவியம் - 27)

ஆகையால் இவனுக்கும் இல்லறத்தாருடைய உதவி அவசியம்.

**மகாமுனி :** இவன் யாதொரு பற்றும் இல்லாத துறவியாதலின் அவனுடைய சரீர ரக்ஷணைக்கு இல்லறத்தானுடைய உதவி இன்றி யமையாதது. ௧

**42. துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்**
**இல்வாழ்வான் என்பான் துணை.**

*(இ - ள்.) : தபசு பண்ணுகிறவர்களுக்கும், முந்தின ஜன்மங்களிலே தான தருமங்களைப் பண்ணாமல் தரித்திரராய்ப் பிறந்தவர்களுக்கும், முதுமைப் பருவத்தில் மெலிவு வந்து ஒருவருமில்லாமல் தன்பால்வந்து இறந்தபேருக்கும் சம்சாரியா யிருக்கிறவன் ஆஹாரம் முதலியவைகளைக் கொடுத்து இரக்ஷிக்கவேண்டும். இப்படிக் கொடுத்து நடத்தினால் அவன் அந்த மூன்று திறவருக்கும்[1] துணை ; (எ-று.).* ௨

**43. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்(கு)**
**ஐம்புலத்தா றோம்பல் தலை.**

*(இ - ள்.) : உயிர் துறக்கும் தறுவாயில் உள்ள முதியவர் கள், தேவர்கள், விருந்தாய் வந்தவர்கள், தாயாதிகள், தான் ஆகிய ஐந்து பேர்களுக்கும் உபகாரங்களைப் பண்ணி இரக்ஷிக் கிறது முந்தின தருமம் (எ-று.).*

*இவர்களுக்கு உபகாரம் பண்ணுகிறதாவது : முதியவர்களுக்கு உற்ற குணம் ; தேவதைகளுக்குப பூஜை, திருநாள் ; விருந்தாய்ப் பரதேசத்திலிருந்து வந்து அறியாமல் கேட்ட பேர்களுக்கு அன்ன வஸ்திரங்கள் கொடுக்கிறது ; தன்னை அறிந்து வந்தவர்களுக்கு வஸ்து, வஸ்திரம், அன்னம் முதலானவைகளைக் கொடுக்கிறது ; இந்தத் தருமங்களைப் பண்ணுகிறதற்காகத் தன்னைப் போஷித்துக்*

[1] *திறவருக்கும் - திறத்தவருக்கும்.*

கொள்ளுகிறது. இந்த ஐந்து வகைகளையும் செய்கிறவன் உத்தமமான சம்ஸாரியாம்.

(வி - ரை.) : முதியவர்களை ஓம்புதலாவது, அவர்கள் குணத்துக்குத் தக்கவாறு நடந்துகொண்டு அவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுத்து, அவர்கள் நற்கதிக்குப் போவதற்குச் சாதகமாக அவர்களுக்கு மரணத் தறுவாயில் மந்திரோபதேசம் முதலியன செய்தல்.

**44. பழிஅஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழிஎஞ்சல் எஞ்ஞான்றும் இல்.**

(இ - ள்) திரவியந் தேடுகிற காலத்திலே பாபத்திற்குப் பயப்பட்டு நல்ல வழியே தேடின பொருளை முன்சொன்ன ஐந்து பேருக்குங் கொடுத்தானாகில், அவன் [1]வங்கிசம் பூமியில் எந்நாளும் நிலைபெற்று நிற்கும். பாபத்தினாலே வந்த பிறன் பொருளைத் தானதருமம் செய்து தானும் உண்டானாகில் அந்தத் தருமம் திரவியம் உடையவனுக்கும் பாபம் அவனுக்குமாம் (எ - று.).

(வி - ரை) : பிறன்பொருள் தானம் முதலியவற்றிற்கு ஆகாது என்பது கீழ்க்கண்ட செய்யுளால் நன்கு விளங்கும் :

"தானத்திற்கு உரித்தும் அன்று ; தன்கிளைக் கீயின் சால
ஈனத்துள் உய்க்கும் நிற்கும் எச்சத்தை இழக்கப் பண்ணும்
மானத்தை அழிக்கும் துய்க்கில் மற்றவர்க் கடிமை ஆக்கும்
ஊனத்து நரகத் துய்க்கும் பிறன்பொருள் உவக்கின் வேந்தே'

—(மேருமந். 308)

**45. அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.**

(இ - ள்.) : சம்சாரம் பண்ணுகிறவனிடத்தில், தன் பெண்சாதிபேரிலே தயவும் யதிகளுக்குக் கொடுத்தலாகிற தர்மமும் உண்டாயிருந்தால் அந்தச் சம்ஸாரத்திற்கு அதுவே பலனும் என்பதாம்.

பெண்சாதிபேரிலே பரிபூரணமான பக்ஷமில்லாவிட்டால் தருமம் நடவாது. ஆனபடியினால், மனையாளும் கணவனும் ஒத்திருந்தால் சகல தருமமும் நடக்கும் (எ - று.).

[1]வங்கிசம் - வம்சம் ; குடி.

(வி - ரை.) : மனைவியும் கணவனும் மனம் ஒத்து நடவாத வழி, இல்லறம் செவ்வையாய் நடவாது ஆகையால், அன்புடைமை பண்பாயிற்று ; அறன் உடைமை பயனாயிற்று. (ரு)

**46.** அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றின்
போஓய்ப் பெறுவ தெவன்.

(இ - ள்.) : சம்ஸாரியாய் இருக்கிறவன் இல்லறத்தின் வழியே சொன்ன தர்மத்தைப் பண்ணாமல்விட்டு, மற்ற அதர்மமான வழியே நடந்து என்ன பலனைப் பெறுவான் (எ-று.).

(வி - ரை.) : அறத்தாறு என்பது பாவத்தை அஞ்சி, ஈட்டிய பொருளைப் பகுத்துக் கொடுத்துத் தான் உண்டலும் அன்புடையவனா யிருத்தலுமாம். புறத்தாறு என்பது மறத்தோடு கூடிய வாழ்க்கை. (சு)

**47.** இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை.

(இ - ள்.) : இல்லறமாகிய சம்ஸாரத்திலே இயல்போடு கூடி, சொன்ன தருமத்தின் வழியே நடக்கின்றவன் புலன்களையும் ஆசையையும் அடக்கித் தபசு பண்ணும் †முனிவர்களுக்கு எல்லாம் முதல்வனாம் (எ-று.). (எ)

**48.** ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து.

(இ - ள்.) : தபசு பண்ணுகின்றவர்களுக்கு ஆகாரத்தைக் கொடுத்துப் பசி முதலானவற்றை நீக்கி அவர்களைத் தவத்தின் வழியே நடக்கச்செய்து, தானும் இல்லறத்தினுடைய வழி தப்பாமல் நடக்கின்ற சம்ஸாரி, அநேகதிசன்னியாசிகளைப் பார்க்கிலும் அதிகமான விரதமுடையவன் (எ-று.).

(வி - ரை.) : தவம் செய்கின்றவர்களுக்கு அவர்கள் வேண்டிய உதவியைச் செய்து அவர்களைத் தவநெறிக்கண்ணே ஒழுகப் பண்ணித் தானும் யாதொரு குற்றமும் இல்லாமல் இல்வாழ்க்கையை நடத்துவானாயின், அவனது இல்வாழ்க்கை தவம் செய்வா

---

† முனிவர்க்கு - பாடபேதம்.

ரினும் வலி உடைத்து என்பதாம். தவம் செயவார் தமக்கு உற்ற நோயையே பொறுக்கவல்லவர்கள் ; இல்வாழ்வார் தமக்கு உற்ற நோயையும் பொறுத்துப் பிறருக்குற்ற நோயை விலக்கவல்லவராத லின் இல்வாழ்வார் நிலை மேன்மையது.

இக்குறளின் கருத்தையே ஸ்ரீ சமந்தபத்திர சுவாமி தாமியற் றியருளிய "இரத்தின கரண்டக சிராவகாசாரம்" (இல்லற ஒழுக்கம்) என்னும் சமஸ்கிருத நூலுள் பின்வருமாறு கூறியுள் ளார் :

மோகனீய கர்மம் நீங்கி, சம்யக்தரிசனத்தோடு கூடி மோக்ஷ மார்க்கத்தில் செல்லும் கிரகஸ்தன், மோகனீய கர்மம் நீங்காது துறவுபூண்டு ஒழுகும் முனியைப்பார்க்கிலும் மேலானவனே. (அ)

**49.** அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை ; அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று.

(இ - ள்.) : இல்லறம் துறவறம் என்ற இரண்டிலேயும் இல்லறமே தர்மமாவது ; மற்றதுவும் பிறரால் பழிக்கப்பட்ட குற்றங்களில்லாம லிருந்தால் நல்லது (எ-று). (கூ)

**50.** வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

(இ - ள்.) : இல்லறத்தியல்புடன் கூடி வாழ்கிற சம்ஸாரி மனுஷனே ஆனாலும் அவன் ஆகாசத்திலே இருக்கப்பட்ட தேவர்களுடனே சரியாய் எண்ணப்படுவான் (எ-று).

துறவறத்து மனத்தையும் ஐம்பொறிகளையும் அடக்க வேண் டும் ; சம்ஸாரி மனத்தையும் பொறிகளையும் வாதை பண்ணாமல் நடக்கிறபடியினால் தெய்வத்தோடொக்கும் எனலாம் என்பதாம்.

---

## 6. வாழ்க்கைத் துணை நலம்

அஃதாவது, அந்த இல்வாழ்க்கையாகிற சம்சாரத்திற்குத் துணையாய் இருக்கிற மனையாளுடைய நன்மையைச் சொல்லு கிறது என்பதாம்.

51. மனைத்தக்க மாண்புடையள் ஆகித் தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

(இ - ள்.) : இல்லறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கை களையுடையவளாய், தன்னுடைய புருஷன் தேடி வருகின்றதற்குத் தக்க செலவு பண்ணுகிறவள் அந்தப் புருஷனுக்குத் துணையாம் (எ-று.).

நற்குணமாகிறது-துறந்தபேர்களுக்கு ஆகாரம் கொடுக்கிறதும், விருந்தாய் வந்தவர்களுக்குச் சந்தோஷத்துடனே உபகாரம்பண்ணுகிறதும், தரித்திரர்பேரிலே தயையுண்டாய் இருக்கிறதும் ஆம். நல்ல செய்கையாவது - சம்ஸாரத்துக்கு வேண்டும் என்றதை முன்னே தானே தேடிக்கொள்ளுகிறதும் நன்றாய்ச் சமைக்கிறதும் அயல்அகத்தார் எண்ணிக்கொள்ளத் தக்கது ஆகிறதும் ஆம். தேடின வரவுக்குத் தக்க செலவாவது முதலழியாமல் வைத்துக் கொண்டு மற்றதைச் செலவிடவேண்டும் என்பதாம். (க)

52. மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்.

(இ - ள்.) : சம்ஸாரத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகள் ஒருவன் பெண்சாதியினிடத்திலே இல்லாவிட்டால், அந்த வீட்டிலே எத்தனை ஐசுவரியங்கள் உண்டாயிருந்தாலும் ஒருவருக்கும் பிரயோசனமாகாதபடியினாலே ஒன்றும் இல்லாத வீட்டுடனே சரியாம் (எ-று.). (உ)

53. இல்லதென் இல்லவள் மாண்பானல் உள்ளதென்
இல்லவள் மாணக் கடை.

(இ - ள்.) : ஒருவனுடைய இல்லாள் நற்குண நற்செய்கைகளை உடையவளானால் அந்த மனையில் இல்லாதது ஒன்றுமில்லை ; சகல வஸ்துக்களும் உண்டாயிருத்தல்போலேயாம். அந்த இல்லாளிடத்து நற்குண நற்செய்கைகள் இல்லாவிட்டால் அந்த மனையிலே சகல பாக்கியம் இருந்தாலும் ஒன்றும் இல்லாததுபோலாம். ஆகையினாலே, சம்ஸாரத்திற்குத் துணையாகிறது இல்லாளுடைய நற்குணமே (எ-று.). ந

**54. பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மைஉண் டாகப் பெறின்.**

*(இ - ள்.) : ஒருவன் தேடவேண்டிய பொருள்களிலே பெண்சாதியைத் தேடிக்கொள்ள வேண்டும். அவளைவிடப் பெரிய பொருள் ஒன்றும் இல்லை. அந்தப் பெண்சாதியும் நற்குண நற்செய்கைகளுடனேகூடப் பதிவிரதை என்று சொல்லப்பட்ட திடவிரதம் உள்ளவளானால் அவளே பெரிய திரவியம் (எ-று.).* (௪)

**55. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.**

*(இ - ள்.) : பிறிதொரு தெய்வத்தைத் தொழாள் ; தன் தெய்வமாகிய தன் புருஷனையே தோத்திரம் பண்ணிக்கொண்டு நித்திரையைவிட்டு எழுந்திருப்பாள். அப்படிப்பட்ட பதிவிரதையானவள் மழைபெய்யச் சொன்னவுடனே பெய்யும் (எ-று.).*

*" தொழுது எழுவாள் " என்றது தெய்வங்களைத் தொழுகிறதற்கு மனது தெளிவாயிருக்கிறது நித்திரையைவிட்டு எழுந்திருக்கிறபோ தானபடியினாலே இராத்திரி நித்திரை செய்து காலமே எழுந்திருக்கிறபோது முதலாகத் தெய்வங்களைத் தொழவேண்டும் (எ-று.).*

*(வி - ரை.) : புகழமைந்த கற்புடை மகளிரை மக்களேயன்றித் தேவரும் முனிவரும் முதலாயுள்ளோர் ஏத்துதல் இயல்பு என்பதைக் கீழ்க்கண்ட சிலப்பதிகாரச் செய்யுளால் அறியலாம் :*

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வம் தொழூஉந்தகைமை திண்ணிதால்—தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணகமா தர்க்கு விருந்து."

—(சிலப்பதிகாரம் - மதுரைக் காண்டம்

" கணவற் கைதொழுது வாழ்வார் " என்பது சீவக சிந், 1598.

56. தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

*(இ - ள்.) : பதிவிரதா தர்மத்தை வழுவாமல் காத்துத் தன்னைக்கொண்ட புருஷனைப் போசனம் முதலான காரியங்களாலே நன்றாய்ப் போஷித்து, இரண்டுபேரிடத்திலேயும் நல்ல கீர்த்தி வரத்தக்கதாக நடந்து நற்குண நற்செய்கைகளை விடாமல் நடந்து கொள்ளுகிறவளே பெண்சாதியாம் (எ-று.). (சு)*

57. சிறைகாக்குங் காப் பெவன்செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

*(இ - ள்.) : ஸ்திரீகளைப் புருஷன் வீடு, வாசல், காவற்காரர், கோட்டை, கொம்மை முதலானவைகளிலே காக்கிற காவல் என்ன பலனை உண்டாக்கும்? அந்த ஸ்திரீகள் தங்கள் மனத்தைக் காக்கிறதே உத்தமமான காவல் (எ-று.).*

*மனசு வேறே நினைத்தால் மற்றக் காவல்களினுலே ஒரு பலனுமில்லை என்பதாம்.*

*(வி - ரை.) : நிறையாவது நெஞ்சைக் கற்புநெறியில் நிறுத்துதல். காவல் இரண்டிலும் நிறைக்காவல் இல்லாவிட்டால் மற்றச் சிறைக்காவலால் பயனில்லை என்பதை வலியுறுத்த 'நிறைகாக்கும் காப்பே தலை' என்ருர். இதனுல் தன்னுடைய கற்பைக் காத்துக் கொள்வதன் சிறப்புக் கூறப்பட்டது. (எ)*

58. பெற்ருன் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு.

*(இ - ள்.) : ஸ்திரீகள் தங்களைக் கொண்ட புருஷன் சொன்னபடியே நடந்து, நற்குணங்களை உடையவர்களாயிருந்தால் மறுஜென்மத்திலே தேவலோகங்களிலே பிறந்து, தேவர்களாலே பண்ணப்பட்ட பெரிய சிறப்பைப் பெறுவார்கள் (எ-று.). (அ)*

59. புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை.

*(இ - ள்.) : நல்ல பதி விரதத்தையும், கீர்த்தியையும் உடைய பெண்சாதியை இல்லாதவனுக்குத் தன்னை இகழ்ந்து*

பேசுகிறவர்கள் முன்னே ஆண்சிங்கத்தைப்போலப் பயப்படாமல் நடக்கத்தக்க தில்லை ; (எ-று).

(வி - ரை.) : பெருமித முடையவனுக்குச் சிங்கவேறு நடையால் உவமமாகலின் 'ஏறுபோல்' என்றார். "சிங்கம் நடப்பதுபோல் சேர்ந்து......இருந்தான் போரே றனையானே" (சீவக சிந். 2608) என்பதை நோக்குக. இதனால் புகழை விரும்பி வாழாத வாழ்க்கையின் குற்றம் கூறப்பட்டது. கற்பில்லா மனைவியை யுடையவனுக்குத் தன்னை இகழ்வார்முன் பெருமித நடை உளதாகாது. (௫௯)

60. மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.

( இ - ள். ) : ஒருவனுக்கு நன்மை என்று சொல்லுகின்றது நல்ல குணங்களை உடைய பெண்சாதியே. அதனிலும் நல்ல பிள்ளைகளைப் பெறுகிறது நல்ல பூரணமாம் அந்தத் தாய் தகப்பனுக்கு ( எ - று. ) (௬௦)

---

## 7. புதல்வரைப் பெறுதல்

அஃதாவது, பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர் என்ற இந்த மூன்று பேராலும் இறுக்கத் தக்க கடன் மூன்று. அவை முனிவர், தேவர், பிதாக்கள் கடனும். இவற்றுள் முனிவர் கடனாவது :—தவத்திற்கு இடையூறு வராமல் ஆகாரமும் அவுழ்தமும்[1] சாஸ்திரமும் கொடுத்து இவைகளாலே பரிகரித்தல். தேவர்கடன் பூஜை திருநாளாலும், பிதாக்கள் கடன் தருமகுணம்* முதலானவைகளிலேயும் இறுக்கப்படும். ஆதலின் இந்தக் கடன் இறுக்கிற நிமித்தம் நல்ல பிள்ளைகளைப் பெறுவதென்பதாம்.

61. பெறுமவற்றுள் யாமறிவ(து) இல்லை அறிவறிந்த
மக்கட்பே(று) அல்ல பிற.

( இ - ள் ) : ஒருவன் பெறவேண்டிய பேறுகளிலே அறிவுடனே கூடி யிருக்கின்ற நல்ல பிள்ளைகளைப் பெறுகிறதல்லா

[1] அவுழ்தம் - மருந்து. * தர்ப்பணம் - பாடபேதம்.

மல் இதிலும் அதிகமான பேறுகள் யாமறிந்ததில்லை என்பதாம். அறிவுண்டாயிருக்கிற பிள்ளைகளைப் பெற்றால் அந்தப் பிள்ளைகளாலே இம்மையில் கீர்த்தியும், மறுமைக்கு உறுதியாகிய தன்மபோதனையும் உண்டாம் (எ - று). (க)

62. எழு பிறப்பும் தீயவை தீண்டா பழி பிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

(இ - ள்.) : வினைவசத்தினாலே பிறக்கப்பட்ட பிறப்பு ஏழினிடத்திலேயும், தீவினைகள் வந்து சேரா, பழிகளைச் செய்யாமல் நன்மையுண்டாயிருக்கிற காரியங்களைச் செய்யப்பட்ட நல்ல புத்திரர்களைப் பெறின் ; (எ - று.)

ஏழு பிறப்பாவன :— ஓரறிவு உயிர் இரண்டு, ஈரறிவு உயிர் ஒன்று, மூவறிவு உயிர் ஒன்று, நாலறிவு உயிர் ஒன்று, ஐயறிவு உயிர் இரண்டு ஆக மொத்தம் ஏழு.

தந்தை தாயர் தீவினை தேய்தலாவது அவரை நோக்கிப் புதல்வர் செய்யும் நல்ல தருமங்களால் என்பதாம்.

(வி - ரை.) : ஓரறிவு உயிர் இரண்டாவன சூக்ஷ்ம ஏகேந்திரியம், ஸ்தூல ஏகேந்திரியம் என்பனவாம். அவற்றுள் சூக்ஷ்ம ஏகேந்திரியம் கண்ணுக்குத் தோன்றாது. ஸ்தூல ஏகேந்திரியம் மரம், செடி, கொடி முதலியவை.

ஐயறிவு உயிர் இரண்டாவன : மனதையுடைய ஐயறிவு உயிர்களும், மனது இல்லாத ஐயறிவு உயிர்களுமாம். இவை வடமொழியில் சக்ஞி பஞ்சேந்திரிய ஜீவன்கள் என்றும் அசக்ஞி பஞ்சேந்திரிய ஜீவன்கள் என்றும் கூறப்படும். (உ)

63. தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தந்தம் வினையான் வரும்.

(இ - ள்.) : தம்புதல்வரைத் தம்முடைய பொருள் என்பர் ; அதெப்படி என்றால் அந்தப் பிள்ளைகளும் அந்தப் பிதா பண்ணின புண்ணியத்தினாலே வரும் ; அந்தப்பிள்ளைகள் செய்கிற நன்மையினாலே இம்மையிலே கீர்த்தியும் மறுமைக்கு உறுதியான தரும போதனையுமாம் (எ - று.) (ங)

64. அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.

*( இ - ள். ) : அதிக ருசி உடைத்தாயிருக்கிற அமிர்தத்தைப் பார்க்கிலும் மெத்த நன்றாயிருக்கும், தம்பிள்ளைகள் சிறு கையினாலே அளையப்பட்ட கூழ் ( எ - று. )*

*(வி - ரை.) : சிறுகையான் அளாவுதலாவது, "சிறுகை நீட்டி, இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும், நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்" தல். (புறநானூறு. 188). அதாவது "சிறிய கையை நீட்டிக் கலத்தின்கட் கிடந்ததனைத் தரையிலேயிட்டும் கூடப்பிசைந்து தோண்டியும் வாயாற் கவ்வியுங் கையால் துழாவியும் நெய்யையுடைய சோற்றை உடம்பின்கட்படச் சிதறுத"லாம்.*

65. மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.

*( இ - ள். ) : ஒருவன் உடம்பிற்குச் சுகமாவது, தன் புத்திரருடைய சரீரத்தைத் தீண்டுகிறதே ; காதுக்கு இன்பமாகிறது தன் பிள்ளைகள் சொல்லுகிற வார்த்தைகளைக் கேட்கிறதே (எ - று.) (ரு)*

66. குழல் இனி(து) யாழ் இனிது என்பதம் மக்கண்
மழலைச்சொற் கேளா தவர்.

*( இ - ள். ) : தம் பிள்ளையினுடைய மழலை வசனத்தைக் கேளாதவர் குழலோசை நன்றாயிருக்கின்றது. அதிலும் யாழினுடைய இசை நன்றாயிருக்கிறது என்பார். அந்த மழலைச் சொல்லைக் கேட்டவர்கள் குழல், யாழிசை முதலானவெல்லாம் அதற்குச் சரியல்ல என்பார் என்றவாறு. (சா)*

67. தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்.

*( இ - ள். ) : தகப்பன் பிள்ளைக்குச் செய்கிற நன்றியாவது அந்தப் பிள்ளை கல்வியுடைய வித்வான்கள் இருக்கின்ற சபையிலே வந்தால் அவனை அந்தச் சபையிலே இருக்கிறவர்கள், 'வாரும், இரும்' என்று சொல்லப்பண்ணுகிறதான*

கல்வியை அதிகமாகப் பண்ணுவிக்கிற தென்பதாம். திரவியம் முதலானவைகளை அதிகமாகப் பண்ணினால் துக்கம் வரும் (எ - று). (எ)

68. தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது.

(இ - ள்.) தகப்பனைப்பார்க்கிலும் பிள்ளை நல்ல அறிவுடனே கூடியிருந்தால் பூமியிலே இருக்கப்பட்ட ஜனங்களுக் கெல்லாம் நன்மையாம் என்பதாம். நன்மையாகிறது கல்வியை அறிந்து ஒருவருக்கும் தீங்கு செய்யாமல் இருக்கிறது (எ - று). (அ)

69. ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்.

(இ - ள்.) தாயானவள் பிள்ளையைப் பெற்றபொழு திருந்த சந்தோஷத்தைப்பார்க்கிலும் அதிகமான சந்தோஷத்தை அடைவாள்; அந்தப் பிள்ளையை நல்லவன் என்று பெரியோர்கள் சொல்லக் கேட்டபொழுது (எ - று). (கூ)

70. மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்எனுஞ் சொல்.

(இ - ள்.) பிள்ளையைக் கல்வியுடையனாகச் செய்த தகப்பனுக்குப் பிள்ளை செய்கின்ற நன்றியாவது : தான் நல்ல ஆசாரத்துடனேயும் வணக்கத்துடனேயும் நல்ல விரதத்துடனேயும் நடந்தால் அதைக்கண்டபேர் ‘இப்படிப்பட்ட பிள்ளையைப் பெற்ற தகப்பன் என்ன தபசு பண்ணினானோ’ என்று சொல்லிக் கொள்வார்கள் (எ - று). (கo)

(வி - ரை.) சீவகன் சிறப்பைக் கண்ட பெரியோர் இவன் தந்தை "எத்துணைத்தவஞ் செய்தான் கொல்" என்றனர். (சீவகசிந். 2567).

---

## 8. அன்புடைமை

அஃதாவது, வாழ்க்கைத்துணையாகிய மனையாள் பேரிலேயும், நல்ல புதல்வரிடத்திலேயும், இதர ஜீவன்களிடத்திலேயும் தயையுண்டாய் இருக்கவேண்டும். அவர்களிடத்தில் தயை இல்லாவிட்டால் இல்லற (தர்ம)ம் நன்றாய் நடவாது என்பதாம்.

71. அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.

(இ - ள்.) ஒருவர்மேல் ஒருவர் தயையாயிருக்கிறதைப் பிறர் அறியாமல் மூடி வைப்பதற்கு ஒரு கதவும் இல்லை. அந்த அன்பை மறைத்துக்கொண்டு இருப்போம் என்றாலும் இராது. அஃது எப்படி இராது என்றால், தான் தயை பண்ணப்பட்ட பேர் துக்கப்படுகிறதைக் கண்டவுடனே, தன் கண்ணிலே கண்ணீர் பெருகும். அந்தக் கண்ணீரே அறியப்பண்ணுவிக்கும் (எ - று).

(வி - ரை.) சீவக சிந்தாமணியுள் விதேயநாட்டு வேந்தனாகிய கோவிந்தன் தன் மருமகனாகிய சீவகனைக் கண்டபொழுது அன்பு மிகுதலின், அவனைத் தோளாற் புல்லி தான் அழுத கண்ணீர் அவன் மார்பை நனைக்கும்படி நின்றான் என்று கூறப்பட்டுள்ளது.

"தன்னன்பு கூரத் தடந் தாமரைச் செங்கண் முத்த
மின்னும் மணிபூண் விரைமார்பம் நனைப்ப நின்றான்" (சீவகசிந். 2136)

72. அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.

(இ - ள்.) தயை இல்லாதவர்கள் தாங்கள் தேடின பொருளெல்லாம் தங்களுக்கு உரியவாய் எண்ணிக் கொண்டிருப்பார்கள். அன்புடையார் தங்கள் பொருளும், சரீரமும் பிறர்க்கு உரியராய் இருப்பர். சரீரம் பிறருக்கு உரியராய் இருக்கிறது பொருளையும் கொடுத்துத் தங்கள் கையினாலே எடுக்கிறதும் பிடிக்கிறதும் செய்வது (எ - று).

73. அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்(கு)
என்போ டியைந்த தொடர்பு.

( இ - ள். ) பெறுதற்கு அரிய மனுஷ்ய சரீரத்தைப்பற்றி வருகிற தொடர்ச்சியை அன்பினாலே வந்ததென்று சொல்லுவர் அறிந்தோர். உயிர் உடம்போடு கூடினல்லது அன்பு பிறவாது. எலும்பு சதை யுடைய பஞ்சேந்திரியஜீவன்களுக்கே அன்பு பிறக்கும். மற்ற இந்திரிய ஜீவன்களுக்கு அன்பு பிறவாது. அந்த அன்பினாலே தொடர்ச்சி யுண்டாம் (எ - று).

74. அன்பீனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு.

( இ - ள். ) ஒருவனுக்குத் தயையுண்டாயிருந்தால், அது சந்தோஷத்தை உண்டாக்கும். அந்தச் சந்தோஷமே அவனுக்குப் பகைவரும் புறத்தியாரு மில்லாமல் சகலமான பேரையும் சிநேகம் பண்ணுவிக்கும் (எ - று). (ச)

75. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்(து)
இன்புற்றார் எய்துஞ் சிறப்பு.

( இ - ள். ) அன்புடையவர்களே இல்லறத்தோடு பொருந்திய நெறியினை உடையவர்கள். உலகத்திலே சுகத்தினை அனுபவிக்கிறபேர் முந்தின ஜன்மத்தில் தயையுடையவர்களாயி இருந்தவர்கள் என்பதாம். தயை உடையவர்களுக்குப் பாவம் வாராது ; புண்ணியமே வரும். புண்ணியத்தினால் நல்ல கதியை அடைவார்கள்.* (ரு)

76. அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார் ;
மறத்திற்கும் அஃதே துணை.

( இ - ள். ) தன்மத்திற்கே அன்பு துணை என்று சிலர் சொல்லுவர். அவர்கள் அறியாதவர்கள். பாவத்திற்கும் அந்த அன்பே துணையாம் ( எ - று ).

பாவத்திற்கு அன்பு துணையாகிறது எப்படியென்றால், ஒருவன் செய்த பகையை மனத்திலே வைத்தால் பாவம் வரும்.

* உடையவர்கள் ஆவார்கள்—பாடபேதம்

அவன் மேலே சிநேகம் பண்ணித் தயை வைத்தால் அந்தப் பகையும் பாபமும் போம் ( எ - று ). (சு)

**77. என்பி லதனை வெயில்போலக் காயுமே**
**அன்பி லதனை யறம்.**

( இ - ள். ) எலும்பில்லாத உடம்பை வெயில் காய்ந்து கொல்வதுபோல அன்பில்லாத ஜீவனைத் தர்ம தேவதை காய்ந்து கெடுக்கும் ; ( எ - று ).

அன்பிலலதனை அறக்கடவுள் காய்கிறது, தர்மம் தானம் சேராமல் பாவத்தையும் பழியையும் சேரப்பண்ணி நரகங் களிலே விழப்பண்ணும் என்பதாம்.

( வி - ரை. ) அன்பில்லாத உயிரை அறக்கடவுள் காயும் என்பது, "அல்லவை செய்தார்க்கு அறங்கூற்றம்" (சிலப். வழக் குரைகாதை) என்பதனால் வலியுறுகின்றது. (எ)

**78. அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரந்தளிர்த் தற்று.**

( இ - ள். ) மனத்திலே அன்பு இல்லாத மனுஷன் இல் லறத்திலே இருந்து வாழ்கிறது, கடினமாய் இருக்கிற நிலத் திலே வற்றியிருக்கிற மரம் தளிர்த்தாற்போலும் ( எ - று ).

( வி - ரை. ) நிலம் கடினமாயிருத்தலாலும் மரம் வற்றி யிருத்தலாலும் தளிர்த்தற்குக் காரணம் இன்மையால் தளிராது என்பதாம். அதுபோலவே தன்னிடத்து அன்பில்லாதவனது வாழ்க்கையால் ஒரு பயனும் இல்லை என்பதாம். (அ)

**79. புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை**
**அகத்துறுப் பன்பி லவர்க்கு.**

( இ - ள். ) மனத்திலே தயையோடு கூடியிருந்து இல் லறத்தினைச் செய்யாதவர்களுக்குப் புறத்துஉறுப்பாகிய இடமும், பொருளும், ஏவல்செய்வாரும் என்ன பலனைக் கொடுக்கும் என்பதாம் ; தயை இல்லாதவர்களுக்குச் செல்வத் தினாலே ஒரு பலனும் இல்லை என்றவாறு. (கூ)

80. அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க்(கு)
என்புதோல் போர்த்த உடம்பு.

(இ - ள்.) அன்புள்ளவனே உயிருடன் இருக்கிறவன், அஃதாவது அன்புள்ளவனே சித்த கதியில் ஜீவஸ்வரூப மடைவன். அன்பு இல்லாதவன் எலும்புகளைக் கூட்டித் தோலினால் போர்த்து வைத்த உடம்பிற்குச் சரி. தோலாலே போர்த்தது பிணம் என்பதாம் (எ - று).

(வி - ரை.) அன்புள்ளவனே உயிருள்ளவனென்றும், அன்பில்லாதவன் உயிர் இருந்தும் பிணத்தோடு ஒப்பன் என்றும் கூறியதனால் உயிர் என்னுஞ் சொல்லுக்கு உயிரின் மாசற்ற தன்மை என்று பொருள் கொண்டுள்ளார். மாசற்ற உண்மையான தன்மையையுடைய ஜீவன் மோக்ஷ ஜீவனென்றும், சித்தன் என்றும் பரமாத்மனென்றும் கூறப்படும். இந்தச் சுத்தநிலையை யடைவதற்கு அன்பு ஒன்றே வழி. இதனால் ஆசிரியர் அஹிம்ஸா தர்மத்தைக் கைக்கொண்டாலொழிய ஒரு ஜீவனுக்கு வீடுபேறில்லை என்று வற்புறுத்துகின்றார். வீடுபேற்றைச் சேர்க்கும் வழியல்லாது வேறுவழியில் திரிவோர் பெறுதற்கரிய மனிதப் பிறப்பைப் பெற்றிருந்தும் அம்மனிதப் பிறப்பினால் அடையவேண்டிய பலனை அடையாதிருத்தலால் அவர் உயிரோடிருந்தும் இறந்தவரோடொப்பர் என்று கூறியுள்ளார்.

இக்கருத்தையே மணக்குடவரும் "அன்பின் வழியதாகிய அறத்தினால் உயிருக்கு நிலைபேறு உளதாம். அன்பு இலாதார்க்கு என்பின்மேல் தோலினால்போர்க்கப்பட்டஉடம்புகளே (உளவாம்). இஃது அன்பில்லார் வீடு பெறாரென்றது" என்று கூறியிருப்பது கவனிக்க. உயிர்நிலை—உயிர் எக்காலத்தும் அசைவின்றிப் பரமாத்மனாக நிற்கின்ற மோக்ஷஸ்தானம். நிலைபேறு - மோக்ஷம். (௮௦)

---

## 9. விருந்து ஓம்பல்

அஃதாவது விருந்தாக வந்த அசம்யதன், விரதிகன், யதி, என்ற மூன்றுபேருக்கும் நாலுவித தானம் கொடுத்து ரக்ஷித்தல் என்பதாம்.

( வி - ரை. ) இம்மூவருள் முதல் இரண்டு வகையினர் இல்லறத்தோர். மூன்றுவது வகுப்பினர் துறவு பூண்ட முனிகள். ஜைன ஆசார நூற்படி இல்லறத்தோர் பதினொரு வகைப்படுவர். இவர்களெல்லோருக்கும் பொதுப்பெயர் சிராவகர் என்பது. சிராவகர்கள் அவரவர்கள் ஒழுக்க மேம்பாட்டின்படி முதல்நிலை சிராவகர் இரண்டாம்நிலைச் சிராவகர் என்று கூறப்படுவர். முதல் நிலையிலுள்ள சிராவகன் சம்யக் தரிசனம் (நற்காட்சி) - அதாவது ஜின தர்மத்தில் திடமான நம்பிக்கையும் பக்தியுமுள்ளவன். இவன் தரிசனிகன் எனப்படுவன். இவன் இல்லறத்தோர்க்கென்று விதிக்கப்பட்டவிரதங்களைஅனுஷ்டிக்காமலும் அனுஷ்டிக்கச் சக்தியற்றவனுயு மிருப்பதால் அசம்யத சம்யக் திருஷ்டியென்றும் அழைக்கப்படுவன். இவன் நீங்கலாக மற்ற இரண்டுமுதல் பதினொரு நிலை வரையிலுள்ள சிராவக நிலைகளிலுள்ளவர்களுள் ஒவ்வொருவனும் நற்காட்சியோடு தன் நிலைக்கு விதிக்கப்பட்ட விரதங்களை அனுஷ்டிப்பதால் விரதிகன் என்று கூறப்படுவன். இவனையே வடமொழியில் சம்யதன் என்பர். இல்லற வாழ்க்கைக்குரிய தரிசனிகன் விரதிகன் ஆகிய இவ்விருவகையினம் நீங்க முற்றும் துறந்த முனி யதி எனப்படுவன். நான்கு வகைத் தானங்களாவன : ஆகார தானம், ஔஷத தானம், அபயதானம், சாஸ்திரதானம் என்பனவாம். (க)

81. இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

( இ - ள். ) துறவறத்திற்குக் காரணமான இல்லறத்தில் விருந்து நீதியுடன் பொருள்தேடி வாழ்கிறது ஏனெனில், அதிதிகளை உபசரித்துத் தானங்கொடுத்து உபகாரம் பண்ணுவதற்கு ( எ - று).

82. விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

( இ - ள். ) அதிதிகள் பாஹ்யத்தில் இருக்க, சாவாது பிழைக்கவைக்கும் அமிர்தமாயினும் அந்த யதீசுவரர்களை விட்டுத் தான் மாத்திரம் பொசிக்கப் போகாது. அவர்களையும் கூப்பிட்டு நவ புண்ணியத்துடன் தானம் இட்டுச் சாப்பிட வேணும் ( எ - று ).

( வி - ரை. ) பாஹ்யத்தில் - வெளியில். நவ புண்ணியம் - ஒன்பது வகையான புண்ணியச் செயல்கள். அவைமுற்றும் துறந்த மகாமுனிகள் ஆகாரத்திற்காகத் தெருவில் வரும்பொழுது அவர்களுக்கு உணவுகொடுக்கவேண்டி நிற்கும் இல்லறத்தான் அனுஷ்டிக்க வேண்டியனவாம். அவை 1. எதிர்கொண்டழைத்தல், 2. உயர்ந்த பரிசுத்தமான இடத்தில் இருக்கச் செய்தல், 3. பாதங்களைக் கழுவுதல். 4. அர்ச்சித்தல், 5. நமஸ்கரித்தல், 6. மனம், 7. வாக்கு, 8. காயம் ஆகியவை சுத்தமாயிருத்தல், 9. பரிசுத்தமான ஆகாரத்தைக் கொடுத்தல் என்பன. "ஒன்பது வகையினோதிற்று" என்னும் (சீவக சிந். 2828) செய்யுளுக்குத் தாம் இயற்றிய உரையில் நச்சினார்க்கினியர் பின்வரும் பாட்டை மேற்கோளாகக்காட்டியுள்ளார்.

'எதிர்கொள விடநனி காட்டல் கால்கழீஇ
யதிர்பட வருச்சனை யடியினை வீழ்தன
மதுரநன் மொழியொடு மனமெய் தூயரா
யுதிர்கநம் வினையென வுண்டி யேந்திநோ' (உ)

83. வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று.

( இ - ள. ) நாள்தோறும் வருகிற முனீந்திரர்க்குத் தானங்களைச் செய்கிறவனுக்கு ஐசுவரியம் போய்த் தரித்திரம் வருவதில்லை. விருந்தினர்க்கு உபகாரஞ் செய்யவே ஐசுவரியம் நாள்தோறும் வளரும் (எ - று). (ங)

84. அகன்அமர்ந்து செய்யாள் உறையும் ; முகன்அமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்.

( இ - ள். ) சந்தோஷத்தோடு ரிஷீந்திரருக்குத் தானம் கொடுக்கும் வீட்டில் மஹாலக்ஷ்மி சந்தோஷமாக வாசம் செய்வாள் (எ - று).

தானம் கொடுத்த புண்ணியத்தால் ஐசுவரியம் வளரும் என்பதாம். (ச)

85. வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்.

(இ - ள்.) அதிதிகளுக்குப் பக்தியோடு தானம் கொடுத்து மீந்ததைச் சாப்பிடுகின்றவனது நிலத்திற்கு விதை விதைக்க வேண்டுமோ! (எ - று).

தான புண்ணியத்தால், தேவர்கள் இரத்தின மழை பொழிகிறதும், போகபூமியில் பிறக்கிறதும் முதலானவை ஆம் என்றவாறு. (ரு)

**86.** செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

(இ - ள்.) ரிஷீந்திரருக்கு அசனமிட்டு இரக்ஷித்து, இனிமேல் வரப்போகிற அதிதிகளை எதிர்பார்த்திருந்து சாப்பிடுகிறவன் மறுபிறப்பிலே தேவலோகத்திலே பிறந்து தேவர்களுக்கு நல்ல விருந்துபோல இருப்பான் (எ - று).

(வி - ரை.) செல்விருந்து—தவம் செய்வதற்குச் சாதகமாயிருக்கின்ற சரீரத்தைக் காப்பாற்றிக்கொள்வதற்காகச் சிறிது உணவு தேவையானபடியால் அதைச் சிற்சில நாட்களுக்கொரு முறை இல்லறத்தாரிடமிருந்து ஏற்று உண்பதற்காக அவர்கள் வசிக்கும் வீதியில் செல்லுகின்ற மகாமுனிகள் ஆவர். இவர்கள் ஆகாரத்திற்காகச் செல்வது சர்யாமார்க்கம் போதல் எனப்படும். இவர்கள் எந்த வீட்டையும் குறிப்பிட்டுப் போகார்; வீதிவழியே செல்வார்கள். இல்லறத்தார் நவபுண்ணியக் கிரமத்தோடு உபசரித்து உணவைக் கொடுத்தால் ஏற்றுக்கொள்வார்கள். இவர்கள் உணவுக்காகப் போகும் முறை கீழ்க்கண்ட செய்யுளால் நன்கு விளங்கும்.

" காற்நெறி நின்றி மண்ணிற் கண்ணுகத் தளவு நோக்கி
மாற்றினை யெறியும் நூல்வாள் வாய்ப்பிடி நடப்ப தேபோல்
ஏற்றநாள் மீனே டேகும் பிறையென இல்லந் தோறும்
மாற்றின்வெந் துயரந் தீர மருந்துண்பான் போலப் புக்கான். "

(மேருமந். 850)

இன்னும்,

' வில்வின தெல்லை கண்ணல் நோக்கிமெல் லடிகள் பாவி
நல்லருள் புரிந்து யிர்க்கண் நவைமுத லாய நாணி
இல்லவர் எதிர்கொண் டீயின் எதிர்கொளுண் டியரு மாகி
நல்லற அமிர்த முண்டார் நடந்தனர் வீதி யூடே."

(யசோதரகாவியம் - 28)

என்பதையும்,

" பாற்கதிர்த் திங்கட் கொட்பிற் பருமித்த களிறு போல
நூற்கதி கொண்டு கண்ணு னுகத்தள வெல்லை நோக்கி
மேற்கதிக் கேணி யாய விழுத்தவர் மனையில் வந்தாற்
காற்கொசி கொம்பு போலக் கைதொழு திறைஞ்சி மாதோ."
(சீவக சிந். 2826)

" தொடிக்கையாற் றொழுது வாழ்த்தித் தூமணி நிலத்து ளேற்றிப்
பொடிப்புனை துகிலி னீக்கிப் புகழ்ந்தடி கழீஇய பின்றை
அடுத்தசாந் தகிலி னாவி ஆய்மல ரருச்சித் தானூர்
கொடுப்பர் நா லமிர்த மூன்றிற் குணம் புரிந் தடங்கி னார்க்கே"
(சீவக சிந். 2827)

என்பனவற்றையும் காண்க.

வருவிருந்து - தன்னை நோக்கித் தன்னிடத்திற்கு வருகிற விருந்து. இவர்கள் இல்லறத்தில் இருப்பவர்கள். (சு)

**87. இனைத்துணைத் தென்பதொன் றில்லை ; விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்.**

( இ - ள். ) விருந்தினரைப் போஷிக்கிறதாகிய யாகத்தின் பலன் இம்மாத்திரம் என்று பிரமாணம் சொல்லப் போகாது. வஸ்து கொஞ்சமானாலும் நல்லவர்களுக்குக் கொடுத்தால் அது தேவலோகங்களை அடைவிக்கும் என்பதாம் (எ - று).

( வி - ரை. ) விருந்தின் தகுதியளவே ஆகாரதானத்தின் பயன் என்பது கீழ்க்கண்ட செய்யுட்களால் நனி விளங்கும்.

" ஊனொடு தேனுங் கள்ளும் இன்றிநன் றாய வுண்டி
தானுவந் தெவர்க்கும் ஈதல் தானமாந் தானு மூன்றா
மூனுணுங் கொடுமை யார்க்கு முடன்பட்டு மூனு ணார்க்கும்
மானமா தவர்க்கு மீதல் வரிசையாற் பெருகு மூன்றும்"
(மேருமந். 349)

" புலைசுண்பா னுண்ட வுண்டி வலியினா லுயிரைப் போற்றின்
மலையினும் பெரிய வுண்டி வலியினா லுயிரைச் சால
நலியுமேல் நரகத் தாழ்த்து நடலைகள் படுமென் றாலிப்
புலைசுண்பார்க் குண்டி யீத னன்றுமா மன்று மாமே." (மேருமந். 350)

"அகதிக ளறத்தி னின்ற ரரும்பிணி யாளர் மூத்தார்
குகதிகள் குருடர் மூகர் கொலைத்தொழில் மனத்து மில்லார்
அகல்கையி னேந்தி னோருக் கருளினொ லீந்த வுண்டி
மகரிகை மலிந்த பூணோய் மத்திம தான மாமே." (மேருமந். 351)

"உறவியைப் பெரிது மோம்பி யொழுக்கத்தை நிறுத்தி யுள்ளம்
பொறிவழி படர்ச்சி நீக்கிப் பிறர்க்குநன் றாற்றிப் பொய்தீர்
நெறியினைத் தாங்கி நீங்கா வீட்டின்பம் விழைதல் செய்யு
முறுதவர்க் கீந்த வெல்லா முத்தம தான மாமே." (மேருமந். 352)

பொருள் அளவு சிறிதாயினும் தகுதியுள்ள விருந்தினருக்கு இட்டால் அது பெரிதாகிய பலனைத் தரும் என்பது கீழ்க்கண்ட செய்யுளால் தெளிவாகும்.

"உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
யிறப்ப நிழற்பயந் தாஅங்—கறப்பயனுந்
தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்." (நாலடியார்) (எ)

**88. பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.**

(இ - ள்.) நிச்சயமில்லாத திரவியங்களைத் தேடிப் புதைத்துவைத்துக்கொண்டிருக்கிறவர்கள் அந்தப் பொருளை இழந்துபோய் விசாரப்படுவார்கள். விருந்தினருக்கு உபகாரம் செய்யாதவர்கள் பொருள் இழந்துபோனபிறகு தாமே 'தருமங்களைப் பண்ணாமல் போனோமே' என்று நினைப்பார்கள் (எ - று).

(வி - ரை.) பொருளை ஈட்டுவதாலும் அதனைக் காப்பாற்றுவதாலும் பிறகு அதனை இழத்தலாலும் வருவது துன்பமே.

"ஈட்டலுந் துன்பமற் றீட்டிய வொண்பொருளைக்
காத்தலு மாங்கே கடுந்துன்பங்—காத்தல்
குறைபடிற் றுன்பங் கெடிற்றுன்பந் துன்பக்
குறைபதி மற்றைப் பொருள்." (நாலடியார். 280.) (அ)

**89. உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு.**

(இ - ள்.) திரவியம் உண்டாயிருக்கிற காலத்திலேயும் இல்லையென்று சொல்லப்படுவார்கள், விருந்தினர்க்கு உபகாரஞ் செய்யாதவர்கள். உண்டாயிருக்கையிலேயும் தருமங்களைப் பண்ணுதவர்கள் அறிவில்லாதார் என்பதாம் (எ - று).

(வி - ரை.) பொருள் உண்டான காலத்திலேயும் அதனைச் சத்பாத்திரங்களில் செலவிட்டுப் பயனை அடையாத பேதைமை அறிவில்லார்கண் உண்டு. அவருக்குப் பொருள் இருந்தும் அதனுல் பயன் இல்லை என்பதாம். (கூ)

**90.** மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

(இ - ள்.) அனிச்சப்பூ முகர்ந்தால் வாடிப்போம். விருந்தினரும் முகம் கோணிப்பார்த்தால் வாடி மனம் நோவர் (எ - று).

அனிச்சப்பூ முகர்ந்தால்அல்லாமல் வாடாது. விருந்தினர் கடினசித்தமாய்ப் பார்த்தவுடனே வாடுவர். ஆனபடியினாலே அனிச்சப்பூவினும் விருந்தினர் மெத்தென்றவர் (எ-று).

(வி - ரை.) அனிச்சமலர் தொடுக்கும்பொழுதே வாடும் என்பது "அனிச்சத்தம் போதுபோலத் தொடுப்பவே குழைந்து மாழ்கி" (சீவகசிந். 2939) என்னுஞ் சிந்தாமணியடியால் விளங்கும். (கய)

---

## 10. இனியவை கூறல்

அஃதாவது—மனத்திலே இருக்கிற சந்தோஷத்தை அறிவிக்கிறதாகிய நல்ல வார்த்தைகளைச் சொல்லுகிறது என்பதாம்.

**91.** இன்சொலா லீரமளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

(இ - ள்.) இன்சொல்லாவது — தயையுடனே கூடி வஞ்சனை இல்லாமல்இருக்கிற தருமத்தினை அறிந்தவர்கள்

வாயிலிருந்து வருஞ் சொல் என்பதாம். தயையுடனே கூடி நல்லவார்த்தை சொல்லுகிறவர்களிடத்திலே கொலையும், பொய்யும் களவும், இல்லை ( எ - று ). (க

**92.** அகனமர்ந் தீதலின் நன்றே முகனமர்ந்(து)
இன்சொலன் ஆகப் பெறின்.

( இ - ள். ) மனசு சந்தோஷத்துடனே ஒருவனுக்கு ஒரு பொருளைக் கொடுக்கிறதிலும் நல்லது, இரக்கிறவனைக் கண்டவுடனே நல்ல வசனங்களைச் சொல்லுதல் ( எ - று ).

நல்ல வசனங்க ளில்லாமல் கடின வசனங்களைச் சொல்லிக் கொடுக்கிறதினாலே பலன் இல்லை; நல்ல வசனம் சொல்லி அவர்க்குப் பிரியத்துடனே கொடுக்கிறதினாலேதான் பலன் உண்டாம் ( எ - று ). (உ

**93.** முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானும்
இன்சொ லினதே யறம்.

( இ - ள். ) கண்டபொழுதே முகமலர்து சந்தோஷமாகப் பார்த்து, மனத்திலே தயையுடனே கூடி, நல்ல வசனங்களைச் சொல்லுகிறதே தர்மம் (எ - று ). (ந

நல்ல வசனத்தினாலே புண்ணியம் உண்டு.

**94.** துன்புறூஉந் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.

( இ - ள். ) நல்ல வசனங்களைச் சொல்லுகிறவர்களுக்கு எல்லாரிடத்திலேயும் உறவும் நன்மையும் உண்டாம். எல்லா ரும் நன்மையைச் செய்தால் அவர்கள் தரித்திரமில்லாமலும் துக்கமில்லாமலும் சுகமாயிருப்பார்கள் ( எ - று ). (ச

**95.** பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணிஅல்ல மற்றுப் பிற.

( இ - ள். ): ஒருவனுக்கு ஆபரணமாகிறது, தன்னை வணங்குகிறவர்களுக்குத் தான் வணங்கி எல்லாரிடத்திலேயும் நல்ல வசனங்களைச் சொல்லுகிறதே ஆம். இஃது அல்லாமல் மற்ற ஆபரணங்கள்எல்லாம் ஆபரணம் அல்ல ( எ - று ). (ரு

**96. அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.**

( இ - ள். ) ஒருவன் நன்மை வரத்தக்கதாக நல்ல சொற்களை ஆராய்ந்துபார்த்துச் சொல்லுமாயின் அவனுக்குப் பாவங்கள் கெட்டுப்போய்த் தருமம் வளரும் ( எ - று ).

( வி - ரை. ) அல்லவை தேய அறம் வளர்வது இத் தன்மைத்து என்பதைக் கீழே வருஞ் செய்யுளா லறிக.

" விளக்குப் புகவிருண் மாய்ந்தாங் கொருவன்
றவத்தின்முன் னில்லாதாம் பாவம்—விளக்குநெய்
தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை
தீர்விடத்து நிற்குமாந் தீது. " (நாலடியார். 51) (சு)

**97. நயனீன்று நன்றி* பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.**

( இ - ள். ) இம்மைக்கு நிதியையும் உண்டாக்கி மறுமைக்குத் தன்மத்தையும் உண்டாக்கும், ஒருவருக்குப் பொருளால் உதவி செய்து நல்ல வசனத்தையும் சொல்வது ( எ - று ).

பொருள் வலுமையால் பிறருக்கு உபத்திரவம் பண்ணாமல் இருக்கிறதே நல்ல தர்மம் என்றவாறு. (எ)

**98. சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பந் தரும்.**

( இ - ள். ) திரவிய வலுமையால் பிறருக்கும் வாதை பண்ணாத நல்ல வார்த்தை சொல்லுகிறவனுக்கு இம்மையில் கீர்த்தியையும், மறுமையிலே வெகுவான சுகத்தையும் அது கொடுக்கும் ( எ - று ). (அ)

**99. இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.**

( இ - ள். ) பிறர் சொல்லுகிற நல்ல வார்த்தை தனக்கு நன்மையைக் கொடுக்க அனுபவித்து அறிந்தவன், அந்த நல்ல

* நன்மை பயக்கும் - பாடபேதம்.

வார்த்தையைத் தானும் சொல்லாமல் பிறரிடத்தில் பொல்லாத வார்த்தையைச் சொல்லுகிறது என்ன பலனைப் பெற வேண்டியோ? பொல்லாத வார்த்தை பிறருக்கும் பொல்லாது; தனக்கும் பொல்லாது. ஆனபடியினால் அந்தப் பொல்லாத வார்த்தையைச் சொல்லலாகாது (எ - று). (௯)

100. இனிய உளவாக இன்னாத கூறல்
கனிஇருப்பக் காய்கவர்ந் தற்று.

(இ - ள்.) தருமத்தை உண்டாக்கப்பட்ட நல்ல வசனங்கள் தனக்கு உண்டாயிருக்க அவற்றைச் சொல்லாமல் பாபத்தை வரப்பண்ணப்பட்ட இன்னாத வசனங்களை ஒருவன் சொல்லுகிறது எப்படிப்போல என்றால், நெல்லிக்கனி தன் கையில் இருக்க அதைத் தின்னாமல் எட்டிக்காயைத் தின்பது போலும் (எ - று).

எட்டிக்காயைத் தின்றவன் பிராணன் இழந்தாற் போலப் பொல்லாத வார்த்தைகளைச் சொல்லுகிறவன் தானே தனக்குக் கேடு தேடிக்கொள்ளுவன் என்பதாம். (௧௦)

---

## 11. செய்ந்நன்றி அறிதல்

அஃதாவது தனக்குப் பிறர் செய்த நன்மையை மறவாமை. இல்லறம் வழுவாமல்நடந்து நல்ல வசனங்களைச் சொல்லுகிறவர்களுக்குச் செய்தநன்றியை மறவாம லிருக்கவேண்டும் என்பதாம்.

101. செய்யாமல்* செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் மாற்ற லரிது.

(இ - ள்.) தனக்கு முன்னே ஒருவன்† ஓர் உதவி செய்யாதிருக்க அவனுக்குச் செய்த உதவிக்கு மண்ணுலகமும் விண்ணுலகமும் கொடுத்தாலும் சரி ஒவ்வாது (எ - று).

செய்யாமல் செய்த உதவியாவது: போகபூமியாயிருந்து கர்மபூமியாய் மாறினகாலத்து விவரமறியாத ஜனங்களுக்கு ஜீவனோபாயம், கல்வி, தானம்செய்கிறது முதலானவை கற்பித்தல்போல்[வது] என்பதாம். (௧)

* செய்யாமை - பாடபேதம் செய்யாதார் - மணக்குடவர் பாடபேதம்.
† ஒரு ஜினன் அவனுக்கு - பாடபேதம்.

102. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

(இ - ள்.) ஒருவனுக்கு இடையூறு வந்த காலத்திலே ஒருவன் செய்த உதவி கொஞ்சமாயிருந்தாலும், அந்தக் காலத்தைப் பார்த்தால், அது பூலோகத்தினும் பெரிது (எ - று).

அந்தக் காலத்தைப் பார்க்கிறதல்லது பொருளைப் பார்க்க வேண்டாம் என்பதாம். (உ)

103. பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலின் பெரிது.

(இ - ள்.) ஒருவன் தனக்குப் பிறகு செய்யப் போகிற உபகாரத்தை ஆராயாதே அவனுக்குச் செய்த உபகாரத்தை ஆராய்ந்து பார்த்தால் அந்த நன்மை கடலினும் பெரியதாம் (எ - று). (ங)

104. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்.

(இ - ள்): ஒருவன் தினையத்தனை உபகாரத்தினைப் பண்ணினாலும் அதனைப் பனையத்தனைப் பெரிய உபகாரமாக நினைப்பர், உபகாரத்தின் பலனை யறிந்த பெரியார் (எ - று).

105. உதவி வரைத்தன் றுதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

(இ - ள்.) ஒருவன் உபகாரம் செய்ய அவனுக்குப் பிரதியுபகாரம் பண்ணின உதவி காரணத்தினாலேயும், பொருளினாலேயும், காலத்தினாலேயும் ஆகிய மூன்று வகையாலும் பார்த்தால், அவன் செய்த உபகாரமாத்திரமேயல்ல, செய்வித்துக்கொண்டவன் பெருமையாகிய நற்குணங்கள் எத்தனை யுண்டோ அத்தனை பெரியது (எ - று). (ரு)

106. மறவற்க மாசற்றார் கேண்மை; துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு.

(இ - ள்.) துக்கப்படுகிற காலத்திலே தனக்குச் சினேகமாயிருந்தவர்கள் உறவை விடாமலிருக்க வேண்டும். அறிவினாலும், ஆசாரத்தினாலும் குற்றமற்றார்கேண்மையை மறக்க வேண்டாம் (எ - று). (சா)

107. எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கள்
விழுமம் துடைத்தவர் நட்பு.

(இ - ள்) தங்களுக்கு வந்த துக்கத்தினை நீக்கினவர்களுடைய சிநேகத்தைத் தாங்கள் பிறக்கும் ஏழு ஜென்மங்களிலேயும் நினைப்பார்கள் நல்லோர்கள் ; (எ - று). (எ)

108. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல(து)
அன்றே மறப்பது நன்று.

(இ - ள்.) ஒருவன் செய்த நன்மையை மறந்துபோகிறது நல்லதல்ல ; ஒருவன் செய்த தீமையை அப்பொழுதே மறப்பது நல்லது ( எ - று). (அ)

109. கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்.

( இ - ள் ) - தனக்கு முன் ஒரு நன்மை செய்தவர் பிறகு கொல்லுகிறதைப்போலே பொருந்த பொல்லாங்குகளைச் செய்தாராகிலும், முன்னே செய்த ஒரு நன்மையை நினைக்கில் அப்பொல்லாங்கெல்லாம் இன்மையாய்ப்போம் ( எ - று ). (கூ)

110. எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

(இ - ள் ) பெரிய தர்மங்களைக் கெடுத்தார்க்கும் பாவம் நீங்கத்தக்கதாக வழியுண்டு, ஒருவன் செய்த நன்றியைக் கெடுத்தவனுக்குப் பாவம் போகத்தக்க வழியில்லை. பெரிய தர்மங்களைக் கெடுக்கிறதாவது, தான் பிறரை அபவாதம் பண்ணுகிறதும், பசுவின் முலையறுக்கிறதும், ஸ்திரீகள் கெர்ப்பத்தைக் கெடுக்கிறதும் முதலான பாதகங்களைச் செய்தல். இதனினும் செய்த நன்றியைக் கெடுக்கிறது அதிக பாபம் என்பதாம். (கo)

## 12. நடுவு நிலைமை

*அஃதாவது பகைவர், அந்நியர், சிநேகிதர் என்ற மூன்று பேரிடத்தும் வழுவாமல் நிற்கப்பட்ட இலக்ஷணத்தைச் சொல்லுகிறது.*

**111. தகுதிஎன ஒன்று நன்றே பகுதியால்**
**பாற்பட் டொழுகப் பெறின்.**

*(இ - ள்.) நடுவுநிலைமை என்று சொல்லப்பட்ட ஒன்று நல்லது; பகைவர், அயலார் சினேகிதர்கள் என்று சொல்லப்பட்ட மூன்று திறத்தவரிடங்களிலேயும் அவரவர்கள் முறைமையறிந்து நடந்து கொண்டால் (எ-று.)* (க)

**112. செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி**
**எச்சத்திற் கேமாப் புடைத்து.**

*(இ - ள்.) பகைவர், அயலார், சிநேகிதர் என்கிறவர்களிடத்திலே நடக்கத்தக்க முறைமையறிந்து நடக்கிறவனுடைய ஐஸ்வரியம் பிறர் செல்வம் போல அழிவில்லாமல், அவன் பிள்ளை பேரன் முதலாகிய வங்கிசத்தார்களுக்கும் வலிமையைக் கொடுக்கும் (எ-று.)*

*தர்மத்துடனேகூடி நடந்தபடியினாலே அழிவில்லாமல் நிற்கும் என்பதாம்.* (உ)

**113. நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை**
**அன்றே ஒழிய விடல்.**

*(இ - ள்.) நன்மையைக் கொடுக்கிறதானாலும், நடுவு நிலைமையாகிய தர்மத்தால் அல்லாமல் வருகிற ஐஸ்வரியத்தை அப்பொழுதே விட்டுவிடவேண்டும் (எ-று.)* (ங)

**114. தக்கார் தகவிலர் என்ப தவரவர்**
**எச்சத்தால் காணப் படும்.**

*(இ - ள்.) இவர் தருமம் உடையவர், இவர் தருமம் இல்லாதவர் என்கிற விசேஷம் அவரவர்களுடைய பிள்ளைகள் நன்மையாலும் தீமையாலும் அறியப்படும் (எ-று.)*

*தர்மத்தையுடையவர்களுக்கு நல்லபிள்ளை உண்டாகிறதும், தர்மமில்லாதவர்களுக்கு நல்லபிள்ளை இல்லையாகிறதும் ஆம். இரண்டு திறத்தவரையும் அறிகிறதற்கு இதுவே அடையாளமாம்.* (௪)

**115.** கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி

*(இ - ள்.) தீவினை செய்தவன் கெடுகிறதும், நல்வினை செய்தவன் பெருக வாழ்கிறதும் முன்னேதானே உண்டாயிருக்கின்றன. அப்படி அறிந்து மனத்திலே கேடு நினையாமலிருக்கிறதே சான்றோர்களுக்கு ஆபரணமாம் (எ-று.)* (௫)

**116.** கெடுவல்யான் என்ப தறிகதன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின்.

*(இ - ள்.) ஒருவன் தன்னெஞ்சம் நடுவு நிற்றலை ஒழிந்து தருமமில்லாத காரியத்தைச் செய்ய நினைக்குமாயின், அந்த நினைவு தன்னை கெடுக்கத் தக்கதாக வந்ததென்று அறிய வேண்டும் (எ - று.)*

*நினைத்தாலும் செய்தாற்போலேயாம் என்பதாம்.* (௬)

*(வி - ரை.) நினைத்தாலும் செய்தாற்போலேயாம். இது ஜைனமதக் கொள்கை. இந்த கருத்தை* ***ஸ்ரீ*** *குந்தகுந்தாச்சாரியார் தாம் எழுதியருளிய "சமயசாரம்" என்னுங் கிரந்தத்துள் 263:265 காதைகளில் கீழ்க்கண்டவாறு விளக்கியுள்ளார். "கொலை செய்தல் பாவம்; கொலை செய்ய நினைக்கிறதும் பாவம். பொய் சொல்லுதல் பாவம்; பொய் சொல்ல நினைக்கிறதும் பாவம். களவு செய்தல் பாவம்; களவு செய்ய நினைக்கிறதும் பாவம். பிறனில் விழைதல் பாவம்; பிறனில் விழைய நினைக்கிறதும் பாவம். பொருளை வரைவின்றி கொள்ளுதல் பாவம்; பொருளை வரைவின்றி கொள்ள நினைக்கிறதும் பாவம்".*

**117.** கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.

*(இ - ள்.) நடுவுநிலைமை என்று சொல்லப்பட்ட தருமத்தின்கண்ணே நின்று, தரித்திரப் பட்டவனைப் பெரியோர்கள் தரித்திரவானென்று சொல்லார்கள்; (எ-று.)* (எ)

**118.** **சமஞ்செய்து[1] சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால்**
**கோடாமை சான்றோர்க் கணி.**

(இ - ள்.) முன்னே தான் சரியாக நின்று, பின் தன்னிலே வைத்த பாரத்தை நிறுக்கிற தராசுக்கோல்போல, தான் இலக்கணமாயிருந்து ஒரு கேட்டையும் நினையாமலிருக்கிறது சான்றோர்களுக்கு அழகான ஆபரணமாம் (எ-று.) (அ)

**119.** **சொல்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா**
**உள்கோட்டம் இன்மை பெறின்.**

(இ - ள்.) நடுவுநிலைமையாவது கொடுமையான வசனங்களைச் சொல்லாதது. அந்தக் கொடுமையான நினைவை மனத்திலே நினையாமலிருக்கப் பெற்றால் அதுவே பெரிய தருமம் (எ-று.) (கூ)

**120.** **வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவும் தமபோல் செயின்.**

(இ - ள்.) பிறர் பொருள்களையும், தம்முடைய பொருள் போலப் பார்த்து வாணிகம் செய்கிறவர்களுக்கு நன்றாய் வியாபாரம் பலிக்கும் (எ-று.)

"பிறவும் தமபோல் செய்தலாவது" கொள்ளுகிறது அதிகமும் விற்கிறது குறைவுமாகாமல், சரியாய்க் கொள்ளுகிறதும் விற்கிறதுமாம்.

---

## 13. அடக்கமுடைமை

அஃதாவது சரீரமும் வாக்கும் மனசும் பொல்லாத வழியிலே போகாமல் அடக்கிக் கொள்ளுகிற குப்தி[2] என்பதாம்.

**121.** **அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை**
**ஆரிருள் உய்த்து விடும்.**

(இ - ள்.) ஒருவனை அடக்கமாகிய தர்மம் பிறகு தேவலோகத்திலே சேர்க்கும்; அடங்காமையாகிய பாவம் பெரிய இருளையுடைய நரகத்திலே சேர்க்கும் (எ-று.) (க)

---

[1] சமன்செய்து - பாடபேதம்

[2] குப்தி - அடக்கம்

**122.** **காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்**
**அதனினூஉங் கில்லை உயிர்க்கு.**

(இ - ள்.) ஜீவன்களுக்கு அடக்கத்திலும் பெரிய செல்வம் இல்லை. ஆகையால் அடக்கத்தை உறுதியான பொருளாக எண்ணி அழியாமல் காக்க வேண்டும் (எ-று.) (உ)

**123.** **செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்**
**தாற்றின் அடங்கப் பெறின்.**

(இ - ள்.) அடங்குகிறதே நமக்கு அறிவானது என்று அறிந்து ஒருவன் சாத்திரத்தின் வழியே அடங்கப் பெறுவானாகில் அந்த அடக்கம் நல்லோரால் அறியப்பட்டு அவனுக்குப் பெருமையைக் கொடுக்கும்; (எ-று.)

சம்சாரிக்கு அடக்கமாகிறது மெய், வாய், கண், மூக்கு, செவி என்று சொல்லப்பட்ட ஐம்புலனும் தன்வசமாதல் என்பதாம். (௩)

**124.** **நிலையின் திரியா தடங்கியான் தோற்றம்**
**மலையினும் மாணப் பெரிது.**

(இ - ள்.) தான் கொண்ட விரத சீலங்களின் வழியே நின்று அடங்கினவனுடைய பெருமை மலையைப் பார்க்கிலும் பெரியது (எ-று.) (ச)

**125.** **எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளுஞ்**
**செல்வர்க்கே செல்வம் தகைத்து.**

(இ - ள்.) பெருமை இல்லாமல் அடங்கி நடக்கிறது எல்லார்க்கும் நல்லதாம். அதிலேயும் ஐஸ்வரியவான்கள அடங்கி நடந்தால் அந்த அடக்கம் பின்னையும் ஓர் ஐஸ்வரியம் உண்டானாற்போலவாம் (எ-று.)

கல்வியும் குடிப்பிறப்பும் உடையார் அடங்கி நடந்தால் மிகவும் நன்று எனபதாம். (ரு)

**126.** **ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்**
**எழுமையும் ஏமாப் புடைத்து.**

*(இ - ள்.) ஒரு பிறப்பிலே ஒருவன் ஐம்பொறிகளையும் அடக்கவல்லவனாயின், அந்த அடக்கம் அவனுக்கு ஏழுபிறப்பிலேயும் நன்மையைத் தரும் (எ-று.)*

*ஆமை, மனுஷ்யரைக் கண்டவுடனே, தன்பொறிகளை அடக்குகிறதுபோலப் பாபங்கள் வரவொட்டாமல் ஐம்பொறிகளையும் அடக்கவேண்டும் என்பதாம். (சா)*

**127.** **யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்**
**சோகாப்பர் சொல்இழுக்குப் பட்டு.**

*(இ - ள்.) தங்களாலே காக்கவேண்டிய ஐம்பொறிகளையும் காக்கமாட்டாவிட்டாலும், நா ஒன்றையும் காக்கவேண்டும். அதனைக் காவாவிட்டால் சொல்லுகிற வசனத்தினுடைய குற்றத்தினாலே தாங்களே துக்கமடைவார்கள் (எ - று.)*

*(வி-ரை.) இந்தக் குறளுக்கு எல்லிஸ் துரையவர்கள் (*F. W. Ellis*) எழுதிய உரையில் கீழ்க்கண்ட வளையாபதிச் செய்யுளை மேற்கோளாகக் காட்டியுள்ளார்.*

> “ ஆக்கப் படுக்கு மருந்தவாய்ப் பொய்விசகும்
> போக்கப் படுக்கும் புலைநரகத் தாழ்ப்பபிக்கும
> காக்கப் படுவனவும இந்திரிய மைந்திலும்
> நாககலல திலலை நனிபேணு மாறே ”

**128.** **ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்**
**நன்றாகா தாகி விடும்.**

*(இ - ள்.) பிறர்க்குத் தீங்குவருகிற வார்த்தை ஒன்றுண்டானாலும், அவனுக்கு மற்றத் தர்மங்களினாலே ஒரு பயனுமில்லை (எ - று.)*

*ஆனபடியினாலே நாவைக் காத்துப் பேசவேண்டும் என்பதாம். (அ)*

**129.** **தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே**
**நாவினால் சுட்ட வடு.**

*(இ - ள்.) ஒருவனை ஒருவன் நெருப்பினாலே சுட்டபுண் அவன் உடம்பிலே இருந்தாலும், மனத்திலே அப்பொழுது*

ஆறும். அப்படியல்லாமல் ஒருவன் நாவினாலே சொன்ன கடின வார்த்தையாகிற வடு பிறன் உடம்பிலே தெரியாவிட்டாலும், மனத்திலே எப்போதும் ஆறாமலிருக்கும் (எ - று).

**130.** கதம்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.

(இ - ள்.) மனத்திலே கோபம் தோன்றாமல் காத்து, கல்வியுடையவனாய் அடங்க வல்லவனை, அறக் கடவுள் வந்து சேருகிறதற்கு வழியைப் பார்த்திருக்கும் (எ - று.)

அடங்குதலாவது மனம் பொறிவழியே போகாமல் அறத்தின் வழியே நிற்றல். இப்படிப்பட்டவனுக்குத் தர்மம் தானே வந்து சேரும் என்பதாம். (ம)

## 14. ஒழுக்கமுடைமை

அஃதாவது, அந்தந்தச் சாதிக்கும்[1] ஆசாரநிலைக்கும் சொல்லப்பட்ட ஆசாரத்தின் வழியே நடக்கிறதாம்.

**131.** ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

(இ - ள்.) ஆசாரமாய் நடக்கிறது எல்லாருக்கும் பெருமையைக் கொடுக்கிறபடியினாலே, அந்த ஆசாரத்தைப் பிராணனைப் பார்க்கிலும் அதிகமாகப் பார்த்துக் காக்கவேண்டும் (எ - று.)

பிராணன் எல்லாவற்றிலும் பெரியதானாலும், ஆசாரத்தைப்போல மறுமைக்கு உறுதி செய்யமாட்டாது ; ஆனபடியினாலே, ஆசாரத்தையே காத்து ரக்ஷிக்க வேண்டும் என்பதாம்.

**132.** பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை.

(இ - ள்.) ஒழுக்கத்தை ஒன்றினாலேயும் அழிவுபடாமல் போற்றி வருந்திக் காக்க. பல தர்மங்களையும் ஆராய்ந்து

[1] சாதி - இங்கே சாதி என்றது பிறப்பைப் பொருத்ததன்று. தொழிலைப் பற்றியதாம். விவரங்களுக்கு ஸ்ரீ புராணம் 91, 131-132 பக்கங்களைப் பார்க்கவும்.

பார்த்தால், ஒழுக்கத்தைப் போல இம்மை, மறுமை இரண்டிற்கும், துணையாகத் தக்கதில்லை. ஆனபடியினாலே ஆசாரத்தைச் செய்யவேணும் என்பதாம். (எ - று.) (உ)

**133.** ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

(இ - ள்.) எல்லாருக்கும் ஆசாரமுண்டாயிருக்கிறதே நல்ல குலமாம். அந்த ஆசாரம் கெட்டால், அதுவே தாழ்ந்த ஜாதியாம் (எ - று.)

உயர்ந்த ஜாதியிலே பிறந்தவர்களானாலும், ஆசாரமில்லாவிட்டால் தாழ்ந்த ஜாதியராவர். தாழ்ந்த ஜாதியிலே பிறந்தாலும், ஆசாரம் விரதம் உண்டாயிருந்தால் உயர்ந்த குலத்தவராவர். (௩)

**134.** மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்.

(இ - ள்.) தான் கற்ற வேத சாஸ்திரங்களை மறந்தாலும், ஆசாரங் கெடாமலிருந்தால், திரும்ப சாஸ்திரம் படித்துக் கொள்ளலாம்; பிராமணன், ஜாதி ஆசாரம் தப்பி நடந்தால் கெட்டுப் போவான் (எ - று.)

பெரிய ஜாதியான பிராமணனைச் சொன்னபடியினாலே எல்லா சாதிக்கும் ஒக்கும் என்பதாம் (ச)

**135.** அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு.

(இ - ள்.) பிறர் ஐஸ்வரியத்தைப் பார்த்துப் பொறுப்பற்றுப் படுகிறவனுக்கு[1] ஐஸ்வரியமில்லாததுபோல, ஆசாரமில்லாதவனுக்குப் பெருமையில்லை ; கீர்த்தியும் இல்லை என்பதாம். (ரு)

**136.** ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து.

(இ - ள்.) பெரியோர்கள் தாங்கள் கொண்ட விரதம் ஆசாரம் இவைகளை நடக்கிறதற்கு அருமை என்று விட்டு

[1] பொறுப்பற்றுப்படுதல் - பொறாமைப்படுதல்.

விடார்கள். விட்டால் குற்றமும், இழிகுலமும் வருமென்று அறிந்து ஒழுக்கத்தை விடார்கள் (எ - று.) (சு)

**137.** ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி.

(இ - ள்.) சகலமானபேரும் ஆசாரவொழுக்கத்திலே பெருமையும் கீர்த்தியும் அடைவர். அந்த ஆசார ஒழுக்கத்தை விட்டால் பொல்லாத பழியை அடைவர் (எ - று.) (எ)

**138.** நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்.

(இ - ள்.) ஒருவனுக்கு நல்ல ஆசாரம், நன்மைக்குக் காரணமாய, இருமையினும் சுகத்தைக் கொடுக்கும்; பொல்லாத ஒழுக்கம், பாபத்துக்குக் காரணமாய், இருமையினும் துக்கத்தைக் கொடுக்கும் (எ - று.) (எ)

**139.** ஒழுக்கம் உடையவர்க் கொல்லாதே தீய
வழுக்கியும் வாயால் சொலல்.

(இ - ள்.) ஆசாரமுடையவர்கள் மறந்தும் பொல்லாத வார்த்தைகளை வாயாற் சொல்லுதல் இயலாது (எ - று.)

பொல்லாத வார்த்தைகளாவன, பிறருக்குத் தீங்குவரும் பொய் முதலாயினவும், தங்கள் குலத்திற்கு அடாதனவுமாம்.

**140.** உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்.

(இ - ள்.) பெரியோர்களோடு ஒக்க நடவாதவர்கள், பல நூல்களைக் கற்றாலும் அறிவில்லாதவர்கள் (எ - று.)

பெரியோர்களோடு ஒக்க நடக்கிறது: கொலை, பொய் முதலானவற்றை விட்டுத் தர்மத்தின் வழியே நடக்கிறதாம்.

---

## 15. பிறனில் விழையாமை

அஃதாவது காமபோக வாஞ்சை மயக்கத்தினால் அயலாருடைய ஸ்திரீகளை விரும்பி ஆசைப்படாமல் இருக்கிறது.

**141.** **பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து**
**அறம் பொருள் கண்டார்கண் இல்.**

*(இ - ள்.) பிறனுக்குரியளான பெண்சாதியை வாஞ்சித்துக்கொண்டிருக்கிற அறிவில்லாமை உலகத்திலே தர்ம சாஸ்திரங்களையும் நீதி நூல்களையும் கற்றறிந்தோர்களிடத்திலே இல்லை (எ - று.)* (க)

**142.** **அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை**
**நின்றாரில் பேதையார் இல்.**

*(இ - ள்.) காமவிகாரம் காரணமாகப் பாவத்தைச் செய்தவர்கள் எல்லாரிலேயும் பிறன் இல்லாளை விரும்பி, அவன் வாசலிலே போய் நின்றவர்களைப் போல, அறிவில்லாதவர்கள் இல்லை (எ - று.)*

*காம வாஞ்சையினாலே வேசியரைச் சேருகிறவர்களுக்குத் தருமமும் பொருளும் இழக்கிறதல்லாமல் பயமில்லை; பிறன் இல்லாளை விரும்பினவர்கள் அறமும் பொருளும் இழந்து, பயத்தினாலே தாங்கள் நினைத்த சுகமும் கெடுவர் என்பதாம்.* (உ)

**143.** **விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்**
**தீமை புரிந்தொழுகு வார்.**

*(இ - ள்.) தம்மைச் சந்தேகப்படாமல் விசுவாசமாய் நம்பினவருடைய பெண்சாதியிடத்திலே பாவங்களைச் செய்ய விரும்பினவர், பிராணனுடனே யிருந்தாலும் செத்தவரோடே யொப்பர் (எ - று.)*

*அறம், பொருள், இன்பங்களாகிய பலனை அடையாதபடியினாலே செத்தாரோடொப்பர் என்பதாம்.* (ங)

**144.** **எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்**
**தேரான் பிறனில் புகல்.**

*(இ - ள்.) எத்தனை பெருமையுடையவனானாலும், தன் குற்றத்தைச் சற்றும் எண்ணாமல், பிறனுடைய இல்லாளை விரும்புகிறவனுக்கு அவைகள் என்ன பயனைச் செய்யும்? ஒரு பலனுமில்லாமல் போய்விடும் (எ - று.)*

பிறன் இல்லாளை விரும்புகிறவன் எல்லாப் பொருளையும் இழப்பன் என்பதாம். (௪)

145. எளிதென இல்லிறப்பான் எய்து மெஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

(இ - ள்.) பிறனுடைய பெண்சாதியைச் சேருகிறது எளிது என்று சேருகிறவன் எக்காலத்திலேயும் நீங்காத பழியை அடைவான் (எ - று.) (௫)

146. பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்.

(இ - ள்.) பிறனுடைய இல்லாளை வஞ்சிக்கிறவனிடத்துப் பகையும், பாவமும், பயமும், பழியும் என்று சொல்லப்பட்ட இந்த நாலும் நீங்காவாம் (எ - று).

பகை, பாவம், பழி, பயங்களுண்டாகவே இம்மை, மறுமைப்பயனையும் இழப்பான் என்பதாம். (௬)

147. அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

(இ - ள்.) பிறனுடைய பெண்சாதி அழகை விரும்பாதவனே தர்மத்துடனே கூடி வாழ்கிற சம்சாரி (எ - று.)

இல்லறத்திற் குரித்தானவன் அவனே என்பதாம். (௭)

148. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு.

(இ - ள்.) பிறன்மனையாளை விரும்பாதவனுடைய ஆண்மை பெரியோர்களாலே எண்ணப்பட்ட தருமமுமாய் நிறைந்த ஆசாரமுமாம் (எ - று.)

புறத்திலே வருகிற பகையை அடக்குகிறவனுக்கும், உட்பகையாகிய காமத்தை அடக்குதல் அரிது. ஆகையால் காமவிகாரத்தை அடக்குதலே பெருமையாம். (௮)

**149.** நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பில்
பிறற்குரியாள் தோள்தோயா தார்.

(இ - ள்.) சமுத்திரஞ் சூழ்ந்திருக்கிற பூமியிலே, எல்லா நன்மைக்கும் உரித்தானவர்கள் யாரென்றால், பிறனுக்குரியாளான பெண்சாதியுடைய தோளைச் சேராதவர்கள் (எ - று.)

பரஸ்திரீகளைச் சேராதவர்களே இம்மையிலே கீர்த்தியும் மறுமையிலே தேவலோகமும் அடைவார்கள் என்பதாம். (கூ)

**150.** அறன்வரையான் அல்ல செய்யினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

(இ - ள்.) ஒருவன் தனக்குரியவான தருமங்களைச் செய்யாமல் பாவங்களைச் செய்தானாகிலும், பிறனுடைய பெண்சாதியை விரும்பாமலிருந்தால், அதுவே நல்லது (எ - று.)

சகல தருமங்களிலும் பிறனுடைய பெண்சாதியை வஞ்சியாமலிருக்கிறதே பெரிய அறமாம். (க0)

---

## 16. பொறையுடைமை

அஃதாவது—ஒருவன் ஒரு காரணத்தினாலே தனக்குக் குற்றஞ் செய்தால், தானும் அவனுக்குக் குற்றம் செய்யாமல் அவன் செய்த குற்றங்களைப் பொறுக்கிறதாம்.

**151.** அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்தல் தலை.

( இ - ள். ) தன்னை வெட்டுகிறவனை விழாமல் தாங்கும் பூமியைப் போலத் தம்மை இகழ்ந்து பேசுகிறவர்களைப் பொறுக்கிறதே முந்தின தருமம் ( எ - று. ) (க)

**152.** பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று.

( இ - ள். ) ஒருவன் செய்த குற்றங்களைப் பொறுப்பதே நன்று; அந்தக் குற்றங்களை மனத்திலே வையாமல் அப்பொழுதே மறப்பது அந்தப் பொறுமையினும் நன்று (எ - று.)

பொறுத்தாலும் மனத்திலே நினைவிருக்கும்; ஆகையால் நினையாமல் இருப்பது நன்று என்பதாம். (உ)

**153.** இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

( இ - ள். ) ஒருவனுக்குத் தரித்திரத்திலும் தரித்திரமாவது, விருந்தாய் வந்தவர்களுக்கு உபகாரம் பண்ணுமல், இல்லை என்கிறது; நன்மையிலும் நன்மையாவது ஒருவன் செய்த குற்றங்களைப் பொறுககிறது ( எ - று. ) (ங)

**154.** நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும்.

(இ - ள். ) ஒருவன், நன்மை, தன்னை விட்டு நீங்காமலிருக்க வேண்டுமென்முல் பொறுமையை விடாமல் காக்க வேண்டும் ( எ - று.)

பொறுத்தாலல்லது நன்மையில்லை என்பதாம். (ச)

**155,** ஒறுத்தாரை ஒன்றுக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து.

(இ - ள்.) ஒருவன் செய்த குற்றங்களைப் பொறுக்காமல், அவனுக்குப் பொல்லாங்கு செய்கின்றவர்களைப் பெரியோர்கள் எண்ணுர்கள்; பொறுதத பேரைப் பொன்னைப்போலப் பிரியமாக எண்ணி, வைத்துக் கொள்ளுவார்கள்; (எ - று.). (ரு)

**156.** ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

(இ - ள்.) தமக்குத் தீங்கு செய்தவனைத் தண்டனை பண்ணினவர்க்கு அப்பொழுது மாத்திரமே சுகமுண்டாம். அந்தக் குற்றங்களைப் பொறுத்தவர்களுக்கு உலகமழியுமளவும் கீர்த்தியுண்டாம் ( எ - று.) (சா)

**157.** திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.

(இ - ள்.) ஒருவன் தனக்குச் செய்யத்தகாத பொல்லாங்குகளைச் செய்தாலும், அவனுக்கு வரப்போகிற குற்றத்

திற்குத்தான் விசாரப்பட்டு, அவனுக்குப் பொல்லாங்கு செய்யாமலிருக்கிறதே நன்று; (எ - று.)

(வி - ரை.) இக்குறளோடு கீழ்க்கண்ட நாலடியார்ச் செய்யுளை ஒப்பிடுக.

"தம்மை யிகழ்ந்தமை தாமபொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப் பயத்தா—லும்மை
யெரிவாய நிரயத்து வீழ்வர்கொ லென்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன்" (நாலடியார் - 58.) (எ)

158. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல்.

(இ - ள்.) மனவலிமையினால் ஒருவர் தமக்குத் தீங்கு செய்தால், அவரைத் தம்முடைய பொறுமையினாலே வெல்ல வேணும் (எ - று.)

குற்றங்களைப் பொறுத்தால் பெருமை யுண்டாய்ப் பலராலும் எண்ணப்படுவரென்பதாம். (அ)

159. துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர்.

(இ - ள்.) சம்சாரத்திலே இருந்தாலும் அறிவில்லாதவர்கள் சொன்ன பொல்லாத வார்த்தைகளைப் பொறுத்தால், துறந்தவர்களைப்பார்க்கிலும் நன்மை யுடையவர்களாவர் (எ - று.) (கூ)

160. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின்.

(இ - ள்.) பெரியோர்கள் விரதங்களால் உண்டியைக் குறைத்து அதனாலேவந்த நோயைப் பொறுப்பார்; பிறர் சொல்லப்பட்ட பொல்லாத வார்த்தைகளைப் பொறுக்கிற உத்தம க்ஷமையுடையார் அவரிலும் பெரியோராவர் (எ - று.) (கo)

## 17. அழுக்காறாமை

அஃதாவது—ஒருவன் செல்வத்தைக் கண்டு பொறுப் பற்றுப்படுகிறது* அழுக்காறு; அஃது இல்லாது இருத்தல் அழுக்காறாமை.

**161.** ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன்நெஞ்சத்
தழுக்கா றிலாத இயல்பு.

(இ - ள்.) ஒருவன் தன் மனத்திலே அழுக்காறு என்னப் பட்ட பொறுப்பற்றத்தை வையாமலிருக்கவேண்டும். அந்தப் பொறுப்பற்றமையைத் தான் காக்கப்பட்ட விரதங்களைப் போலப் பார்த்துக் காக்கவேண்டும் (எ - று.) (க)

**162.** விழுப்பேற்றின் அஃதொப்ப தில்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின்.

(இ - ள்) எவர்களிடத்திலேயும் அழுக்காறாகிய பொறுப் பற்றுப்படுகிறது இல்லாமலிருந்தால், அவனுக்கு அதிலும் அதிகமாய்ப் பெறவேண்டுவ தொன்றில்லை (எ - று.)

அழுக்காறு பகைவர்களிடத்தும் ஆகாது என்பதாம். (உ)

**163.** அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறன்ஆக்கம்
பேணா தழுக்கறுப் பான்.

(இ - ள்.) மறுமைக்கும் இம்மைக்கும் பலனாகிய தரும மும், கல்வியும், செல்வமும் தனக்கு வேண்டாதவன் பிறர் செல்வங்கண்டு சந்தோஷப்படாமல் அழுக்காற்றைச் செய்கிற வன் (எ - று.)

ஒருவன் ஐஸ்வரியத்தைக் கண்டு பொறுப்பற்றுப்பட் டால் தனக்கே கேடுவரும் என்பதாம். (ந)

**164,** அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக் கறிந்து.

(இ - ள்.) அறிவுடையவர்கள் பிறர் செல்வம் கண்டு பொறப் பற்று படார்கள். பொறாமைப்பட்டால் தங்களுக் குக் குற்றம் வரும், என்று அறிந்து; (எ - று)

*பொறாமைப்படுகிறது - பாடபேதம.

அழுக்காறுவது, செல்வம்,கல்வி முதலாயினவுடையார்க்குத் தீங்கு நினைத்தலும், சொல்லுதலும், செய்தலுமாம். (ச)

**165.** அழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது.

(இ - ள்.) அழுக்காறுடையவரைக் கெடுக்கிறதற்குப் பகைவர் வேண்டா, அந்த அழுக்காறே அவரைக் கெடுக்கும் (எ - று.)

அழுக்காறுடையவர், செல்வமுடையார்க்குப் பொல்லாங்கு செய்து அதனால் கெடுவரென்பதாம். (ரு)

**166.** கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்.

(இ - ள்) ஒருவன் பிறருக்குக் கொடுப்பதைக்கண்டு அவர்களுக்கு ஏன் கொடுக்கிறான் என்று பொறாமைப்பட்டால் அவனும் தன் சுற்றத்தாரும் உண்ணவும் உடுக்கவும் இல்லாமல் கெட்டுப்போவார்கள்; (எ - று.)

பிறர்மீது பொறாமைப்பட்டால் தானும்தன் சுற்றத்தாரும் கெடுவர் என்பதாம். (சா)

**167.** அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.

(இ - ள்.) பிறர் செல்வம் கண்டு பொறாமைப்படுகிறவனை மகாலட்சுமியும் பொறாது தன் தமக்கையாகிய மூதேவியைக் காட்டிவிடுவாள் (எ - று.)

அழுக்காறுடையானிடத்தில் இலட்சுமி இராள் என்பதாம். (எ)

**168.** அழுக்கா றெனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்.

(இ - ள்.) அழுக்காறென்று சொல்லப்பட்ட ஒரு பாவி தன்னையுடையவனுக்கு இம்மையிலே செல்வத்தைக் கெடுத்து மறுமையில் அவனை நரகத்தில் சேர்த்துவிடும் (அ)

169. அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமுஞ் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்

*(இ - ள்.) குற்றமுடைய மனதுடையவன் ஐஸ்வரியமாயிருக்கிறதும் செவ்வையாயிருக்கிறவன் கெட்டுப்போகிறதும் முன்செய்த தீவினைப்பயன் (எ - று.)*

*முன்செய்த வினையே முந்திவரும் என்பதாம்.* (௯)

170. அழுக்கற் றகன்றாரும் இல்லையஃ தில்லார்
பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல்.

*(இ - ள்.) ஒருவனைப் பொறாமைப்பட்டதினாலே பெரியவர்களான பேர்களுமில்லை; அந்தப் பொல்லாங்கு செய்யாமல் கெட்டுப் போனவர்களு மில்லை (எ - று.)*

*இதனால், கேடும் நன்மையும் வருகிறதற்கு இலக்ஷணம் சொல்லப்பட்டது.* (௧௦)

---

## *18. வெஃகாமை*

*அஃதாவது—பிறருடைய பொருள்களைத் தான் அபகரித்துக் கொள்ளாமையும் பிறர் செல்வங்கண்டவழிப் பொறாமையின்மையும் என்பதாம்.*

171. நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்.

*(இ - ள்.) பிறர் பொருளை எடுத்துக் கொள்ளுகிறது தருமமல்ல என்றும் நீதியல்ல வென்றும் எண்ணாமல் எடுத்துக் கொண்டால் அஃது அவன் குடியைக் கெடச் செய்து அவனுக்கு வெகு குற்றங்களையும் தரும் (எ - று.)* (௧)

172. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்

*(இ - ள்.) பிறர் பொருளை வேண்டிப் பொல்லாங்குகளைச் செய்யார், பகை பழி பாவங்களுக்கு அஞ்சுகிறபேர் (எ - று.)* (௨)

173. சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

( இ - ள். ) பிறர் பொருளை அபகரித்துக்கொண்ட தினாலே வருகிற, நிலையில்லாத சுகத்தை விரும்பித் தருமம் அல்லாத பொல்லாத காரியங்களைச் செய்யார், மறுமைக்கு நிலையான சுகத்தை வேண்டுகிற பேர் (எ - று.) (ங)

174. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

(இ - ள்.) நாம் தரித்திரரென்று நினைத்துப் பிறர் பொருள்களை விரும்பி எடுத்துக்கொள்ளார், ஐம்புலன்களையும் வென்று இருபத்தைந்து குற்றமில்லாத சம்யக்தரிசனமுடைய வர்கள் (எ - று.)

(வி - ரை.) இருபத்தைந்து குற்றங்களாவன : மூவகை மூடமும், எட்டு மதங்களும், ஆறு அவிநயமும் ஐயம் முதலிய எட்டுத் தோஷங்களுமாம். மூவகை மூடமாவன - உலகமூடம், தேவமூடம், பாசண்டி மூடம் என்பன.

உலகமூடம்

வரைபாய்தல் தீப்புகுதல் ஆறுடல் இன்ன
உரைப்பில் உலக மயக்கு (அருங்கலச்செப்பு 30)

தேவமூடம்

வாழ்விப்பர் தேவ ரெனமயங்கி வாழ்த்துதல்
பாழ்பட்ட தெய்வ மயக்கு (ஷை. 31)
மயக்கார்வஞ் செற்ற முடையாரை யேத்தல்
துயக்குடைத் தெய்வ மயக்கு (ஷை. 32)

பாசண்டிமூடம்

மாசுண்ட மார்க்கத்து நின்றாரைப் பூசித்தல்
பாசண்டி மூட மெனல் (ஷை. 33)

எட்டு மதங்கள்

பிறப்புக் குலம் வலி செல்வம் வனப்புச்
சிறப்புத் தவமுணர்வோ டெட்டு. (ஷை. 34)

அவிநயம் ஆறு

அச்சமே ஆசை உலோபிதம் அன்புடைமை
மிச்சைபா சண்டிகள் நூல்தெய்வம்—மெச்சி
வணங்கல் அவிநயம் என்பவவே மாண்ட
குணங்களிற் குன்றுதவர். (அறநெறிச்சாரம்)

எட்டுத் தோஷங்களாவன :—கீழே கூறப்படும் எட்டு அங்கங்களுமின்மை.

ஐயம் அவாவே உவர்ப்பு மயக்கின்மை
மெய்பெறல் இன்னவை நான்கு (அரு. 14)
அறப்பழி நீக்கல் அழிந்தாரைத் தாங்கல்
அறத்துக் களவளா மூன்று (ஷை. 15)
அறத்தை விளக்கோ டெட்டாகு மென்ப
திறப்பட வுள்ள உறுப்பு. (ஷை. 16.)

175. அஃகி அகன்ற அறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

(இ - ள்.) நுண்ணிதாக எல்லா நூல்களையும் கற்றறிதலால் உண்டாகிய பரந்த அறிவு என்ன பயத்ததாம் - எல்லார் மாட்டும் பொருளை விரும்பி அறிவோடு பொருந்தாத செயல்களைச் செய்வாராயின் (எ - று.) (ரு)

176. அருள்வெஃகி யாற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

(இ - ள்.) அருளாகிய தருமத்தை விரும்பி அதற்கு வழியாகிய இல்லறத்தின்கண் நின்றவன், பிறர் பொருளை விரும்பி அதனைத் தான் கைக்கொள்ளத்தக்க பொல்லாங்குகளைச் செய்தால் அந்தத் தருமம் கெட்டுப்போம் (எ - று).

இல்லறத்திலே இருந்து அறிவு முதிர்ந்தால் அல்லாமல், துறக்கப்படாதென்பதாம். (சா)

177. வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

(இ - ள்.) பிறர் பொருளை விரும்பிக்கொண்டு அதனால் வருகிற செல்வத்தை விரும்ப வேண்டாம் ; பிறர்பொருளை

விரும்பினால் பிறகு அனுபவிக்கிற துக்கம் வெகுவாக உண்டாகும் (எ - று). (எ)

**178.** அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

(இ - ள்.) தன் ஐசுவரியம் குறைபடாமலிருக்க வேண்டுமென்றால் பிறனுடைய பொருள்களை விரும்பாமலிருக்க வேண்டும் (எ - று). (அ)

**179.** அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறனறிந் தாங்கே திரு.

(இ - ள்.) அறத்தை யறிந்து பிறர்பொருளை விரும்பாதவர்களை மகாலட்சுமி தான் வந்து சேருகிறதற்கு வழியறிந்து வந்து சேரும் (எ - று).

மகாலட்சுமி சேருகிறது தருமமும் நீதியும் உள்ளவிடத்து என்பதாம். (கூ)

**180.** இறல்ஈனும் எண்ணாது வெஃகின் விறல்ஈனும்
வேண்டாமை என்னுஞ் செருக்கு.

(இ - ள்.) பின் வருகிற குற்றங்களை அறியாமல் ஒருவன் பிறர்பொருளைக் கைக்கொள்ள நினைத்தால், அந்த நினைவு, அவனுக்குக் கேடு தரும்; பிறர்பொருளை வேண்டாமலிருந்தால் செல்வத்தையும் வெற்றியையும் கொடுக்கும் (எ - று).

---

## 19. புறங் கூறுமை

அஃதாவது பிறரைக் காணாத விடத்திலே அவரையிகழ்ந்து பேசாமலிருப்பது என்பதாம்.

**181.** அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது.

(இ - ள்.) ஒருவன் தருமங்களைச் செய்யாமல் பாவங்களைச் செய்தாலும் பிறரை இகழ்ந்து பேசான் என்று உலகத்தார் சொன்னால் அதுவே நல்லது (எ - று).

புறங்கூருதவன் பாவங்களால் அழிக்கப்படான் என்ற வாறு. (௧)

182. அறனழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறனழீஇப் பொய்த்து நகை.

(இ - ள்.) தருமமென்கிறதொன்றில்லை யென்று அழித்துச் சொல்லிப் பாவங்களைச் செய்கிறதைப் பார்க்கிலும் பொல்லாது, ஒருவனைக் காணுதஇடத்திலே இகழ்ந்து அழியப் பேசிக் கண்டவிடத்திலே அவனோடு பொய்யாக உறவாடுகிறது (எ - று). (௨)

183. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறம்கூறும் ஆக்கம் தரும்.

(இ - ள்.) பிறனைக் காணுதவிடத்திலே இகழ்ந்துபேசிக் கண்டபொழுது அவனுக்கு நல்லவனுகப் பொய்யுபசாரம் செய்து பிழைப்பதைப்பார்க்கிலும் சாகிறதே நல்ல தருமமாம் (எ - று).

புறங்கூருமலிருந்தவன் மறுபிறப்பிலே வெகு செல்வத்தை உடையவனுவான் (எ - று). (௩)

184. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்இன்று பின்னேக்காச் சொல்.

(இ - ள்.) ஒருவன் எதிரே நின்று தயையில்லாமல் இகழ்ந்து பேசினுலும் அவனைக் காணுதவிடத்திலே இகழ்ந்து பேசல் ஆகாது (எ - று). (௪)

185. அறஞ் சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்
புன்மையால் காணப் படும்.

(இ - ள்.) பிறரை இகழ்ந்து பேசுகிற ஒருவன் தருமத்தைச் சொன்னுலும் நல்ல மனத்தனுய்ச் சொல்பவனல்ல என்று அந்தச் சொற்களாலே அவன்குற்றம் அறியப்படும் (எ - று). (௫)

186. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும்.

(இ - ள்.) பிறன்பழியை எல்லாரும் அறியச் சொல்லு கிறவன், தன் பழியையும் ஆராய்ந்து தனக்குக் குற்றம் வாரா மல் பார்த்துக்கொண்டு சொல்ல வேண்டும் (எ - று).

பிறர்பழியைச் சொன்னால் தன் பழியைப் பிறர் சொல்லி இகழப்படுவான் என்பதாம். (சா)

187. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பால் தேற்றா தவர்.

(இ - ள்.) பகையான வார்த்தைகளைச் சொல்லிச் சுற் றத்தாரையும் விட்டுப்போகப் பண்ணுகிறவர், சந்தோஷமான வார்த்தை சொல்லித் தன்னோடு கூடி மகிழ்ந்தால், அவரை நம்ப வொண்ணாது (எ - று).

புறங்கூறுவார்க்கு எல்லாரும் பகைவராவர் என்பது (எ)

188. துன்னியார் குற்றமுந் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு.

(இ - ள்.) தம்முடனே கூடிச் சிநேகிதரா யிருந்தவர் - குற்றத்தைப் புறத்தியாருடனே சொல்லுகிறவர் பிறருடைய குற்றத்தைச் சொல்லாதிரார் (எ - று).

அவரால் ஒரு பயனும் இல்லை என்பதாம். (அ)

189. அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.

(இ - ள்.) பிறர் போனபிறகு அவர்குற்றங்களைச் சொல்லுகிறவனைப் பொறுக்கிறது, பூமிக்கு வெகு பாரம்; அவனைச் சுமக்கிறதே தனக்குத் தருமமென்று பூமி சுமக்கின் றது (எ - று).

பிறன் சொல்லுகிற குற்றங்களைப் பொறுத்தலே தன்ம மென்பதாம். (கூ)

**190.** ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு.

*(இ - ள்.) பிறர்குற்றங்களைப் பார்த்துச் சொல்லு கிறதுபோல தம்முடைய குற்றத்தையும் பார்த்தாராகில் அவருக்கு ஒரு பாவமும் வாராது (எ - று).*

*தாமறியாமல் செய்த குற்றங்களை நினைத்துப் பச்சாத்தாபப் பட்டாராகில் அவருக்குப் பாவமில்லை (எ - று). (௧௦)*

---

## *20. பயனில சொல்லாமை*

*அஃதாவது தனக்கும் பிறருக்கும் அறம், பொருள், இன்பம் என்று சொல்லப்பட்ட பொருள்கள் ஒன்றிலும் பிரயோஜன மில்லாத வார்த்தைகளைச் சொல்லாதது.*

**191.** பல்லார் முனியப் பயன்இல சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும்.

*(இ - ள்.) அறிவுடையார் பலரும் கேட்டு வெறுக்கத் தக்கவாய பிரயோஜனமில்லாத வார்த்தைகளைச் சொல்லுகிறவனை எல்லாரும் இகழ்ந்து பேசுவார்கள் (எ - று.) (௧)*

**192.** பயன்இல பல்லார்முன் சொல்லல் நயன்இல
நட்டார்கண் செய்தலின் தீது

*(இ - ள்.) பிரயோஜனமில்லாத வார்த்தையை அறிவுடையார் முன்னே சொல்வது நன்மையில்லாத பொல்லாத காரியங்களைத் தன்னுடைய சினேகிதருக்குச் செய்வதைப் பார்க்கிலும் பொல்லாதது (எ - று.) (௨)*

**193.** நயன்இலன் என்பது சொல்லும் பயன்இல
பாரித் துரைக்கும் உரை

*(இ - ள்.) பயனில்லாத வார்த்தைகளை ஒருவன் விரித்துச் சொன்னால் அவ்வசனங்களே, இவன் 'அறிவும் நீதியும் இல்லாதவன்' என்று சொல்லி அறிவிக்கும் (எ - று.) (௩)*

194. நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொல் பல்லார் அகத்து

*(இ - ள்.) பிரயோஜனமில்லாதனவாய் நன்மையுமில்லாத வசனங்களை ஒருவன் பலரிடத்திலேயும் சொன்னால் அவைகள் அவனுடைய நன்மைகளையும் நீதியையும் போக்கிவிடும் (எ - று.)* *(ச)*

195. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயன்இல
நீர்மை உடையார் சொலின்

*(இ - ள்.) நல்ல பெரியோர்களானாலும் பிரயோஜனமில்லாத வார்த்தைகளைச் சொன்னால், அவர்களுடைய பெருமை-யும் நற்குணங்களும் அந்த வார்த்தைகளினாலே போய்விடும் (எ - று.)* *(ரு)*

196. பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கட் பதடி எனல்

*(இ - ள்.) பயனில்லாத வார்த்தைகளைப் பலகாலும் சொல்லுகிறவனை மனுஷனென்று சொல்லலாகாது ; மனுஷருக்குள் பதர் என்று சொல்ல வேண்டும் (எ - று.)*

*நல்ல அறிவில்லாதபடியினாலே பதர் என்று சொல்லப் படும்.* *(சா)*

197. நயன்இல சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயன்இல சொல்லாமை நன்று

*(இ - ள்.) பெரியவர்கள் நீதியில்லாத வசனங்களைச் சொன்னாலும், பயனில்லாத வார்த்தைகளைச் சொல்லாமலிருந் தால் அது நல்லது (எ - று.)*

*நன்மையில்லாத வசனங்களிலும் பிரயோஜனமில்லாத வசனம் பொல்லாதென்பதாம்.* *(எ)*

198. அரும்பயன் ஆயும் அறிவினர் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல்

(இ - ள்.) அறிதற்கரியவான பயன்களை ஆராயவல் அறிவையுடையவர்கள் மிகுந்த பயனில்லாத சொற்களை சொல்லார்கள் (எ - று.)

அறிதற்கரிய பயனுவன - மோக்ஷத்தை அடைகிறதும் ந கதியிலே பிறக்கிறதும் ஆம். (அ

199. பொருள்தீர்ந்த பொய்ச்சாந்தும் சொல்லார் மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர்

(இ - ள்.) பயனில்லாத வசனங்களை மறந்தும் சொல்லா மயக்கத்தின் நீங்கிய நல்ல அறிவினையுடையவர்கள் (எ - று.)

குற்றமற்றவர் பொல்லாத வசனங்களைச் சொல்லா என்பதாம். (கூ

200. சொல்லுக சொல்லின் பயனுடைய சொல்லற்க
சொல்லின் பயனிலாச் சொல்

(இ - ள்.) சொல்லவேண்டினுற் பிரயோஜனமுடைய வசனங்களைச் சொல்லுக ; பயனில்லாத வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம் (எ - று)

பயனில்லாத சொல் ஒருவருக்கும் ஆகாது என்பதாம். (ம

## 21. தீவினையச்சம்

அஃதாவது - பாபங்களைச் செய்யப் பயந்து, செய்யாம லிருப்பது என்பதாம்.

201. தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை என்னுஞ் செறுக்கு

(இ - ள்.) பொல்லாத காரியங்களைச் செய்வதற்கு முன் தீவினை செய்தவர்கள் பயப்படார்கள் ; தீவினை செய்யாதவர்கள் பொல்லாங்குகளைச் செய்வதற்குப் பயப்படுவார்கள் (எ -று.)

முன் செய்து அறிந்தவர்கள் பயப்படார்கள்; முன் தீவினை செய்யாதவர்கள் அறியாதபடியினுலே பயப்படுவார்கள். (க)

202. தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்.

(இ - ள்.) தனக்கு இன்பம் வருவதற்காகச் செய்யப்பட்ட பொல்லாங்குகள் பின்பு தனக்கே தீமைகளைச் செய்கிற படியினலே நெருப்பைப்பார்க்கிலும் அதிகமாகப் பயப்பட வேணும் (எ - று.)

அது எப்படி என்றால், பின்னையொரு காலத்திலேயும், பிறிதோர் தேசத்திலேயும் பிறிதோருடம்பிலேயும் தீயானது சுடுகிறது இல்லை. தீவினையாகிய நெருப்போ மறுபிறப்பிலே பாதை பண்ணுகிறதினலே நெருப்பைப்பார்க்கிலும் தீவினைக்கு அஞ்ச வேண்டும் என்பதாம். (உ)

203. அறிவினுள் எல்லாம் தலையென்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல்.

(இ - ள்.) தனக்கு உறுதி பயக்கப்பட்ட அறிவுகளுக்கெல்லாம் தலையாய அறிவு என்கிறது தன் பகைவர்களுக்கும் பொல்லாங்கைச் செய்யாமலிருக்கிறது (எ - று)

பொல்லாங்கு ஒருவருக்கும் செய்யலாகாது என்பதாம்.(ங)

204. மறந்தும் அறனேடு சூழற்க சூழின்
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு.

(இ - ள்.) பிறருக்குக் கேடுவரும் வினையை மறந்தும் நினைக்கவேண்டாம். நினைத்தால் அவனுக்குத் தருமதேவதை கேடு நினைக்கும் (எ - று.)

அறக்கடவுள் கேடு செய்தலாவது தருமம் அவனைவிட்டு நீங்கும் என்பதாம். (ச)

205. இலனென்று* தீயவை செய்யற்க செய்யின்
இலனகும் மற்றும் பெயர்த்து.

(இ - ள்.) தான் தரித்திரனென்று நினைத்து அந்தத் தரித்திரம் தீர்கிறதற்காகப் பிறருக்குத் தீவினைகளைச் செய்ய வேண்டாம். தீவினையைச் செய்தால் பின்னையும் தரித்திரவா

* இலமென்று – மணக்குடவர் பாடம்.

னென்றவாறு. ஒரு பிறப்பிலே செய்த தீவினை ஏழெழு பிறப்பும் தொடரும் என்பதாம். (ரு)

**206. தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால**
**தன்னை அடல்வேண்டா தான்.**

(இ - ள்) துன்பங்களைச் செய்யும் குற்றமாகிய பாவங்கள் தன்னை வருத்தாமல் இருக்கவேண்டும் என்றால் பொல்லாத காரியங்களைப் பிறருக்குத் தான் செய்யாமலிருக்க வேணும் (எ - று.) (சா)

**207. எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை**
**வீயாது பின்சென் றடும்.**

(இ - ள்) எப்படிப்பட்ட பகையுடையவர்களும் ஒருவகையால் தப்பிப் பிழைப்பார்கள்; தீவினையாகிய பகையுடையவரை அஃது எந்த விதத்திலேயும் தப்பாமல் பின் தொடர்ந்து சென்று கொல்லும் (எ - று) (எ)

(வி - ரை) வினையாகிய பகை உயிர் செல்லும் இடந்தோறும் உடன்சென்று தன் பயனைக் கொடுக்கும் என்பது கீழ்வரும் செய்யுளால் நன்கு புலப்படும்.

"அல்லித்தா ளற்ற போது மறுதநூ லதனைப் போலத்
தொல்லைத்தம் முடம்பு நீங்கத் தீவினை தொடர்ந்து நீங்காப்
புல்லிக்கொண் டுயிரைச் சூழ்ந்து புக்குழிப் புக்குப் பின்னின்
றெல்லையி றுன்ப வெந்தீச் சுட்டெரித் திடுங்க ளன்றே"
(சீவகசிந் - 2876)

**208. தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை**
**வீயாது அடியுறைந் தற்று.**

(இ - ள்) பிறருக்குத் தீங்கு செய்தவர்கள் கெட்டுப் போகிறது எப்படி யென்றால் ஒருவனுடைய நிழல் அநேக தூரம் போனாலும் அவனை விடாமல் வந்து அவனடியிலே அடங்குகிறாப் போலே (எ - று.)

தீவினையும் செய்தவனை விடாமல் கூட இருந்து தன் காலம் வந்தபோது கெடுக்கும் என்பதாம். (அ)

**209. தன்னைத்தான் காதலன்ஆயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்.**

*(இ - ள்.) ஒருவன் தன்னைத் தான் வேண்டினவனானால் எந்த ஜீவனிடத்திலேயும் சற்றும் தீவினைகளைச் செய்யாமலும் நினையாமலும் இருக்க வேண்டும்; (எ - று.)*

*பிறருயிர்களுக்குத் தீங்கு செய்தால் தானே கெடுவான் என்பதாம். (௯)*

**210. அருங்கேடன் என்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின்.**

*(இ - ள்.) ஒருவன் பிறரிடங்களிலே போய் அவர்களுக்குத் தீங்கு செய்யாமலிருந்தால் அவனுக்குக் கேடு இல்லை (எ - று.) (௰)*

---

## 22. ஒப்புரவறிதல்

*அஃதாவது உலகத்திற் கேற்ற நடத்தையை அறிந்து செய்வது. உலக நடத்தையாவது தருமசாஸ்திரங்களிலே சொல்லப்பட்ட தருமத்தின் வழியே நடப்பதென்பதாம்.*

**211. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ உலகு.**

*(இ - ள்) உலகத்திற்கு மழைபெய்து இரக்ஷிக்கின்ற மேகங்களைப்போல ஒருவனுக்குச் செய்கிற உபகாரத்திற்குப் பிரதியுபகாரம் அவன் செய்ய வேணுமென்று நினையாமல் செய்கிறதே உபகாரம் (எ - று.)*

*செய்த உபகாரத்திற்குப் பதில் உபகாரம் வேணுமென்று நினைத்தால் கடன் கொடுத்து வாங்குவது போலேயாம் (எ-று)*

**212. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.**

(இ - ள்) நல்லவர்கள் நல்ல உத்யோகங்களைப் பண்ணித் தேடின திரவியமெல்லாம் (சத்பாத்திரர்களாகிய) முனிகளுக்கு உபகாரம் செய்கிறதற்கு (எ - று.)

முனிசுவரர்களுக்கு உபகாரம் செய்யவே தமக்கு இன்பம் பெருகும் என்பதாம். (உ)

**213.** புத்தேள் உலகத்து மீண்டும் பெறலரிதே*
ஒப்புரவின் நல்ல பிற.

(இ - ள்.) தேவலோகத்திலே பிறந்த பேர் திரும்பவும் தேவலோகத்திலே பிறக்க மாட்டார். அது ஏனென்றால் தேவருலகத்தில் ஏற்கிற பேரும் இல்லை; இடுகிறபேரும் இல்லை. எல்லாரும் சரியாயிருக்கிறபடியினாலே தான தருமங்களைப் பண்ணுகிறதில்லை. தான தருமங்களைப் பண்ணின பேர்களுக்கல்லாமல், மற்றப் பேர்களுக்குத் தேவலோகம் இல்லையான படியினாலே பூலோகத்திலே பிறந்தவர்கள் தான தருமங்களைப் பண்ணவேணும் (எ - று.) (௩)

**214.** ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

(இ - ள்.) உலகவியற்கையை யறிந்து நடக்கின்றவனே உயிருடனே இருக்கிறவன். உலகவியற்கையை அறிந்து நடவாதவன் பிராணனுடனே இருந்தாலும் செத்துப் போனவர்களோடு ஒப்பான் (எ - று.) (௪)

**215.** ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.

(இ - ள்.) உலக இயற்கையினை அறிந்து செய்யப்பட்ட அறிவினையுடையவன் செல்வம், ஊரிலே இருக்கிறபேர் எல்லாராலும் மொள்ளப்பட்ட நல்ல தண்ணீர்க்குளம் நிறைந்தாற் போலும் (எ - று.)

அறிவுடையவன் செல்வம் பாழ் போகாமல் எல்லாருக்கும் உதவும் என்பதாம். (௫)

---

* பெறற்கரிதே - மணக்குடவர் பாடம்

216. பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கட் படின்.

(இ - ள்.) பயன் கொடுக்கிறமரம் ஊர் நடுவேயிருந்து பழுத்தாற்போலும் அறிவுடையவர் பலருக்கும் உதவும் செல்வம் (எ - று.)

அறிவுடையவன் செல்வம் எல்லாருக்கும் எளிதாய்ப் பயன் கொடுக்கும் என்பதாம். (சு)

217. மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.

(இ - ள்.) அறிவுடையவனுக்கு ஐசிவரியம் வந்தால் எல்லாருடைய உபத்திரவங்களையும் தீர்ப்பான், வியாதிகளைத் தீர்க்கும் மருந்துமரத்தைப்போல (எ - று.) (எ)

218. இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

(இ - ள்.) ஆகமப் பொருளின் தன்மையை அறிந்து குற்றத்தின் நீங்கிய நற்காட்சியுடையவர் தகுதியில்லாத காலத்தும் தான தருமம் செய்யத் தளரார் (எ - று.) (அ)

219. நயனுடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயுநீர்மை*
செய்யா தமைகலா வாறு.

(இ - ள்.) நயங்களது வளமை யறிந்தவன் தனக்குப் பெரிதும் ஐசுவரியம் இல்லாதது, பூர்வத்தில் ஒரு நிலைமையுடன் அநேகவிதப் புண்ணியம் செய்யாதது என்றறிந்து வருந்தாது விவேகத்துடனே இருப்பான். (எ - று.)

உலகவியற்கையை அறிந்து செய்யாதவர்கள் செல்வமுடையவராயிருந்தாலும் தரித்திரவான்களாவார்கள் (எ-று.)

220. ஒப்புரவி னல்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து.

---

* செயனீர்மை - மணக்குடவர் பாடபேதம்

(இ - ள்.) ஒப்புரவாகிய உலகவியற்கையைச் செய்தலி ஞலே ஐசுவரியமெல்லாம் போய்த் தரித்திரம் வரும் என்று சொன்னுலும், அந்த ஒப்புரவை விடாமல் செய்ய வேண்டும். (எ - று.)

தரித்திரனுய் ஒரு பொருளும் இல்லாவிட்டாலும் தன்னை விற்றுக்கொண்டாகிலும் உலகவியற்கையான காரியங்களைச் செய்யவேணும் என்பதாம். (ம)

## 23. ஈகை

அஃதாவது தரித்திரராய் வந்து ஏற்கிறவர்களுக்கு இல்லை என்னுமல் தானம் கொடுக்கிறது.

221. வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

(இ - ள்.) தரித்திரரானபேர்கள் கேட்ட பொருளை அவர்களுக்குக் கொடுக்கிறதே பிறர்க்குக் கொடுக்கிறதாகி றது. அஃது அல்லாமல் ஐசுவரியவான்களுக்குக் கொடுக்கிற தெல்லாம் தான் கொடுத்ததைப்பார்க்கிலும் அதிகமாய் வாங் கிக்கொள்ள வேண்டி (எ - று.) (க)

222. நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று.

(இ-ள்.)ஏற்கிறது மேலுலகத்திற்கு நன்றென்று சொல்வா ராயினும் ஏற்கிறது பொல்லாது என்பது; கொடுக்கிறவர் களுக்குதெய்வ லோகம் இன்று என்று சொல்பவர் உண்டாயி னும்கொடுப்பதே நன்மையும் தன்மமுமாம் (எ - று.)

சில பிரதிகளில் 'நல்லார்' என்று பாடம்கொண்டு பின் வரும் உரை உளது.

(இ - ள்) முனி ஏறகிறதான வீடு, கணிகை, விபசாரி முதலியோர் இப்பொழுது நல்ல ஒழுக்கமாக நடந்தாலும் அவர்களிடம் தானம் வாங்குகிறது தீது. கொடுக்கிறது மேலுலகத்துக்கு நல்லநெறியில்லை என்று சொல்வார்கள் உண் டானுலும் கொடுக்கிறதே நல்லது (எ - று.)

மற்ற தருமங்கள் எல்லாவற்றிலும், கொடுக்கிறதே நல்ல தருமம். (எ - று) (உ)

**223.** இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள.

(இ - ள்.) ஞான தியானம், பொருள், பந்துக்கள் முதலியன இல்லையே எனத் துன்பத்தோடு மொழியாத தன்மை ஈகையினால் வரும். அதுவும் உயர்ந்த குலமுடையவர்களிடமேயுளது (எ - று.)

உயர்ந்த குலமுடைய வீட்டில் பிறந்து அதிதிகளுக்குத் தானம் கொடுத்தால் ஐசுவரியத்தோடே ஞானம் கிடைக்கும். அவர்களுக்குக் குறைச்சல் எதுவும் இல்லை என்பதாம். (ங)

**224.** இன்னு திரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகம் காணும் அளவு.

(இ - ள்.) கருணையுடைய இனிய முகத்தினின்று கூறும் தரும வசனமுடைய அதிதிவருமளவும் பரிதாபமுடையவர் போலே மனமிரங்கக் காட்டி முனிகள் வந்தால் பக்தியில்லாது இருக்கிறது பொல்லாங்கு (எ - று.)

பிறர் மெச்ச மாயத்தால் காட்டுகின்றது பாவமும் துர்க்கதியும் ஆம் என்பதாம். (ச)

**225.** ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்.

(இ - ள்.) தபம் பண்ணுகிறவர்களுக்கு வலிமையாவது, உபவாசம் இருந்து பசிப்பிணியைப்பொறுக்கிறது. அத்தகைய உத்தமர்களுக்குக் கொடுத்த தான புண்ணியத்திற்குப் பிறகே மற்றத் தருமங்கள் (எ - று.)

தவத்தால் தவம் பண்ணினபேருக்கு வலிமையாவது தம்முடைய பசியைப் பொறுப்பது. அந்த வலிமையும் பொறுப்பது அருமையாயிருக்கிற பசியைக் கொடுப்பதினாலே போக்கடிக்கப்பட்டவருடைய வலிமைக்குப் பிறகு என்பதாம். தாங்களும் பசித்துப் பிறருடைய பசியையும் தீர்க்கமாட்டாதவர்கள்

வலிமையைப் பார்க்கிலும் தங்களுக்கும் பசியாமல் பிறருடைய பசியையும் தீர்ப்பவருடைய வலிமையே நன்று (எ - று.)

உத்தம தானம் கிடைப்பது மஹாதுர்லபம்; அப்படிக் கிடைத்தால் மோக்ஷம் தவறாது. ஆதலால் மேன்மை என்பதாம். (ரு)

(வி - ரை) உண்டி கொடுத்துப் பசியை நீக்குவது சிறந்தது என்பதைக் கீழ்க்கண்ட செய்யுளால் அறியலாம்.

"உடம்புணர் வொழுக்கங் காட்சி யுவகைநல லின்பம் வாளுள்
விடங்கொளி வீரம் வீடு மெய்த்தவத் தருமஞ் சீல
மடங்கலு மீந்தா னுண்டி யீந்தவ னதனால் வையத்
துடம்புகொண் டவர்கட் குண்டி போல்வதோ ருதவியின்றே"
(மேருமந். 348)

**226.** அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

(இ - ள்.) பற்றறத் துறந்தவர்களுடைய பசியை ஒருவன் தீர்த்தால் அவன் தேடின பொருள் கெட்டுப்போகாமல் பதனம் பண்ணிவைத்துக்கொள்ளுகிறது மறு ஜென்மத்திற்காகின்றது (எ - று.) (சா)

**227.** பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்டல் அரிது.

(இ - ள்.) எந்நாளும் பசிக்கிறவர்க்கு இட்டுப் பிறகு தான் சாப்பிடுகிறவனை எந்நாளும் பசியாகிற கொடிய வியாதி தீண்டாது (எ - று.)

பசியுடம்பிலே இருந்தால் ஞான ஒழுக்கங்களையும் அது கெடுக்கும் என்பதாம். (எ)

**228.** ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாம்உடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

(இ - ள்.) தம்முடைய பொருளைப் புதைத்து வைத்து இழந்து போனவர்கள் அறிவும் தயையும் இல்லாதவர்களாய் அதிதி, புத்திரர்களுக்குத் தாங்கள் தேடின பொருளைக்

கொடுத்து அதனால் வரும் சுகத்தை அனுபவிக்கின்றவர்களைக் கண்டறியார்கள் (எ - று)

அறிந்தால் தாமும் அப்படிக்கொடுத்து இன்பத்தை எய்துவார்கள் என்பதாம். (அ)

**229.** இரத்தலின் இன்னாது மன்ற; நிரப்பிய
தாமே தமியர் உணல்.

(இ - ள்.) 'பொருள்குறை நிறையவேண்டும்' என்று தரித்திரராய் இரக்கின்ற பேர்களுக்குக்* கொடாமல் தான் தேடிய பொருளைச் சும்மா வைத்திருக்கிறது இரக்கிறதிலும் பொல்லாது (எ - று.)

இரக்கிறவருக்கு நல்குரவான தரித்திரமில்லை. சுற்றத்தாருண்டு. பொருளைத் தேடிப் புதைத்தவர்களுக்குத தரித்திரமுண்டு. சுற்றத்தாரில்லை. (கூ)

**230.** சாதலின் இன்னாத தில்லை யினிததூஉம்
ஈதல் இயையாக் கடை

(இ - ள்.) ஒருவருக்குச் சாகிறதைப்போலப் பொல்லாதது வேறொன்றும் இல்லை. அந்தச்சாவும் அதிதி புத்திரர்களுக்குக் கொடுக்கமாட்டா விட்டால் (அதாவது கொடாது விட்டால்) அப்பொழுது சாகிறது நல்லதாயிருக்கும் எனபதாம்.

பிறருக்கு உபகாரம் பண்ணாத உடம்பை விடுகிறதே நல்லதென்பதாம். (௧௦)

## 24. புகழ்

அஃதாவது இல்வாழ்க்கைமுதலாக ஈகை இறுதியாகச் சொல்லப்பட்ட இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப்பயனாகவே உலகத்திலே விளங்கப்பட்ட கீர்த்தி என்பதாம் ; கீர்த்தி பெரியோர்களால் கொண்டாடப்படுவது.

**231.** ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல
தூதியம் இல்லை உயிர்க்கு.

(இ - ள்.) தான் தேடிய பொருளை அதிதி, யதி, புத்திரர் தருமம் முதலானவற்றிற்குக் கொடுத்துக் கீர்த்தியுடனே வாழ்கிறது மனுஷஜீவன்களுக்குப் பயனும் (எ - று.)

* முனிகளுக்கு - பாடபேதம்

அப்படியில்லாவிட்டால் தருமத்துரோகமாய் இளைபமும் இல்லாது போகும் (எ - று.) (க)

**232.** உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கொன்
ஈவார்மேல் நிற்கும் புகழ்.

(இ - ள்.) உலகத்தார் புராணத்துக் கீர்த்தியாகச் சொல்லுகிறதெல்லாம் அதிதிகளுக்குத் தானம் கொடுத்துத் தான் தேடிய பொருளைப் புத்திரனுக்குக் கொடுத்துத் துறந்துபோகி யதியாகின்றதே. அதுவே பெருமை; அந்தப் புகழே நிலையானது (எ - று.) (உ)

**233.** ஒன்றா உலகத் துயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன்றில்.

(இ - ள்.) பெரிதான உலகத்துப் பிரகாசமான புகழுடம்பு போல ஒரு பொருளும் நிலைத்துஇராது (எ - று.) (ங)

**234.** நிலவரை நீள்புக ழாற்றின் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு.

(இ - ள்.) பூமியெல்லையிலே தன்னுடைய கீர்த்தியே அதிகம் என்று சொல்லும் யதியைத் தேவர்கள் துதிக்கமாட்டார்கள்; இகழ்ச்சி பண்ணுவார்கள். தன்னைத் தான் மெச்சுவது கெர்வம்; அந்த யதி நல்ல கதியும் இல்லாது கெடுவான் என்பதாம். (ச)

**235.** நத்தம் போல் கேடும் உளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது.

(இ - ள்.) அரியகேடும் சாக்காடும் வந்தாலும், இராத்திரி போலச் சரீரமும் செல்வம் முதலியவும் நிலையில்லையென்று சந்தோஷமாக நினைத்துப்போகிறது பெரியோர்க்கு ஆகும். ஜீவஸ்வரூபம் தவிர மற்றவைகளை நிச்சயமாக நினையார்கள் (எ - று.) (ரு)

**236.** தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

(இ - ள்.) மனுஷ்யனாகப் பிறந்தால் கீர்த்திக் கேதுவாகிய குணத்தோடுங் கூடிப் பிறக்க வேண்டும். நற்குணமில்லாத

பேர் மனிதனாகப் பிறக்கிறதிலும் விலங்காய்ப் பிறக்கிறது நல்லது (எ - று.)

மனிதனை நற்குணமில்லாவிட்டால் இகழ்ந்து பேசுவார்கள்; விலங்கு ஜாதியாய்ப் பிறந்தால் இகழார்கள் என்பதாம்.

237. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவதெவன்.

(இ - ள்.) தமக்குப் புகழுண்டாக வாழமாட்டாதவர்கள் தம்மை இகழ்கிறவர்களை, "நாம் கீர்த்தி தேடிக்கொள்ள மாட்டாதபடியினாலே இகழ்கிறார்கள்" என்று தம்மைத் தாம் நொந்துகொள்ளாதே தம்மை இகழ்கின்றவர்களை நோகிறதென்ன காரியம் கண்டு? (எ - று.)

புகழ்பெறலாயிருக்க அது பெறமாட்டாதபடியினாலே இகழ்வார்கள் (எ - று.) (எ)

238. வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின்.

(இ - ள்.) புகழ் என்னும் பிள்ளையைப் பெறலாயிருக்க அந்தப் புகழைப் பெற மாட்டாவிட்டால் உலகத்தார்க்கெல்லாம் அதுதானே குற்றமாயிருக்கும் (எ - று.) (அ)

239. வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

(இ - ள்.) புகழில்லாதவனுடைய உடம்பைச் சுமந்த நிலம் பழிப்பில்லாத விளைவு குன்றிக் கெடும் (எ - று.)

விளைவு குன்றுதற்குக் காரணம்-பாவியாகின்றவன் சரீரத்தைச் சுமக்கிறோமென்கிற வெறுப்பினால் நன்றாய் விளையாதென்பதாம். (எ - று) (௯)

240. வசைஒழிய வாழ்வாரே வாழ்வார் இசைஒழிய
வாழ்வாரே வாழாத வர்.

(இ - ள்.) தங்களுக்குக் குற்றம் வாராமற் பார்த்துக் கொண்டு கீர்த்தியுண்டாக வாழ்கிறவர்களே வாழ்கிறவர்கள்; கீர்த்தியில்லாமல் அபகீர்த்தியுடனே வாழ்கிறவர்களே செத்தவர்கள் (எ - று.)

குற்றம் வாராதது கீர்த்தியுண்டாகவே. கீர்த்தி யுண்டானால் இம்மையிலே எண்ணிக்கையும் மறுமையிலே தேவபோகமும் உண்டாம். சகலமான தருமங்களிலேயும் கொடுக்கிறது பெரியது (எ - று.) (ய)

இல்லறம் முற்றும்

# துறவறம்

## 25. அருளுடைமை

இனி, துறவறம் சொல்லுகின்றார் துறவறமாவது—முன்சொன்ன இல்லறத்தின்வழியே தப்பாமல் நடந்து, அறிவுடையவர்களாய்ப் பிறந்து—இறக்கிறதற்குப் பயப்பட்டு மோக்ஷம் பெறுகிறதின்பொருட்டுத் துறக்கிறவர்களுக்கு உரியதான தர்மம். அது கர்மம் கெடுக்கிறதின் பொருட்டு அவர்களாலே காக்கப்பட்ட விரதம். அது இன்ன தர்மம் செய்ய வேண்டும் என்றும், இன்ன பாபம் செய்யாமல் இருக்கவேணுமென்றுமாம். அந்த விரதங்களாலே ஞானம் உண்டாய் வீடு பெறலாம். அந்த விரதங்கள் அனேகமாதலின் அவற்றிலே சிறப்புடையன சிறிதெடுத்துக்கொண்டு முதலில் அருளுடைமை கூறுகின்றார். அருளாவது ஒருவரிடத்திலேயும்* ஆசை வையாமல் எல்லா ஜீவன்களிடத்திலேயும் ஸ்வபாவமாக வுண்டாகிய கருணை. இல்லறத்தின்கண் அன்புடைமை போலத் துறவறத்தினுக்கு அருளுடைமை பெரியதாதலால் முன்னே சொல்லப்பட்டது.

**241.** அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள.

(இ - ள்.) செல்வங்களுக்கெல்லாம் தேடி எடுக்கப்பட்ட செல்வம் அருட்செல்வமாகிய தயையே. அஃதல்லாத பொருளால் வரும் செல்வம் நீசரிடத்திலேயும் உண்டு (எ - று.)

அருட்செல்வமாவது—சகல சீவன்களிடத்திலேயும் தயையுண்டாயிருக்கிறது. அதுவும் பெரியவர்களிடத்திலேயுண்டாம். ஆகையால் பொருட்செல்வம் சிறந்ததல்ல (எ - று.) (க)

---

* சிலரிடத்துமட்டும் அன்பாயிருப்பது இல்லறத்தோரின் குணம். இல்வாழ்வான் தன் மனைவி மக்களிடத்திலேயும் சுற்றத்தாரிடத்திலேயும் தனக்குச் சொந்தமாகிய பசு முதலிய மாக்களிடத்திலேயும் அன்பாயிருப்பது இயற்கை.

துறவி இவைகளைத் துறத்தலால் இல்லறத்திற்குரிய குறுகிய அன்பை நீக்கி எல்லா ஜீவன்களிடத்திலும் அருள் புரிய வேண்டியது என்ற துறவறத்திற்குரிய குணத்தை வற்புறுத்துகிறது.

242. நல்லாற்றன் நாடி அருள்ஆள்க பல்லாற்றல்
தேரினும் அஃதே துணை.

(இ - ள்.) நல்லவகையாலே தயையைத் தேடிக்கொள்ள வேண்டும். பற்பல விதங்களாலே ஆராய்ந்து பார்த்தாலும் அந்த அருளென்கிற தயையே துணை (எ - று.)

இம்மை மறுமையினும் உயிரைவிட்டு நீங்காதபடியி னாலே துணை என்பதாம். (உ)

243. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்.

(இ - ள்.) தயையுடனே கூடியிருக்கிற நெஞ்சையுடைய வர்கள், இருளா யிருக்கப்பட்ட பொல்லாத நரகலோகத்திலே போகிறதில்லை (எ - று.) (ரூ)

244. மன்னுயிர் ஓம்பி அருள் ஆள்வாற் கில்என்ப
தன்னுயிர் அஞ்சும் வினை.

(இ - ள்.) நித்தியமா யிருக்கிற சீவன்கள்மேல் தயையை வைத்து நடக்கிறவர்களுக்குத் தங்கள் சீவன் பயப்படத்தக்க பாபங்கள் உண்டாகா (எ - று.) (ச)

245. அல்லல் அருளாள்வார்க் கில்லை வளிவழங்கும்
மல்லன்மா ஞாலங் கரி.

(இ - ள்.) அருளுடையவர்களுக்கு இம்மை மறுமை யிரண்டிலேயும் ஒரு துக்கமும் உண்டாகாது. அதற்குக் காற் றுப் பரவப்பட்ட பெரிய பூமிகளிலே வாழ்கிறவர்களும் அருக னும் சாட்சி (எ - று.)

(வி - ரை) இம்மைக்கு உலகிலுள்ள சான்றோரும் மறுமைக்கு திரிகாலஞானியாகிய அருகனும் சாட்சி. (ரு)

246. பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்தொழுகு வார்.

(இ - ள்.) சீவன்களிடத்திலே செய்யப்பட்ட தயையை விட்டுத் தீவிரத் துக்கக் கொடுமைகளைச் செய்கிறவர்களை முந்தின ஜென்மத்திலே தமக்குறுதியான தருமங்களைச்

செய்யாமல் துக்கப்படுகிறதை மறந்தவர்களென்று சொல்லு வார்கள் அறிவுள்ளவர்கள் (எ - று.) (சு)

**247.** அருள்இல்லார்க் கவ்வுலகம் இல்லை பொருள்இல்லார்க்(கு)
இவ்வுலகம் இல்லாகி யாங்கு.

(இ - ள்) சீவன்கள்மேலே அருள் இல்லாதவர்களுக்கு வீட்டுலகத்தின் இன்பமில்லை; பொருளல்லாதார்க்கு, இந்த உலகத்திலே இன்பமில்லையானாற்போல (எ - று.)

இவ்வுலகத்தின்பத்திற்குப் பொருள் காரணமானாற்போல அவ்வுலகத்தின் இன்பங்களுக்கு அருள் காரணம் (எ - று.)

**248.** பொருள்அற்றார் பூப்பர் ஒருகால் அருள்அற்றார்
அற்றார்மற் றாதல் அரிது.

(இ-ள்.) முன் செய்த தீவினையால் தரித்திரரான பேர்கள் அந்தத் தரித்திரம் போய்ப் பிறகு ஒரு காலத்திலே ஐசுவரிய வான்களாவார்கள்; அருளில்லாதவர்கள பாவந்தொலையாமல் அழிந்து நரகத்திற் போகிறதல்லாமல் பின்னையொரு காலத்திலும் பாபம் போய்ப் புண்ணியவான்களாகிறது அருமை (எ - று.) (அ)

**249.** தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரின்
அருளாதான் செய்யு மறம்.

(இ - ள்.) சீவன்களிடத்திலே தயையில்லாதவன் செய் கிற தருமத்தை ஆராய்ந்து பார்த்தால் சம்யக்ஞானம் இல்லா தவன் நிச்சயமாயிருக்கிற சீவன் முதலிய ஆறுவித வஸ்து ஸ்வரூபத்தைச் சொன்னாற் போலும் (எ - று.)

ஞானமில்லாதவன் ஒரு பொருளை அறிந்தால் அதனைத் திடஞானமில்லாதபடியினாலே தானே அழித்துவிடுவன். அப் படிப்போல அருளில்லாதவன் செய்த தருமமும் அவனுக்குத் தயையில்லாதபடியினாலே தானே அழித்துப்போடுவான் என்ப தாம். ஆகவே சகல தருமங்களுக்கும் தயையே முந்தின தரு மம் (எ - று.)

(வி - ரை) ஆறுவித வஸ்து — ஆறுவிதமான பொருள்கள். அவை சீவன், புத்கலம், தர்மம், அதர்மம், ஆகாசம் காலம் என்பன. இவற்றின் விவரம்: கீழ்க்காணும் செய்யுட்களால் நன்கு விளங்கும்.

**சீவன்**

" அறிவு காட்சிய தாயைந்து மூன்றுமம்
பொறியோ டொட்கா ணைத்துயிர்ப் பாயுவிந்
நெறியின் வாழும் பொருளது சீவனு
மறியின் வீட்டது மாற்றது மாகுமே." (மேருமந். 69)

" வீட்டி னின்றது வெவ்வினை எண்மையின்
கேட்டி லெண்குண மெய்தியோர் கேடிலா
மாட்சி யாலுல கந்தொழ மாற்றற
வோட்டி வைத்தசெம் பொனனெனத் தொளிருமே." (மேருமந். 70)

" மாற்றி னின்றது வையச மூன்றினு
மாற்ற வும்படி யட்டமோ ரைந்தினுற்
றேற்றம் வீத ரொர்ந்திடை யில்வினைக்
காற்றி னுற்கதி நான்கிற் சுழலுமே. " (மேருமந். 71)

**புத்கலம்**

" நாற்றமுஞ் சுவையு மூறும் வண்ணமுந் தன்மைத் தாகிப
போற்றல்பூ ரித்தல்வாட லுடையதாப் புற்கலந்தான்
மாற்றிடை யுயிரைப் பற்றி வினைமுத லாகித் துன்ப
மாற்றமும் செய்து கந்த மணுவுமாய் நிற்ப தாமே " (மேருமந். 83)

**தர்மம், அதர்மம்**

" அத்தியா யமூர்த்தியா யளவி றேசியா
யொத்தள வுலகினோ டுலக லோகமாந்
தத்துவந் தனைச்செய்து தன்ம தன்மமா
மத்திகள் செலவொடு நிலையிற் கேதுவாம் " (மேருமந். 88)

**ஆகாசம் காலம்**

" அளவின்றி யத்தியா யமூர்த்தி யாதியா
யுளவென்ற பொருட்கெலா மிடங்கொ டுத்துடன்
றளர்வின்றி நிற்பதா காயஞ் சார்வினு
ளளவிலாக் காலத்தோ டசீவ னைந்துமே " (மேருமந். 93) (கூ)

**250. வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.**

(இ - ள்.) தன்னிலும் பலவானனவன் தன்னை வாதை பண்ணவருகிறபோது அவர்கள்முன்னே தான் பயப்பட்டு

நிற்கிற நிலையை நினைத்துக்கொள்ள வேண்டும், தான் தன்னிலும் ஏழையானபேரை வாதைபண்ணப் போகிறபோது (எ - று.)

அதன் நடுக்கத்தை நினைத்தால் எதிராளிக்கும் இப்படியல்லவோ இருக்கும் என்று தயை யுண்டாம். (ம)

---

## 26. புலால் மறுத்தல்

அஃதாவது மாங்கிசம் தின்கிறதை விட்டுவிடுகிறது. மாங்கிசம் சீவன்களைக் கொல்லாமல் வாராது. சீவன்களைக் கொல்லுகிறவர்களுக்குத் தயையென்பதிராது. தயையில்லாதவன் என்ன தர்மம் பண்ணினாலும் தானம் தபசு பண்ணினாலும் ஒரு பலனுமில்லாமல் சாம்பலிலே வார்த்த நெய்போலாம் என்பதாம்.

251. பொருளாட்சி போற்றாதார்க் கில்லை அருளாட்சி
ஆங்கில்லை யூன்றின் பவர்க்கு.

(இ - ள்.) பொருளினால் பலன் கொள்ளுகிறவர்களுக்கு அந்தப் பொருளைக் காத்து ரக்ஷியாவிட்டால் பலனில்லை. அதுபோல அருளினால் பலனாகிய நற்கதி யடையவேணுமென்றவர்கள் மாங்கிசம் தின்னாமல் இருக்கவேணும். மாங்கிசம் தின்றால் தயையும் நல்ல கதியும் இல்லாமற்போம் (எ - று.)

252. தன்னூன் பெருக்கற்குத்* தான்பிறி தூனுண்பா
னெங்ஙனம் ஆளும்† அருள்.

(இ - ள்.) தன்னுடம்பு பெருக்கிறதிற்காகத் தான் பின்னையொரு சீவனுடைய சரீரத்தைத் தின்கிறவன் எப்படித் தயையுடையவனாகப் போகிறான். ஒரு பலனுமில்லாதவுடம்பைப் பருக்க வேண்டுமென்று கொடிதான பாபங்களைச் செய்கிறவனே அறிவில்லாதவன் (எ - று.)

“அன்புசெய்யப்பட்டார் துன்புகண்டன்றே யன்புடையாரிரங்குவது. அதுபோல அருள்செய்யப்பட்ட பிராணிகளது சரீரங்கள் சோர்ந்துகிடப்பது கண்டால் அருளுடையார் அருள் செய்ய

*பெருத்தற்கு—பாடபேதம். †ஆகுமருள்—பாடபேதம்.

வன்றே; இவன் அருளில்லாமையினன்றே பிணந்தின்கின்ற தென்பது; ஆதலின் அருளிலன் என்பதுங் கொள்க."

—நீலகேசி, 190 வது செய்யுள்.

**253.** படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்றின்
உடல்சுவை யுண்டார் மனம்.

*(இ - ள்.) கொல்லத்தக்க ஆயுதத்தைக் கையிலே பிடித்தவர்மனசு அந்த ஆயுதத்தாலே செய்யப்பட்ட கொலையையே செய்யப் பார்க்குமல்லாமல் தயையைப் பாராது. அதுபோல ஒரு சீவன் உடம்பைத் தின்கின்றவன் மனது மாங்கிசத்தினையே தின்ன வேணும் என்று எண்ணுகிறதல்லது தயையை நினையாது (எ - று.)* (௩)

**254.** அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்.

*(இ - ள்.) தயையாகிறது ஏதென்றால் ஒரு சீவனையும் கொல்லாமல் இருக்கிறது. அருளல்லாதது ஏதென்றால் சீவன்களைக் கொல்லுகிறது; கொன்ற சீவன்களுடைய மாங்கிசங்களைத் தின்கிறதே பாவம் (எ - று.)* (௪)

**255.** உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு.

*(இ - ள்.) மாங்கிசங்களைத் தின்னாமலிருக்கிறதே தருமம். அந்தத் தருமமுண்டானவன் மறுஜென்மத்திலே வியாதியில்லாத நல்ல சரீரத்தை எடுத்துச் சுகமாயிருப்பான். மாங்கிசங்களைத் தின்கிறபேர் வியாதியையும் துர்க்கந்தங்களையுமுடைய சரீரத்தையெடுத்து நரகத்திலே வெகுகோடி காலம் வாதைப் படுவார்கள். ஒரு காலத்திலேயும் நரகத்தை விட்டு வரமாட்டார்கள் (எ - று.)* (௫)

**256.** தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

*(இ - ள்.) மாங்கிசத்தைத் தின்னுகின்ற நிமித்தமாக உலகத்தார் கொள்ளாரென்றால் விற்கிற நிமித்தமாய் மாங்கிசங் கொண்டு வருகிறபேர்கள் ஒருத்தரும் இல்லை (எ - று.)*

தின்கிற பேர் இல்லாவிட்டால் கொல்லுவார்களுமில்லை என்பதாம்.

Rev. G. U. Pope in his notes in relation to this couplet says, "This points to the controvery between the Buddhists and the Jains. The former might not slay, but might eat the slain. The latter, with more consistency, were forbidden to eat or slay." (௬)

**257. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்.**

(இ - ள்.) மாங்கிசத்தை ஒரு சீவனுடைய புண்ணென்றறிந்து அதனைத் தின்னாமலிருக்கிறவர்களே அறிவுடையவர்களும் புண்ணியவான்களும் ஆவர் (எ - று.)

அந்த மாங்கிசத்தைத் தின்கிறவர்களே அறிவில்லாதவர்களும் பாபிகளும் ஆவர் எனபதாம். (௭)

**258. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணார்
உயிரிற் றலைப்பிரிந்த வூன்.**

(இ - ள்.) மயக்கமாகிய குற்றத்தின் நீங்கிய நல்ல அறிவையுடையவர்கள் ஓர் உயிரினின்றும் வாங்கின மாங்கிசங்களைத் தின்னார்கள் (எ - று.) (௮)

**259. அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று.**

(இ - ள்.) நெருப்பிலே நெய் முதலானவைகளை வார்த்து ஆயிரம் ஓமம் பண்ணினாலும் ஒருசீவனைக் கொன்று அதனுடலைத் தின்னாமலிருக்கிறதே நன்மை (எ - று.)

அந்த யாகங்களாலே வருகிற பலனினும் கொல்லாத விரதத்தினாலே வருகிற பலன் அதிகமாம் என்பதாம். (௯)

**260. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லாவுயிரும் தொழும்.**

(இ - ள்.) சீவனையும் கொல்லாதவனாய் மாங்கிசங்களைத் தின்னாதே என்ற ஜினனைச் சகலமான சீவன்களும் கைகுவித்துத் தோத்திரம் பண்ணும் (எ - று.)

கொல்லாததும் தின்னாததும் ஆகிய இரண்டு விரதங்களுடையவர்களுக்கல்லது ஒன்றினுற் பலனில்லை. இந்த விரதமுடையவன் மறு பிறப்பிலே தேவர்களைப்பார்க்கிலும் பெரிய சித்தனும் என்பதாம்.

எல்லாவுயிரும் தொழும் என்பது

" கொலையின தின்மை கூறிற் குவலயத் திறைமை செய்யும் "

யசோதர காவியம் (243)

என்னும் அடியால் விளங்கும். (௬௦)

---

## 27. தவம்

அஃதாவது இந்திரியங்களின்வழியே மனம் போகாமல் நிற்பதற்காக விரதங்களாலே புசிக்கிற வஸ்துக்களைக் குறைத்துக் கோடைக்காலங்களிலே பர்வதங்களின் மேல் (வெயிலில்) நின்றும் மழைக்காலங்களிலே மரத்தின் கீழ் நின்றும் தவம் செய்தும் பனிக்காலங்களிலே வெள்ளாகாசத்திலேயும் கடல் தண்ணீர்க்கரையிலே நின்றும் இது முதலான விரதங்களைக் கெட்டியாகக் காத்து அதனாலே தன்னுடைய சீவனுக்கு வருகிற துன்பங்களைப் பொறுத்துப் பிறவுயிர்கள்மேலே தயையுடையவர்களாயிருக்கிறது. இது சீவன்களைக் கொல்லாமலும் மாங்கிசங்களைத் தின்னாமலும் இருந்தாலல்லாது கூடாதென்பதாம்.

தவம் இத்தன்மைத்தென்பது கீழ்க்கண்ட செய்யுட்களால் விளங்கும.

மெய்த்தவத் தன்மை தானும் வென்றவர் படிமந் தாங்கிச்
சித்தமெய் மொழிகண் மூன்றி விருதொடர்ப் பாட்டி னீங்கிப்
பத்தறம் பன்னி ரண்டாந் தவத்தொடு பயின்று தன்கண்
உத்தமக் காட்சி ஞான வொழுக்கத்தை யழுத்தல் கண்டாய்.

(மேரு மந். 411)

இருதொடர்ப்பாடு—அகப்பற்று, புறப்பற்று.
பத்துஅறம்—உத்தமக்ஷமை முதலியன.
பன்னிரண்டு தவம்—பாஹ்ய தவம் ஆறு. அப்பியந்தர தவம் ஆறு.

இவை பின்வரும் செய்யுட்களால் விளங்கும்.

*வினைகளுக் குதிர்ச்சி வேட்கை நீக்கிமெய் வசம்வரல்
புனைவரும் பொறிச் செறிப் புயிர்க்கழிவு போற்றுதல்
நினைவின தொருக்கமு நெறிவிளக்க முஞ்செயு
மனசன தவத்தினோ டருந்தவன் பொருந்தினான்.*

*புகாமிகிற் பொறிமிகு மனசனம் பொருந்திடின்
நெகாவுடம் புடன்படாது நாட்க ணீதி மாதவன்
புகாவினைச் சுருக்க மெய் யுடன்படும் பொறிகளும்
மிகாவென விரும்பியாவ மோதுரிய மேவினான்.*

*இருத்தல்போதல் நிற்றல்மண் ணிடைக்கிடத்த லில்லுயிர்
வருத்தமெய்தி டாமை யோம்புங் காயகுத்தி மாதவன்
திரப்பிதஞ்செல் தேசகால பாவமெல்லை செய்தூணும்
விருத்திசங்க மம்மெனும் விழுத்தவம் பொருந்தினான.*

*நவைக்கெலா மிடமிதென்று நாவதன் புலத்தினிற்
சுவைக்கண்,மேவல் விட்டறத் துறந்துநின் றெவற்றினும்
உவத்தல்காய்த லின்றியொத்து நின்றசித்த மெய்த்தவன்
சுவைப்பரித்தி யாகமாகு மாதவத்தொ டொன்றினான.*

*கவந்தமோரி கூகைபேய் நிவந்த காடு பாழக
முவந்தியானை வாளரி யுழுவைநின் றுழல வனங்
குவிந்தரவு வெம்புலி குமிறுமால் வரைமுழை
யுவந்திராச சீயமொன்று போலவே றுறைந்தனன்.*

*வேனல்வெம்பு கான்மலை வெயின்னிலையின் மேவியும்
வானமாரி சோருநாண் மரம்முதன் மருவியும்
ஊனுருக்கும் வன்பனிக் கடற்புறத்து வெள்ளிடைக்
கானயானை போலமூன்று காலயோகு தாங்கினான்.*

*அரியவா யுலகெலாம் விலையிலா வருங்கலத்
திரயமெய் யணிந்தவர் செய்கைசொன் மனங்களான்
மரியமா சினைக்கெடுக்கு மத்திவார மாகிய
பெரியவர் மனங்கொளப பெருந்தவம பொருந்தினான்.*

*பெறற்கரிய காட்சிமெய் யுணர்ச்சிநல் லொழுக்கின்மே
விறப்பெய்தாமை மெய்ம்மொழி மனத்துழந் திறைஞ்சுதல்
சிறப்புடை யறத்தவர்க் கெதிரெழுச்சி யாதியித்
திறத்தநால் விநயமும் சிறந்துமா தவஞ் செய்தான்.*

பெருத்த நோன்பு வன்பிணிகள் பீடைமூ வியோகமாந்
திருத்தமேவி னார்கள் தியான நல்வதத்தொ டொன்றினார்
விருத்தர் வாலர் மெல்லியா ரறத்தைமேவி நின்றவர்
வருத்த நீக்கி யோம்புவையா வச்சமூ மருவினான்.

யாக்கைக்க ணிச்சை நிற்கு மெழுத்தின்மேற் பழுத்த சொல்லை
வாக்குநின் றமிழு மச்சொல் வசத்ததாஞ் செவியு முள்ளம்
நோக்குமப் பொருளின் மெய்ம்மை நுகர்ந்தெழுந் தெளிவி வற்றை
யாக்குநல் லொழுக்கிற் சால வருந்தவன் விரும்பிச் சென்றான்.

ஆர்த்தரௌத் திரத்த சிந்தை யறவெறிந் துயிரை மாற்றிற்
பேர்த்துமுத் திக்கண் வைக்குந் தருமசுக் கிலத்தியான
மோர்த்துட லுள்ளம் வைத்தா னுதிர்ந்தன வினைகள் பின்னைப்
பார்த்திய குமரன் சிந்தைப் பரமமா முனிவ னானான்.

பொய்ச்சித்த மகற்றி ஞானங் காட்சிநல் லொழுக்கம் பேணி
மிச்சத்தம் வேதனாதி யகத்தின்மேல் விருப்பை மாற்றி
வைத்தத் தன் காய தேச முதற்புறத தன்புமாற்றி
விச்சித்தி யின்றிச் சென்றான் வியுற்சாகக தவத்தினோடே.

(மேருமந்தரம். 423 to 434)

**261.** உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு.

(இ - ள்) தபசாகிறது போசனம் ரசவஸ்துக்கள் முதலானவைகளை விரதங்களாலே குறைக்கிறதும் பிறவுயிர்களுக்குத் தீங்கு செய்யாமையுமாம் (எ - று.)

(வி - ரை) உற்றநோய் நோன்றல் - தவம் பண்ணுகின்ற காலத்துத் தங்களுக்கு நேரிடும் துன்பங்களைச் சகித்துக் கொள்ளுதல். அந்தத் துன்பங்களுக்குப் பரீஷகங்கள் என்றும் அவற்றைச் சகித்துப் பொறுத்துக்கொள்வதற்கு பரீஷகஜயம் என்றும் கூறுவர். உடல் சம்பந்தமாய் உண்டாகும் துன்பங்கள் பாஹ்ய பரீஷகம் (புறத்துப் பரீசை) என்றும், மனசு சம்பந்தமாய் உண்டாகும் துன்பங்கள் அப்பியந்தர பரீஷகம் (அகத்துப் பரீசை) என்றும் பெயர் பெறும். அகத்துப் பரீசை 13-ம் புறத்துப் பரீசை 9-ம் ஆக பரீசை 22. அவை இன்னவை என்பன கீழ்க்கண்ட செய்யுட்களால் விளங்கும்.

" வேட்கையிற் பசியி னேயில் வேண்டலிற் பெறாமை தன்னிற்
றுட்சியி லிருத்தல் போதல் கிடத்தலி லுடாமை தன்னிற்
காட்சியி லறிவின் ஞான மின்மையிற் கலங்கிச் சித்த
மாட்சியைச் செலாத கத்துப் பரிசைபன் மூன்றும் வென்றான். "

(மேருமந். 786)

" வெப்பமுங் குளிரும் மாசுஞ் சிற்பமுந் துறலும் வெஞ்சொற்
செப்பலுங் கொலையுந் தின்றல் குத்தலுந் தீய வூறுந்
துப்புறழ் வாயி னார்தந் தொடர்ச்சியாம் பரிசை யுள்ளிட்
டொபபிலாப் புறத்து நின்ற வொன்பது மொருங்கு வென்றான். "

(மேருமந். 787)

உயிருக்கு உறுகண் செய்யாமையாவது-எந்த ஜீவனுக்கும் எத்தகைய துன்பமும் செய்யாதிருத்தல்.

தாபசாதிகளைப் போலப் பஞ்சாக்கினிமத்தியத்துணின்றும் ஒருகால்மடித்து ஒருகாலில் நின்று பாரமாகிய சிலைகளை வகித்தும், நீருண் முழுகிச் சுவாஸநிரோதம் பண்ணியும் இவ்வாறு காயந்தன்னை வருத்தலே தபசென்று வருத்துகின்றாமல்லம்; எம்மை நீ யிவ்வாறு சொல்லிய துன் பேதைமையாம். யாங்கள் கொலை முதலாகிய பாப நிவ்ருத்யர்த்தமாக, சக்திக்குத் தக்கவாறு அனசனாதிகள் செய்து விஷயநுகர்ச்சி துறந்தனம். நின்னைப் போல யாங்கள் பலகா லுண்ணவுந் தின்னவுங் குளிக்கவுந் தாம் பூல சேவை முதலாயின பண்ணவும் புகுவோமாகில் ஆக்கல் காத்தல் வியாபாரங்களாற் கொலை முதலாயின பாவங்களும் ஞான த்யான விக்னங்களு மாதலின் சக்திதஸ்த்யாக தபசு என்பதெம் மோத்தாதலில், சக்தியை அதிக்கிரமித்து உண்ணாவிரதம் முதலியன செய்வதுமில்லை; வெயினிலை முதலாயினவும் வநசரராய் நின்று சகல வியாபாரங்களுந் துறந்து ஒரு வழி நிற்ற லிருத்தல் செய்து ஞான தியானங்கள் பயில்வுழி வெயிலும் மழையுங் காற்றும் முதலாயின வந்தா லவற்றைச் சக்திக்குத் தக்கவாறு பொறுத்ததாம். என்னை?

" உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு "

என்பதெம் மோத்தாதலின்.

தாமே வந்தன பொறுத்தலல்லது வெயின் முதலாயினவற்று வருந்துதலே தவமென்று சொன்னேமோ? இல்வாழ்க்கைக்கணின்

ருரு மில்வாழ்க்கைக் காரியங்களுளொன்று செய்வுழி யொழிந்த காரியங்கள் துறந்து இருவழி முதலாயின செய்ய, அவ்வழி வந்தன வெயின் முதலாயினவுஞ் சக்திக்குத் தக்கவாறு பொறுப்பதற்காகக் காயம் வருந்திணுராவரோ? நீ சொல்லிய விக் குற்றங்களெல்லாம் ஆத்ம ஹத்யை பண்ணுதலே புத்தத்வ நிமித்தமென்று மகா வேதனு நிமித்தமாகிய ஆத்ம ஹத்யைகள் பண்ணுகின்ற நினக்கேயாமென்று சொன்னவாறு (நீலகேசி 353-ஆம் செய்யுளுரை) (க)

**262.** தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது.

(இ - ள்) தபசு பண்ணுகிறது முந்தின ஜென்மத்திலே தபசு பண்ணின பேர்களுக்கே கூடும். அந்தத் தபசும் முன் புண்ணியமில்லாதபேர் செய்யப்போனல் அபத்தமாய்ப்போம் (எ - று.)

புண்ணியமுண்டாகவே எல்லா நன்மைகளும் வரும் என்பதாம் (எ - று.) (உ)

**263.** துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன்
மற்றை யவர்க டவம்

(இ - ள்) இல்லறத்திலே இருக்கிறபேர் துறந்தவர்களுக்கு அசனமும் மருந்தும் இருப்பிடமும் கொடுக்க வேண்டுமென்று தாங்கள் தபசு பண்ணுகிறதை மறந்தார்கள் போலும். (ந)

**264.** ஒன்னுர்த் தெறலு முவந்தாரை யாக்கலும்
எண்ணிற் றவத்தான் வரும்.

(இ - ள்) தங்கள் தவத்திற்குப் பகையாய் அழிவுசெய்தார் கேடுறுதலும் அந்தத் தவசுக்குச் சந்தோஷப்பட்டவர்கள் ரக்ஷிக்கப்படுதலும் ஆராயின் அந்தத் தவத்தால் வரும முற்றுந்துறந்த மகாமுனிகளுக்கு இகழ்தலும் புகழ்தலும் ஒன்றேயாதலின் அவர்கள் இகழ்ந்தாரைக் கெடுக்கவும் புகழ்ந்தாரை ரக்ஷிக்கவும் நினையார். ஏனெனில் அவர்கள் உத்தமக்ஷமை முதலிய பரிணமங்களாகிய பத்துத தர்மகுணங்களோடுபொருந்தி மோக்ஷத்தை அடைவிக்கும் தவசில் நிற்பதாம் (எ - று.) (ச)

**265.** வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.

(இ - ள்.) தபசு பண்ணுகிறவர்கள் வேண்டிய வேண்டிய படியே மறுமையிலே பெறலாம். ஆனபடியினாலே செய்ய வேண்டிய தபசை இம்மையிலே செய்ய வேண்டும் (எ - று).

மேற்கதி, மோக்ஷம் தபசினாலே யல்லாமல் பெறலாகா தென்பதாம். (ரு)

**266.** தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.

(இ - ள்.) துறந்து தபசு பண்ணுகிறவர்களே தங்கள் கருமம் செய்கிறவர்கள். அதல்லாமல் பொருளின்பங்களைச் செய்கிறவர்கள் பொருளின்பங்களின் ஆசையாகிற வலையிலே அகப்பட்டுத் தங்களுக்குக் கேடு செய்துகொள்ளுவார்கள் (எ - று).

அநித்தியமாகிய சரீரத்திற்கு வருத்தம் வருமென்று பயப்படாமல் தபம் செய்தால் பிறப்பு, பிணி, மூப்பு, சாவுகளால் துக்கமடைந்துவருகிற வுயிர் தபசினாலே ஞானம் பிறந்து வீடு பெறும் என்பதாம்.

(வி - ரை.) அவஞ் செய்வார் இன்னாரென்பது கீழ்க்கண்ட அடிகளால் நன்கு விளங்கும் :

"நிலையாமை நோய்மூப்புச் சாக்காடென் றெண்ணித்
தலையாயார் தங்கருமஞ் செய்வார்" (நாலடியார் 52) (சா)

**267.** சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

(இ - ள்.) நெருப்பிலே பொன்னைச் சுட்டால் தன்னோடு கூடிய குற்றம் நீங்கி ஒளிமிகுத்தவாறுபோல, தபசுபண்ணவல்லார்க்குச் சுக்கிலத்தியானம் என்ற பெருந்தீயினால் தங்களோடே கூடின பாபங்கள் நீங்கி ஞானம் மிகும் (எ - று).

(வி - ரை.) பொன்னை நெருப்பிலிட்டுச் சுடச்சுட அதோடு சம்பந்தப்பட்டிருக்கும் களங்கம் நீங்கி அது பரிசுத்த மடைவது போல, ஆத்மனைத் தவமாகிற நெருப்பினால் சுடச்சுட அதனோடு கூடியிருக்கும் கருமங்கள் அதனை விட்டு நீங்குவதால் அது பரிசுத்த

மான ஆத்மன் ஆகிறது. இந்த உதாரணமே பெரும்பாலும் ஜைன நூல்களில் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். தவம் பெரிய நெருப்பிற்குச் சமானம் என்பது,

" ஆரழன் முளரியன்ன வருந்தவம் " (சீவகசிந்தாமணி. 2632)

என்னும் அடியால் விளங்கும். இன்னும்,

" தவத்தழல எழுந்து உயிராம் பொற்றுதலைத்
துவக்கறச் சுட்டுச்சுடத் தோன்று நீரொளி
நிவத்தலால் நின்று ஒளிதுளும்பும் மூர்த்தியான் " (மேரு 547)

என்பதனாலும்,

" சனலிசேர் கனகந் தன்கண் காளத்தைக் கழற்று மாறு " (மேருமந். 354)

என்பதனாலும்,

" கொள்கைக் கட்டழ லுள்ளுற மூட்டி
மாசுவினை கழித்த மாதவர் போலத்
தீயகத் திலங்கித் திறல்விடு கதிரொளி
சேடுறக் கிடந்த செம்பொன் " (பெருங்கதை-2. கக, சுஉ-சுரு)

என்பதனாலும்,

" வீட்டி நின்றது வெவ்வினை யெண்மையின்
சேட்டி லெண்குண மெய்தியோர் கேடிலா
மாட்சி யாலுல கந்தொழ மாற்றற
வோட்டி வைத்தசெம பொன்னொத் தொளிருமே" (மேருமந். 70)

என்பதனாலும் தவத்தினால் வினையைக் கெடுப்பது நெருப்பினால் பொன்னைச் சுடுவதுபோலாம் என்பது பெற்றாம். (எ)

**268.** தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.

(இ - ள்.) தன்னுயிரைத் தனக்கு உரித்தாகப் பெற்றவனை உலகத்திலே உண்டான சீவன்களெல்லாம் தோத்திரம் பண்ணுமென்றவாறு. தன்னுயிரைத் தனக்கு உரித்தாகப் பெறுதலாவது, தபத்தின் முக்கியத்தினால் கருமம் தேய்தல். அதிலும் பெரிய காரியம் (வேறொன்றும்) இல்லை. தபசு பண்ணினால் ஜீவனைத் துர்க்கதி போகாமல் சுபகதி அடைவிக்கும். தபத்தினாலே சாபமும் அனுக்கிரஹமு முண்டாம் (எ-று).

(வி - ரை.) தன்னுயிரைத் தானறப்பெறுதலாவது, தன்னோடு கூடிய கருமங்களை வென்று தன்னுடைய சுத்த சுவபாவகுணத்தை அடைந்து பரிசுத்த ஆத்மனாகிற நிலையைப் பெறுதல். அத்தகைய ஆத்மனே பரமாத்மன் என்றும் கடவுள் என்றும் அருகன் என்றும் மூவுலகத்தோராலும் போற்றப்படும். இந் நிலை, "அனகமா யனந்த மாய குணம்புணர்ந் தார்வ மாதி, தனையிலா தியல்பி னின்றுன் றன்மை" என்றார் (மேருமந். 354) (அ)

**269.** கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
ன்ஆற்ற றலைப்பட் டவர்க்கு.

(இ - ள்.) கூற்றுவனாகிய யமனைக் கடந்துபோக வேணுமென்றாலும் கடந்து போகலாம், தபசிலே தலைப்பட்டு நல்ல தபசைச் பண்ணுகிறவர்களுக்கென்றவாறு. (கூ)

**270.** இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

(இ - று.) உலகத்திலே தரித்திரவான்கள் அதிகமாக இருக்கிறதும் ஐஸ்வரியவான்கள் கொஞ்சமாயிருக்கிறதும் ஏனென்றால், தபசு பண்ணுகிறவர்கள் கொஞ்சமும் தபசு பண்ணாதவர்கள் அதிகமுமாம். ஆனபடியினாலே தபசு பண்ணுகிறவர்களெல்லாம் ஐஸ்வரியவான்களாய்ப் பிறக்கிறார்கள் ; தபசு பண்ணாதவர்கள் எல்லாரும் தரித்திரராகப் பிறப்பார்கள் (எ - று).

தபசு பண்ணாதவர்களுக்கு இம்மையிலே சம்சார துக்கமும் மறுமையிலே பிறவித்துன்பமும் உண்டு. (கo)

---

## 28. கூடாவொழுக்கம்

அஃதாவது, தாங்கள் விட்ட காமவின்பத்தைப் பின்னையும் விரும்பி அதன்மேலே நினைவாய்த் தபசை மனது சுத்தமாகப் பண்ணாமல் இருக்கிறது.

[கூடாவொழுக்கமுடையவர்கள் போலித் தவசிகளாகிய பாஷண்டிகள் எவ்வாறு உலகத்தை வஞ்சிக்கிறார்கள் என்பதைக் காட்டி அவர்களிடத்தில் பக்தியும் அவர்களுக்குத் தானம் முதலிய-

வைகள் செய்வதும் தவறு என்பதை வற்புறுத்துகிருர். அவர்களுடைய மாயாசாரத்தை யறியாது அவர்களை நம்புதல் பாஷண்டிமூடமாகும்.]

**271.** வஞ்ச மனத்தான் படிற்றெழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும்.

(இ - ள்.) மனதிலே கபடம்வைத்துக்கொண்டு கள்ளாசாரம் பண்ணி நடக்கிறவனை அவன் சரீரத்திலேயே யிருக்கிற பஞ்சபூதங்களும் சிரிக்கும் (எ - று).

கபடமாகிறது, மனதிலே ஒன்றை நினைத்துக்கொண்டு வெளியிலே இருக்கிற பேருக்கு அது தெரியவொட்டாமல் ஆசாரவான்போல இருக்கிறது (எ - ம்). (க)

**272.** வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின்.

(இ - ள்.) ஒருவனுக்கு ஆகாசத்தைப்போலே உயர்ந்த தபோவேஷம் என்ன பலனைக் கொடுக்கும்? தான் குற்றம் என்று விட்ட வஸ்துவின் மேலே தன்னெஞ்சு ஆசைப்பட்டால். ஒருபலனையும் கொடுக்கமாட்டாதென்றவாறு. அறியாமற் செய்த குற்றம் தபசு பண்ணினுல் பரிகாரமாய்ப்போம்; அறிந்து செய்த குற்றம் என்ன தபசு பண்ணினுலும் அனுபவியாமல் போகாதென்றவாறு. (உ)

**273.** வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

(இ - ள்.) மனத்தைத் தன்வழிப்படுத்தி அடக்கமாட்டாதவன் தபசைப் பண்ணுகிறேனென்று வேஷத்தைப் போட்டுக்கொண்டு இருக்கிறது, பயிரைக் காக்கிறவர்கள் பயப்பட்டு ஓட்டிவிடாமல் இருக்க வேணுமென்று ஒரு எருதுக்கு புலித்தோலைப் போர்த்துப் பயிரிலே மேயவிட்டாற்போலும் (எ - று).

விவேகமில்லாதவர்கள் பயப்பட்டுச் சும்மாவிருந்தாலும் அறிவுடையவர்கள் 'புலி புல்லைத் தின்னுது, இது பொய்வேஷம்' என்றறிந்து துரத்துவது போல, முனிவேஷம் பூண்டும் மோகத்தால் பெண்ணுசை அடங்காதவன் தவசியல்ல வென்று துரத்தி விடுவார்கள் என்பதாம். (ங)

**274.** தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

(இ - ள்.) மாயத்தினுல் தபோவேஷத்தைத் தரித்துக் கொண்டு அந்த வேஷமஹிமையினுலே தபத்திற் கேலாத காரியங்களைச் செய்தல், வேடன் புதருக்குள் தழையால் தன்னை மறைத்துப் பட்சிகளைப் பிடிப்பது போல (எ - று).

தபசுக்கு ஏலாத காரியமாவது, காமக்குரோதலோபங்களுடனே கூடி, பரஸ்த்ரீ பரதனங்களைத் தன்வசமாகப் பண்ண நினைக்கிறது.

(வி - ரை) இவ்வருமைத் திருக்குறள் கீழ்க்கண்ட அடிகளில் வெகு அழகாகப் பதிந்து கிடத்தலைக் காணலாம் :

" சிறகமை பறவை போர்ப்பா னுடம்பெலாஞ் செடியின் மூடிப
பறவையைச் சிமிழ்ப்பின வாங்கும் பாவியைப போல" (மேருமந். 268)

**275.** பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
றேதம் பலவுந் தரும்.

(இ - ள்.) தன்னைப் பிறர் பெரியவனென்று சொல்லிக் கொள்ளவேணுமென்று 'நான் ஆசையற்றவன்' என்று சொல்லுகிறவனுடைய பொய்யொழுக்கம், அப்போதைக்கு நன்ருயிருந்தாலும், பிறகு 'அறியாமற் சொன்னே'மென்று தானே விசாரப்படத்தக்கதாக அவனுக்கு அனேகம் துக்கங்களைத் தரும் (எ - று).

சிறியதாய இன்பத்தைக் கருதிப் பெரியதாகிய பொய் வார்த்தையினுலே வெகு பாபம் வந்து, மறுபிறப்பிலே நரகத்திலே பிறந்து துக்கங்களை அனுபவிக்கிறபோது, 'அப்போது அறியாமல் பாபத்தைக் கருதிப் பெரியதாய்ச் செய்தோம்' என்றழுவார்கள் (எ - று). (ரு)

**276.** நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்

(இ - ள்.) மனதிலே ஆசை அருமல் வைத்துக்கொண்டு, துறந்த சன்னுசியைப் போலத் தானங் கொடுக்கிறவர்களை வஞ்சித்துப் பிழைக்கிறவர்களைப் போலக் கடின சித்தர் உலகத்திலே இல்லை (எ - று).

தானம் செய்வாரை வஞ்சித்தலாவது, கொடுக்கிறவர்கள் 'இத் தபசிக்கு ஆஹாரம் அவிழ்தம் முதலானவைகளைக் கொடுத்து மறுமையிலே தேவர்களாகவேணும்' என்கிறவர்களைத் தாங்கள் அனுசாரம் பண்ணுகிறதினாலே இழிகுலத்தினராக்குதல் என்பதாம். தமக்கு நல்லது செய்கிறவர்களுக்கு ஆகாத காரியத்தை உண்டாக்குகிறதினாலே கடினசித்தர் என்பதாயிற்று. (சு)

**277.** புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.

(இ - ள்.) குன்றிமணியின் மேலே யிருப்பது போலே சிவப்பாய் நல்ல வேஷத்தைத் தரித்தாலும், குன்றிமணியின் அடியிலே கருத்திருக்கிறப்போலே மனதிலே கபடமா யிருக்கிற பேர்களும் உண்டென்றவாறு. (எ)

**278.** மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

(இ - ள்.) மனத்திலே கபடத்தை வைத்துக்கொண்டு தபவேஷத்தைப் போட்டுக் கொண்டு பிறர் தன்னை மதிக்கத் தக்கதாக நீரிலே முழுகிக்காட்டி கள்ளாசாரம் செய்கிறவர்கள் உலகத்திலே பல பேர்கள் (எ - று).

மனது கபடமாகிறது: காம, வெகுளி, மயக்கம். (அ)

**279.** கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல்.

(இ - ள்.) அம்பு செவ்வையாயிருந்தாலும் வெகு கொடுமையைச் செய்யும். யாழ் வளைந்திருந்தாலும் நல்ல இசையைக் கொடுக்கும். அப்படிப்போல, தபசு பண்ணுகிறவர்களையும் வடிவினாலே நல்லவர்கள் பொல்லாதவர்கள் என்று எண்ணாமல், அவர்செய்கைகளினாலே நல்லார் பொல்லார் என்று அறிய வேண்டும் என்பதாம். (கூ)

**280.** மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்

(இ - ள்.) தபசு பண்ணுகிறவர்களுக்குத் தலைமயிரைச் சிரைத்து மொட்டையாக்குகிறதும் சடையாக்குகிறதும் செய்

யவேண்டாம் என்பதாம். பெரியோர்கள் தபசுக்கு ஆகா தென்று ஜினாகமத்துச் சொன்னவைகளைத் தாங்களும் கடிந்து விடுகிறதே செய்யவேணும் (எ - று).

மனது சுத்தமாயிருந்தால் வேஷம் வேண்டாம் என்பதாம்.

(வி - ரை) வேடத்தால் பயனில்லை என்பதைக் கீழே வருஞ் செய்யுளால் அறியலாம் :

"வீடு வேண்டி விழுச்சடை நீட்டன்மெய்ம்
மூடு கூறையின் மூடுதல் வெண்டலை
யோடு கோட லுடுத்தலென் றின்னவை
பீடி லாப்பிற விசகுவித் தென்பவே." (சீவக சிந். 1427)

---

## 29. கள்ளாமை

அஃதாவது பிறருடைமையா யிருப்பது யாதொரு பொருளையும் அவரை வஞ்சித்துக் கொள்ளக் கருதாமை. நினைத்தலும் செய்தலோடொக்கும். இல்வாழ்கிற சம்சாரியானாலும், சுற்றத்தார்களுடனே விளையாட்டிற்காகவும் ஒரு பொருளைத் திருடிவைக்கிறதும் பாபத்திற்குக் காரணமாதலால், அதுவும் செய்யலாகாது. தபசியான பேர்களுக்குக் களவை நினைத்தாலும் பாபம் வரும். ஆதலால், களவு ஒருத்தருக்கும் ஆகாதென்றவாறு.

281. எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு.

(இ - ள்.) மோக்ஷவீட்டை இகழாமல் வேண்டுவானிவனென்று தவத்தோரால் நன்றாய் எண்ணப்படுபவன், யாதொரு பொருளையும் பிறரை வஞ்சித்துக்கொள்ளக் காரணம், காரியம் என்றிரண்டுவிதக் களவையும் நினையாமலிருக்கிறவன் (எ - று).

ஞானத்திற் கேதுவாகிய சாத்திரங்களானாலும் திருடலாகாது என்பதாம்.

(வி - ரை.) காரணக்களவு காரியக்களவு இன்னவென்பன கீழ்க்கண்ட செய்யுளால் தெரியவரும் :

அளவிலா நிதியை விட்டுப் பிறன்பொரு ளதனை மேவல்
களவுதா னிரண்டு கூறு மியல்புகா ரணங்க டம்மா

*ளவிலாப் பொருளுண் டாயும் பிறன்பொருட் கிவறலாதி*
*களவுதான் கடைய தாகுங் கைப்பொரு ளற்ற வர்க்கே.* (க)

**282.** உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.

*(இ - ள்.) துறந்தவர்கள் பொல்லாத காரியங்களை மனத்திலே நினைத்தலும் பாவம். ஆகையால், பிறர்பொருளை அவர்களறியாமல் வஞ்சனை பண்ணி எடுத்துக்கொள்ளவேணுமென்று நினையாம லிருக்கவேணும் (எ - று).* (உ)

**283.** களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்.

*(இ - ள்.) களவினால் வருகிறபொருள் விருத்தி ஆகிறாப் போலே யிருந்து வகையறக் கெட்டுப்போம் (எ - று).*

*வகையறக் கெடுதலாவது, திருடினவனுடைமையைக் கண்டால் ராசாங்கத்தார் அவன் உடைமையெல்லாம் எடுத்துக் கொள்வார்கள். சரீரவாதையும் பண்ணுகிறதினாலே பாவமும் பழியும் வரும் என்பதாம்.*

*(வி - ரை.) அளவு அறிந்து என்றும் ஒரு பாடம் உளது. அப் பாடத்தைக் கொள்ளின், களவினால் உண்டாகிய பொருள் தமக்கு உதவுவதுபோலத் தோன்றி அவர் அதன் பயனைக் கொள்ளும் அளவு அறிந்து அவ்வளவிற்குச் சரியாக உதவாது கெடும் என்று உரை கூறுவர். வினைக்கு ஈடாகப் பொருள் உண்டாகுமென்றும் மிகுதியான பொருளைக் கைப்படுத்தினாலும் அது வினையின் அளவே பயனைக் கொடுக்கும் என்றும் மிகுதியான பொருள் பயன்படாது ஒழியும் என்றும் கூறுவர்.* (ந)

**284.** களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்.

*(இ - ள்.) பிறன் பொருளைத் திருடிக்கொள்கிறபோது, சந்தோஷமாய் இருக்கும். அந்தப் பாபம் வருகிறபோது வெகு துக்கமாய் இருக்கும் (எ - று)*

*களவினாலே பாவமும் பழியும் அதிகமாய் வரும் என்பதாம்.* (ச)

**285. அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.**

*(இ - ள்.) அருளினது பெருமையை யறிந்து அன்புடையவர்களாய் நடக்கிறது பிறர்பொருளை வஞ்சித்துக்கொள்ள நினைக்கிறவர்களுக்கு இல்லை (எ - று).*

*தமக்கு உரித்தான பொருள் தமக்குத் தங்காமல் போகிறது கண்டும் பிறன்பொருளை வஞ்சித்துக்கொள்ள நினைக்கிறது என்ன பலனைக் கருதி என்பதாம். (ரு)*

**286. அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர்.**

*(இ - ள்.) சீவனுக்கு ஈடேற்றமாகிய விரத சீலங்களிலே நின்று நடக்கமாட்டார் களவு செய்கிறதில் வெகு ஆசையையுடையவர்கள் (எ - று).*

*விரதசீலமாவது—நல்லறத்தைச் செய்து பொல்லாதவற்றை விடுதல். (சு)*

**287. களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில்.**

*(இ - ள்.) களவு எனப்பட்ட கபடமனசு அளவறிந்தார்களிடத்தில் இல்லை (எ - று).*

*அளவாகிறது—உலகப்பிரமாணங்களையும் சீவஸ்வரூபத்தையும் யோக ஞானங்களையும் அறிந்து அதனால் பலனுகிய வீடுபேற்றை அறிகிற தென்பதாம். (எ)*

**288. அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.**

*(இ - ள்.) உலகம் முதலானவற்றைப் பிரமாணங்களால் அறிந்தவர்கள்நெஞ்சிலே தர்மம் நிலையாய் இருக்கிறுப்போல, களவையே பயின்றவர்நெஞ்சிலே வஞ்சனையும் நிலையாய் இருக்கும் (எ - று).*

*உயிர் முதலானவைகளை அறிந்தவர்களுக்குத் துறவறம் சலியாமல் நிற்கும் என்பதாம். (அ)*

**289.** **அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல**
**மற்றைய தேற்று தவர்.**

(இ - ள்) களவு செய்ய அறிந்தவர்கள் அந்தப் பொல்லாத நினைவுகளை நினைத்தபோதே கெடுவார்கள் (எ - று).

பொல்லாத நினைவுகளாவன - பொருளுடையாரை வஞ்சிக்குமாறும், வஞ்சனையால் கொடாததைக் கொள்ளுமாறும் அதனால் பலன்களை அனுபவிக்குமாறும் முதலாயின. (௯)

**290.** **கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்**
**தள்ளாது புத்தே ளுலகு.**

(இ - ள்) களவு செயகிறவர்களுக்குத் தங்கள் உடம்பும் துணிந்து போம்; களவு செய்யாதவர்களுக்குத் தேவலோகந் தப்பாமல் வரும் (எ - று).

உடம்பு துணிந்து போகிறதாவது - திருடினவனை அரசர்கள் தண்டித்துக் கையைக் காலை அறுப்பர் என்பதாம். (௧௦)

---

## 30. வாய்மை

*அஃதாவது காமமும் பொருளும் வேண்டிப் பொய் சொல்லுகிறதை விலக்கி, சத்தியமாய் இருக்கிற நன்மையைச் சொல்லுகிறது.*

**291.** **வாய்மை எனப்படுவ தியாதெனின் யாதொன்றும்**
**தீமை இலாத சொலல்.**

(இ - ள்) மெய் என்று சொல்லுகிறது எது என்று கேட்டால், பின்னை ஒரு சீவனுக்குச் சற்றும் பொல்லாங்கு வாராத சொற்களைச் சொல்லுதல் (எ - று).

சீவன்களுக்குப் பொல்லாங்குவரச் சொல்லுகிறது தப்புரை என்பதாம். (௧)

**292.** **பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த**
**நன்மை பயக்கும் எனின்.**

(இ - ள்) குற்றமில்லாத நன்மையை உண்டாக்குகிற தானுல் பொய்யான வார்த்தையும் மெய்யாம் (எ - று).

குற்றம் தீர்ந்த நன்மையாவது தருமம். அதனைப் பயத்தலாவது கேட்டையோ அல்லது சாக்காட்டையோ அடையப் போகும் ஒரு சீவன் அச் சொற்களின் பொய்மையாலே அதனின் நீங்கி இன்புறுதல்.

ஒருத்தனை அவ்வாறு ரக்ஷிக்க வேண்டினுல் யமக்குக் கை காட்டியும் நிலங் காட்டியும் வஞ்சனையாற் சொல்ல வேண்டுவதில்லை ; என்னை ?

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்"

என்பது எம்மோத்தாதலாற் ப்ராணிபீடாநிவ்ருத்தி அர்த்தமாகப் பொய்யுரைத்தலு மாவதாதலினென்பது, நன்மை வேண்டிப் பொய் சொல்வதாயின் நன்மை வேண்டிக் கொலை முதலாயினவு மாமோவெனில், நன்மையாவது—சீவன்கட்குப் பீடை புகுதாமல் வர்த்தித்தலால், கொலைமுதலாயின சீவன்கட்குப் பீடாநிமித்தமாதலின் ஆகாதென்பது. (நீலகேசி 326. செய்யுள் உரை) (உ)

**293.** தன்னெஞ் சறிவது பொய்யற்கப் பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

(இ - ள்) ஒருவன் தன் நெஞ்சு அறிந்தவற்றைப் பிறர் அறியார்கள் என்று பொய்சொல்ல வேண்டாம். பொய் சொன்னுல் அதனை அறிந்த தன் நெஞ்சே தன்னைச் சுடும் (எ - று).

தன்னைச் சுடுதலாவது—அசத்தியம் சொன்ன தோஷத்தினுல் நரக துக்கங்களை அனுபவிக்கிறபோது நெஞ்சு கூடநின் றனுபவிக்கும் (எ - ம்). (ந)

**294.** உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன்.

(இ - ள்) ஒருவன் தன் மனத்திற்கேற்கப் பொய்யாமலிருந்தானுகில் அவன் பெரியோர்கள்மனசுகளிலேஎல்லாம் இருப்பான் என்றவாறு.

பெரியோர்கள் அவன் பொய் சொல்லாதபடியினாலே அந்த அருமையைப் பார்த்து அவனை நினைப்பார்கள் (எ - று). (௪)

**295.** மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை.

(இ - ள்) ஒருவன் தன் மனத்துக்குச் சரிபோக மெய் சொல்லுவானாகில் அவன் தபசும் தானமும் பண்ணுகிறவர்களைப்பார்க்கிலும் பெரியவன் (எ - று).

மனசுடனே கூடிச் செய்கிற காரியமே பலனுடையதாம் என்பதாம். (௫)

**296.** பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை[1]
யெல்லா வறமுந் தரும்.

(இ - ள்) ஒருவனுக்குப் பொய்சொல்லாமல் இருக்கிறதைப்போலக் கீர்த்தி யில்லை. அந்தச் சத்தியவிரதமே மறுமைக்கு வேண்டிய செல்வங்களைக் கொடுக்கப்பட்ட சகல தருமங்களையும் கொடுக்கும் (எ - று).

இல்லறத்திற்குப் பொருள் தேடுகிற வருத்தமும் துறவறத்திற்கு உண்ணாமலிருக்கிற வருத்தமும் அனுபவியாமல் இரண்டுவகை அறத்தின் பயனும் தானே வரும் என்பதாம். (௬)

**297.** பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

(இ - ள்) ஒருவன் பொய்யாமையாகிய சத்திய விரதத்தையே தப்பாமல் செய்ய வல்லவனானால் அவன் பின்னை வேறு தருமங்களைச் செய்ய வேண்டாம். பல தருமங்களையும் செய்கிற வருத்தத்தினாலே சில தப்பினால் குற்றம் வரும். ஆதலின் சகல தருமங்களையும் கொடுக்கப்பட்ட சத்தியத்தைச் சொல்ல வேணும் என்பதாம். (௭)

**298.** புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

---

[1]பொய்யாமை (மணக். பா)

(இ - ள்) ஒருவனுக்கு உடம்பு சுத்தமாகிறது நீரினாலே யாம். மனசு சுத்தமாகிறது வாய்மையாகிய மெய்சொல்லு கிறதினாலேயுண்டாம் (எ - று).

உடம்பு சுத்தமாகிறதற்குத் தண்ணீரில்லாமல் வேறொன் றும் இல்லாததுபோல மனசு சுத்தமாகிறதற்குச் சத்தியமில் லாமல் வேறொன்றும் இல்லை என்பதாம். (அ)

**299.** எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

(இ - ள்) வெளியிலே இருக்கிற இருளைப் போக்கடிக்கிற-தான விளக்குக்களெல்லாம் விளக்காகா. பெரியோர்களுக்கு (விளக்காவது) மனத்திலே இருக்கிற இருளைக் கடியப்பட்ட பொய்யாமையாகிய விளக்கே விளக்காம் (எ - று).

உலகத்திற்கு விளக்காகிறது சூரியன், சந்திரன், நெருப்பு. இவைகளாலே போக்கடிக்கப்படாத உள் இருளைப் போக்கடிக் கின்றதால் பொய்யாவிளக்கே விளக்கென்பதாம். (கூ)

**300.** யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற.

(இ - ள்) நாம் கண்ட மெய்'நூல்களான சகலசாஸ்திரங் களிலேயும் சத்தியத்தைப்பார்க்கிலும் அதிகமாகச் சொல்லப் பட்ட தருமம் ஒன்றுமில்லை என்றவாறு. மெய்நூல்களாவன காமம், வெகுளி, மயக்கம் என்று சொல்லப்பட்ட முக்குற்றங் களும் பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு என்பனவும் இல்லாத சுவாமியாலே செய்யப்பட்ட நூல்கள் என்பதாம்.

(வி - ரை) இக் குறளுக்குப் பரிமேலழகர் எழுதியிருக்கும் உரை ஈண்டுக் கவனிக்கத் தக்கது. "மெய்யுணர்த்துவனவற்றை மெய்யென்றார். அவையாவன தங்கள் மயக்கமின்மையின் பொருள் களை யுள்ளவா றுணரவல்லராய்க் காம வெகுளிகளின்மையின் அவற்றை யுணர்ந்தவாறே உரைக்கவும் வல்லவராய இறைவர், அரு ளான் உலகத்தார் உறுதி யெய்துதற் பொருட்டுக் கூறிய வாகமங் கள்." இது யாதொரு குற்றமும் இல்லாதவராய் அளவில்லாத அறிவோடு கூடியவராய் உலகத்து உள்ள எல்லாப்பொருள்களின்

தன்மையை உள்ளவாறு உணர்ந்து உரைக்க வல்லவராய் விளங்கும அருகக்கடவுள் எல்லா உயிர்களும் துன்பத்தின் நீங்கிப் பேரின்பத்தை அடைவதற்காக ஆகமங்களை விரித்தான் என்கின்ற ஜைன சமயக் கொள்கையோடு முற்றும் ஒன்றுபட்டிருத்தல் அறியத் தக்கது. (௩௦

## 31. வெகுளாமை

அஃதாவது ஒருவன்மேலே கோபம் வந்தவிடத்தில் அந்தக் கோபத்தை அடக்கிக்கொண்டு அவன்மேலே பகை வையாமல் இருக்கிறது.

**301.** செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
[1]காக்கிலென் காவாக்கா லென்.

(இ - ள்) தன் கோபம் பலிக்கிற விடத்திலே அந்தக் கோபம் வாராமல் தடுக்கிறதே தயையுடையவனுய்த் தடுக்கிறது. தன் கோபம் செல்லாத விடத்திலே அந்தக் கோபத்தைப் பொறுத்தாலென்ன பொறுவிட்டாலென்ன (எ - று).

தான் பலவந்தரிடத்திலே கோபித்தால் தானே கெடுவன் என்பதாம். (க

**302.** செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்லதனிற் றீய பிற.

(இ - ள்) ஒருவன் கோபம் தன்னிலும் பலவானிடத்திலே எழுந்தால் தனக்கே கேடு வரும். எளியார்மேல் கோபம் எழுந்தாலும் தனக்கே கேடாம் (எ - று).

எளியாரிடத்திலே கேடு வருவது பழியும் பாவமும். (உ

**303.** மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனுல் வரும்.

(இ - ள்) எல்லாரிடத்திலும் கோபத்தைச் செய்யப் போகாது. அந்தக் கோபத்தினுலே எல்லாப் பொல்லாப்பும் வரும் (எ - று).

---

[1]காக்கினென் (பரிமே. பா)

வலியார் எளியார் சமானர் என்று சொல்லப்பட்ட மூவ ரிடத்திலேயும் கோபமாகாது என்பதாம்.

(வி - ரை) வெகுளி எவ்வளவு கொடியதென்பதும் இகழத் தக்க தென்பதும் கீழ்க்கண்ட செய்யுளால் நனி விளங்கும். "ஆத லால் வெகுளியே பகை நமக்கெலாம், தீதெலாம் வினையினுற் றீக்க திப்பெயும், காதலார் தம்மையு மொருக ணத்துளே, ஏதிலா ராக்குமிஃ திகழத் தக்கதே." (மேருமந் 217) (௩)

**304.** நகையும் உவகையும் கொல்லும் சினத்திற்
பகையு முளவோ பிற.

(இ - ள்) முகத்திலே நகையையும் மனத்திலே சந்தோ ஷத்தையும் கெடுக்கப்பட்ட கோபத்தைப்போலப் பகையான தொன்றில்லை (எ - று).

துறந்தவர்க்குப் புறப்பகை இல்லையாயினும் சினம் உட் பகையாய் நின்று நற்குணங்களைக் கெடுத்துப் பிறவித்துன் பங்களை எய்துவிக்கும் என்பதாம். ஆகையால் அவருக்குக் கோபத்தைவிடப் பெரிய பகை இல்லை என்பதாம். (௪)

**305.** தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம்.

(இ - ள்) தன்னைத் துக்கப்படாமல் இருக்கக் காத்துக் கொள்ள வேணுமென்று நினைத்தால் தன் மனத்திலே கோபம் வாராமல் காக்கவேணும். கோபம் வந்தால் அது தன்னைத் தானே கெடுக்கும் என்றவாறு.

தன்னைக் கெடுக்கிறதாவது துறந்தவர்களானாலும் பிற ரைச் சபிக்கிறதினாலே தபசு கெட்டுப்போய்ப் பிறவித்துன் பங்களை உண்டாக்கும் என்பதாம். (௫)

**306.** சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும்.

(இ - ள்) கோபமென்கிற நெருப்பு தன்னைச் சேர்ந்த வனைக் கொல்லுகிற தல்லாமல் அவனுக்கு இனமானபேரை யும் கெடுத்துப் பகையாக்கும் (எ - று).

இனமானவனைச் சுடுகிறதாவது — அவன்மனத்தைப் பேதிக்கப் பண்ணிப் பகையாக்கும் என்பதாம்.

(வி - ரை) இனமாவார் முற்றத்துறந்து தவவொழுக்கத்தில் பெரியவர்களாய்க் கேட்டார்க்கு உறுதிமொழிகளைச் சொல்ல வல்ல வர். ஏமப்புணையாவது ஏமத்தைத் தரும் புணை. ஏமப்புணை - பிறவிக் கடலுள் அழுந்தாமல் விடு என்னும் கரையேற்றுகின்ற புணை. கோபம் தன்னையும் வீழ்த்து, தனக்கு உதவிசெய்வாரையும் அகற்றுவிக்கும் என்பதாம். (சு)

307. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
[1]நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

(இ - ள்) கோபத்தை நமக்குப் பொருளென்று நினைத்துக் கொண்டவனுக்குக் கேடுவருகிறது, தரையை அடித்தவன் கை தப்பாமல் நிலத்திலே படுகிறாப்போல தப்பாமல் கேடு வரும் (எ - று). (எ)

308. இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

(இ - ள்) மெத்த எரிகிற நெருப்பிலே விழுந்தாற்போ லொத்த பொல்லாங்குகளை ஒருவன் செய்தாலும் அவனைக் கோபித்துக்கொள்ளாமல் இருக்கிறதே நல்லது (எ - று).

கோபம் வாராமல் அடக்கினால் வேண்டிய காரியங்களை யெல்லாம் முடிக்கலாம். இம்மையிலே கீர்த்தியும் மறுமையிலே தேவலோக போகங்களையும் பெறலாம். (அ)

309. [2]உள்ளிய வெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி யெனின்.

(இ - ள்) தன் மனத்திலே நினைத்ததெல்லாம் நினைத்த படியே வந்து கூடும், மனத்திலே கோபத்தை நினையாமலிருந் தால் (எ - று).

கோபம் அடங்கினவனுக்கு இம்மை மறுமைப் பயனும் மோக்ஷமும் எய்தும் என்பதாம். (கூ)

---

[1]நிலத்தெறிந்தான் (மணக். பா) [2]உள்ளிய தெல்லாம் (பரிமே. பா)

**310.** **இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.**

*(இ - ள்) அதிகமான கோபத்தையுடையவன் உயிருடனே இருந்தாலும் செத்தவனோடொப்பான். கோபத்தைக் கடிந்தவன் சாகிறவனேயானாலும் நெடுங்காலம் இருக்கிறவனோடு ஒக்கும் (எ - று).*

*கோபத்தை உடையவனுக்கு ஞானம் பிறவாது. கோபத்தை விட்டவனுக்கு ஞானம் பிறந்து அதனாலே மோக்ஷம் அடைந்து நெடுங்காலம் நிற்கும் என்பதாம். (க0)*

---

## 32. இன்னா செய்யாமை

*அஃதாவது, தனக்கு ஒரு பலனை நோக்கியாதல் கோபம் பற்றியாதல் ஒரு சீவனுக்கும் பொல்லாப்புச் செய்யாமலிருக்கிறது.*

**311.** **சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.**

*(இ - ள்) பெரிதாகிய செல்வங்களைப் பெறலாமாயினும் பிறருக்குப் பொல்லாங்குகளைச் செய்யாமல் இருக்கிறது குற்றமற்ற பெரியவர்கள் செயல் (எ - று).*

*பிறருக்குப் பொல்லாங்குசெய்து செல்வம் பெறுகிறதிலும் அதனைச் செய்யாமல் தரித்திரனாய் இருக்கிறது நல்லதென்பதாம். (க)*

**312.** **கறுத்தின்னா [1]செய்தவர் கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.**

*(இ - ள்) தன்மேல் கோபத்தினால் தனக்குப் பொல்லாத காரியங்களைச் செய்தவனுக்குத் தான் திரும்பவும் பொல்லாத காரியங்களைச் செய்யாமலிருக்கிறது குற்றமற்றவர்கள் செயல் (எ - று). (உ)*

---

[1]செய்தவக் (பரிமே. பா) ; செய்தவர் கண்ணும் (மணக். பா)

**313.** [1]செய்யாமை செற்றார்க்கும் இன்னாத [2]செய்தபின்
உய்யா விழுமந் தரும்.

*(இ - ள்) தான் ஒருவனுக்குப் பொல்லாத காரியங்களைச் செய்யாமலிருக்க, தன்மேல் கோபங்கொண்டு பொல்லாத காரியங்களைச் செய்தால் அது அவனுக்கு ஒருகாலத்திலேயும் தீராத துக்கத்தைக் கொடுக்கும் (எ - று).* (௩)

**314.** இன்னா செய்தாரை ஒறுத்த லவர்நாண
நன்மையே [3]செய்து விடல்.

*(இ - ள்) தமக்குப் பொல்லாங்கு செய்தவர்களைத் தண்டிக்கிறதாவது அவர்கள் தாங்களே வெட்கித் தலையை இறக்கிக் கொள்ளத்தக்கதாக அவர்களுக்கு நன்மையையே செய்து விட வேணும் என்றவாறு. அப்படிச் செய்தால் இத்தகைய நன்மை செய்த பெரியவர்களுக்கு அறியாமற் பொல்லாங்கு செய்தோமே என்று தங்கள் மனசைத் தாமே நொந்து கொள்வார்கள் (எ - று).* (௪)

**315.** அறிவினா னாகுவ துண்டோ [4]பிறிதினோய்
தன்னோய்போல் போற்றாக் கடை.

*(இ - ள்) துறந்து வருத்தப்பட்டு அறிந்த ஞானத்தினாலே பலன் என்ன உண்டாம், பிற உயிருக்கு வருகிற பொல்லாங்கைத் தன்னுயிருக்கு வந்தது போலப் பார்த்துப் பரிகரியாமல் இருந்தால் (எ - று).*

*பிறஉயிர்களுக்கு வருகிற குற்றங்களாவன நடத்தல், இருத்தல், கிடத்தல், நிற்றல், உண்டல் முதலான தொழில்களைச் செய்கிற விடங்களிலே சீவன்களுக்கு உண்டாகும் வாதைகளாம் (எ - று).*

*அவற்றை முந்தி அறிந்து வாராமல் காக்கிறது அறிவினால் ஆம் பயனும் என்பதாம்.*

---

[1]செய்யாமற் (பரிமே. பா) [2]செய்தலின் (பா. பே)
[3]நன்னயஞ் (பரி. பாடம்) [4]பிறிது நோய் (மணக். பா)

(வி - ரை) துறந்தோர் ஒழுக்கத்தைக் கூறுமிடத்து,

இருத்தலே கிடத்தல் நிற்ற லியங்குதல் முடக்கல் நீட்டல்
திருத்தியெவ் வுயிர்க்கும் தீமை செறிந்திடா வொழுக்க மோம்பி
யுரைத்துயிர்க் குறுதி மார்க்க மோம்புவ கொடுப்பிற் கொண்டும்
பரிக்கதப் பாவை மாரைப் பற்றறத் துறந்திட்டாரே. (மேருமந். 1364.)
முன்னுகத் தளவு நோக்கி முன்புபின் பிரியச் செல்லா
ரின்சொலும் பிறர்தமக்கு மிதத்தன வன்றிச் சொல்லா
ரன்புநீத் துயிரை யோம்பி யளவமைந் துண்ப ரார்க்குந்
துன்பறக் கோடல் வைத்தல் மலங்களைத் துறத்தல் செய்யார்.

என்றார். (மேருமந். 1363.)

(ரு)

**316.** இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல்.

(இ - ள்) பொல்லாத காரியம் என்று அறிந்தவற்றைப் பிறருக்குச் செய்யாமல் இருக்க வேண்டும் (எ - று).

தருமமும், பாவமும், மனசு முன்னாக இருந்து அறிய வேணும். ஆனபடியினாலே தான் குற்றம் என்று அறிந்தது பிறருக்கும் குற்றம் என்று அறிய வேண்டும் என்பதாம். (சா)

**317.** எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானா
மாணாசெய் யாமை தலை.

(இ - ள்) மனசுக்குச் சரிபோகாமல் பொல்லாததா யிருக்கிற செயல்களை எக்காலத்தும் யாவருக்கும் சிறிதும் செய்யாமல் இருக்கிறதே முந்தின தருமம் (எ - று).

மனத்திலே பொல்லாங்கை நினையாமலிருந்தால், பாவம் இல்லை என்பதாம். (எ)

**318.** தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்.

(இ - ள்.) பிறர்செய்த பொல்லாப்பைத் தான் அனுபவித்து அறிந்தவன் தன்னைப்போல் ஒத்த உயிர்களுக்குத் தான் பொல்லாங்கு செய்கிறது என்ன காரியம் (எ - று).

தனக்குப் பொல்லாங்கு செய்தால் தான் துக்கப்படுகிறாற் போலப் பிற உயிர்களும் துக்கப்படும் என்று அறிந்து பொல்லாங்கு செய்யாமல் இருக்க வேண்டும் என்பதாம்.

(வி - ரை) ' பிற உயிர்கட்கு இன்னாதவற்றைச் செய்யாமல், தன்னுயிரைக் காப்பது போல அவ்வுயிர்களையும் காப்பானாகில் அவன் வீடு பெறுவான் ' என்று கூறப்பட்டுள்ளது. " தன்னுயிர் தான் பரிந் தோம்புமாறு போல், மன்னுயிர் வைகலு மோம்பி வாழுமே, லின்னுயிர்க் கிறைவனா யின்ப மூர்த்தியாய்ப், பொன்னுயி ராய்ப்பிறந் துயர்ந்து போகுமே." (சீவகசிந். 3107) (அ)

319. பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றானே[1] வரும்.

(இ - ள்.) ஒருவன் பிறவுயிர்களுக்குப் பொல்லாத காரியத்தைக் காலத்தால் செய்தால் அவனுக்குப் பொல்லாங்கு அந்திக்குத் தானே வரும் என்றவாறு. (கூ)

320. நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

(இ - ள்.) பொல்லாத வியாதி முதலானவை எல்லாம் பிறவுயிர்களுக்குப் பொல்லாங்கு செய்தார்மேலேயாம். அதனாலே தனக்குப் பொல்லாங்கு வேண்டாதவர்கள் பிறவுயிர்களுக்கும் பொல்லாங்கு செய்யாமலிருக்க வேண்டும் (எ - று).

நிலத்தில் எந்த விதையை விதைத்தானோ அவன் அந்தப் பலனையே அடைவது போல, புண்ணிய பாவமாகிற நன்மை தீமைகளைச் செய்தவர்களும் அந்த அந்தப் பலனையே அடைவார்கள் என்பதாம்.

(வி - ரை) உயிராகிய நிலத்து வினையை விதைத்தவர்களுக்கு விளைவும் அதுவேயாகலின் இன்னாதனவெல்லாம் பிறிதோர் உயிர்க்கு இன்னாதன செய்தார் மேலவாம். " வெவ்வினை செய்யுமாந்த ருயிரெனு நிலத்து வித்தி, யவ்வினை விளையுளுண்ணுமவ் விடத்தவர்கடுன்ப, மிவ்வென வுரைத்து மென்று நினைப்பினும் பனிக்கு முள்ளம் " (சீவகசிந். 2762) என்பதை நோக்குக. (கO)

---

[1] தாமே—பரி. பாடம்

# 33. கொல்லாமை

அஃதாவது ஓரறிவுடைய உயிர் முதலாக ஐயறிவுடைய உயிர் இறுதியாகச் சொல்லப்பட்ட *ஏழுவித உயிர்களையும் கொல்லாமல் இருக்கிறது. இது சகல தருமங்களிலும் பெரியதருமம் ஆனபடியினாலே சகலமான பேரும் கொல்லாவிரதத்தையே கைக்கொண்டு நடக்க வேண்டும்.

[இல்லறத்தாருக்கு ஓரறிவு உயிர் நீங்கலாக மற்ற ஜீவன்களைக் கொல்லுதல் கூடாது. ஆகையால் இல்லறத்தாருடைய கொல்லாமை முதலிய ஐந்து விரதங்களும் அணுவிரதங்கள் எனப் படும். ஆனால் துறவிகளுக்கு ஓரறிவுயிர் உள்பட எந்த ஜீவனையும் கொல்லுதல் கூடாது. ஆகையால் துறவிகளுடைய கொல்லாமை முதலிய ஐந்து விரதங்களும் மஹாவிரதங்களெனப்படும். கொல்லாவிரதம் இல்லறத்தோருக்கும் துறவிகளுக்கும் பொதுவானபடியால் இந்த அதிகாரத்தை மணக்குடவர் இல்லறவியலில் வைத்திருத்தல் கவனிக்கத்தக்கது.]

பெரியகொலை பொய்களவு பிறாமனையி லொருவல்
பொருள்வரைதல் மத்தமது புலைசுணலி னீங்கல்
பெரியதிசை தண்டமிரு போகம்வரைந் தாடல்
மரீஇயசிக்கை நான்குமிவை மனையறத்தார் சீலம். (மேருமந். 356)

**321.** அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

(இ - ள்.) தருமமாகிறது யாதெனில் ஒரு சீவனையும் கொல்லாமல் இருக்கிறதாம். சீவன்களைக் கொல்லுகிறது சகலமான பாவங்களையும் கொடுக்கும் (எ - று).

கொல்லாமையல்லாத பாவங்களைச் செய்தால் செய்த மாத்திரம் பாவம் ஒழிய அதிகம் வாராது. கொல்லுகிறதினாலே வெகுபாவமும் பழியும் பகையும் பிராணஹானியும் வரும் என்பதாம். (க)

*ஏழுவித உயிர்கள். நுண்ணிய ஓர்அறிவுயிர், பருத்த ஓர்அறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், மனதோடு கூடிய ஐயறிவுயிர், மனமில்லாத ஐயறிவுயிர் என்பனவாம்.

**322.** பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

*(இ - ள்) தான் சம்பாதிக்கின்றதைச் சாஸ்திரத்தில் உப தேசித்த பேருக்குப் பகுந்து கொடுத்து ஐவகை உயிர்களையும் காக்கிறது சாஸ்திரங்களை அறிந்தபேர் சொன்ன தருமங்களு ளெல்லாம் தலையான தருமம் (எ - று).*

*ஓம்புதலாவது மறந்தும் கொலை வாராமல் க்ஷாயிகம் காத்தல் என்பது.* (உ)

**323.** ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

*(இ - ள்.) சாஸ்திரங்களிலே சொன்ன தருமங்களிலே முந்தின தருமமாவது கொல்லாத தருமமே. அந்தத் தருமத்தின் பிறகு பொய் சொல்லாமல் இருக்கிறது நல்லது (எ-று). கொல்லாவிரதம் இல்லாதவன் என்ன தருமம் பண்ணினாலும் பலனில்லை என்பதாம்.* (ங)

**324.** நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.

*(இ - ள்.) மோக்ஷம் பெறுகிறதற்கு நல்லவழி யாதெனில் யாதொரு சீவனையும் கொல்லாமல் இருக்கிறதே நல்ல நெறி (எ - று).* (ச)

**325.** நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை.

*(இ - ள்.) சம்சாரநிலைக்குப் பயப்பட்டு பிறவாமை வேண்டித் துறந்தவர்களுள்எல்லாம் கொல்லுகிறதற்குப் பயப்பட்டுக் கொல்லாத தருமத்தைக் கைக்கொண்டு நடக்கிறவனே பெரியவன் (எ - று).* (ரு)

**326.** கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று.

(இ - ள்.) கொல்லாமையாகிய விரதத்தைக் கைக்கொண்டு நடக்கிறவனுடைய ஆயுளை எமன் கொண்டுபோக மாட்டான் (எ - று).

அதிகமாகிய பாவங்களைச் செய்தவர்களும் அதிகமாகிய புண்ணியங்களைச் செய்தவர்களும் இம்மையிலேதானே அந்தப் பலன்களை அநுபவிப்பார்கள் (எ - ம்). (சு)

327. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

(இ - ள்.) தன் பிராணன் போனாலும் தான் பிறிதொரு சீவனைக் கொல்லாமல் இருக்கவேணும் (எ - று).

தன்னை ஒரு சீவன் கொன்றாலும் தான் அந்தச் சீவனைக் கொல்லாமல் இருக்கவேணும் என்றுமாம். தன் சீவன் போகிறது நிற்கவேண்டும் என்று பிறிதொரு சீவனைக் கொல்லலாகாது என்றுமாம். தேவதைகளுக்குப் பலியாகவும் சீவனைக் கொல்லப் போகாது (எ - ம்).

Pope's note under this couplet is as follows- " A man may not kill even in self defence. The reasoning in Bhagvadgita, chapter 2, is adverse to this ". (எ)

328. நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.

(இ - ள்.) தேவர்கள் பொருட்டாக யாகத்திலே சீவனைக் கொன்றால் வெகு செல்வம் வரும் என்று சொன்னாலும் அறிவுள்ளவர்களுக்குப் பாவம் வந்து கடையான பிறப்பிலே பிறப்பிக்கும் (எ - று). அறிவுள்ளவர்கள் ஜீவன்களைக் கொல்லார்கள் (எ - ம்). (அ)

Under this couplet Pope writes, " Even (Vedic) sacrifices are forbidden ".

329. கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து

(இ - ள்) கொலைத்தொழிலையுடைய மனுஷர்கள் குற்றங்களைத் தெரிந்தவர்களுக்குப் புலையர்களாம் (எ - று).

கொல்லுகிற தொழிலையுடையவர்களே பறையர்கள் (எ - ம்).

Pope writes under this couplet - " The sacrificing priests and soldiers are not to be honoured ". (௯)

**330. உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்**
**செல்லாத்தீ வாழ்க்கை யவர்.**

(இ - ள்) சீவன்களைக் கொன்றபேர் பார்க்கப்போகாத வியாதியுடையவர்களாய், கைகால் குறைந்துபோகிற பெரு வியாதியுடையோர்களும் நீசமான தொழில்களை யுடைய வருமாய்ப் பிறப்பார்கள் (எ - று).

இப்போது பொல்லாத வியாதியை யுடையவர்கள் முற்பிறப்பிலே வெகு சீவன்களைக் கொன்று தின்றவர்கள் (எ - று).

அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோ யெழுபவே — அக்கால்
அலவனைக் காதலித்துக் கான்முறித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்.

என்னும் (நாலடியார் 123) செய்யுளை கண்டு நோக்குக. (௩௦)

---

## 34. நிலையாமை

அஃதாவது தோற்றமாய் இருக்கப்பட்ட செல்வம் புத்திரர் உறவின்முறையார் பெண்சாதி ஆடை, ஆபரணம் முதலானவைகள் நில்லா என்று அறிகிறது. இவைகளை நிலையென்று நம்புகிறது கானலைத் தண்ணீர் என்று நம்புகிறது போலாகும். புத்திர மித்திர களத்திராதிகளை நன்றாய் விசாரித்துப் பார்த்தால் ஒன்றும் நிலையாய் இருக்கிறது இல்லை. இவைகளை நிலை அல்ல என்று அறிந்தாலல்லாமல் ஞானம் பிறவாது. ஞான

மாகிய அறிவு பிறந்தாலல்லாமல் பற்றுவிட்டுநீங்கி வீடு பெறமுடியாது. ஆதலால், சகல வஸ்துக்களையும் நிச்சயம் அல்ல என்று எண்ணவேண்டும் (எ - று).

**331.** நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

(இ - ள்) நிலையில்லாத புத்திரமித்திர களத்திராதிகளையும் செல்வங்களையும் நிச்சயம் என்றும், தனக்கு உதவும் என்றும் நினைக்கிறவர்கள் அறிவில்லாத மூடர்கள் (எ - று).

நில்லாத வஸ்துக்களின்மேலே ஆசைவைக்கிறது பிறவித் துன்பத்துக்குக் காரணமாம் (எ - று). (க)

**332.** கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

(இ - ள்.) ஒருவனுக்கு ஐசுவரியம் வருகிற(போ)து, கூத்தாடுகிற இடத்திலே மனிதர் வந்து கூடுகிறாப்போல வந்து கூடும்; ஐசுவரியம் போகிறபோது கூத்து முடிந்தவுடனே அந்த மனிதர்கள் எல்லாம் ஒரு க்ஷணத்திலே போனாற்போலப் போம் (எ - று).

ஐசுவரியம் வருகிறபோது கொஞ்சம் கொஞ்சமாய் வந்து சேரும்; போகிறபோது நாலாவகையாலும் ஒரு க்ஷணத்திலே போய்விடும் (எ - ம்). (உ)

**333.** அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல்.

(இ - ள்.) நில்லாத இயல்பினை உடையது செல்வம். அந்தச் செல்வத்தைப் பெற்றபோதே அதனால் செய்யப்பட்ட தருமங்களைச் செய்துகொள்ள வேண்டும் (எ - று).

செல்வம் நில்லாது என்று அறிந்து தருமங்களைச் சீக்கிரமாகப் பண்ணவேண்டும் (எ - று). (ங)

**334.** நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) நாழிகை, நாள், மாதம், வருஷம் என்று சொல்லப்பட்டது ஆதித்தனுடைய பிரமாணத்தினாலே. அந்த நாள்

என்கிறதைக் காட்டி உலகத்திலேயுள்ள சீவன்களுடைய சரீரங்களை வாளாலே அறுத்துக்கொண்டு போகிருனென்று எண்ணிக்கொள்வார்கள் அறிவுள்ளோர்கள் (எ - று).

அறிவில்லாதார் நமக்குப் பொழுது போகிறது என்று சந்தோஷப்படுவார்கள். தங்கள் ஆயுசு மாண்டு போகிறதை அறியார்கள் (எ - ம்).

" வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார் •
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார். "

என்னும் (நாலடியார் 39) செய்யுள் ஈண்டுக் கவனிக்கத் தக்கது. (ச)

**335.** நாச்செற்று விக்குள்மேல் வாரா முனல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

(இ - ள்.) பேச வொட்டாமல் நாவை அடக்கி விக்கல் பிறக்கிறதற்கு முன்னே மோட்சத்துக்குக் காரணமாகிய நல்ல தருமங்களைச் செய்யவேண்டும் (எ - று) (ரு)

**336.** நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை படைத்திற் றுலகு.*

(இ - ள்.) ஒருவன் நேற்று இருந்தான் இன்று செத்துப் போனன் என்று சொல்லுகிற பெருமையையே யுடையது உலகம் (எ - று).

ஆதலின் இன்றிருந்தவன் நாளை இருப்பான் என்கிற நிச்சயம் இல்லை என்பதாம். (சா)

**337.** ஒரு பொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல

(இ - ள்.) தம்முடைய உடம்பும் உயிரும் கூடி ஒரு நாளாகிலும் இருக்கும் என்கிறதை நிச்சயமாக அறியார்; தாங்கள் நினைக்கிறது கோடியுமல்லாமல் பின்னையும் அதிகமாக நினைப்பார்கள் (எ - று).

*உடைத்திவ் வுலகு—பரிமேலழகர், மணக்குடவர் பாடம்.

நினைக்கிறதாவது—பொறிகளாலே அனுபவிக்கப்பட்ட இன்ப நுகர்ச்சியும், அதற்குக் காரணமாகிய பொருள் கூட்டு மாறும், அதற்கு வந்த இடையூறுகளைப் பரிகரிக்கு மாறும், அதனைக் காக்கு மாறும் என்பதாம். (எ)

**338.** குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு.

(இ - ள்.) முட்டையுடனே கூடியிருக்கிற உயிர் பக்குவம் வந்தபோது அந்த முட்டையைப் போட்டுவிட்டுப் பறந்து போனாற்போலே, சரீரத்தில் இருக்கிற சீவனும் அந்தச் சரீரத்தை விட்டுப் போம். (எ - று).

இப்படி நிலையல்லாத உடம்பை நிலை என்று நினைக்கிறவர்கள் அறிவில்லாதவர்கள் என்பதாம்.

" கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி
வாளாதே போவரால் மாந்தர்கள் - வாளாதே
சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து "

என்னும் (நாலடியார்30) செய்யுளை ஒப்பிடுக. (அ)

**339.** உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

(இ - ள்.) சீவன்களுக்குச் சாவு வருகிறது நித்திரை வருகிறாப்போலே இருக்கும்; பிறப்பு வருகிறது நித்திரை விழித்துக்கொண்டாற்போலாகும். (எ - று).

தூங்குகிறதும் விழிக்கிறதும் சீக்கிரமாக வருகிறாப்போல, சாவும் பிறப்பும் சீக்கிரமாக வருமென்பதாம். (கூ)

**340.** புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு.

(இ - ள்.) வாயு பித்தம், சிலேஷ்மம் இவைகளாலே நிலை பெற்ற உடம்புக்குள்ளே யிருந்த உயிருக்கு எந்நாளும் இருக்கப்பட்ட ஒரு உடம்பும் இல்லை. எந்த உடலை எடுத்தாலும் சரீரம் நாசமாகிப் போம்; சீவனுக்கு நாசமில்லை (எ - று). (௪௦)

## 35. துறவு

*அஃதாவது புறமாகிய ஐஸ்வரியத்தின்கண்ணும் உள்ளாகிய யாக்கையின்கண்ணும் உண்டாகிய ஆசாபாசங்களை விட்டுத் தபசு பண்ணுகிறது.*

**341.** யாதனின் யாதனி னீக்கியா[1] னோத
லதனி னதனி னிலன்.

*(இ - ள்.) ஒருவன் யாதொரு பொருளை விட்டு நீங்கினான், அந்தப் பொருளாலே அவன் நோகிறதில்லை (எ - று).*

*நீங்குகிறது, ஒரு பொருளைத் தனக்கு வேண்டாம் என்று விட்டுவிடுகிறது. அதனாலே நோகிறதில்லை. அந்தப் பொருள் அரசனாலேயாவது, கள்ளராலாவது, அக்கினியினாலாவது, தாயாதிகளினாலாவது போனால் விசாரம் வாராது என்பதாம்.* (க)

**342.** வேண்டி னுண்டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல.

*(இ - ள்.) சகலவஸ்துக்களையும் துறந்துவிட்டால் அவனுக்கு இம்மையிலே அந்த வஸ்துக்களாலே உண்டாகப்பட்ட பலனிலும் பத்துக்கோடி அத்தனைப் பலன் உண்டாம் மறுமையிலே (எ - று).*

*சம்சாரத்தை விட்டுத் துறந்து தபசு பண்ணினவனுக்கு மறுமையிலே வேண்டுமென்று நினைத்தவைகளெல்லாம் வந்து கூடு மென்பதாம்.* (உ)

**343.** அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.

*(இ - ள்.) உடம்பு முதலாகிய ஐந்து பொறிகளுக்கு உரித்தாய் இருக்கிற ஐந்து புலன்களையும் கெடுக்க வேண்டும். அவைகளைக் கெடுக்குங் காலத்து அவற்றாலே அனுபவிக்கிறதற்குத் தாங்கள் தேடின பொருள்களை எல்லாம் ஒருகாலே விடவேண்டும் (எ - று).*

---

*Rev. G. U. Pope writes, "The second chapter of the Gita should be compared with this."

[1] னீங்கினா - பாடபேதம்

தாங்கள் தேடின பொருள்களைத்தாமே அனுபவிக்க நினைத்துக் கொண்டிருந்தால் துக்கமும் பாவமும் வரும். வீட்டு நெறியாகிய தெரிசன ஞானங்கள் வாரா. அந்தக் காரணத்தினலேயே பொறிகளை அடக்கி, புலன்களைக் கெடுக்க வேண்டும். புலனுகர்ச்சிமேல் ஆசைவைத்தால், விறகு அதிகமாகப் போட்ட நெருப்புப்போல, பின்னையும் அதிகமாகிறதல்லாமல் அடங்காது என்பதாம். (ங)

**344.** இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து.

(இ - ள்.) தபசு பண்ணுகிறவர்கள் ஒரு பொருளின் - மேலேயும் பற்றில்லாமல் துறந்து தபசு பண்ணினல் மோட்சம் அடைவார்கள். இகத்துக்கும் நன்றாய் இருக்கும். பொருள்கள் - மேல் ஆசையுடையவனாய் வேஷத்துடனே கூடியிருந்தால் அந்த ஆசையினலேயே மயக்கம் வந்து செய்த தபசும் கெட்டுப்போய் தாழ்ந்த கதியிலே பிறந்து துக்கப்படுவார்கள் (எ - று). (ச)

**345.** மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.

(இ - ள்.) பிறப்பை அறுத்து மோட்சம் அடைய வேண்டும் என்கின்றவனுக்குத் தன் உடம்பும் தன்னுடைய தல்லாமல் இருக்கையில் பின்னை ஒருபொருளின்மேலே ஆசை வைக்கிறது என்ன பலன் கருதி? (எ - று).

உடம்பென்பது, ஔதாரிகம் முதலிய ஐவகையுள் உருவுடம்பு அருவுடம்பு என இரண்டு வகைப்படும். அவற்றுள் உருவுடம்பாவது தசப்பிராணனோடு கூடியது. பத்துவகைப் பிராணனாவது இந்திரியங்கள் ஐந்து, கரணம் மூன்று, உச்வாச நிச்வாசம் ஒன்று, ஆயுஷ்யம் ஒன்று. கதிகள்தோறும் ஆத்மனை விட்டுப் பிரியாமல் அதனோடு செல்லும் சரீரம் கார்மண சரீரம் அல்லது சூக்ஷும தேகம் அல்லது அருவுடம்பு எனப்படும். சரீரத்தின்மேல் ஆசை வைத்தால் பிறவி அறாமல் துக்கம் வந்து சேரும். இதன்மேல் ஆசையை க்ஷண மாத்திரமும் வையாமல் இருந்து மோட்சத்தை அடைகின்றது அருகரது மதம் (எ - று). (ரு)

**346.** யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

(இ - ள்.) தானல்லாத உடம்பைத் தான் என்றும் தன்னோடு கூடாத பொருளை எனது என்றும் கருதி அவற்றினிடத்திலேயே ஆசை உண்டாக்கப்பட்ட மயக்கத்தைக் கெடுத்தவன் தேவர்களுக்கும் புகுதற்கு அரிதாகிய மோட்சத்தை அடைவன் (எ - று).

மயக்கமாகிறது அறியாமை. அதனைக் கெடுக்கிறது குரு ஆகம தெய்வபக்தியினாலும் மித்யாத்வத்தின் நீங்கிய மார்க்கங்களாலும் யான் எனதென்று நினையாமல் இருக்கிறதாம்.

(வி - ரை) மயக்கத்தைக் கெடுத்து பற்றை அறுக்கின்றவன் வீட்டுலகத்தை எய்துவான் என்னும் உண்மை கீழ்க்கண்ட செய்யுளில் நன்கு கூறப்பட்டுள்ளது:

"வினையுயிர் கட்டு வீட்டின் மெய்ம்மையை அறிந்து தேறித
தினையனைத் தானும்பற்றிற் செறிவிலா நெறியை மேவித்
தனைவினை நீங்கி நின்ற தன்மைய னாக நோக்க
வினையனைத் தானும் நீங்கும் விகாரங்க ளோடு மென்றான்" (மேரு. 776)

Under this couplet Rev. G. U. Pope writes the following note, "வீடு is beyond the various heavens assigned to Civa, Brahmma etc."

சரீரங்கள் ஐந்து. அவை ஔதாரிகம், வைக்ரீயிகம், ஆஹாரகம், தைஜஸம், கார்மணம் எனப்படும். இவற்றுள் ஔதாரிக சரீரமானது இந்திரியங்களால் அறியக்கூடிய ஸ்தூல சரீரம். வைக்ரீயிக சரீரமானது சிறிதாயும் பெரிதாயும் லேசாயும் கனமாயும் அனேக பிரகாரங்களால் விகாரமடையக்கூடிய சரீரம். ஆஹாரக சரீரமென்பது சூக்ஷ்ம பதார்த்தங்களை அறிய வேண்டியதற்காக பிரமத்த குணஸ்தானத்திலுள்ள மகாமுனிகளுடைய சரீரத்திலிருந்து புறப்படும் சரீரமாகும். தைஜஸ சரீரமென்பது பிரகாசத்தையுடைய சரீரம். கார்மண சரீரமென்பது ஞானாவரணீய முதலிய எட்டுக் கருமங்களின் சேர்க்கையால் உண்டாகிய சரீரம்.

பத்துப் பிராணன்களாவன :— மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து இந்திரியப் பிராணன்களும், காயபலம், வாக்குப்

பலம், மனோபலம் ஆகிய மூன்று பலப் பிராணன்களும், உச்சுவாஸ நிச்சுவாஸ மென்னும் சுவாசப்பிராணனும், ஆயுஷ்யப் பிராண னும் ஆம். (சா)

**347.** பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

(இ - ள்) அகப்பற்றாகிய தன் உடம்பு முதலியவற்றின்மேல் ஆசையையும் புறப்பற்றாகிய பொருள்மேல் ஆசையையும் ஆகிய இருவகைப்பற்றையும் இறுகப் பற்றின ஆசையை விடாதாரை பிறவித்துன்பம் இறுகப்பற்றி நீங்காது. அவ் விருவகைப் பற்றையும் இறுகப்பற்றுதலாவது, அவற்றை விடாமல் இருக்கிறது. ஆசையை விடாமல் இருக்கிற பேர்களுக்கு மோட்சம் இல்லை (எ - று). (எ)

**348.** தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

(இ – ள்.) சகலமான ஆசாபாசங்களையும் துறந்துவிட்ட பேர்கள் மோட்சத்தை அடைந்தார்கள். ஆசையைத் துற வாத பேர்கள் மயங்கி, பிறவியாகிய வலையிலே அகப்பட்டார்கள் (எ - று). (அ)

**349.** பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்.

(இ - ள்.) ஒருவன் இரண்டுவகை ஆசையும் அற்ற போதே பொல்லாத பிறப்பை அறுப்பான். அந்த ஆசையை விடாதபோது நிலையில்லாததாகிய பிறவிச் சமுத்திரத்தைக் காண்பான் (எ - று).

"அற்றது பற்றெனின் உற்றது வீடு" என்பதாம்.

பற்றாத பொழுது பிறந்திறந்து வருகின்ற நிலையாமை காணப் படும் என்பது கீழ்வரும் பாட்டால் நன்கு விளங்கும்:

"பற்றினைப் பற்றி னாலே பற்றெனப் பற்றி னாரைப்
பற்றுதா னிடும்பை நீருட் பரியட்டந் தன்னை யாக்கும்
பற்றினைப் பற்றி லாமை பற்றெனப் பற்றி னாரைப்
பற்றுவிட் டிடும்பை நீருட் பரியட்ட மொழிக்குங் கண்டீர்" (மேரு. 323) (கூ)

**350.** பற்றுக பற்றற்ருன் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

*(இ - ள்.) ஆசையாகிய பற்றை விடுகிறதற்குச் சகல ஆசாபாசாங்களையும் அறுத்துவிட்ட ஜினேஸ்வரனுடைய பாதங்களையே பற்ருக நம்பி அவர் சொன்ன ஆகமசாஸ்திரத்தின் வழியே நடக்கவேண்டும். அந்தப்படி நடவாவிட்டால் ஆசை அருது (எ - று).*

*ஆசையுடைய தேவர்களை நம்பினுல் அவர்கள் தங்களுடைய ஆசாபாசங்களை அறுக்கமாட்டாமல் இருக்கையிலே, வேருெருவர் ஆசையை எப்படி அறுப்பார்கள் எ - ம். (கo)*

---

## 36. மெய்யுணர்தல்

*அஃதாவது, பிறப்புக்களையும் மோட்சத்தினையும் அவைகளை அடையவேண்டிய காரணங்களையும் விபரீத வகையாலல்லாமல் உண்மையினுலேயே அறிகிறது. இதனையே தத்வக்ஞானம என்றும் சொல்லுவார் கிரந்த சாஸ்திரக்காரர்.*

**351.** பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானு மாணுப் பிறப்பு.

*(இ - ள்) மெய்ப்பொருள் அல்லாத புத்திரர், மித்திரர், களத்திரம், தனம், தானியம், வஸ்து, ஆபரணங்கள் இவை முதலானவைகளை மெய்யென்று அறியப்பட்ட விபரீத உணர்வினுலே மயங்கி, பிறப்பினுலே வெகு துக்கம் உண்டாம் (எ - று).*

*விபரீத உணர்வாவது, மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் இல்லை என்று சொல்லும் பொய்ந்நூல் வழக்குக்களை மெய்யென்று இருத்தல். இதனுல், பிறப்பு இடையருமல் வரும் என்பதாம்.*

*(வி - ரை) மாணுப்பிறப்பு—இன்பமில்லாத பிறப்பு, நரகர், விலங்கு, மக்கள், தேவர் என்னும் நால்வகைப்பிறப்பிலும் உள்ளது துன்பமே யாகலின், 'மாணுப்பிறப்பு' என்ருர். இதனுல் பிறப்புத் துன்பம் என்பதூஉம், அதற்கு முதற்காரணம் மெய்ப்பொருள் அல்லாதவற்றை மெய்ப்பொருள் என்று உணரும் விபரீத உணர்வாம் என்பதூஉம் கூறப்பட்டன. (க)*

**352. இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.**

(இ - ள்.) மெய்யுணர்வாகிய நல்ல நெறிகளையுடையார்க்கு அந்த மெய்யுணர்வு பிறப்பை நீக்கி மோக்ஷமாகிற அனந்த சுகத்தைக் கொடுக்கும் (எ - று).

சங்கை முதலிய இருபத்தைந்து குற்றங்களும் நீங்கி நிச்சங்கை முதலிய எட்டு அங்கங்களை உடைய க்ஷாயிக சம்யக்தர்சனம் அடைந்த எதிகள் மோக்ஷம் அடைவது நிச்சயமாகும் (எ - று).

இருள் நீங்கி என்றது நரகம் முதலிய நாலு கதியும் நீங்கி என்பதாம். (உ)

**353. ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து.**

(இ - ள்.) மறுபிறப்பும் இருவினையும் கடவுளும் உண்டோ வில்லையோ வென்று சந்தேகப்படாமல் உண்டென்று தெளிந்த க்ஷாயிகசம்யக்த்வ முள்ளவர்களுக்குப் பூமியைப்பார்க்கிலும் இனிமேலடையத்தக்க தேவலோகம் பெரியதென்பதாம். சந்தேகப்பட்டால் பிறப்பு இடையறுதென்பதாம். (ந)

**354. ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.**

(இ - ள்.) சக்ஷுபஞ்சேந்திரிய சீவனுகித் தர்ம க்ஷேத்திரத்திலே பிறந்தும் நல்ல ஞானமும் தெரிசனமும் இல்லாவிட்டால் பிரயோசனம் இல்லை (எ - று).

உத்தம சரீரம் முதலிய எல்லாம் கூடிவந்தும் நற்காட்சியாகிற தெரிசனம் இல்லாவிட்டால் சம்சாரம் கெடாது என்பதாம்.

(வி - ரை) காம னன்னதோர் கழிவனப் பறிவொடு பெறினு
நாம நாற்கதி நவைதரு நெறிபல வொருவி
வாம னூனெறி வழுவறத் தழுவின ரொழுக
லேம வெண்குடை யிறைவமற் றியாவது மரிதே. (சீவகசிந். 2753)

என்னுஞ் செய்யுளைக் கவனிக்கவும். (ச)

355. எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(இ - ள்.) ஜீவாதி பொருள்கள் பலவிதமாக இருந்தாலும், அவற்றுள் சுத்தாத்ம ஸ்வரூபமும் கேவலக்ஞானமுமே உபாதேயமாகையால், ஞான தரிசன சாரித்திரத்தால் அடையும் மோக்ஷத்தை இச்சிப்பது மெய்யறிவாகும் (எ - று). (ரு)

356. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

(இ - ள்.) இந்த மனுஷப்பிறப்பிலே உபதேச வார்த்தைகளை அனுபவமுடைய குருவினிடத்திலே கேட்டதினுலே மெய்யான தத்துவஞானங்களை அறிந்தவர்கள் திரும்பவும் இந்த மனுஷப்பிறப்பிலே பிறவாத நெறியையுடைய மோக்ஷ வீட்டை அடைவர் (எ - று).

மனுஷ ஜென்மத்திலே அல்லாமல் மற்றொரு ஜென்மத்திலே வீடுபே றில்லையாம் (எ - று). (சு)

357. ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

(இ - ள்.) அப்படிக் கேட்ட மெய்ப்பொருளாகிய உபதேச மொழிப்பொருளை மனத்திலே தரித்து நன்றாய் ஆராய்ந்து அதனுல் முதற்பொருளான பரப்பிரம்ம சொரூபத்தை அறிந்தவனுக்கு மறுபிறப் பில்லை (எ - று). (எ)

358. பிறப்பென்னும் பேதைமை நீங்கிச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.

(இ - ள்.) பிறப்புக்குக் காரணமான அக்ஞானத்தினுல் உண்டாகும் ஆசை கெட்டுப்போக வீட்டிற்கு நிமித்தகாரணமாகிய மெய்ப்பொருளைக் காண்கின்றதே அறிவு (எ - று).

மெய்ப்பொருளாவது மோட்சவீட்டுக்கு நெறியாகிய நல்ல அறம் என்பதாம் (எ - று). (அ)

**359.** **சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்**
**சார்தரா சார்தரு நோய்.**

*(இ - ள்.) ஒருவன் எல்லாப் பொருளுக்கும் முதலாய் இருக்கப்பட்ட தருமநெறிகளை அறிந்து இருவகைப் பற்றினை யும் அறுத்தொழுக வல்லவனாயின் அவனை முன் சாரக்கட வனவாய் நின்ற தீவினைகள் அந்த ஆசாரங்களைக் கெடுத்து அவனைச் சேரமாட்டா (எ - று).*

*சாரக்கடவதாகிய தீவினைகளாவன, முந்தின ஜென்மத் திலே செய்த பாவங்கள் (எ - ம்).* (௯)

**360.** **காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற**
**னாமங் கெடக்கெடு நோய்.**

*(இ - ள்.) ஒருவனுக்கு ஆசையும் கோவமும் மயக்கமும் என்று சொல்லப்பட்ட மூன்று குற்றங்களுடைய பேருங்கூட இல்லாமல் ஒருவனுக்குக் கெட்டால், அந்தக் குற்றங்களாலே வரும் வாதை அவனுக்கு உண்டாகாது (எ - று).*

*அஞானியாய் மயக்கமும், அந்த மோகத்தினாலாய நான் என்ற அகங்காரமும், அகங்கார காரணத்தினாலே எனக்கு இது வேண்டும் என்னும் அவாவும், அந்த அவாவினாலே வரப் பட்ட ஆசையும், அந்த ஆசையினாலே அப் பொருள் பெறவிட் டால் உண்டாகும் கோபமும் இவை அஞ்சென்று கிரந்த சாஸ்திரத்தார் சொல்லுவார்கள். அதிலே அகங்காரம் மயக் கத்திலேயும் அவா ஆசையிலிடத்திலேயும் அடங்குதலால், மூன்று குற்றம் என்றார். இந்த முக்குற்றங்களும் கெட் டவனுக்கல்லது மோக்ஷமில்லை (எ - று).* (௧0)

---

## 37. அவாவறுத்தல்

*அஃதாவது முன்னும் பின்னும் தொடரப்பட்ட வினைத்தொடர்ச்சியை அறுக்கப்பட்டவர்களுக்கு, நடுவு நின்ற வுடம்பும் அத்துடன்கூடிய வினையினாலே பிறக்கப் பட்ட ஆசையும் பிறவிக்கு வித்தாமாகலின், அதை அறுக் கிறதாம்.*

**361.** அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

(இ - ள்.) எல்லாச் சீவன்களுக்கும் எந்தக்காலத்திலேயும் ஆசை என்னப்பட்டது பிறவிக்கு விதை (எ - று).

உயிர் உடம்பைவிட்டுப் போகின்ற காலத்திலே எதை நினைக்கிறதோ அந்த ஆசையினாலேயே அவனுக்குப் பிறப்பு விடாமல் தொடருகிறது (எ - று).

(வி - ரை) இதற்குப் பரிமேலழகர் எழுதியிருக்கும் விசேடவுரை சைனசமய சம்பிரதாயத்தை ஒட்டியிருத்தல் கவனிக்கத் தக்கது.

"உடம்பு நீங்கிப் போங்காலத்து அடுத்த வினையும், அது காட்டுங் கதிநிமித்தங்களும், அக் கதிக்கண் அவாவும் உயிரின்கண் முறையே வந்துதிப்ப, அறிவை மோகம் மறைப்ப, அவ் வுயிரை அவ் வவா அக் கதிக்கட் கொண்டுசெல்லு மாகலான், அதனைப் 'பிறப்பீனும் வித்'தென்றும், கதிவயத்தான் உளதாய அவ் வுயிர்வேறுபாட்டினும் அவை தன்மைதிரியும் உற்சர்ப்பிணி அவசர்ப்பிணி என்னும் காலவேறுபாட்டினும் அது வித்தாதல் வேறுபடாமையின், 'எல்லாவுயிர்க்கும் எஞ்ஞான்றும்' என்றும், இஃது எல்லாச்சமயங்கட்கும் ஒத்தலான் 'என்ப' என்றும் கூறினார். இதனால் பிறப்பிற்கு அவா வித்தாதல் கூறப்பட்டது." (க)

**362.** வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

(இ - ள்.) பிறப்பு துக்கம் என்று அறிந்தவன், ஒரு பொருளை வேண்டு மென்றால், பிறவாமல் இருக்கிறதையே நினைக்கவேண்டும். பிறவாமல் இருக்கிறதற்கு ஒருபொருளின்மேலேயும் ஆசைவையாமல் இருக்கவேண்டும். ஆசை உண்டானால் பிறப்பு, துன்பம், வியாதி, மூப்பு, மரணங்கள் உண்டாம். ஆசை இல்லாதவனுக்கு மோக்ஷம் உண்டாம் (எ - று). (உ)

**363.** வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்.

(இ - ள்.) ஒருபொருளையும் விரும்பாமையைப் போல் ஒத்த பெரிய செல்வம் இந்த உலகத்திலே இல்லை. துறக்கத்திலேயும் இதற்குச் சரியான வித்தம் இல்லை (எ - று).

மனுஷர்செல்வமும் தேவர்கள்செல்வமும் பார்த்தால் ஒருத்தருக்கு ஒருத்தர் அதிகமாக இருக்கும். இணையில்லாத செல்வமாகிய ஆசையில்லாத அருகனே பெரிய செல்வம் உடையவன் (எ - று). (ங)

364. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

(இ - ள்.) ஒருவனுக்கு மோக்ஷம் என்று சொல்லப்படுகிறது ஆசை யில்லாமை. அந்த மோக்ஷம் வேண்டிச் சத்தியமாய் நடந்தால் தானே வரும் (எ - று).

மோக்ஷமாகிறது ஜீவன் மயக்கமில்லாமல் இருக்கிறது. (ச)

365. அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாக வற்ற திலர்.

(இ - ள்.) பிறப்பு பிணி மூப்பு மரணம் ஆகியவற்றை அறுத்தவ ரென்று சொல்லப்படுவார்கள் ஆசையை அறுத்தவர்களே. ஆசையை விடாமல் மனைவாழ்க்கை முதலானவை-களைத் துறக்காத பேர் பிறவியை அறாதவர்கள் (எ - று).

ஆசையினாலே பிறப்பு மேன்மேலும் உண்டாம்.(எ-ம்) (ரு)

366. அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.

(இ - ள்.) பயப்படத்தக்கது ஆசையே. அந்த ஆசை சகலதரும விரதங்களையும் பண்ணினாலும், ஆசையுடையவனாயிருக்கிறவன் பிறவித்துன்பங்களிலே அழுந்துவான் (எ - று).

ஆசை சகல விரதங்களையும் அழிக்கும் (எ - று). (சா)

367. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.

(இ - று) ஒருவன் ஆசையை நன்றாக அறுத்துவிட்டானாகில், அவனுக்கு ஒருகாலத்திலும் அழியாத வினையாகிய மோக்ஷம் தப்பாமல் வரும் (எ - று).

ஆசையற்றவனுக்கு நினைத்த கருமமெல்லாம் முடியும் (எ - று). (எ)

368. அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்.

(இ - ள்.) ஆசையில்லாதவருக்கு வரக்கடவது ஒருதுன்பமும் இல்லை. ஆசையுடையவர்களுக்குச் சகலமான துன்பங்களும் தப்பாது மென்மேலும் வரும் (எ - று). (அ)

369. இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

(இ - ள்.) ஆசையென்னப்பட்ட பெரிய துக்கம் ஒருவருக்குக் கெட்டால், அவனுக்குச் சுகம் குறைவுபடாமல் எந்நாளும் உண்டாம் (எ - று).

எந்நாளும் என்றது, இம்மை மறுமையிலேயும் உண்டாம் (எ - று). (கூ)

370. ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்.

(இ - ள்.) ஒருகாலத்திலேயும் நிறையாததா யிருக்கிற ஆசையை விட்டால் அவனுக்கு ஒருகாலத்திலேயும் பிரியாத நிலையாய் எந்நாளுஞ் சரியாயிருக்கப்பட்ட பெரிய இன்பத்தைக் கொடுக்கும் (எ - று).

நிறையாத தாகிறது, நிலையில்லாத பொருளின்மேல் ஆசையை வைத்து அவைகளைத் தேடினபோது, எத்தனை பொருள் வந்தாலும் பின்னையும் வேண்டுமென்கிற தொழிய, அமையும் என்கிற புத்தியில்லாதது. இப்படி ஆசையற்றவனைக் கிரந்தசாத்திரத்தார் ஜீவன்முக்தன் என்று சொல்லுவார்கள். (௧0)

---

## 38. ஊழ்

அஃதாவது, ஒருவன் முன்னே செய்த நல்வினை தீவினை இந்த ஜன்மத்தில் வந்தடைகிறது. அந்த வினையும் தன்னைச் செய்தவனையே வந்தடையும். அது எப்படிப் போலென்றால், பசுக்கள் திரளாயிருக்கின்ற இடத்திலே

ஒரு கன்றைத் தூரவிருந்து விட்டால் அந்தக் கன்று தன் தாயான பசுவையே வந்து சேரும். அதுபோல, செய்த வினையும் செய்தவனையே வந்தடையும் என்பதாம.

" பல்லாவு ளுய்த்து விடினுங் குழககன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு "

என்னுஞ் (நாலடியார் 101) செய்யுளைக் கவனிக்க.

**371.** ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி.

(இ - ள்.) ஒருவனுக்குக் கைப்பொருள் வந்து கூடுகிறதற்குக் காரணம், முன்செய்த புண்ணியத்திஞலே முயற்சியுண்டாம். கைப்பொருள் போகிறதற்குக் காரணம்; முன்செய்த வினையாலே மனசு வருந்திப் பொருள் போகிறதற்கு மடி வரும் (எ - று).

ஒருவனுக்கு நன்மையும் தீமையும் முன்செய்த வினையாலே உண்டாகும் என்பதாம். (க)

**372.** பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்
ஆகலூ ழுற்றக் கடை.

(இ - ள்.) ஒருவனுக்குச் சகலமான அறிவும் உண்டாயிருந்தாலும், கைப்பொருள் இழந்துபோகத்தக்க ஊழ்வினை வந்துற்ருல், அந்த அறிவை எல்லாம் மயங்கப்பண்ணுவிக்கும். அறிவு இல்லாமல் இருந்தும், கைப்பொருள் வந்து சேரத்தக்க ஊழ்வினை வந்துற்ற இடத்தில், அவனை அறிவுடையவனுகப் பண்ணுவிக்கும் (எ - று). (உ)

**373.** நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்.

(இ - ள்.) அறிவைக் கெடுக்கப்பட்ட ஊழ்வினையுடையவன் ஒருவன், நுண்ணிதாயிருக்கிற பொருள்களையுடைய பல நூல்களைக் கற்ருலும், அவனுக்குப் பின்னையும் தன்வினைவழியே வரப்பட்ட அறிவின்மையே உண்டாம் (எ - று). (ங)

**374.** இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.

*(இ - ள்.) உலகத்திலே ஊழ்வினை இரண்டு வகைப்படும். அவை யாவை யெனில், ஐசுவரியம் உண்டாகவேண்டும் என்று நல்வினை செய்கிறதும் அறிவுண்டாகவேண்டும் என்று செய்கிறதுமாம். செல்வம் உண்டாகவேண்டும் என்று செய்தவர்களுக்கு அறிவு வாராது. அறிவுவேண்டிச் செய்தவருக்குச் செல்வம் வாராது. ஆனபடியினாலே, செல்வமும் அறிவும் என்ற இரண்டையும் வேண்டித் தவம் செய்யவேண்டும் (எ - று).* *(ச)*

**375.** நல்லவை எல்லாஅந் தீயவாந் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு.

*(இ - ள்.) செல்வம் செய்தற்கு ஏதுவாகிய நல்ல காரியங்கள் எல்லாம் பொல்லனவாம்; கேடு செய்ய நினைத்த பொல்லாத காரியங்கள் எல்லாம் நல்லன ஆம், ஊழ்வினை வசத்தினாலே (எ - று).*

*ஊழ்வினையே பெரி தென்பது.* *(ரு)*

**376.** பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம.

*(இ - ள்.) தனக்கு ஊழ்வினையினாலே பிராப்தியில்லாத பொருளை வருந்திக் காத்தாலும் நில்லாது. தனக்குப் பிராப்தியுண்டாயிருக்கிற பொருளை எறிந்து போட்டாலும் போகாது. (எ - று).*

*பொருள்கள் இருக்கின்றதும் போய்விடுகின்றதும் ஊழ்வினையால்அல்லது காக்கிறதாலேயும், காக்காததினாலேயும் அல்ல என்றவாறு.* *(சா)*

**377.** வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

*(இ - ள்.) ஐம்பொறிகளால் நுகரப்படும் பொருள்கள் கோடிகோடியாய்த் தேடிவைத்தாலும் தெய்வம் அவனுக்கு*

அமைத்த மாத்திரம் அல்லாமல் அதிகம் அனுபவிக்கப் போகாது (எ - று).

ஒருவன் செய்த நன்மைதீமை அவனுக்கே யல்லாமல் பின்னை ஒருவனுக்கும் வாரா என்பதாம். (எ)

**378.** துறப்பார்மன் துப்புர வில்லார் உறற்பால
ஊட்டா கழியும் எனின்.

(இ - ள்.) தரித்திரத்தினாலே உண்ண உடுக்க இல்லாதவர்கள் துறந்துபோகத்தக்க புத்தியுடையவராவர், முன் செய்த தீவினை வந்து சேராவிட்டால் (எ - று).

முன்செய்த தீவினை வந்து உற்றால் நல்வழியிலே நிற்க வொட்டா தென்பதாம். (அ)

**379.** நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன்.

(இ - ள்.) நல்லவினை உதயமான காலத்து அதன் விளைவாய இன்பங்களை வேண்டாம் என்று தள்ளாமல், இவை நல்லவென்று அநுபவித்தவர்கள், மற்றைத் தீவினை விளையுங்காலத்து, அதன் விளைவாய துன்பங்களையும் அப்படி அநுபவியாமல் துன்பங்களைப் போக்கடிக்க வேணுமென்று விசாரப்படுகிறது என்ன காரியம் (எ - று).

தான் செய்த வினையைத் தானே அனுபவியாமல், ஒன்றுக் கிசைந்து ஒன்றுக்கு இசையாது வருந்துதல் அறிவன்று என்பதாம். (கூ)

**380.** ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

(இ - ள்.) வினையை விலக்க வேண்டும் என்று அதற்கு மாறுபாடாகிய உபாயங்களைச் செய்தாலும் அந்த உபாயத்திற்கு முன்னே வினை வந்து நிற்கும் (எ - று).

ஊழ்வினையினும் பெரியதொன்றில்லை என்பதாம். (கo)

---

அறத்துப்பால் முற்றும்

# பொருட்பால்



இனி, இல்லறத்தின் வழிப்படுவனவாய பொருள் இன்பங்களுள் இருமையும் பயப்பதாய பொருள் கூறுவான் ருெடங்கி, அதற்குக் காரணமாய அரசநீதி கூறத் தொடங்குகின்ருர். அரசநீதியாவது காவலை நடாத்தும் முறைமை. அதனை அரசியல், இதவியல், ஒழிபியல் என மூன்று வகைப்படுத்தி உலகத்துக்குப் பிராணனுயிருக்கிற அரசன்இயல்பு இருபத்தைந்து அதிகாரத்தால் கூறுவான் ருெடங்கி, முதற்கண் இறைமாட்சி கூறுகின்ருர்.



## 39. இறைமாட்சி

அஃதாவது அரசனுடைய நற்குண நற்செய்கைகள். உலகரக்ஷகனுக நின்று காத்தலின் அரசனை 'இறை' என்ருர்.

**381.** படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
உடையான் அரசருள் ஏறு.

(இ - ள்.) சேனையும், குடிகளும், பயிரும், மந்திரிகளும், சினேகிதரும், அரணாகிய கோட்டை கொம்மை துர்க்கங்களும் உடையவன் அரசர்களுக்குள் சிங்கத்தைப் போன்றவனென்றவாறு.

ஆறு அங்கங்களிலே ஒன்றில்லாவிட்டாலும் இராச்சியம் செல்லாதென்பது. (க)

**382.** அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு.

(இ - ள்.) அரசனுக்கு லக்ஷணமாகிறது தீரத்துவமும், கொடுக்கிறதும், அறிவும், உற்சாகமும் என்னும் இந்த நாலு குணமும் விடாமலிருக்கவேணு மென்றவாறு.

உற்சாகம், கருமஞ் செய்கிறதற்கு மனவெழுச்சி. அறிவு, ஆறங்கத்துக்கு முரியது ; கொடுக்கிறதனாலே சேனையுண்டாம். தீரத்துவத்தினாலே செய்கிற காரியங்கள் முடியும் ; இவைக ளில்லாவிட்டால் அரசனுக்குக் கேடு வருமாதலால், இவைகள் விடாமலிருக்க வேணு மென்பதாம். (உ)

**383.** தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு.

(இ - ள்.) பூமியை ஆளப்பட்ட இராசாக்களுக்குக் காரியங் களில் உற்சாகமுடைமையும், சபையை யறிந்து பேசத்தக்க கல்வியுடைமையும், ஆண்மையுடைமையு மாகிய இம்மூன்று குணமு மொருகாலும் விடாமலிருக்கவேணு மென்ற வாறு. (ங)

**384.** அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.

(இ - ள்.) ராசநீதிக்குச் சொல்லிய தருமத்தின்வழி தப் பாமல் நடந்து தன்னாட்டிலே தர்மமல்லாமலிருக்கிற காரியத் தைச் செய்யவொட்டாமல் தண்டித்துச் சவுரியத்திலே குறை படாமலிருக்கிறவனே அரசன் என்றவாறு.

(விரை) அரசனீதியாவது ஓதல், ஒருபொருளை வேண்டுதல், கொடுத்தல் ஆகிய இந்த மூன்றும் பொதுத்தொழில் ; ஆயுதவித்தை கற்கிறது, சகல சீவன்களையும் சமானமாய்ப் பார்க்கிறது, பகையை விசாரித்து வெல்லுகிறது ஆகிய இம்மூன்றுஞ் சிறப்புத்தொழில் ; ஆகிய இந்த ஆறுவகைத் தொழிலும் தப்பாமற் செய்கிறதாம். (ச)

**385.** இயற்றலும் ஈட்டலுங் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

(இ - ள்.) தனக்குப் பொருள் வரும் வழிகளை மேன் மேலும் உண்டாக்கலும், வந்தபொருளை நல்ல விடத்திலே வைத்தலும், வைத்த பொருள்களைப் பிறர்கொள்ளாமல் காத்த லும், காத்த பொருள்களைத் தர்மார்த்த காமங்களாகிய அறம் பொருளின்பம்பொருட்டு விடுதலும் வல்லவன் அரசன் என்றவாறு.

(விரை) பொருள் வரும் வழிகளை யுண்டாக்குகிறதாவது - சத்துருக்களைச் செயிக்கிறதும், காணிக்கை வாங்கிக் கொள்கிறதும், தன்தேசத்துக் குடிகளுக்குக் கல்விகொடுத்துத் தப்பாமல் நடப்பிக்கிறதும் முதலாயின. பிறர் கொள்ளாமல் காக்கிறது-பகைவர்கள், கள்வர், சுற்றத்தார், பரிசாரகர் எடுத்துப்போகாமற் காக்கிறதாம். தருமத்தின்வழியே செலவிடுகிறது - தேவர்கள், பிராம்மணர், வித்துவான்கள், தரித்திரர் இவர்களுக்குக் கொடுக்கிறதாம். பொருள்வழியே செலவிடுகிறது - யானை, குதிரை, மனுஷர், நாடு, கோட்டை ஆகியவற்றிற்கும் பகைவரைப் பிரிவு செய்கிறவர்களுக்கும், தன்னை விட்டுப்போகிறவர்களைப் போகவொட்டாமல் நிறுத்துகிறவர்களுக்கும் கொடுக்கிறதாம். இன்பத்தின்வழியே செலவிடுகிறது - கிணறு, குளம், தோட்டஞ் செய்கிறவர்களுக்கும் தானுண்ணவுடுக்கிறதற்குங் கொடுக்கிறதாம். (ரு)

**386. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்**
**மீக்கூறு மன்ன னிலம்.**

(இ - ள்.) சனங்கள் வந்து காண்கிறதற்கு எளியனும், கடின வார்த்தைகள் சொல்லாதவனுமா யிருக்கிற இராசாவினுடைய இராச்சியத்தை எல்லா இராச்சியங்களிலும் அதிகமென்று சொல்லுவார்க ளுலகத்தோர் என்றவாறு.

காண்கிறவர்கள் பலவந்தராலே வாதைப்பட்டவர்களும் தரித்திரத்தினலே நொந்தவர்களுமாம். இவர்கள் காண்கிறதற்கு எளிதாயிருக்கிறதும், கடுஞ்சொல்லனல்லாம லிருக்கிறதும், கோள்சொன்னதைக் கேட்டுத் தண்டியாமல் நன்றாய் விசாரித்துத் தண்டிக்கிறதும், உத்தியோகம் பண்ணுகிறதிலே கோபம்பண்ணுமல் இருக்கிறதும், என இப்படிப்பட்ட இராசாவினுடைய இராச்சியம் பசி, பிணி, பகை இல்லாம லிருந்து வந்தடைந்தவர்களுக்குப் பேரின்பத்தைக் கொடுத்தலால் அதை எல்லா நிலங்களிலும் உயர்த்திக் கூறும் உலகம் (எ று). (சா)

**387. இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற்**
**றான்கண் டனைத்திவ் வுலகு.**

(இ-ள்.) நல்ல வார்த்தைகளுடனே பொருளைக் கொடுத்து இரட்சிக்கவல்ல இராசாவுக்கு இந்த உலகம்அவன் கீர்த்தியைத்

தான் சுமந்து கொண்டு அந்த இராசா வேண்டிய வஸ்துக்களை யெல்லாம் கொடுக்கு மென்றவாறு.

இரட்சிக்கிறது - வலியார் எளியாரை நலிய வொட்டாமற் காக்கிறது. (எ)

**388.** முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

(இ - ள்.) தான் நியாயம் தப்பாமல் நடத்திப் பிறர் நலிய வொட்டாமற் காக்கப்பட்ட இராசா மனுஷனே யானாலுந் தெய்வமென்று சொல்லப்படும் என்றவாறு.

நியாயம் தப்பாதது - அறநூலும் நீதிநூலும் சொன்னபடியே தப்பாமல் நடக்கிறது. பிறர் நலியாதது - பலவந்தர் எளியவர்களை வதைபண்ணுமற் காக்கிறது. (அ)

**389.** செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

(இ - ள்.) தன்னை அதட்டிச் சொல்லப்பட்ட சினேகிதருடைய சொற்களைத் தன்செவி பொருததாகச் சொன்னாலும் அதனுடைய பலனை யறிந்து பொறுக்கப்பட்ட குணமுடைய இராசவினது குடைநிழலின் கீழேயுலகம் தங்கியிருக்கும் என்றவாறு.

கவிகைக்கீழ்த் தங்குதலாவது : சகல சனங்களும் அவனையே * ஆச்ரிப்பார்களென்பது. (கூ)

**390.** கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
முடையானும் வேந்தர்க் கொளி.

(இ - ள்.) வேண்டினவர்கள் வேண்டின வஸ்துக்களைக் கொடுத்தலும் எல்லார்க்கும் தயைசெய்தலும், முறைமை தப்பாமல் நடக்கிறதும், தளர்ந்த குடிகளைப் பேணுதலும் இந்த நான்கு குணங்களும் உடையவன் இராசாக்களுக் கெல்லாம் விளக்காம் என்றவாறு.

---

* அனுசரிப்பார்கள் (பா - பேதம்)

தயைசெய்கிறது-முகமலர்ந்து நல்ல வசனங்களைச் சொல்லுகிறது. தளர்ந்த குடிகளைப் பேணுகிறது - ஆறிலொன்று கடமை கொள்கிறதும், வறுமை நீங்கினும் கைக்கொண்டும் வறுமையுற்றவழி விட்டுவிடலுமாம். (கo)

---

## 40. கல்வி

அஃதாவது அரசனாலே கற்கவேண்டின நூல்களைக் கற்றல். நூலாவது அறநூலும், நீதிநூலும், யானை குதிரை ஆயுதவகைக ளென்றிவற்றின் நூல்களுமாம். அரசன் அறிவுடையவனானால் தன்னுயிர்க்கே யல்லாமல் சகல சீவன்களுக்கும் பயன்படுவன். இந்தக் கல்வி யாவர்க்கும் உறுதி பயத்தலிற் பொதுப்படக் கூறுகின்றார்.

**391.** கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.

(இ - ள்.) கற்கவேண்டின சாஸ்திரங்களைப் பழுதில்லாமல் நன்றாய்க் கற்கவேண்டும். அப்படிக்கற்றால் அந்த நூல்கள் சொன்னவழியே நிற்கவேணும் என்றவாறு.

(வி-ரை) கற்கவேண்டிய நூலாவது, அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப்பொருளை அறிவிக்கும் நூல்கள். இவையன்றி மயக்கமான நூல்களைக் கற்கலாகாது. கசடறக் கற்கிறதாவது, அந்தச் சாஸ்திரஅர்த்தம் ஒருவழியா யிருக்கத் தான் ஒரு வழியைச் சொல்லாமல் மெய்யான பொருளை நல்லோர்களிடத்திலே பலகாலும் கேட்கிறது. நிற்றலாவது, சம்சாரத்திலே யிருந்தால் நல்ல உத்தியோகங்களைச் செய்து அதன்வழி வந்த பொருளை அறம்பொருளின்பங்களின் வழியே விடுதல்; துறந்தால் மெய்ப்பொருளையுணர்ந்து ஆசையை யறுத்தல். இப்படி நின்றால் பிறவி யற்று வீடுபெறு மென்பதாம். (க)

**392.** எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

(இ - ள்.) அறியாதவர்கள் எண்ணென்றும் எழுத்தென்றுஞ் சொல்லுவார்கள். அறிந்தவர்கள் எண்ணாகிய கணக்கும்

எழுத்தும் இவை இரண்டும் அறிவுடைய சீவனுக்கு இரண்டு கண்ணென்று சொல்லுவார்கள். எண்ணும் எழுத்தும் முதற் பொருளாகிய பரப்பிரமத்தைக் காக்கிறதற்கு வழியான படியினாலே கண்களென்று சொல்லப்பட்டன. "ஆதி முதலொழிய வல்லாதன வெண்ணி—னீதி வழுவா நிலைமையவான் - மாதே - யறமார் பொருளின்பம் வீடென் றிவற்றின்-றிறமாமோ வெண்ணிறந்தாற் செப்பு." ஆதிமுதலாகிய சருவக்கியனென்றுமே எண்ணப்படாதது. மற்றதெல்லாம் லக்கத்திலே யடங்கினபடியினாலே என்னை யறியாதவன் அறம் பொருளின்பம் வீடென்னப்பட்டன முதலானவற்றை அறிய மாட்டானென்றவாறு.

"எழுத்தறியத் தீருமிழிதகைமை தீர்ந்தான் - மொழித்திறத்தின் முட்டறுப்பானகு - மொழித்திறத்தின் - முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து - கட்டறுத்து வீடு பெறும்." எழுத்தறிந்தாற் குற்றந்தீரும்; குற்றந் தீர்ந்தால் வசனங்களைத் திருக்கறுப்பான்; வசனங்களைத் திருத்தமாகப் பேசுகிறவன் மெய்ப்பொருளை யறிந்து பிறவித்துன்பங்களை யறுத்து மோட்சத்தை யடைவன் (எ - று). (உ)

393. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

(இ - ள்.) கண்களையுடையவர்க ளென்று சொல்லப்படுகிறது கல்வியைக் கற்றவர்களையே. கல்லாதவர்கள் கண்களையுடையவர்களல்லர், புண்ணுடையவர்க ளென்று சொல்லப்படுவர் என்றவாறு. கல்வியினாலே பரப்பிரம சுவரூபத்தையும் காலங்களையு மறியப்பட்ட ஞானக் கண்ணுடையவர்களே கண்ணுடையவர்கள். அதில்லாதவர்களே புண்ணுடையவர்களென்பதாம். (௩)

394. உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில்.

(இ - ள்) எல்லாரும் வந்து தன்னைச் சேருமாறு தயை பண்ணி அவர்கள் பிரிந்து போகிறோமென்றால் இனி அவர்களை

எங்கே காணப்போகிறோ மென்று நினைத்து விசாரப்படு கிறதே வித்துவான்கள்தொழில் என்றவாறு.

புலவர்தொழிலாவது - தாம் நல்லவழி யொழுகல் பிறருக் குறுதியான வார்த்தை சொல்லுதல். இவற்றால் கற்றாரிடத் திலே எல்லாரும் அன்புடையவராவ ரென்பதாம். (௪)

395. உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.

(இ - ள்.) வருத்தப்பட்டாகிலும் கற்கிறது நல்லது. கற் றால் அவர்கள்முன்னே கல்லாதவர்கள் நிற்கிறது எப்படிப் போலே என்றால், ஐசுவரியவான்கள்முன்னே தரித்திரவான் கள் ஏக்கற்று நின்றாற்போலே. கற்றவர்களைப் பார்த்துக் கல்லாதவர்கள் நாணித் தலையிறக்கிக் கொள்ளுவர்கள் என்ற வாறு.

ஏக்கற்று நிற்கிறது - ஆசையாலே தாழ்ந்து நிற்கிற தாம். (௫)

396. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.

(இ - ள்.) மணலிலே கிணறு எம்மாத்திரம் ஆழம் தோண்டினால் அம்மாத்திரம் தண்ணீர் சுரக்கும். அப்படிப் போல மனுஷர்களும் எம்மாத்திரம் நூலைக் கற்றார் அம்மாத் திரம் அறிவு உண்டாம் என்றவாறு.

சிறிது கற்றுவிடாமல் மேன்மேலுங் கற்க வேண்டு மென்பதாயிற்று. (௬)

397. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

(இ-ள்.) கல்வியைக் கற்றவனுக்கு யாதொரு நாடும் தன் னுடைாம்; யாதொரு ஊரும் தன்னூராம். இப்படி யாகிற தறிந் திருந்தும் சாகிற பரியந்தம் கல்லாமல் நாளை விருதாவிலே கழிக்கிறது என்ன காரியத்தினாலே என்றவாறு.

கற்றவனுக்குத் தன்னாடும் ஊரும்போல பிறநாடும் ஊரும் பலன் கொடுக்கு மென்பதாம். (௭)

**398.** ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

*(இ - ள்.) ஒருவனுக்குத் தான் ஒரு பிறப்பிலே கற்ற கல்வி ஏழேழு பிறப்பினும் சென்று உதவும் (எ - று).*

*ஏழு பிறப்பிலேயும் உதவுகிறதாவது - ஒரு சென்மத்திலே கற்ற கல்வியினாலே அறிவு பிறந்து அந்த அறிவினாலே புண்ணியத்தைப் பண்ணுவன்; அதனாலே நற்கதியுண்டாம்; அந்தக் கதியிலேயும் நல்லறிவு பிறக்கும்; மேன்மேலும் நல்ல கதியே வரும் (எ - ம்). (அ)*

**399.** தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

*(இ - ள்.) தாங்கள் இன்பத்தை அடைவதற் கேதுவாய கல்வியைக் கண்டு உலகத்தார் இன்புறுவர். அவர்கள் சந்தோஷப்படுகிறதைக் கண்டு கற்றறிந்தார் மேன்மேலுங் கற்க விரும்புவர் (எ -று).*

*தாங்கள் இன்புறுவதாவது - சொல்லினுடைய பொருளை அறிந்து சந்தோஷப்படுகிறதும், இம்மையிலே கீர்த்தியும் திரவியமும் வெகுமானமும் அடைகிறதும், மறுமையிலே மோட்சமடைகிறதுமாம். உலகத்தா ரின்புறுதலாவது-கற்றறிந்தவர்களுடனே கூடி அறியாதன வெல்லாம் அறிந்து சந்தோஷப்படுகிறது. (கூ)*

**400.** கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.

*(இ - ள்.) ஒருவனுக்கு அழிவில்லாத செல்வமாகிறது கல்வியே. இதல்லாத மணியும் பொன்னும் முதலானவெல்லாஞ் செல்வமல்ல (எ - று).*

*கல்வி அழிவு இல்லாததாவது - தாயாதிகள், கள்வர், வலியார், இராசாக்கள் இவர்களாலே பறித்துக் கொள்ளப் போகாமலாலும், தன்னை வணங்கினவர்களுக்குக் கொடுத்தபோது குறைபடாமலாலும், சீர்மையை உண்டாக்கலாலு மாம்.*

பொருள் செல்வம் அல்ல வென்றது - காத்தலாலும் இழந்து போகிறதனாலும் துக்கம் வருதலாலும், பலரையும் பகையாக்கலாலும், அந்தப் பொருளை அறிவுடையார் காமுறுமையாலுமாம். (௧0)

---

## 41. கல்லாமை

அஃதாவது, வித்தையைக் கல்லாதவனுடைய குற்றத்தைச் சொல்லுகிறது.

**401.** அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

(இ - ள்.) ஒருவன் எல்லை குறியாமல் செண்டாடினாற் போலும், நல்ல அறிவுகளைக் கொடுக்கப்பட்ட நூல்களைக் கல்லாமல் ஒருசபையிலே போய் ஒருவார்த்தையைச் சொல்ல நினைக்கிறது (எ - று).

எல்லை குறியாமல் செண்டாடுகிறது பேய்ச்செண்டாம். நூலைக் கல்லாதவன் சபையிலே சொல்லுகிற வார்த்தையும் பேய் பிதற்றுகிறாப்போலே இருக்கு மென்பதாம். (௧)

**402.** கல்லாதான் சொற்கா முறுதன் முலையிரண்டு
மில்லாதாள் பெண்காமுற் றற்று.

(இ - ள்.) கல்வியில்லாதவன் ஒருவன் சபையிலே போய் ஒன்றைச் சொல்ல நினைக்கிறது, சுவபாவமான முலையிரண்டுமில்லாதவளொருத்திபெண்மையை வேண்டினாற் போலும் (எ - று).

பெண்மையாவது, பலரும் தன்னை விரும்பும் பெண் தன்மை. (௨)

**403.** கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

(இ - ள்.) கல்வியில்லாதவரும் நல்லவர்களாய்த் தோன்றுவர், கற்றவர்களுடைய சபையிலே ஒன்றையுஞ் சொல்லாதிருந்தால் (எ - று.)

கற்றவர்கள் முன்னே கல்லாதவன் சொன்னால், அறிவில்லாததைத் தெரிந்து இகழ்வார்கள் ; ஒன்றும் சொல்லாமலிருந்தால், அவனும் அறிவுடையவன் என்று இருப்பார்கள் என்பதாம். (௩)

**404.** கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.

(இ - ள்.) கல்வியில்லாதவனுடைய உறவு நன்றாயிருந்தாலும் அறிவுடையார் அவனுடனே சினேகம்பண்ணார்கள் (எ - று).

கல்வியில்லாதவனுக்கு நுண்மையான அறிவு இல்லையான படியினாலே, அறிவுடையவர்கள் அறிவில்லாதவனுடனே சினேகம்பண்ணார் (எ - ம்). (௪)

**405.** கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

(இ - ள்.) நூல்களைக் கல்லாதவன் 'யான் அறிவுடையேன்' என்று தன்னைப் பெரியவனாக மதிக்கும் மதிப்பு, கற்றவன் அவனைக் கண்டு வார்த்தைபேசினால், கெட்டுப்போம் (எ - று).

ஒருவார்த்தை சொல்லுமளவுமே நிற்பது ; சொன்னவுடனே அறிவில்லாதவன் என்பது தெரியுமென்பதாம். (௫)

**406.** உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர்.

(இ - ள்.) கல்லாதவர்கள், மனுஷரா யிருக்கிறார்க ளென்கிற மாத்திரமே ; தமக்கும் பிறருக்கும் பயன்படாமையால், விளையாத களர்நிலத்தோடு ஒப்பர் (எ - று.)

களர்நிலத்தை ஒருவரும் பேணார்கள் ; அந்த நிலம் ஒருவருக்கும் பலன்களைக் கொடாது. அதுபோல, கல்லாதவரும் ஒருவராலேயுங் கொண்டாடப்படார் ; பிறருக்கு உபகாரங்களும் செய்யார் (எ - ம்). (௬)

**407.** நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று.

*(இ - ள்.) நுண்ணிதாய் நூல்களைக் கற்று மாட்சிமைப் பட்ட அறிவில்லாதவனுடைய அழகும் ஆபரணங்களும், மரப் பாவைக்குப் பூட்டின ஆபரணங்கள் போலேயாம் (எ - று).*

*அறிவிற்கு மாட்சிமையாவது - பொருள்களைக் காண்கிற தும், அவற்றை மறவாமையுமாம்.* (எ)

**408.** நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு.

*(இ - ள்.) நூல்களைக் கற்றாரிடத்து நின்ற வறுமையினுங் கல்லாதாரிடத்து நின்ற செல்வம் பொல்லாது (எ - று).*

*கற்றவர் வறுமையுற்றாலும் இழிவான காரியங்களைச் செய்யார்; கல்லாதவர்களுக்குச் செல்வம் வந்தால், பலருக்கும் உபத்திரவங்களைப் பண்ணி, ஆகாத காரியங்களைச் செய்து, தாங்களும் கெடுவர் (எ - ம்).* (அ)

**409.** மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு.

*(இ - ள்.) கல்வியில்லாதவர், உயர்ந்த சாதியிலே பிறந் தவரானாலும், கீழான சாதியிலே பிறந்து கல்வியைக் கற்றவ ருடனே சரியல்லர் (எ - று).*

*உடலோடழிந்துபோகிற சாதியினும், உயிரோடு நின்று நல்லறிவையும் நற்கதியையுங் கொடுக்கப்பட்ட கல்வியே பெரியது (எ - று).* (கூ)

**410.** விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.

*(இ - ள்.) மிருகசாதியும் மனுஷசாதியும் பார்த்தால் ஒன்றிற்கொன்று எத்தனை நன்மையுடையவர், அத்தனை நன்மையுண்டு, கற்றவர்களுக்குங் கல்லாதவர்களுக்கும் (எ - று).*

*மிருகசாதியைப்பார்க்கிலும் மனுஷசாதிக்கு அறிவு மிகுதி யாக உண்டாம். அதுபோல, கல்லாதவர்களைப்பார்க்கிலும் கற்றவர்களுக்கு அதிக அறிவுண்டானபடியினாலே கல்லாத வரும் கற்றவரும் ஒருசாதி அல்லர் (எ - ம்).* (க0)

# 42. கேள்வி

*அஃதாவது, கேட்கவேண்டிய சாத்திர நூல்களைக் கற்றறிந்தவர் சொல்லக் கேட்டல். கற்றவனுக்குக் கல்வியினாலான அறிவைக் கெட்டிபண்ணலும், கல்லாதவனுக்கும் கேள்வியால் அறிவுண்டாக்கலுமாம் என்பது.*

**411.** செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை.

*(இ - ள்.) ஒருவனுக்கு அதிகமான செல்வமாவது, செவியால் நூல்களைக் கேட்கிறதே. அந்தக் கேள்வி சகலமான ஐசுவரியங்களிலும் தலையாய செல்வம் (எ - று).*

*கேள்வியினாலே எல்லாப்பொருளையு மறிதலால், அதுவே பெரிய செல்வம். பொருளாலே வரப்பட்ட செல்வம் நிலையில்லாதபடியினாலேயும், துக்கங்களை உண்டாக்குகிறதினாலேயும் தலையான செல்வமன்று (எ - ம்).* *(க)*

**412.** செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.

*(இ-ள்.) செவிக்கு உணவாகிய கேள்வி யில்லாதபோழ்து வயிற்றுக்குச் [1]சாப்பிடுகிறதிலே சிறிது விட்டுவிட வேணும் (எ - று).*

*அதிகமான ருசியும் பிறிதொருபொருளைத் தனக்கு உண்டாக்குகிறது முள்ள கேள்வி யுண்டானபோழ்து, பல வஸ்துக்களையும் வெறுத்துவிடுவன். அந்தக் கேள்வி யில்லாதபோழ்து, பல பொருளையும் தனக்கு வேணு மென்று நாடித் தேடுகிற துக்கமும், அந்த வஸ்துக்களைப் புசிக்கிறதினாலே வியாதியும், காமமும் பெருத்து வாதைப்படுவன் (எ - ம்).* *(உ)*

**413.** செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி
னான்றாரோ டொப்பர் நிலத்து.

*(இ - ள்) செவியுணவாகிய கேள்வியினை நன்றாய்க் கேட்டு அறிந்தவர்கள், பூமியிடத்து மனிதரேயாயினும், அவியுணவினையுடைய தேவரோடு ஒப்பர் (எ - று).*

---

[1] *சாப்பிடுந் தொழிலிற் புகவிடவேண்டும் என்று கொள்க.*

அவியாகிய உணவு, தேவர்களுக்கு ஓமத்தீயிற் கொடுக்கப்படுவது. அறிவால் நிறைந்த பேர்கள் என்றும் துன்பமறியாதவராதலின், தேவரோடு ஒப்பார் என்று கூறினர். இப் பாட்டு, கேள்வியுடையாரது சிறப்புக் கூறுகின்றது. (௩)

**414.** கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
ளொற்கத்தி னூற்றாந் துணை.

(இ - ள்.) உறுதியாகிய நூல்களைத் தான் கல்லாத போதுங் கற்றறிந்த பெரியோர்களிடத்திலே கேட்டு அறிந்திருக்கில், அது, அவனுக்கு ஒரு தளர்ச்சி வந்தவிடத்து, ஊன்றுகோலாம் (எ - று).

தளர்ச்சி - அறிவில்லாமையாலும் தரித்திரத்தினாலும் துன்பப்பட்டு மனம் தளர்தல். அத் தளர்ச்சியைக் கேள்வி நீக்குமாகலின் 'ஊன்றுகோல்' என்றார். (௪)

**415.** இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல்.

(இ - ள்.) வழுக்குதலுடைய சேற்றுநிலத்து நடந்து போவார்க்கு ஊன்றுகோல் உதவுவதுபோல, ஒழுக்கமுடைய கற்றறிந்த பெரியோர்களால் கேட்டறிந்தவர்களுக்கு அந்தக் கேள்வி ஒருகாலத்தும் தவறு வாராமல் காக்கும் (எ - று).

கல்வி உண்டாயிருந்தும் ஒழுக்கம் இல்லாத பேர்கள் அறிவிலர்; ஆதலின், அவர்கள் சொல்லைக் கேட்கப்படாது என்பது தோன்ற 'ஒழுக்கமுடையார் வாய்ச்சொல்' என்றார். ஒழுக்கமாகிய ஆசாரமுடைய பெரியவர்கள்வாய்ச்சொல்லையே கேட்டு அறிய வேண்டும் (எ - ம்). (௫)

**416.** எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்.

(இ - ள்.) ஒருவன் நல்ல ஆசாரமுடைய பெரியோரிடங்களிலே உறுதியான நூல்களைச் சிறிது கேட்டிருந்தானாயினும், அந்தக் கொஞ்சங் கேட்ட பொருளே அவனுக்கு நிறைந்த பெருமையைத் தரும் (எ - று).

நல்ல கேள்வி கொஞ்சங் கேட்டிருந்தாலும், அது, மழைத் துளிபோல, நிறைய வந்து உதவி, சகலமும் கற்றவனென்று எண்பிக்கும் (எ - ம்). (சு)

**417.** பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா ரிழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர்.

(இ - ள்.) நூல்களின் பொருளை நன்றாக ஆராய்ந்து அறிந்த பெரியோரிடத்திற் கேட்கப்பட்ட கேள்வி சிறிதாயினும், நல்ல கேள்வித்திறமையுடையவர் தமக்குக் குற்றம் வரத் தக்க சொற்களைச் சொல்லார் (எ - று).

ஒருகாலத்தில் தாமதகுணத்தான் மயங்கினாராயினும், அவ்வாறல்லது சொல்லார் என்பதாம். இந்த நான்கு பாட்டினாலும் கேட்டார்க்கு வரும் நன்மைகள் சொல்லப்பட்டன. (எ)

**418.** கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி.

(இ - ள்.) நல்ல சாத்திரங்களாற் பெரியோரிடத்திற் கேள்வியைக் கேளாத செவி நல்ல செவியல்ல; செவிடான செவி (எ - று).

சகலமான பேச்சுவார்த்தைகளையுங் கேட்கினும், நல்ல நூல்களைக் கேட்டு அறிதற்குக் காது கருவியாதலின், கேள்வி கேட்கப்பட்ட செவியே நல்ல துவாரமுடைய செவி; அல்லாத செவிகள் துவாரமிருந்தும் கேளாத செவிகள் (எ - ம்) (அ)

**419.** நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது.

(இ - ள்.) நுண்ணியதாகிய கேள்வியுடையவரல்லாதார் சகலமான பேர்க்கும் வணக்கமான வசனங்களைச் சொல்ல மாட்டார்கள் (எ - று).

நூல்களின் பொருள்களை நன்றாக வாராய்ந்து உணர்ந்த பெரியோர்களிடத்திற் கேள்வியால், அறியாமை யென்னும் மயக்கங்கள் போய் நல்ல தெளிந்த வசனங்களே பேசுதலால்,

கேள்வியில்லாதவர் தம்மைப் புகழ்ந்துசொல்வர் என்பதாம். தம்மைப் புகழ்ந்து சொல்லவே வணக்க மில்லை யென்பதாயிற்று. (௯)

**420.** [1]செவியாற் சுவையுணரா [2]வாயுணவின் மாக்க
ளவியினும் வாழினு மென்.

(இ - ள்.) செவியாற் கேட்டுச் சகலமான ருசிகளையும் அறியாத பேர் வாயுணவாகிய ருசிபதார்த்தங்களைப் புசித்து வாழ்ந்திருந்தா லென்ன, இறந்தா லென்ன (எ - று).

செவியாற் கேட்டு அறியப்பட்ட ருசிகளாவன: சொல்லும் பொருளுமாகிய அர்த்தங்களை நன்றாகக் கேட்டு அறிதல். சொற்சுவை, குணமும் அலங்காரமுமாம். பொருட்சுவை - காமம், நகை, கருணம், வீரம், ருத்திரம், அச்சம், இழிப்பு, வியப்பு, சாந்தம் என்பன. இவைகளை அறியவே சகலமான மயக்கங்களும் நீங்கும்; மயக்கம் நீங்கிய பெரியோர்கள் இருத்தல் பூமிக்கு அழகு என்பதாம். ஆகவே, கேள்விகேட்டறியாதார்குற்றம் இந்த மூன்று பாட்டாலும் கூறப்பட்டது. (௧௦)

## 43. அறிவுடைமை

அஃதாவது, கல்விகற்றுங் கேள்விகேட்டும் அறிகிற அறிவோடு, நல்ல புத்தியாகிற அறிவுடையனாதல்.

**421.** அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு
முள்ளழிக்க லாகா வரண்.

(இ - ள்.) ஒருவருக்கு அறிவென்பது, குற்றம் வாராமற் காக்கப்பட்ட பொருளாம்; அதுவுமல்லாமல், சத்துருக்களால் அழிக்கப்படாத உள்ளரணுமாம் (எ - று)

அறிவு என்னும் பொருளிருக்கவே, ஒருகுற்றமும் வாராமற் காத்துக்கொள்ளலாம். ஆகவே, அரசராகிய பகையாளிகளால் அழிக்கப்படாத பலமு முண்டா மென்பதாம். இதனால் அறிவினது சிறப்புக் கூறப்பட்டது. (௧)

[1]செவியிற். [2]வாயுணர்வின்—பாடபேதங்கள்.

422. சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு.

*(இ - ள்.) அறிவாவது மனதைப் போனவழியே போக வொட்டாமல் தடுத்து நன்மைதீமைகளை ஆராய்ந்து பொல்லாததை நீக்கி நல்ல காரியத்திலே செலுத்துவதாம் (எ - று).*

*குதிரையை நிலமறிந்து நடப்பிக்குங் குதிரைப்பாகனைப் போல, மனத்தை வேறுக்கி நல்ல காரியத்திலே செலுத்துவது அறிவே யாதலின், உயிர்கட்கு உறுதியான பொருள் அறிவென்பதாம்.* (உ)

423. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

*(இ - ள்.) யாதொரு பொருளை யாவர் யாவர் சொல்லக் கேட்டாலும், அப்பொருளின் நல்ல பொருளைக் கைக்கொண்டு நடக்கவல்லது அறிவு (எ - று).*

*மனிதருக்குக் குணமூன்றும் மாறிவருதல் சுவபாவமான படியினலே, நல்ல பொருளைப் பொல்லாதவர்வாயால் கேட்கினும் பொல்லாத பொருளை நல்லவர் சொல்லக் கேட்கினும் உறுதியாகிய பொருளைப் பகைவர்வாயிற் கேட்கினும் கெட்ட பொருளைச் சினேகிதர்வாயிற் கேட்கினும், அதனை அவர்கள் குணதோஷங்களால் சொன்னர் என்று அறிந்து, அக்காலத் துக்கு ஏற்றபடியே நடத்தல் அறிவென்பதாம்.* (ந)

424. எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு.

*(இ - ள்.) தான் சொல்லப்படாநின்ற பொருள்கள் அரிய வாயினும் அவற்றை எளிய பொருள்போலக் கேட்போர்கள் மனங்கொள்ளச் சொல்லி, பிறர்வாயாற் கேட்கப்படாநின்ற சொற்களில் நுட்பாநுட்பந் தெரிந்து, பொருள்களைக் காண வல்லதே அறிவு (எ - று).*

*சொல்லுகிற வசனங்களைத் திருத்தமாகச் சொல்லி, கேட்கிறவர்கள் (பிறர்) வழுவச் சொன்னலும் அதனுடைய பொருள்களைக் காணவேண்டு மென்பதாம்.* (ச)

**425.** **உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்**
**கூம்பலு மில்ல தறிவு.**

*(இ - ள்.) ஒருவனுக்கு உலகத்தை நட்பாக்குவது அறிவே; அந் நட்பின்கண் முன்மலர்தலும் பின்சுருங்குதலுமின்றி ஒருநிலையேயாம், நல்லவறிவை உடைத்தானவர்கட்கு (எ - று).*

*உலகம் என்பது கற்றறிந்த பெரியோர்களை. அவர்களோடு கயப்பூப்போல வேறுபடாது கோட்டுப்பூப்போல ஒருநிலையே நட்பாயினன் எல்லா வின்பமுமெய்து மாகலின், அதனை 'அறிவு' என்றார். இதனைச் செல்வத்தில் மலர்தலும் நல்குரவிற் கூம்பலு மில்லது என்று உரைப்பாரு முளர்.* (ரு)

**426.** **எவ்வ துறைவ துலக முலகத்தோ**
**டவ்வ துறைவ தறிவு.**

*(இ - ள்.) உலகம் யாதொரு வழியாய் நடக்கிறதோ அந்தப்படியே நின்று தானும் நடத்திவருதல் அரசனுக்கு நல்ல அறிவு (எ - று).*

*'உலகத்தையெல்லாம் யான் நியமித்தலால் என்னை நியமிப்பார் இல்லை' எனக் கருதித் தான் நினைந்தபடியே நடக்கிறது பாபமும் பழியுமாகலான், அவ்வாறு ஒழுகுதல் அறிவன்று என்று விலக்கியவாறாயிற்று. இவை ஐந்து பாட்டாலும் நல்ல அறிவுடையோரிலக்கணங் கூறப்பட்டது.* (சா)

**427.** **அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா**
**ரஃதறி கல்லா தவர்.**

*(இ - ள்.) அறிவுடையராவர் தமக்கு மேல்வருங் காரியங்களை அறியவல்லவர். அறிவில்லாத பேர்களாவார் அதனை முன்னறிய மாட்டாதார் (எ - று).*

*முன்னறிதல் - முன்னே யெண்ணி யறிதல். அறிவில்லாமையாவது - வந்தபிறகு அறிதல்.* (எ)

**428.** **அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ**
**தஞ்ச லறிவார் தொழில்.**

(இ - ள்.) அஞ்சப்படுவதனை அஞ்சாதிருத்தல் பேதைமையாம்; அஞ்சத்தக்க காரியங்களுக்குப் பயந்து நடத்தல் அறிவுடையோர்தொழிலாம் (எ - று).

பாபம், பழி, கேடு முதலானவை அஞ்சப்படுவன. அஞ்சாமை - எண்ணாது செய்துநிற்றல். அஞ்சுதல் - எண்ணித் தவிர்தல். அது காரியம் அன்று என்று இகழப்படாது என்று சொல்லுவார் 'அறிவார் தொழில்' என்றார். (அ)

**429.** எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய்.

(இ - ள்.) தமக்கு வருந் துன்பங்களை முன்னே அறிந்து வாராதபடி காத்துக்கொள்ளவல்ல அறிவுடையவர்க்கு ஒரு காலத்திலும் அவர் பயப்படத்தக்க துன்பம் வருவதில்லை (எ - று).

இதனால் காக்கலாங் காலம் அறியப்பட்டது. வருங் காலமறிந்து விலக்கவே அவருக்குப் பொல்லாங்கு வாராது (எ - ம்) (௯)

**430.** அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்.

(இ - ள்.) அறிவுண்டாயிருக்கப்பட்ட பேர்களுக்கு ஒன்றுமில்லாதிருந்தாலும் அவர் அந்த வறிவாலே சகல பதார்த்தமும் உண்டாயிருப்பராவர். அறிவு இல்லாத பேர்கள் வெகு தனங்களையுண்டாயிருந்தாலும் ஒன்றும் இல்லாத பேராவர் (எ-று).

செல்வங்களெல்லாம் அறிவாற் படைக்கவும் காக்கவும் படுதலின், அஃது உடையாரை 'எல்லாமுடையா'ரென்றும், வெகு ஐசுவரியம் முன்னேதானே உண்டாயிருந்தாலும் அது கெட்டுப்போகாமல் காக்கிறதற்கும் தெய்வங்கள்ராசாக்களால் அந்த ஐசுவரியம் போன காலத்தும் அறிவாலே பயப்படாமலிருந்து 'இது முன்பு செய்த தீவினை' என நினைந்து திரும்பத் தேடிக்கொள்ளத்தக்க அறிவில்லாதபடியினாலே, 'என்னுடைய ரேனுமிலர்' என்றுங் கூறினர். ஆனபடியினாலே, சகல செனங்களுக்கும் அறிவே பிரதானம் (எ - ம்). (௧௦)

## 44. குற்றங்கடிதல்

*அஃதாவது, குற்றங்களாறனையும் தன்னிடத்து வாராமற் காத்தல் ராசாவுக்குச் சிறப்பா மென்பது.*

**431.** செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

*(இ - ள்.) மதமும் கோபமும் காமமுமாகிய குற்றங்களில்லாத அரசரது செல்வம், மெத்தவும் நல்ல பெருமையுடைய செல்வம் (எ - று).*

*மதமாகிய ஆங்காரமும், செல்வக்களிப்பாகிய அதிகசந்தோஷமும், மட்டுமித மில்லாத சினமும் காமமும் சிறியோர் செய லாகலின் இவற்றை விடவேண்டும் (எ - ம்). (க)*

**432.** இவறலு மாண்பிறந்த மானமு மாணு
வுவகையு மேத மிறைக்கு.

*(இ - ள்.) தன்னை வந்து கேட்ட பேர்களுக்குக் கொடாமல் இல்லை என்கிறதும், நல்ல காரியங்களை விட்டுவிடுகிற அபிமானமும், மட்டுமிதமில்லாத சந்தோஷமும் ஆகிய இந்த மூன்று குணமும் ராசாக்களுக்குக் குற்றம் (எ - று).*

*நல்ல காரியங்களை விட்டுவிடுகிற அபிமானமாவது-பிராமணர், அறிவாலுயர்ந்த பெரியோர், நல்ல தவசினை யுடையவர், தமக்கு மூத்தவர், தகப்பன் தாய் இவர்களை வணங்காததும், தங்களால் முடியாத காரியங்களை 'நாம் நினைத்து முடியாது விடப்போகாது' என்று கெட்டியாய் முடிப்பிக்கிறதுமாம். இந்த இரண்டு பாட்டாலும் குற்றங்கள் இவை யென்று சொல்லப்பட்டது. (உ)*

**433.** தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

*(இ - ள்.) பழியை அஞ்சி நடக்கிற பெரியோர் தம்மிடத்தில் தினையத்தனை குற்றம் வந்ததாயினும், அதனை ஒரு பனையத்தனையாக எண்ணுவர் (எ - று).*

உயர்ந்த சாதியராகிய பெரியோர் தமக்கு ஏலாமையின் ாயத்தனை என்று பொருர். அந்தக் குற்றத்தைப் பனையத் ாயாகக் கொண்டு வருந்திப் பின்னும் அது வாராமற் காத் கொள்வர் (எ - ம்). (௩)

4. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
யற்றந் தரூஉம் பகை.

(இ - ள்.) ஒருவனுக்குப் பொல்லாங்கு பண்ணுகிறது கயாகிற குற்றமே யாகலான், அந்தக் குற்றம் தன்னிடத்தில் கா லும் வாராமல் காத்திருப்பதே பயன் (எ - று).
இம்மைமறுமைக்கும் பொல்லாப்பைத் தருகிறபடியி ல, அந்தக் குற்றம் வாராமற் காக்கிறதே நல்லவர்தொழில் - ம்). (௪)

5. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

(இ - ள்.) ராசாவானவன், தனக்கொரு குற்றம் வருவதை ானே அறிந்து, அது வாராமற் பரிகரிக்கவேணும். அப்ப பரிகரியாதவன்அரசு, நெருப்பு எதிராக விருந்த வைக் ாற்போர்போல அழிந்துவிடும் (எ - று).
குற்றம் மிகச் சிறிதானாலும், வரத்தக்க காலம் அறிந்து பாமற்போனல், அதனுல் பெரிய செல்வம் அழிந்தேவிடும் - ம்). (௫)

6. தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி
னென்குற்ற மாகு மிறைக்கு.

(இ - ள.) முன்னே தனக்கு வரக்கடவ குற்றங்களைக் ாடு பரிகரித்து, பின்பு பிறருக்கு வருங் குற்றங்களைக் காண ல அரசனுக்கு, இம்மைமறுமைக்கும் குற்றமே இல்லை - று).
குற்றங்களைப் பார்த்துப் பரிகரிக்கவல்ல அரசனே முறை ட்டற்கு உரித்தானவன் (எ - ம்). (௬)

437. செயற்பால செய்யா திவறியான் செல்வ
முயற்பால தன்றிக் கெடும்.

*(இ - ள்.) தன்னால் தேடப்பட்ட பொருள்களால் தனக்கு இம்மைமறுமைக்குச் செய்துகொள்ளவேண்டுங் காரியங்களைச் செய்துகொள்ளாது பணத்தைச் செலவுபண்ணாமல் கெட்டி-யாய்த் தேடவேணு மென்று வைத்தவன்செல்வம் வெகுசீக்கிரத்திலே கெட்டுப்போம் (எ - று).*

*செய்துகொள்ளவேண்டுங் காரியங்களாவன : தானம், தருமம், பரோபகாரம், தனக்கு உணவு முதலியன செய்துகொள்ளல், திரவியத்தை நாள்தோறும் வளரப்பண்ணுதல். இப்படிச் செய்துகொண்ட ராசாவுக்கு ஒருகாலமும் குற்றம் வாராது (எ - ம்). (எ)*

438. பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு
மெண்ணப் படுவதொன் றன்று.

*(இ - ள்.) பொருள்களைச் செலவுபண்ணுமிடத்து ஆசையென்னப்படாநின்ற லோபம் குற்றங்களெல்லாவற்றிலும் பெரிய குற்றம் (எ - று).*

*அந்த லோப மென்பது நல்ல குணங்களையெல்லாம் கீழ்ப்படுத்தி, நல்லவன் என்கிற பேரையும் கெடுத்துவிடும். ஆகவே, சற்றும் லோபம் ஆகாது (எ - ம்). (அ)*

439. காதல காத லறியாமை யுய்க்கிற்பி
னேதில வேதிலார் நூல்.

*(இ - ள்.) தன்னால் விரும்பப்பட்ட ஸ்திரீ முதலான பொருள்களை அவர்கள் அவ்வாசை அறியாமல் அனுபவிக்க வல்லனாயின், பகையாளி தன்னை வஞ்சிக்க நினைக்கிற நினைவு பழுதாம் (எ - று).*

*தன்னால் ஆசைப்படப்பட்ட பொருள்களைப் பகைவர் அறிந்தாராகில், அவைமூலமாக வஞ்சித்து அழிப்பர் (எ - ம்). ஸ்திரீகளாலுந் தன் ஆசை அறியாமல் அனுபவிக்கவேண்டும் (எ - ம்). ராசாக்கள் முதலான பேர்களுக்குக் காம வெகுளி*

உவகை யென்பன நன்ருக விடப்படுங் குற்றமல்லாமையால், பெரும்பாலும் இவைகளைப் பாராட்டாமை கூறினர். (௯)

**440.** வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

(இ - ள்.) தான் சகல குணங்களாலும் நிறைந்திருந்த பெரியோனேயாயினும், அந்த மதத்தால் தன்னை நன்கு மதியாது ஒழிக; தனக்கு நல்லதல்லாத காரியத்தை மனத்திலும் நினையாமலிருக்க (எ - று).

தன்னைத் தான் பெருமையாய் எண்ணுங்காலத்துத் தனக்கு வரப்பட்ட குற்றங்களை நினைந்து விலக்கக் கூடாதாம்; ஆகவே, தன்னைத்தான் புகழ்ந்து கொள்ளல் ஆகாது. (௧0)

---

## 45. பெரியாரைத் துணைக்கோடல்

அஃதாவது-காமக் குரோத லோப மோக மத மாத்சரிய மென்னப்பட்ட குற்றங்களை நீக்கி அரசாளுகிற ராசா, பொல்லாத நெறிகளை விலக்கி நல்ல நெறிகளிலே செலுத்தப்பட்ட அறிவுடைய பெரியோரைத் தனக்குத் துணையாகக்கொள்ளவேணும் (எ - ம்).

**441.** அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்.

(இ - ள்.) தருமத்தினுடைய வழியை நன்ருக வறிந்து, தன்னிலும் பெரிய அறிவுடைய பெரியோர்களது கேள்விகளை நன்ருகக் கேட்டறிந்துகொள்ளுதலே அரசற்குச் சிறப்பு (எ-று).

அறிவுடையார் - நீதியையும் உலகியலையும் அறிந்த பெரியோர். திறனறிதலாவது-பெரியோர்களை அறிந்து கொண்டாடுதல், வணங்குதல், தனதானியங்கள் முதலானவைகளினலே சகாயம் பண்ணுதல் முதலியன. (௧)

**442.** உற்றநோய் நீக்கி யுறுஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

(இ - ள்.) தெய்வத்தாலாவது, மனிதராலாவது தனக்கு வந்த பொல்லாங்குகளை நீக்கும்உபாயம் அறிந்து நீக்கி, பின் அப்படி வாராமல் முன்னே அறிந்து காக்கவல்ல அறிவுடைய பெரியோரை, அவர்கள்மனது சந்தோஷமாகும்படி செய்து துணையாகக் கொள்க (எ - று).

தெய்வத்தான் வருந் துன்பங்களாவன - மழையில்லாமற் போகை, மிகுத்துப் பெய்தல், காற்று, தீ, பிணி முதலானவற்றால் வருங் கேடுகள். இவை வந்த காலத்து, தெய்வங்களுக்குப் பிரார்த்தனை செய்து ஓமசாந்திபோசனங்களால் அவை நீக்கப்படும். மனிதரால் வருந்துன்பங்களாவன - பகையாளிகள், திருடர் உறவின்முறையார் இவர்களால் வருவன. இவை சாம, பேததானதண்டங்களாகிய நாலுவகை யுபாயங்களினால் விலக்கப்படும். வருவதன்முன்னே காத்தலாவது - தெய்வங்களால் வருமவற்றை உற்பாதங்களால் அறிந்து சாந்திகளாற் காத்தலும், மனிதரால் வரப்போகிற பகையை அவரவர் மனங்களையறிந்து சினேகமாக்கிக் காத்தலுமாம். இப்படிப்பட்ட குற்றங்களை வாராமற் காக்கவும் வந்தால் அவற்றைப் பரிகரிக்கவும் வல்ல மந்திரி புரோகிதர் முதலான அறிவால் மிகுந்த பெரியோரைத் துணையாக்கிக்கொள்ளவேண்டு மென்பதும், கொள்ளும் உபாயமும் கூறப்பட்டன. (உ)

**443.** அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

(இ - ள்.) முன்னே சொன்ன மந்திரி முதலான பெரியோர்களை அவர்கள்மனது சந்தோஷமாம்படி செய்து தமக்கு மெத்த சினேகிதராகப் பண்ணிக்கொள்ளுகிறது, ராசா முதலான பேர்களுக்கு அருமையான பொருள்கள்எல்லாவற்றிலும் மெத்த அருமை (எ - று).

உலகத்திலே அரிய பொருள்கள்எல்லாம் ராசாக்கள் பெறவேண்டுமாதலின், இப்படிப்பட்ட பேர்களை சினேகிதராக்கிக் கொள்ளவே, சகலமும் வரும் (எ - ம்). (ங)

**444.** தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

(இ - ள்.) அறிவு முதலான நல்ல காரியங்களிலே தன்னி-லும் பெரியவர்களைத் தமக்கு நல்ல உறவாகப் பண்ணிக்கொள்ளுதலும் அந்தப் பெரியவர்சொற்படி கேட்டுநடத்தலும் ராசாக்களுக்குச் சகல பலத்திலும் மிகுந்தபலம் (எ - று).

திரவியம், சேனை, நல்ல பத்திரமான இடம் இவைகளைப்-பார்க்கத், தனக்குவந்த குற்றங்கள் எல்லாவற்றையும் தீர்க்கும் பெரியவர்களுடைய உறவே மெத்த நல்லது (எ - ம்). (ச)

**445.** சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

(இ - ள்.) ராசா மந்திரிகளைத் தன் கண் போலப் பார்த்து நடத்திவருதல் முறைமை. அப்படிப்பட்ட மந்திரிகளை ஆராய்ந்து தனக்குத் துணையாகக் கொள்ளுக (எ - று).

ராசா தானே சகலமான காரியங்களையும் அறிந்து நடப்பிக்க வல்லவனாகிலும், மந்திரிகளையல்லாமல் நடவாது என்பது கொண்டு, கண்போலப் பார்க்கவேண்டும் என்றார். (ரு)

**446.** தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.

(இ - ள்.) முன்சொல்லப்பட்ட பேர்களைத் தனக்கு உறவாகிய இனங்களாகப் பண்ணி, தானும் மேல்வருங் காரியங்களை நன்றாக விசாரித்து அறிந்து நடக்கவல்ல ராசாவைச் சத்துருக்களாலே ஒருகாலத்திலும் ஒன்றும் செய்யக்கூடாது (எ - று.)

தக்கார் - அறிவு ஆசாரம் முதலானவை தப்பாமல் நடந்து தருமசாத்திரப்படி அறிந்து நடப்பிக்கவல்ல பேர்கள். செற்றாராகிய சத்துருக்களாவார் - வஞ்சகமுடையவர், சினேகிதரைப் பிரிக்க வல்லவர், பகையாளிஅல்லாத பேரைப் பகையாக்குகிற பேர்கள். இப்படிப்பட்ட தொழில்களாலும் தங்கள் பலத்தாலும் பலபல விதங்கள் சத்துருக்களால் செய்யப்பட்டதானாலும், அவைகளைத் தானும் நன்றாக ஆராய்ந்து அறிந்து

பெரியோர்கள் சொல்வழியும் கேட்டு நடக்கவல்லவனிடத்தில் ஒன்றும் வாராது (எ - ம்). (சு)

**447.** இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

(இ - ள்.) தீயனவாகிய பாவங்களும் நீதியல்லனவும் வாராதபடி சொல்லி நடப்பிக்கவல்ல பெரியோர்களைத் தனக்குச் சிறந்த தோழராக உடைய ராசாவைக் கெடுக்கப்பட்ட பேர்கள் உலகத்து யாவரும் இல்லை (எ - று). (எ)

**448.** இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

(இ - ள்.) தனக்கு நீதியறிந்து சொல்லப்பட்ட மந்திரி புரோகிதர் முதலான பெரியோர்களைத் தனக்குத் துணையாகக் கொள்ளாமையின், காவலில்லாத ராசாவானவனைக் கெடுப்பவர் ஒருவரும் இல்லாவிட்டாலும், தானே கெட்டுப்போவன் (எ - று).

தானே கெடுதலாவது - பாகனில்லாத யானைபோல, நெறியல்லாத நெறிச் சென்று கெடும் (எ - ம்). (அ)

**449.** முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை.

(இ - ள்.) முதற்பொருளாகிய கையிருப்பில்லாத பேருக்கு அதனாற் படைக்கப்பட்ட லாபம் இல்லாததுபோல, தம்மைத் தாங்குந் துணைகள் இல்லாதபோது ராசாக்களுக்கு ஒரு பொருளும் நிலைநில்லாது (எ - று).

முதற்பொருளாகிய பணங்காசு கையில் இருந்தே லாபம் பெறவேண்டுமாறு போல, தம்மைத் தாங்குபவராகிய பெரியோர்கள் இருந்தே அரசாளுகிறது நிலைபெறவேண்டும் (எ-ம்).

நிலைபெறலாவது-அரசபாரத்தோடு சலியாது நிற்றல். (கூ)

**450.** பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

(இ - ள்.) தான் தனியனாய்ப் பலபேர்களுடனும் பகை-யாய் இருக்கிறதிலும், பத்தத்தனை பொல்லாதாம், பெரியோரோடு நட்புக்கொள்ளாதொழிதல் (எ - று).

பலபேர்கள் பகையாயிருந்தாலும் தான் பலவானானால் எப்படியாகிலும் பிழைத்தல் கூடும்; நல்லாராகிய பெரியோர்-கள் சினேகத்தை விட்டுவிட்டால், எந்த விதத்திலும் பிழைத்-தல் கூடாது. ஆனபடியினாலே, அந்தப் பகையைப்பார்க்க இது பத்தத்தனை பொல்லாது என்றார். ஆகவே, பெரியோராகிய பேர்களுடனே சினேகம்பண்ணுகிறதே ஒருகாலத்திலும் அழியாத பொருள் (எ - ம்). (கம)

---

## 46. சிற்றினஞ்சேராமை

அஃதாவது, சிறியவினங்களைப் பொருந்தாமை. சிறியவினமாவது நல்ல பொருள்களினுடைய நன்மையும் பொல்லாத பொருள்களுடைய பொல்லாங்குகளும் தெரியாமல் ஒன்றுமில்லை என்பவரும், அடங்காத காளைகளும், எக்காலமும் பொல்லாத தொழில்களைச் செய்யும் தூர்த்தரும், கூத்தாடி முதலாகிய கூட்டங்களுமாம். இப்படிப்பட்ட பேர்களுடன் சினேகம் பண்ணினால், எந்தவிதத்திலும் அறிவைக் கெடுத்து இம்மையிலே பொல்லாதவன் என்று எண்பித்து, மறுமையிலும் பொல்லாத கதியிலே விடும்; ஆதலால், இப்படிப்பட்ட பேர்களுடைய உறவு ஒருகாலத்திலும் ஆகாது என்பதாம்.

**451.** சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

(இ - ள்.) பெரியோர்களுடைய வியல்பு சிறியவினமாகிய ஈனரை அஞ்சவேண்டும். அந்தச் சிறியவினங்களைச் சேரவே அப்பொழுதே அவர்களையே சுற்றமாக்கிப் பெரியோர்கள் சேரார்கள் (எ - று).

சிறியவினங்களைச் சேரவே நல்லறிவு கெட்டுச் சகல துன்-பங்களும் வந்தடையும். ஆகவே, பெரியோர்சொல் இகழ்ச்சியாய் நிற்கும். இதனால், சிறியவினம் பெரியோர்க்கு ஆகாது என்று கூறப்பட்டது. (க)

452. நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.

(இ - ள்.) தண்ணீராவது எந்த நிலத்தைச் சேருகிறதோ அந்தப்படியாய் நின்று தன் குணம் கெட்டுப்போவதுபோல, மனிதர்க்கும் தாம் சேர்ந்த இனங்களாலே அறிவு திரிந்து அந்த இனங்களினுடைய அறிவே வர்த்திக்கும் (எ - று).

தண்ணீர், நல்ல நிலத்தைச் சேரவே, நல்லருசியாயிருக்கும். மனிதரும் நல்ல அறிவுடையாரைச் சேரவே, நல்ல அறிவுண்டாம். பொல்லாத இனங்களை ஒருகாலத்திலும் அறிவுடைய பேர்கள் சேரலாகாது என்பது கூறப்பட்டது. (உ)

453. மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா
மின்னா னெனப்படுஞ் சொல்.

(இ - ள்.) உலகத்து மனிதர்க்குப் பொதுவான வறிவு தம் மனங் காரணமாக உண்டாம். சகல சனங்களாலும் நல்லவன் பொல்லாதவன் என்கிற பேர் தங்களைச் சேர்ந்த இனங் காரணமாக உண்டாம் (எ - று).

சுவபாவமான அறிவுடையவன் நல்லினங்களைச் சேரின் அச் சேர்க்கை நல்ல அறிவுகொடுத்து, இம்மைமறுமைக்கும் புகழும் புண்ணியமும் உண்டாகக்கும். தீய இனங்களைச் சேரின், நாள்தோறும் தன்னுடைய நல்லறிவு கெட்டுப் பொல்லாத குணமாய்க் கெடுத்துவிடும். ஆகவே, ஒருகாலத்திலும் சிற்றினங்களைச் சேரலாகாது (எ - ம்). (ந)

454. மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
கினத்துள தாகு மறிவு.

(இ - ள்.) நல்ல விசேஷமாகிய அறிவுடன் கூடியிருந்த பேர்களிடத்தில் சிற்றினமாகிய தூர்த்தர் கூடவே, இவருடைய நல்ல அறிவும் அந்தவினங்கள்அறிவுடனே கூடிவிடும் (எ - று).

தன்னிடத்திலே எத்தனை நல்லறிவிருந்தாலும் தீயினங்களைச் சேரவே, நாள்தோறும் அந்த நல்லறிவை அவர்கள் கெடுப்பர் (எ - ம்). இனம் நல்லதானால் எல்லா நற்குணங்களும் உண்டாம் என்பது கூறப்பட்டது. (ச)

455. மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு
மினந்தூய்மை தூவா வரும்.

(இ - ள்.) அந்த நல்ல வறிவு பயன்படுதற்கு இடமாகிய மனது சுத்தமாகிறதும், ஒருவன் செய்யுங் காரியம் நல்லதாகிறதும் இந்த இரண்டு காரியமும் நல்ல இனங்களைச் சேர்ந்தாலல்ல தில்லை (எ - று).

மனம் தூயனாதலாவது - அறியாமையாகிற பொல்லாங்கு நீங்கி நல்ல அறிவுகளை அறிகிறது. வினை தூயனாதலாவது - தான் பேசுகிற பேச்சும் செய்யப்பட்ட காரியங்களும் அறிந்து செய்தல். இனந்தூயனாவது - வெகு சினேகிதர் போலே இருந்து நல்ல காரியங்களைச் செய்விப்பார் போலவே காலம் பார்த்துப் பொல்லாத காரியங்களிலே சேர்த்துவிடுகிற தீயினங்களை விட்டு, நல்லினங்களையே சேரவேண்டும் என்பது. (ரு)

456. மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

(இ - ள்.) மனது சுத்தமாயிருந்த பேர்களுக்கல்லது நல்ல உத்தம குணமான புத்திரரில்லை ; இனந் தூயராயினோர்க்கு நன்றாய் முடியாத காரியமு மில்லை (எ - று).

ஆகவே, நல்லினங்களாற் சேர்ந்திருந்தவனுக்கு நல்ல புத்திரரும் நல்ல காரியங்களும் உண்டாயிருக்கும் ; தீயினங்களைச் சேரவே இவைகள் ஒன்றுமில்லை (எ - ம்). (சு)

457. மனநல மன்னுயிர்க் காக்க மினநல
மெல்லாப் புகழுந் தரும்.

(இ - ள்.) எக்காலமும் நிலைபேறுடைய உயிர்கட்கு மனத்தின் நன்மை செல்வத்தைக் கொடுக்கும் ; இனத்தின் நன்மை அந்தச் செல்வத்துடனே எல்லாப் புகழையும் கொடுக்கும் (எ - று).

மனது நன்றாதல்தானே சகலதர்மமு மாகலின், அதனை 'ஆக்கம் தரும்' என்றும், புகழையே கொடுத்தற்குரிய நல்லோர்தாமே எக்காலமு முறவாகலின் 'எல்லாப் புகழும் தரும்'

என்றுங் கூறினர். ஆகவே, மனநன்மையின் இனநன்மையே பெறவேண்டும் (எ - ம்). (எ)

**458.** மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து.

(இ - ள்.) தாம் முன் செய்யப்பட்ட நல்வினையாலே நல்ல மனத்தை உடையவராயினும், அதற்குத் துணையாக இனநன்மையைத் தேடுவதே கருமம் (எ - று).

தான் முன்பு செய்த நல்வினை யுள்ள நாள்தோறும் அந்த நல்வினையைப் போகவொட்டாமல் வளரவைத்துக்கொண்டு வருகிறபடியினாலே, நல்லினங்களைச் சேரவே பெருமை யுண்டாம்; தீயினங்களைச் சேரவே முன்பு செய்த புண்ணியத்தால் வந்த ஐசுவரிய முதலானவைகளையும் அவர்கள் கெடுத்து விடுவர் (எ - ம்). (அ)

**459.** மனநலத்தி னாகு மறுமைமற் றஃது
மினநலத்தி னேமாப் புடைத்து.

(இ - ள்.) ஒருவனுக்கு மனது நன்மையாயிருக்கவே மறுமைக்கு வேண்டின செல்வமெல்லாம் உண்டாம்; அச் செல்வ முண்டாகிறதற்குப் பலமாவது, நல்லறிவுடைய பெரியோர்கள் சொல்லப்பட்ட வழியைக் கேட்டு நடக்க வேணும் (எ - று).

ஒருவழி தாமதகுணத்தாலே மனது கெட்டுப்போனாலும், அது போனபடியே விடாது, நல்ல தருமங்களைச் சொல்லித் திருப்பி, நல்ல நிலையிலே நிறுத்திவிடுவர் நல்லினமாகிய பெரியோர்கள் (எ - ம்). (கூ)

**460.** நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில்.

(இ - ள்.) ஒருவனுக்கு நல்லினஞ்சேர்தலை யொத்த துணையு மில்லை; தீயினச்சேர்தலை யொத்த பகையு மில்லை (எ - று).

நல்லினம் அறியாமையை நீக்கி இம்மைமறுமைக்குந் துக்கம் வாராதபடி காத்தலின் அதனைத் 'துணை' என்றும்,

தீயினம் அறிவைக் கெடுத்துத் துக்கமனுபவிக்கப் பண்ணுகிற படியினாலே அதனைப் 'பகை' என்றுங் கூறினார். ஆகவே, சினேகிதர்களிடத்திலே பொல்லாத நடக்கையைக் கண்டவுடனே அவர்சினேகிதத்தை விட்டு நல்ல நடக்கையிலேயிருக்கிற பெரியோர்களின் சினேகங்களையே பெறவேண்டும் (எ - ம்). (௧௦)

---

## 47. தெரிந்துசெயல்வகை

அஃதாவது, ராசாவானவன் தான் செய்யுங் காரியங்களை நன்றாக ஆராய்ந்து அறிந்து பெரியோர்களையும் துணையாக வைத்துக்கொண்டு செய்யுந் திறம். அப்படிச் செய்தால் குறையில்லாமல் முடியும் (எ - ம்).

**461.** அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு
மூதியமுஞ் சூழ்ந்து செயல்.

(இ - ள்.) காரியங்கள் செய்யுமிடத்து, அந்தக் காரியங்களால் அழிந்துபோகிறதும் போனபிற்பாடு ஆகிறதுமாய் நின்று பிற்பொழுதுதரும் பலாபலத்தையும் நன்றாய் ஆராய்ந்து, செய்வதாயிற் செய்க (எ - று).

தான் செய்யுங் காரியங்களில் ஆகிறதும் ஆகாததும் நன்றாக விசாரித்து, லாபமில்லாததாயினும் செய்யவேண்டும்; செய்யின், இரண்டுகாலத்தும் பயனுடைமை தெரிந்து செய்க என்பதாம். (௧)

**462.** தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்.

(இ - ள்) நன்றாகச் செய்காரியம் தவிர, காரியம் அறிந்து செய்விக்கத்தக்க வினத்துடனே செய்யத்தகும் வினையை ஆராய்ந்து, பின் தானும் அக் காரியத்தை நன்றாக வாராய்ந்து அறிந்து செய்துமுடிக்கவல்ல ராசாக்களுக்கு, ஆகாத காரியம் ஒன்றுமில்லை (எ - று).

வினையாவது - மேல்வருவதாகிய நன்மைகளை அறிந்து செய்யப்படுந் தொழில்கள். அப்படி அறிந்து செய்கிற

காரியங்கள் தவறாமல் முடிதலின், அரிய பொருள்கள் எல்லாம் எளிதாக முடியும் (எ - ம்). (உ)

**463.** ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
ஊக்கா ரறிவுடை யார்.

(இ - ள்.) தான் செய்யுங் காரியங்களிலே வரும் லாபத்தினைப் பார்த்து, லாபம் வருகிற தென்று, முன் தன்னிடத்திலிருந்த முதலாகிய திரவியங்களை இழந்துவிடுகிற காரியங்களைச் செய்யார் அறிவுடையார் (எ - று).

திரவியவாஞ்சையாலே வெகு லாபம் வருகிற தென்று கையிருப்புமுத லில்லாமல் இருந்த பணங்காசுகளெல்லாம் இழந்துவிடல், காலங்களை அறியாமல் பிறருடைய மண்ணைக் கொள்வான் சென்று தம் மண்ணு மிழத்தல் போலவாம். ஆகவே, முன்செய்த தீவினையா லப்படி புத்திவிளைந்துவிடினும், அறிந்து செய்கிற பேர்களுக்கு அதுவும் விலக்கலாம் என்றது பெற்றும். (௩)

**464.** தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னு
மேதப்பா டஞ்சு பவர்.

(இ - ள்.) நல்ல இனங்களுடனும் தனித்தும் ஆராய்ந்தும் துணிதலில்லாத காரியங்களைச் செய்யார்; தமக்கு இளிவரவாகிய குற்றம் வரப்போகிற தென்றஞ்சி நடப்பவர் (எ - று).

செய்யத் தொடங்கவே நடுவே குற்றம் வரு மென்று யோசனையில்லாத காரியங்களைச் செய்யார் (எ - ம்). (ச)

**465.** வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு.

(இ - ள்.) ராசாக்கள் முதலான பேர்கள் பகைவர்மேல் செல்லுங்காலத்து 'இந்த வேளை பகையாளிகள்மேற் போனால் இப்படியா' மென்கிறதை நன்றாக ஆராய்ந்தறியாது, சிறிது ஆலோசனையானவுடனே போனால் அது அவர்களை வளருநிலத்திலே நிலைபெறச்செய்வதொரு நெறியாம் (எ - று).

வளருநில மென்பது, நாலுதிசையும் ஆணையையுடைய நிலம். நன்றாக ஆராய்ந்தறிதலாவது வலி, காலம், இடம்,

என்னு மிவைகளினுலே தனக்கும் பகைவர்க்கு முளவாய நிலைமைகளும், போர் தொடங்கு மாறும், அதற்கு வரு மிடையூறுகளும், அவற்றை நீக்கு மாறும், வெல்லு மாறும், அதனுல் பெறப்பட்ட பயனும் முதலாயின. இவைகளிலே சிறிது உபாயமில்லாமல் பகையாளியை வெல்லுதல் அவர்களுக்கு நல்ல அரணுன நிலத்தைக் கொடுத்தாற் போல (எ - ம்). ஆகவே, எதிராளிகள்பலங்களை நன்ருக வறிந்து, வெல்லுங் காலம் பார்த்து வெல்லவேணும் (எ - ம்). (ரு)

**466.** செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

(இ - ள்.) ராசாவானவன் தான் செய்யத்தகுவன வல்லாத காரியங்களைச் செய்யவே கெடும்; தன்னுல் செய்யத்தக்க காரியங்களைச் செய்யாதிருக்கினுங் கெடும் (எ - று).

செய்யத்தக்கவல்ல வாவன-பெரிய முயற்சியினவும், செய்தாற் பயனில்லனவும், அது சிறிதாயினவும், ஐயமாயினவும், பின் துயர்விளைப்பனவு மென இவை. செய்யத்தக்கவாவன - அவற்றின் மறுதலையாயின. இச் செய்யாமைகளால் அறிவு, ஆண்மை, பெருமை யென்னும் மூன்று ஆற்றலுள் பொருள் படையென விருவகைத்தாய பெருமை சுருங்கிப் பகைவர்க்கு எளியனுமாதலான், இரண்டுங் கேட்டிற் கேதுவாயின. ஆகவே, செய்யத்தக்க காரியங்களை யறிந்து செய்து, செய்யத்தகாத காரியங்களைத் தவிரவேணும் (எ - ம்). (சு)

**467.** எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெண்ணுவ மென்ப திழுக்கு.

(இ - ள்.) செய்யத்தக்க காரியங்களை முடிவுற வுபாயங்களை நன்ருக வெண்ணிச் செய்க; உபாயங்களை யறியாமல் செய்து 'பின் உபாயந்தேடிக்கொள்வோ' மென்பது குற்றமாம் (எ - று.)

உபாயங்களாவன - பொருளைக் கொடுத்தல், நல்ல சொற்களைச் சொல்லுதல், விசேஷங்களால் கண்டித்து வேறுபடுத்தல், தண்டித்தல் என்பவை. இவையே தான, சாம, பேத, தண்ட மென்பன. இந்த வுபாயங்களா லாராய்ந்து செய்யவேணும் (எ - ம்). (எ)

468. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

*(இ - ள்.) முடியு முபாயத்தை யறியாது கருமங்களைச் செய்ய நினைக்கிறதும் செய்கிறதும், துணைவராகிய பந்துஜனங் களனேகம் பேர் நின்று புரை வாராமற் காத்தாலும், புரை வந்து முடியாது கெட்டுப்போம் (எ - று.)*

*முடியுமுபாயத்தை யறிகிறதாவது - பொருளாசையுடைய வனுக்குப் பொருள்களைக் கொடுத்தும்; செப்ப முடையவனென புத்தியாளன், பூதநயை யுள்ளவன், பிற ராசாவோடு போர் செய்து நொந்தவனென இவர்களுக்குப் பொருளுடன் நல்ல வச னங்களைச் சொல்லியும்; துணைப்படையான் நல்ல சேவகருடை யவன் எதிராளிகளை யென்னத்தனை யில்லை யென்று இகழ் கிறவன் இவர்களுக்குக் கோபமாய்க் கண்டிக்கிற பேதவசனஞ் சொல்லியும் ; இந்த மூன்று உபாயங்களிலு மாகாத கீழ்மக்க ளானவர்களைத் தண்டித்தும் வெல்லும் ஆற்றுன் முயறல். இந்த வுபாயத்தினுல் வெல்லமாட்டாத அரசன், எத்தனை சேனையுண்டா யிருந்தாலும், பகையாளிகளை வெல்லமாட்டான் (எ - ம்.)* (அ)

469. நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

*(இ - ள்.) பகையாளிகளிடத்திற் செல்லுமிடத்து நன்றான வுபாயங்களா லறிந்து செல்லினும் குற்ற முண்டாம், அவரவர் குணங்களை ஆராய்ந்தறிந்து அந்தக் குணங்களுக்குத் தக்க காரி யங்களைச் செய்யாவிடின் (எ - று).*

*நன்றான உபாயமாவது - கொடுத்தலும், நல்ல விசேஷம் சொல்லுதலுமாம். இது அவர்களவர்கள்குணங்களை யறிந்து செய்யவேணும் (எ - ம்.)* (கூ)

470. எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு.

*(இ - ள்.) ராசாக்கள் செய்யுங் கருமம் முடிகிறபோது தம் நிலையோடு பொருந்தாத உபாயங்களைச் செய்வராயின், உல கம் தம்மை யிகழாநிற்கும் ; ஆதலான், அப்படி உலகத்தார் இகழாத உபாயங்களை யறிந்து செய்க (எ - று).*

தம் நிலேயோடு பொருந்தாத வுபாயங்களைச் செய்த லாவது-தாம் மெத்த வல்லவரா யிருந்தும் தமக்குச் சமானமல் லாத பேருக்குக் கொடுத்தல் முதலிய மூன்றனையும் செய் தலும், தாம் மெத்த ஏழையா யிருந்தும் தம்மிலும் பலத்த பேருக்கு ஒறுத்தலைச் செய்கிறதுமாம். இந்த இரண்டும் அறிவிலார் செய்வனவாதலின், 'உலகங் கொள்ளார்' றென்றார். சாம, பேத, தான, தண்ட மென்னப்பட்ட நாலுவகையும் அவ ரவர்களை யறிந்து செய்யவேணும் (எ - ம்). (௧0)

---

## 48. வலியறிதல்

அஃதாவது - இப்படிச் சொல்லப்பட்ட உபாயங் களாலே செய்கிற ராசா நாலுவகை வலியையும் அளந்து அறிதல் (எ - று).

**471.** வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல்.

(இ - ள்.) தான் செய்யக் கருதிய வினைவலியையும், அதனைச் செய்து முடிக்குந் தன் வலியையும், அதனை விலக்கு கிற மாற்றான்வலியையும், இருவர்க்குந் துணையானவர்வலியை யுஞ் சீர்தூக்கி, தன்வலி மிகுதியாயின் அவ் வினையைச் செய்க (எ - று).

வலியென்பது பலம். மாற்றான்வலி யதிகமானாற் செய்ய லாகாது (எ - ம்). (௧)

**472.** ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.

(இ - ள்.) தமக்கான காரியமும் அந்தக் காரியத்துக்கு வேண்டிய வலிமைகளையும் அறிந்து, எப்பொழுதும் மனத்தை அக் காரியத்தின்மேல் வைத்துச் செய்ய வல்லவர்களுக்கு முடியாத காரியமில்லை (எ - று).

வினைவலியும் மனவலியும் அதிகமானால், எல்லாக் காரிய மும் முடியும் (எ - ம்). (௨)

473. உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர்.

(இ - ள்.) தங்களுடைய பலத்தை யறியாமல் மனவு
சாகத்தினாலே தம்மிலும் வலியாருடனே பகையைச் செய்
கொண்டு அவர்கள்வலிமையினாலே கெட்டுப்போனபே
லோகத்திலே அனேகம்பேர் உண்டு (எ - று).

ஆகவே, தம் வலியை யறிந்தே தொடங்குக (எ-ம்). (ந

474. அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

(இ - ள்.) அயலிலே யிருக்கிற ராசாக்களுடனே சினேக
பண்ணிக்கொண்டு மிராது, தன்னுடைய வலிமையும் அறிந்
செய்யாமற் றன்னைத்தானே பெரியவனாக நினைத்துக்கொண்
பகைபண்ணிக்கொண்டவன் கொப்பெனக் கெட்டுப்போவா
(எ - று).

அயல் ராசாக்களுடனே சினேகமாயிருக்கிறது பகைய
யிருக்கிறது என்னும் இரண்டனுள், தான் பலவானானால் ப
யும் மெல்லியனானால் நட்பும் செய்யவேணும் (எ - ம்). (ச

475. பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

(இ - ள்.) மயிலிறகை யேற்றின வண்டியும் இரு
ஓடிஞ்சுபோம், அந்த மயிலிறகையும் வண்டி பொறுக்கும
டல்லாமல் அதிகமாக ஏற்றினால் (எ - ம்).

எளியவர்க ளென்று பலரோடு பகைபண்ணிக்கொண்
வன், அந்த எளியவர்கள்பலருங் கூடி வலியராய், அவர்க
அழிக்கக் கெடுவன் (எ - ம்). (ரு

476. நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி
னுயிர்க்கிறுதி யாகி விடும்.

(இ - ள்.) ஒரு மரத்தினுடைய நுனிக்கொம்பிலே ஏறின
வர் அதுமட்டிலே நில்லாமல் தம்முடைய நினைவினாலே
பின்னையு முயர வேற நினைத்தால், அந்த நினைவு அவர் உயிரு
கிறுதியாகிப் பிராணஹானியைக் கொடுக்கும் (எ - று).

பகைவர்மேற் செல்வான், தன்னளவு சென்று நில்லாது, மனவுற்சாகத்தினாலே பின்னையும் போவானாகில், அந்த நினைவு அந்தப் பகையை முடிக்கமாட்டாமல் தன் பிராணனைப் போக்கும் (எ - ம்). (சு)

**477.** ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

(இ - ள்.) பொருளைக் கொடுக்கிறவன் தனக்குள்ள பொருளின் அளவறிந்து அதற்கேற்கக் கொடுக்க ; அப்படிக் கொடுக்கிறது பொருளை ரட்சிக்கிற வழியாம் (எ - று).

பொருளுக்கேற்கக் கொடுக்கிறதாவது - தனக்குள்ள பொருளை நாலுபங்காக்கி, இரண்டுபங்கு தன் செலவிற்கும் ஒருபங்கு மேல்வருகிற இடையூறு நீக்குதற்கும் வைத்து, நின்ற ஒருபங்கைக் கொடுக்கவேணும் (எ - ம்). (எ)

**478.** ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை.

(இ - ள்.) அரசனுக்குப் பொருள் வருகின்ற வழி கொஞ்சமானாலும் கேடில்லை, பொருள் செலவழிகிற வழி வருகிறதிலும் அதிகமாகாம லிருந்தால் (எ - று).

ஆதாயத்திலும் செலவு அதிகமானால் கேடு வரும் (எ - ம்). (அ)

**479.** அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
வில்லாகித் தோன்றாக் கெடும்.

(இ - ள்.) தனக்குள்ள பொருளை இம் மாத்திர மென்று அறிந்து அதற்குத் தக்கதாய் வாழாமல் அதிகமாய்ச் செலவழிக்கிறவன் வாழ்க்கை, இருக்கிறாப்போலே யிருந்து, ஒன்றுமில்லாமற் கெட்டுப்போம் (எ - று).

பொருளுக்குத் தக்கதாய் வாழ்கிறதாவது-தனக்கு வருகிறதிலும் குறையச் செலவிடாவிட்டாலும், சரியாகச் செலவு பண்ணவேணும் (எ - ம்). (கூ)

**480.** உளவரை தூக்காத வொப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

(இ - ள்.) தனக்குள்ள பொருளை யறியாமற் செலவு-பண்ணின கீர்த்தியால் அவன்செல்வம் வகையறக் கெடும் (எ - று).

பொருளிருந்தமட்டும் செலவுபண்ணி அப்புறம் இல்லாமற் போய்விட்டால், முன் படைத்த கீர்த்தியும் ஒன்றுமில்லாமற் போம் (எ - ம்).

பொருளை வளரவைத்து வரவறிந்து செலவுபண்ண வேணும் (எ - ம்). (௧௦)

## 49. காலமறிதல்

அஃதாவது - பலத்தினாலே அதிகமான ராசா பகைவர்மேற் செல்லுமிடத்து அதற்கேற்ற காலத்தினை யறிதல் (எ - ம்).

**481.** பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

(இ - ள்.) தன்னினும் அதிக பலத்தையுடைய கோட்டானைக் காக்கை பகலிலே வெல்லும்; ஆனபடியினாலே, பகைவரை வெல்ல நினைக்கிறவர்களுக்கு, அதற்கான காலம் வந்தாலொழிய வெல்லப் போகாது (எ - று).

காலமாவது - வெயிலுங் குளிரும் சரியாய், வியாதி செய்யாது, தண்ணீரும் உணவும் முதலிய வுடையதாய்ச் சேனை வருந்தாம லிருக்கிறதாம். கால மல்லா விட்டாற் சேனையாலே பிரயோசன மில்லை (எ - ம்). (௧)

**482.** பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

(இ - ள்) அரசன் காலத்தோடு பொருந்தக் காரியஞ் செய்கிறது, ஒருவரிடத்திலும் நில்லாத செல்வத்தைத் தன்னை விட்டு நீங்காமற் கட்டுங் கயிறும் (எ - று).

காலத்தோடு பொருந்துதல் - காலந் தப்பாமற் செய்தல். அதனால் வருகிற செல்வம் எந்நாளும் விட்டு நீங்காமல் நிற்கும் (எ - ம்). (உ)

483. அருவினை யென்ப வுளவோ கருவியாற்
காலமறிந்து செயின்.

(இ - ள்.) ராசாக்களாலே செய்கிறதற்கு அரிதான காரிய முண்டோ, அந்தக் காரியங்களைச் செய்து முடிக்கிறதற்கான ஆயுதங்களுடனே அதற்கேற்ற காலமறிந்து செய்தால் (எ - று).

ஆயுதங்களாவன-மூவகை யாற்றலும் நால்வகை யுபாயமு மாம். மூவகை யாற்றலாவன - பிரபுசக்தி, மந்திரிசக்தி, உற்சாக சக்தி. நால்வகை யுபாயமாவன - சாம, பேத, தான, தண்ட மென்பன. (௩)

484. ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

(இ - ள்.) ஒருவன் பூமியெல்லாந் தானே யாளக் கருதினு னுகிலும் அப்படியே வந்து கைகூடும், அதற்குச் செய்ய வேண்டிய காரியத்தைக் காலமறிந்து செய்தால் (எ - று).

காலமறிந்து செய்தால் கூடாத காரியமும் கூடும் (எ - ம்).

485. காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

(இ - ள்.) தப்பாமற் பூமியெல்லாம் தாம் கைக்கொள்ள நினைக்கிறவர்கள், தங்கள் பலம் அதிகமானாலும் அதை எண்ணு மல், அதற்கேற்ற காலம் பார்த்துக்கொண்டிருந்து, அந்தக் காலம் வருமளவும் பகைவர்மேலே தண்டெடார்கள் (எ - று).

தப்பாமை - நினைத்தபடியே கொள்ளுதல். காலமறிந்து செய்தாற் பலம் அதிகமாய் வர்த்திக்கும் ; காலமறியாமற் செய்தாற் பலமும் கீர்த்தியுங் குறைந்து வருத்தப்படுவர் (எ - ம்). (ரு)

486. ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

(இ - ள்.) அதிக பலமுடைய ராசா பகைவர்மேலே தண்டெடாமல் காலபக்குவம் பார்த்துக்கொண்டிருக்கிற இருப்பு எப்படிப் போலே என்றால், பாய்ச்சலுக்கு நிற்கிற ஆட்டுக்கடா அதன் பகையெல்லாந்தீரப் பாய்கிறதற்காகப் பின் இடைந்து போகிறதோடொக்கும் (எ - று). (சு)

487. பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

(இ - ள்.) அறிவுடையவர்கள் தம் பகைவர் குற்றஞ் செய்தபொழுதே அவர்களறிய கோபித்துக்கொள்ளார்; அவர்களை வெல்லுகிறதற்கான காலமறிந்து அந்தக் காலம் வருகிற பரியந்தம் மனதுக்குள்ளே தாமே கோபித்துக்கொண் டிருப்பார்கள் (எ - று).

பகைவரறிய கோபித்துக்கொண்டால், தங்களைக் காத்துக் கொள்ளுவார்கள்; காத்துக் கொண்டால், வெல்லுகிறதரிதாம். கோபம் மிகுந்தாற் குற்றம் செய்யாமல் அடக்கக் கூடாது (எ - ம்). (எ)

488. செறுநரைக் காணிற் சுமக்க விறுவரை
காணிற் கிழக்காந் தலை.

(இ - ள்.) தாங்கள் வெல்லவேணு மென்று நினைக்கிற வர்கள் தங்கள் பகைவர்க்கு முடிவுக்காலம் வருமளவும் அவரைக்கண்டால் வணங்கவேணும்; அந்தக் காலம் வந்தால் அவர்கள் பெருமையில்லாமற் கெடுவர் (எ - று).

பகை தீர்த்துக்கொள்ளவேண்டி மிகவும் தாழ்வார்கள்; அப்படித் தாழ்ந்து வணங்கினால் அவர்கள் தம்மைக் காவாமலிருப்பார்கள்; அதனாலே தப்பாமற் கெடுவர் (எ - ம்).

489. எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல்.

(இ - ள்.) பகையை வெல்ல நினைக்கிறவர்கள் தங்களா லெய்துதற்கரிய காலம் வந்து கூடினால் அந்தக் காலங் கழிகிற தற்குமுன்னே செய்யவேண்டின காரியங்களைச் செய்து கொள்ளவேணும் (எ - று).

காலபக்குவம் போனால் திரும்பி வாராது (எ - ம்). (கூ)

**490.** கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

(இ - ள்.) பகைவர்மேற் காரியஞ் செய்யாதிருக்குமளவுங் கொக்கைப் போலச் சும்மா பார்த்துக்கொண்டிருக்க; அந்தக் காரியஞ் செய்து முடிக்குங் காலம் வந்தால், கொக்கு மீனைப் பிடித்துக் கொள்ளுமாறு போல, தப்பாமற் செய்க (எ - று).

---

## 50. இடனறிதல்

அஃதாவது - வலியுங் காலமும் அறிந்து பகைவர் மேலே தண்டுபோகிற வரசன் தனக்கேற்ற நிலத்தை யறிந்து செல்லல் (எ - று).

**491.** தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று
மிடங்கண்ட பின்னல் லது.

(இ - ள்.) சத்துருக்களை செயிக்கத்தக்க விடங் கண்ட பிறகல்லாமல் அதற்குமுன்னே பகைவர்மேலே யொரு காரியமுஞ் செய்யவேண்டாம்; அவர்களைக் கொஞ்சமென்று இகழ வேண்டாம் (எ - று).

இடமாவது - வாசல்களாலும் திட்டிகளாலும் சத்துருக் கள் வாராததாய், சேனைகள் இருக்கிறதற்கு யோக்கியமாய், நீரும் நிழலும் மதிலும் அரணுமுடையது. இப்படிப்பட்ட இடம் பெற்றால் பகைமுடிக்கத் தொடங்குக (எ - ம்). (க)

**492.** முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு மரண்சேர்ந்தா
மாக்கம் பலவுந் தரும்.

(இ - ள்.) அதிக பலத்தினையுடையவர்க்கும் அரணாகிய விடத்தைச் சேர்ந்தால் அநேக நன்மைகளைக் கொடுக்கும் (எ - று).

முரண் சேர்ந்தவர்களாவது - பூமி ராச்சியம் எல்லார்க்கும் பொது வென்றெண்ணாமல் 'நம்முடையது போகிற'தென்கிற மனசுடையவர்களாம். (உ)

**493.** ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின்.

(இ - ள்) பலவான்களல்லாதாரும் பலவான்களாய் வெல்வர், அதற்கேற்ற விடத்தினை யறிந்து சேர்ந்து தம்மைக் காத்துக்கொண்டு பகைவர்மேலே காரியம் பண்ணினால் (எ - று).

தம்மைக் காத்தலாவது - பகைவர்களாலே உபத்திரவம் வாராமற் காத்துக் கொள்ளுகிறதாம். (ங)

**494.** எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

(இ - ள்.) தாம் பகைவரைச் செயிக்கிறதற்கேற்ற விடத்தினை யறிந்து சென்று, அரணாகிய காவலைப் பொருந்திநின்று செய்தால், அவரை வெல்லுகிறோ மென்று நினைத்திருந்த ராசாக்கள் அந்த வெண்ணமழிந்து போவார்கள் (எ - று).

தன்னைக் காத்துக் கொண்டு வினை செய்தால் எந்தக் காரியமும் வெல்லும் (எ - ம்). (ச)

**495.** நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி
னீங்கி னதனைப் பிற.

(இ - ள்.) முதலை ஆழமான தண்ணீரிலே இருந்தால் எல்லாச் சீவன்களையும் வெல்லும். அது தண்ணீரை விட்டு வெளியே வந்தால், மற்றைச் சீவன்களெல்லாம் முதலையை வெல்லும் (எ - று).

ஆனபடியினாலே, எல்லாரும் தங்கள் நிலையிலே யிருந்தால் பலவான்களாய் வெல்லுவார்கள் ; நிலையை விட்டுப் பிரிந்தால் பலவீனராய் வெல்லமாட்டார்கள். பகைவர்பேரிலே

சண்டைபண்ணப் போகிறவர்களும் தமக்கு நிற்கிறதற்கு அரணாகிய விட மறிந்து போய்ப் பகைவர் நிற்கிறதற்குப் பொருந்தாத விடமறிந்து சென்று வெல்க (எ - ம்). (௫)

**496.** கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு
நாவாயு மோடா நிலத்து.

(இ - ள்.) நிலத்திலே ஓடும் வெகு கால்களையுடைய தேர்கள் கடலிலே யோடமாட்டா. அக் கடலிலே யோடும் கப்பல்களும் பூமியிலே ஓடமாட்டா (எ - று).

பகைவர்மேற் செல்லுகிறவர்களும் தம் பலத்தினை எண்ணாமல் இடத்தினை யறிந்து செல்லவேணும் (எ - ம்). (௬)

**497.** அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின்.

(இ - ள்.) பகைவரிடத்து உபத்திரவம் செய்ய வேண்டினவன் அதற்கு வேண்டின கருவிகாரியங்களையெல்லாம் குறைவுபடாமல் எண்ணி, அவைகளை ராசாக்களுடனே பொருந்தச் செய்தால், அவனுக்குத் துணை வேண்டாம் (எ - று).

திண்ணியராய் நின்று மனவலிமையாலே செய்து முடிக்க வேண்டும் (எ - ம்). (எ)

**498.** சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையா
னூக்க மழிந்து விடும்.

(இ - ள்.) வெகு சேனைகளையுடைய ராசா, கொஞ்சமான சேனையை யுடையவனைக் கொல்ல நினைத்து, அவன் அரணாகிய விடத்திலே சென்றால், அந்த வலிமையினாலே வெகு சேனைகளும் அழிந்து, அந்த ராசாவும் கெடுவன் (எ - று).

எளியரானவர்களை வலியார் கெடுக்க நினைத்து அவர் அரணை அடையின், தாமே கெடுவர் (எ - ம்). (அ)

**499.** சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த
ருறைநிலத்தோ டொட்ட லரிது.

(இ - ள்.) காவல்மிகுதியும் வலிமையு மில்லாதவர்களா லும் அரணுகிய விடத்திலே இருக்கிறவர்களுடனே சென்று பொருகிறது அருமை (எ - று).

ஆண்மை யுடையவர்களைச் சிறியரென் றெண்ண வேண் டாம் (எ - ம்). (௯)

**500.** காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு.

(இ-ள்.) பாகராகிய மாவட்டியர்க் கடங்காததாய் வேலைப் பிடித்திருக்கிறவர்களைப் பாய்ந்து கொம்பிலே கோத்துக்கொண் டிருக்கிற யானை, சேற்றுக்குள்ளே யகப்பட்டுக் கால் புதைந்து கொண்டால், அந்த யானையை நரி கொல்லும் (எ - று).

ஆண்மையும் பெருமையு முடையவர்களும் தமக்குப் பொருந்தாத விடத்திலே போனால், தங்கள் பலம் பிரயோச னத்துக்கு வாராமல் மிகவும் எளியவர்களால் நலிவுபட்டு அழி வர் (எ - ம்). (௧௦)

---

## 51. தெரிந்து தெளிதல்

*அஃதாவது - மந்திரிகள், புரோகிதர்கள், சேனபதி கள் முதலானவர்களுடைய பிறப்பு குணம் வலி முதலான வைகளையும் செயல்களையும் ஆராய்ந்து தெளிதல்.*

**501.** அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
றிறந்தெரிந்து தேறப் படும்.

(இ - ள்.) அரசனாலே தெளியப்படுவான் ஒருவன் தரும மும் பொருளும் இன்பமும் பயமும் என்னும் நான்கு வகை யால் அவன் மனவியல்பை ஆராய்ந்து தெளியப்படும் (எ - று).

அவற்றுள் அறத்தாற் றெளிதலாவது - புரோகிதனையும் தர்மவான்களையும் அனுப்பி "இந்த ராசா தருமவான் அல்லன். இவனைத் தள்ளிவிட்டுத் தருமமும் நீதியும் உடைய ஒருத்தனை வைக்கவேண்டு மென்று நினைத்தோம். இது எல்லாருக்கும் சம்மதம். உன் புத்தி என்ன " என்று சொல்லிக் கேட்கிறது.

பொருளாற்றெளிதலாவது-சேனாபதியையும்அவனோடுஇசைந்த பேரையும் விட்டு, அவர்களாலே "இந்த ராசா மெத்த லோபி ; ஒருவருக்கும் ஒரு காசு வீசங்கொடுக்கிறவனல்லன். இவனைத் தள்ளிவிட்டுக் கொடுக்கிறவனும் நீதி உடையவனுமான ஒருவனை ராசாவாக்க நினைத்தோம்;இது எல்லாருக்கும் நல்லது; உன் புத்தி என்ன" என்று கேட்பிக்கிறது. இன்பத்தாற் றெளிதலாவது - பெரியவளாய் வயதுசென்றவளாய் இருக்கிற ஒருத்தியை அனுப்பி, "ஒரு ஸ்திரீ உன்னைக் கண்டு மோகித்து உன்னுடனே கூடவேணு மென்று என்னைத் தூதனுப்பினாள். அவளைக் கூடினால் உனக்குப் பேரின்பமும் பெரும்பொருளும் கைகூடு" மென்று சொல்லுவிக்கிறது. பயத்தாற் றெளிதலாவது- ஒரு காரியத்தை முன் வைத்து ஒரு மந்திரியை அனுப்பி "இந்த ராசா நேரஞ் சுமத்தி நம்மைக் கொல்ல நினைக்கிறான். அதற்கு முன்னே நாம் எச்சரிக்கைப்பட்டு நமக்கு ஆனவனாய் ஒரு ராசாவை வைக்க நினைத்தோம். இது எல்லாருக்கும் நல்லது. உன் புத்தி என்"னென்று கேட்கிறது. இந்த நாலு வகையினாலேயும் மனசு பேதியாமல் இருந்தால் இனிமேலும் கேடு நினைக்கிறவன் அல்லனென்று தெளிக (எ - ம்). (க)

**502.** குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு.

(இ - ள்.) உயர்ந்த குடியிலே பிறந்து குற்றத்தின் நீங்கி "நமக்குக் குற்றம் வரப்போகிற" தென்று பயப்பட்டு நடக்கிறவனையே தெளிக (எ - று).

குற்றங்களாவன - பொய் களவு கள் காமம். நாணுவது. இழிவான தொழில்களைச் செய்ய நினையாமல் இருக்கிறது. (உ)

**503.** அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு.

(இ - ள்.) கற்கவேண்டிய நூல்களைக் கற்றுக் குற்றங்களில்லாதவர்களிடத்திலேயும் நன்றாக வாராயுமிடத்து, அறிவின்மை இல்லாமலிருக்கிறது அரிது (எ - று).

அறிவுள்ளவர்களையே தெளிக(எ - ம்.) (ங)

**504.** குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல்.

*(இ - ள்.) ஒருகுணமு மில்லாதவர்கள் லோகத்திலே யில்லை; ஒருகுற்றமு மில்லாதவர்களு மில்லை. ஆனபடியினாலே, ஒருவன் குணங்களையும் குற்றங்களையும் ஆராய்ந்து, குணம் அதிகமாயிருந்தால் தெளிக (எ - று).*

*குற்றமுடையவனை நம்பவொண்ணாது (எ - ம்). (௪)*

**505.** பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்.

*(இ - ள்.) பிறப்பு குணம் அறிவு என்பனவற்றால் மனுஷர்கள் எய்தும் பெருமைக்கும் சிறுமைக்கும் அவர்கள் செய்கிற காரியங்களே யல்லாமல் வேறொன்றில்லை (எ - று).*

*ஒருவன் பெருமையும் சிறுமையும் அறிகிறவர்களுக்கு வேறே உபாயங்கள் இருந்தாலும், அவர்கள் தொழிலே போதும் (எ - ம்). (௫)*

**506.** அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

*(இ - ள்.) சுற்றத்தாரில்லாதாரைத் தெளிய வேண்டாம். அச்சுற்றம்இல்லாதார் உலகத்தோடு பொருந்தார்; பழிக்கு அஞ்சார் (எ - று).*

*உலகத்தார் பழிப்பதைத் தவிர்வதும் விரும்பினதைச் செய்கிறதுமாகிய உலகவியற்கை சுற்றம்இல்லாதார்க்கு இல்லையாகலின், அவரைத் தெளியப்போகாது (எ - ம்). (௬)*

**507.** காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்.

*(இ - ள்.) ஒருவர்மேலே தயையே காரணமாக வெண்ணிக்கொண்டு, அறியத்தக்கவற்றை அறியாதவரைத் தெளிந்தால், அந்த ராசாவுக்கு எல்லா வறுமையும் வரும் (எ - று).*

*தனக்குச் சிநேகமானவன் என்று அறிவில்லாதவன் கையிலே உத்தியோகத்தைக் கொடுத்தால், அறிவில்லாதவனுடை*

படியினாலே, அந்த ராச்சியம் கெடும். அது கெட்டால்; அவனுக்குமாத்திரமேயல்லாமல் ராசாவுக்கும் கேடு வரும் (எ-ம்).

**508.** தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்.

(இ - ள்.) தன்மேலே பட்சமில்லாதவனைப் பிறப்பு முதலானவற்றாலும் செய்கையாலும் ஆராயாது தெளிந்த அரசனுக்கு, அந்தத் தெளிவு, தன் வம்சபரம்பரையினும் நீங்காத துக்கத்தைக் கொடுக்கும் (எ - று).

ஆனபடியினாலே, சினேகமும் தெளிவும் இரண்டுவகையும் வேண்டும் (எ - ம்). (அ)

**509.** தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்
றேறுக தேறும் பொருள்.

(இ - ள்.) எவரையும் ஆராயாமல் தெளியவேண்டாம்; ஆராய்ந்து தெளிந்த பிறகு, அவர்கள்பேரிலே சந்தேகம் வேண்டாம் (எ - று).

தெளிந்த பிறகு சந்தேகப்பட்டால், தீராத குற்றம் வரும் (எ - ம்). (கூ)

**510.** தேரான் றெளிவுந் தெளிந்தான்கணையுறவுந்
தீரா விடும்பை தரும்.

(இ - ள்.) ஒருவனை ஆராயாது தெளிதலும், ஆராய்ந்தவனைச் சந்தேகப்படுதலும் இந்த இரண்டும் தீராத குற்றங்களைக் கொடுக்கும் (எ - று).

தெளிந்து உத்தியோகத்தைக் கொடுத்த பிறகு, ஒரு குற்றமும் காணமல் ஐயுறவுபட்டால், அந்த ஐயுறவை அவனறிந்து 'இனி இந்த உத்தியோகம் நில்லாது' என்று இகழ்ந்து விடுவன்; அதுவுமல்லாமல், பகைவராலே எளிதாய்ப் பிரிக்கவும்படும். அவர் பிரித்தாற் பகைவரை வெல்லப்போகாது. ஆனபடியினாலே, தெளிந்தானிடத்திலே சந்தேகமாகாது (எ - ம்). (௧௦)

*

## 52. தெரிந்து வினையாடல்

*அஃதாவது - இப்படித் தெளியப்பட்டவர்களை அவர்கள் செய்யவல்ல காரியங்களை அறிந்து ஆளுந் திறம்.*

**511.** நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும்.

*(இ - ள்.) ராசா முதற்கண் ஒருகாரியத்தைத் தன் வசத்திலே வைத்தால், தன்னாலே ஆவனவு மாகாதனவுமான செய்கைகளை ஆராய்ந்து அறிந்து, அவற்றுள் ஆவனவற்றையே செய்க (எ - று).*

*எனவே, சேனைகளை அறிந்து ஏவ வேணும் (எ - ம்).* (க)

**512.** வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை.

*(இ - ள்.) பொருள் வரப்பட்ட வழிகளை விஸ்தாரமாகச் செய்து, அந்தப் பொருளாலே செல்வங்களை வளர்த்து, பொருள் வருகிற வழிக்கும் பொருளுக்கும் செல்வத்துக்கும் வரப்பட்ட இடையூறுகளை நாடோறும் ஆராய்ந்து விலக்க வல்லவன் அரசனுக்கு உத்தியோகம் பண்ணவேணும் (எ - று).*

*வழியாவன - உழவு பசுக்காவல் வியாபாரம் என்னுந் தொழில்களாம். செல்வமாவன - முன்வந்த திரவியமும் மேல் வரக்கடவ திரவியமுமாம். இடையூறுகளாவன - வேலைசெய்கிறவர்கள், சுற்றத்தார், கள்ளர், பகைவர் இவர்களால் வரப்பட்ட குற்றங்கள். இவைகளைப் பரிகரிக்கிறவனே வேலை செய்யக் கடவன் (எ - ம்).* (உ)

**513.** அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு.

*(இ - ள்.) ராசாவினிடத்திலே தயவும், அவனுக்கு ஆவனவற்றை யறியும் அறிவும், சனங்கள் சொல்லுகிறதைச் செய்வதற் குள்ளாகாமையும் உத்தியோகத்திலே தன் கையிலே*

யுள்ள பொருள்மேல் ஆசையுறுமையுமாகிய இந்த நாலு குணங்களையும் கெட்டியாக உடையவன்மேலே ராச்சிய பாரத்தை விட்டு இருக்கலாம் (எ - று.)

அன்பு, அறிவு, தேற்றம், அவாவின்மை ஆகிய இந்த நாலு குணமுடையான் செய்கிற காரியத்தை ஆராய வேண்டாம் (எ - று). (௩)

**514.** எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகு மாந்தர் பலர்.

(இ - ள்.) எல்லாவகையானும் ஆராய்ந்து தெளிந்து ராச்சியபாரத்தை வைத்தபிறகும், அந்த ராச்சியத்தினுடைய ஆசையினாலே வேறே வினைவாய்க் குணங் கெட்டுப்போகிறவர்கள் அனேகம் பேர் உண்டு (எ - று).

கட்டியங்காரனைப் போல ராச்சியபார ஆசையினாலே ராசாவைக் கொன்று கெட்டுப்போனார் பலர் ; ஆனபடியினாலே, முதற்கண் கொஞ்சமான உத்தியோகத்தைக் கொடுத்து அதனாலே தெரிந்துகொள்ளவேணும் (எ - று). (௪)

**515.** அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று.

(இ - ள்.) ஒருவன் குணங்களை ஆராய்ந்தறிந்து, செய்கிற காரியங்களுடைய இடையூறுகளையும் ஆராய்ந்து செய்ய வேணுமல்லாமல், "அவன் நம்மிடத்திலே அன்புடையவன்" என்று காரியங்களைச் செய்யச்சொல்லப்போகாது (எ - று).

அறிவினாலே அல்லாமல் அன்பினாலே செய்து முடியாது (எ - ம்). (௫)

**516.** செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்.

(இ - ள்.) செய்கிறவனை முதற்கண் ஆராய்ந்து அறிந்து, செய்யப்படுங் காரியத்தை அதன்பின் ஆராய்ந்தறிந்து, பிறகு இந்த இரண்டையும் காலபக்குவத்தோடே ஆராய்ந்து இயன்றதாகிறதைச் செய்க (எ - று).

செய்கிறவனது லட்சணங்களையும் காரியத்தினுடைய லட்சணங்களையும் இனிமேல் சொல்கிறோம். காலத்தோடெய்தவுணர்தலாவது—'இந்தக் காலத்திலே இந்த லட்சணங்களுடையான் இந்தக் காரியஞ்செய்தால் முடியும்' என்று கூட்டியுணர்தல். (சு)

**517. இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
அதனை யவன்கண் விடல்.**

(இ - ள்.) 'இந்தக் காரியத்தை இந்த வகையால் இவன் முடிக்கவல்லன்' என்று ஆராய்ந்து மூன்று வகையு மொத்த தானால், அந்தக் காரியத்தை அவன்மேலே விடலாம் (எ - று).
அவன்கண் விடுகிறது—அந்தக் காரியத்துக்கு அவனைக் கர்த்தனாகப் பண்ணுதல் (எ - று). (எ)

**518. வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
யதற்குரிய னாகச் செயல்.**

(இ - ள்.) ஒருவனைத் தன் காரியஞ் செய்தற்குரியவனாக வாராய்ந்து துணிந்தால், பிறகு அவனைக் காரியஞ் செய்கிறதற் குரியனும்படி பெருமை பெறச் செய்க (எ - று).
பெருமை பெறச் செய்கிறதாவது - அந்தக் காரியஞ் செய்கிறதற்கு வேண்டியது கொடுத்தல். அதில்லாதவழி முடியாது (எ - ம்). (அ)

**519. வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு.**

(இ - ள்.) எப்பொழுதும் தன் காரியத்திலே முயற்சியுடையான், அந்தக் காரியத்தினாலே தனக்கு உறவாயிருக்கிறவர்களைக் கண்டு, அதுபொறாத பேர் சொல்லுகிறதைக் கேட்டு வேறாக நினைத்தால், லட்சுமி அவனைவிட்டுப் போவாள் (எ - று).
உறவாயிருக்கிறதாவது-அவனுக்கு வேண்டிய கருமங்களையெல்லாஞ் செய்தல். அப்படிப்பட்டவன்மேலே அனுமானப் பட்டால், பின்னை ஒருவரும் உட்பட்டு நிற்பாரின்மையின், தன் செல்வங் கெடும் என்பதாயிற்று. (கூ)

520. நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

(இ - ள்.) உத்தியோகம்பண்ணுகிறவன் பொல்லாதவனல்லாவிட்டால், உலகமும் பொல்லாதது ஆகாது. ஆனபடியினாலே, அரசன் காரியஞ் செய்கிறவனை தினமும் ஆராயவேணும் (எ - று).

அவனைமாத்திரம் ஆராய்ந்தால், அவன்வசமாய் இருக்கும் ராச்சியமெல்லாம் ஆராய்ந்தாற் போலேயாம்; அப்படி ஆராய்ந்தால், வினைசெய்கிறவனது உரிமை அழியாமல் ஆராய்ந்து ஒழுகுக (எ - ம்). (௧0)

---

## 53. சுற்றந்தழால்

அஃதாவது - ஒருவன் தன் சுற்றத்தாரைத் தன்னை விட்டு நீங்காமல் அணைத்தல்.

521. பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

(இ - ள்.) ஒருவன் செல்வந் தொலைந்துபோய்த் தரித்திரனான போழ்தும், விடாமற் பழமையைப் பாராட்டும் இயல்பு சுற்றத்தாரிடத்திலே யுண்டு (எ - று).

பழைமையாவது - முன் தமக்குச் செய்த நன்றி. அதனை நினைந்து அவன் தரித்திரனானபோதும் உபகாரம்செய்வர் சுற்றத்தார் (எ - ம்). (௧)

522. விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும்.

(இ - ள்.) ஒருவனுக்கு அன்பறாத சுற்றம் வந்தெய்துமாயின், அஃது அவனுக்குப் பெருக்கமறாத செல்வங்கள் பலவற்றையும் கொடுக்கும் (எ - று).

உட்பகையின் நீக்குதற்குத் தன்மேல் ஆசையறாத சுற்றம் உண்டாக வேணும்; அப்படி உட்பகையை நீக்கினால், பெரிய செல்வம் வந்தெய்தும் (எ - ம்). (௨)

**523.** அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

(இ - ள்.) ஆசையறாத சுற்றத்தாருடனே சினேகமில்லா தவன்வாழ்க்கை, குளவிசாலம் கரையில்லாது தண்ணீர் நிறைந்தாற்போலே (எ - று).

சுற்றமில்லாதவன்செல்வம், கரையில்லாத குளத்திலே நிறைந்த நீர்போலே, நாலுவழியும் புறப்பட்டுப் போம் (எ-ம்).

**524.** சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பலன்.

(இ - ள்.) செல்வம் பெற்றவதனாலே ஒருவன் பெற்ற பலனாவது, தன்சுற்றத்தால் தான் சூழப்படும்வகை செய்தல் (எ - று).

தன் செல்வம் பலர்க்கும் பயன்பட்டால், இம்மையிலே கீர்த்தியும் மறுமையிலே அதிக போகமு முண்டு (எ - ம்). (ச)

**525.** கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்.

(இ - ள்.) ஒருவன் சுற்றத்தார்க்கு வேண்டியதைக் கொடுத்தலும் நல்ல வசனங்களைச் சொல்லுதலு முடையனாகில், பலவகைச் சுற்றங்களும் அவனைத் தாங்களே சூழ்ந்து கொள்ளுவார்கள் (எ - று).

இந்த உபாயங்களை வடநூலார் தானமுஞ் சாமமும் என்பர். (ரு)

**526.** பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில்.

(இ - ள்.) ஒருவன் மிகுத்த கொடையை உடையவனு மாய்க் கோபத்தை விரும்பாதவனுமானால், அவனைப்போல் சுற்றமுடையவர்கள் இந்த உலகத்திலே இல்லை (எ - று).

மிகுத்த கொடையாவது - ஒருவன் வேண்டினவெல்லாம் ஒருவகையாலுங் குறைபடாமற் கொடுக்கிறது. (சா)

527. காக்கை கரவாக் கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள.

(இ - ள்.) காக்கை தனக்கு இரை கண்டால், அதைத் தான்மாத்திரம் தின்னுமல், தன் இனத்தை யழைத்து அதனோடேகூட உண்ணும்; நல்ல சுற்றத்தையுடையவன்செல்வமும் அப்படியே பலருடனுங்கூட உண்ணப்படும் (எ - று).

அப்படி யுண்டவனுக்குப் பகையில்லாமல் பெருஞ் செல்வமும் எய்தும் (எ - ம்). (எ)

528. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர்.

(இ - ள்.) எல்லாரையும் ஒருசரியாய்ப் பாராமல் அவரவர்கள் மரியாதை யறிந்து நடப்பித்தால், அதைக் கண்டு அவனை விடாமல் வாழுஞ் சுற்றத்தார் பலர் (எ - று).

எல்லாரையுஞ் சரியாய்ப் பார்த்தால் பெரியவர்கள் விட்டுப் போவார்க ளானபடியினலே, அவரவர்கள் மரியாதை யறிந்து நடப்பிக்க வேணும் (எ - ம்). (அ)

529. தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்
காரண மின்றி வரும்.

(இ - ள்.) முன்பு தன்னேடு சுற்றமாயிருந்து, பின்பு யாதானும் ஒரு காரணத்தினலே தன்னைவிட்டுப் பிரிந்து போனவர்கள் திரும்பவந்து உறவாயிருக்கிறது,தன்னிடத்திலே குற்றமில்லாவிட்டால் (எ - று).

முன்பு குற்றம் இருந்தபடியினலே விட்டுப் பிரிந்தார். குற்றமாவது-நெறியில்லாத காரியங்களைச் செய்தல், வெறுக்கத் தக்க வசனங்களைச் சொல்லுதல் என்பது. இந்தக் குற்றம் இல்லாவிட்டால் தாமே வந்து சேருவர் (எ - ம்). (கூ)

530. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த
னிழைத்திருந் தெண்ணிக் கொளல்.

(இ-ள்.) ஒருகாரணமுமில்லாமல் தன்னிடத்திலே இருந்து விட்டுப்போனவன், பின்பு ஒரு காரணத்தாலே திரும்பிவந்து

தன்னைச் சேர்ந்தால், அவன் வந்த காரியத்தைச் செய்து, பிறகு ஆராய்ந்து, குற்றமில்லாவிட்டால், அவனுடனே சிநேகம் பண்ணவேணும் (எ - று).

அவன் வந்தவுடனே ஆதரியாவிட்டால், பகைவருடனே கூடி உபத்திரவம் பண்ணுவான் (எ - று). (௧௦)

---

## 54. பொச்சாவாமை.

அஃதாவது - தன்னுடைய ரூபமும் செல்வமும் பலமும் முதலானவற்றைக் கண்டு மகிழ்ந்து தன்னைக் காத்துக் கொள்ளுகிறதும், பகைவரை அழித்தலும் முதலாகிய காரியங்களில் சோர்தலைச் செய்யாமலிருக்கிறது.

**531.** இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

(இ - ள்.) மிகுந்த சந்தோஷ மகிழ்ச்சியினாலே வந்த மறப்பு அளவில்லாத கோபத்திலும் பொல்லாது (எ - று).

மிக்க சந்தோஷமாவது - பெருஞ்செல்வத்தாலும் பெரிய வின்பத்தாலும் வருவது. அதனால் வந்த மறப்பு தனக்கே கேடு விளைக்கும் (எ - ம்). (௧)

**532.** பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

(இ - ள்.) ஒருவன் புகழினை அவன் மறப்புக் கெடுக்கும். அது எப்படிப்போல என்றால், அறிவைத் தரித்திரங் கெடுத்தாற்போல (எ - று).

தரித்திரம் அறிவைக் கொல்லுதலாவது - இரப்பினாலே வருத்தப்பட்டுத் தன் வயிறு நிறைத்தல் இது அறிவுடையவர்களுக்குண்டானால் அவர்களைக் கொஞ்சமாய்ப் பார்த்து இகழ்வார்கள். அதனாலே அறிவு பிரகாசமாகாது (எ - ம்).

**533.** பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானு லோர்க்குந் துணிவு.

(இ - ள்.) பொச்சாப்பாகிய மறப்புடையவர்களுக்குக் கீர்த்தி யில்லை. அவ்வின்மை இந்நீதிநூலுடையவர்களுக்கே அன்றி, உலகத்து எவ்வகைப்பட்ட நூலுடையார்க்கும் ஒப்ப முடிந்தது (எ - று).

இது, ராசாக்களுக்கே அல்லாமல் தருமம்தானங்களுடனே கூடினபேருக்கெல்லாஞ் சரி (எ - ம்). (ங)

**534.** அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

(இ - ள்.) காடும் மலையும் கோட்டையும் முதலாகிய வரணைவிடத்திலே இருந்தாலும், மனசிலே பயமுடையவர்களுக்கு அந்த அரண்களாலே பலனில்லை. அப்படிப்போலே, எல்லாச் செல்வமு முடையவரானாலும் மனசிலே மறப்புடையவர்களுக்கு அந்தச் செல்வத்தாற் பலனில்லை (எ - று).

பயமுடையவன் நின்ற வரண் அழியுமாறுபோல, மறதியுடையவனுடைய செல்வங்களும் அழியும் (எ - ம்). (ச)

**535.** முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும்.

(இ - ள்.) தன்னாலே காக்கப்படுந் துன்பங்களை அவை வருவதற்குமுன்னே அறிந்து காவாமல் மறந்திருந்தவன், பின்பு அந்தத் துன்பங்கள் வந்தால், தன் மறப்பை நினைந்திரங்கிக் கெடுவன் (எ - று).

காக்கப்படுந் துன்பங்களாவன - மறந்திருக்கிற வேளை பார்த்துப் பகைவர், கள்வர் இவர்களாற் செய்யப்படுவன (எ - ம்). (ரு)

**536.** இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில்.

(இ - ள்.) ஒருவனுக்கு மறவாமைக்குணம் எல்லாரிடத்திலேயும் எப்பொழுதும் குற்றங்களைச் செய்யாமல் நன்மையும் நல்ல வசனத்தையும் செய்யுமாயின், அவனுக்கு அதிலும் நன்மை வேறில்லை (எ - று). (சா)

537. அரியவென் றாகாத வில்லை பொச்சாவாக்
கருவியாற் போற்றிச் செயின்.

(இ - ள்.) 'இந்தக் காரியஞ் செய்கிறது அருமை; இது முடிக்கப் போகாது' என்பதில்லை, மறவாத மனசினாலே எண்ணிச் செய்தால் (எ - று).

இடைவிடாத நினைவுந் தப்பாத சூழ்ச்சியு முடையவர்களுக்கு எல்லாக் காரியங்களும் எளிதாய் முடியும் (எ - ம்). (எ)

538. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையு மில்.

(இ - ள்.) நீதிநூலுடையார் 'இவை அரசர்க்கு உரியன' வென்று சொல்லுஞ் செயல்களைச் செய்யவேண்டும்; அப்படிச் செய்யாமல் மறந்துவிட்டவர்களுக்கு ஏழேழு பிறப்புக்களிலேயும் நன்மை இல்லை (எ - று.)

அந்தச் செய்கைகளாவன - மூவகையாற்றல் முதலாயின. மறப்புடையார்க்கு நரகமல்லது வேறொன்றுமில்லை (எ - ம்).

539. இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

(இ - ள்.) அரசர், தங்கள் மகிழ்ச்சியினாலே மயக்கமுறுகிற போழ்து, முன்பு அந்த மகிழ்ச்சியினாலே கெட்டவர்களை நினைக்க (எ - று).

கெட்டவர்களை நினைத்துக்கொண்டால், "நாமும் அப்படிக் கெட்டுப்போவோம்" என்று எண்ணி, மகிழ்ச்சியினை அடையார் (எ - ம்). (கூ)

540. உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தா
னுள்ளிய துள்ளப் பெறின்.

(இ-ள்.) அரசர்க்குத் தாங்கள் பெற நினைத்த பொருளை நினைத்தபடியே பெறுகிற தெளிதாம், நினைத்த பொருளை மறவாமல் பின்னையும் நினைக்கக் கூடுமாயின் (எ - று).

பின்னையும் நினைத்தலாவது—வேறொரு பொருளின் மேலே நினைவாய் முந்த நினைத்த பொருளை மறவாமல் நினைக்கிறது. (௫0)

## 55. செங்கோன்மை

அஃதாவது - அரசனாலே செய்யப்படும் முறைமை யுடைய நன்மை. அந் நன்மையும் செவ்வை தப்பாமல் நடக்கிறபடியினாலே செங்கோல் என்பதாம.

541. ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்தி யார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை.

(இ - ள்.) தன்கீழே வாழ்வார் குற்றஞ் செய்தால், அந்தக் குற்றத்தைப் பார்த்து ஒருவரிடத்திலேயும் பட்சபாதம் வையாமல், எல்லாரையுஞ் சரியாகப் பார்த்து அந்தக் குற்றத்துக்குச் சொன்ன தண்டனையைச் சாத்திரங் கற்றவர்களுடனேகூட ஆராய்ந்து குற்றத்திற்குத் தக்கதாகத் தண்டிக்கிறதே முறைமை (எ - று).

தனக்குச் சினேகிதர் பகைவர் என்று எண்ணுமல் எல்லாரையும் சரியாய்த் தண்டிக்கிறதே அரசனுக்கு நீதி (எ - ம்).

442. வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

(இ - ள்.) உலகத்திலே உண்டான சீவன்களெல்லாம் மழை உண்டானல் உண்டாம்; என்றாலும், குடிகளெல்லாம் அரசன் செங்கோல் உண்டானல் உண்டாம் (எ - று)

மழை சீவன்களை ரட்சிப்பதுபோல, அரசன் செங்கோலனுல் குடிகள் நன்றாய் இருப்பார்கள் (எ - ம்). (உ)

443. அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்.

(இ - ள்.) அந்தணருக்கு உரித்தான வேதத்திற்கும் அந்த வேதத்திலே சொல்லப்பட்ட தருமத்திற்கும் காரணமாய் நின்றது மன்னவன் செங்கோலாகிய நீதி (எ - று).

அரசன் நீதியாய் நடத்தினல், வேதமும் சாஸ்திரமும் தருமமும் வர்த்திக்கும் (எ - ம்). (௩)

**444.** குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு.

(இ - ள்.) தன்னுட்டிலே யிருக்கிற குடிகளையும் ரட்சித்துக்கொண்டு செங்கோலையும் முறைமை தப்பாமல் நடத்தும் ராசாவை உலகத்தார் விடாமல் இருப்பார்கள் (எ - று).

ரட்சிக்கிறதாவது - நல்ல வசனம் சொல்லுதலும் வறுமையான பொழுது வேண்டுவன கொடுத்தலுமாம். (ச)

**545.** இயல்புளிக் கோலோச்சு மன்னவ னுட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு.

(இ - ள்.) முறைமை தப்பாமல் நடத்தும் மன்னவன் நாட்டிலே மழையும் விளைவும் நிறைந்திருக்கும் (எ - று).

அரசன் செங்கோலனுல் அவன்நாட்டிலே எல்லாச் செல்வங்களுமுண்டாம் (எ - று). (ரு)

**546.** வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்.

(இ - ள்) ராசாவுக்குச் சண்டையிலே செயத்தைக் கொடுக்கிறது அவனுலே எறியப்பட்ட வேல் வாள் இவைகளல்ல ; அவன் நடத்தும் செங்கோல்முறைமை (எ - று).

அரசன் நீதியாய் நடந்தால் அவன்சத்துருக்கள் தாமே கெடுவர் (எ - ம்.) (சா)

**547.** இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்.

(இ - ள்). பூமியையெல்லாம் ராசா காப்பான்; ராசாவை அவன்செங்கோல் காக்கும், அந்தச் செங்கோல் கோணுமல் நடந்தால் (எ - று).

செங்கோல் கோணுமையாவது - நீதி முறைமையாய் நடக்கவேணும் (எ - ம்). (எ)

**548.** எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
றண்பதாற் றானே கெடும்.

(இ - ள்.) முறையிடுகின்றவர்களுக்கு எளியனாய், அவர்கள் சொன்னதைக்கேட்டு நீதிமான்கள் பலரோடும் ஆராய்ந்து, அதற்கு ஏற்கச் செய்யாத அரசன், தாழ்ந்த விடத்திலே நின்று, தானே கெடும் (எ - று).

தாழ்ந்தவிடமாவது - முறையிடுகிறவர்கள் காணாத விடம் என்பதாம். (அ)

**549.** குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்.

(இ - ள்.) குடிகளைப் பிறர் வாதை பண்ணாமல் காத்து, தானும் நலியாது பேணி, அவர்மாட்டுக் குற்றம் நிகழின் அதனைத் தண்டனையால் ஒழித்தல் வேந்தனுக்குப் பழியன்று; நல்ல தொழிலாம் (எ - று).

தன்கீழ் வாழ்வாரைக் குற்றத்திற்குத் தக்க தண்டனை செய்து அவரை அந்தக் குற்றஞ் செய்யவொட்டாமல் அடக்குகிறது நீதியாம். (கூ)

**550.** கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

(இ - ள்.) அரசன் கொடியவர்களைத் தண்டித்து நல்லவர்களைக் காக்கிறது எப்படிப் போலே என்றால், பயிரிடுகிறவன் பயிருக்குள்ளே இருக்கிற புல்லைப் பிடுங்கிப்போட்டுப் பயிரை ரட்சிக்கிறதுபோலே (எ - று).

கொடியவர்களாவார் - தீக்கொளுத்துகிறவர், நஞ்சிடுவர், ஆயுதங்களாலே கொல்லுகிறவர், கள்ளர், ஒருவர்மேலே பகையாய்த் தூற்றுகிறவர், கொள்ளையிடுகிறவர், பிறனுடைய இல்லாளைச் சேருகிறவர் முதலாயினோர். இவர்களைத் தண்டியாவிட்டால், புல் அதிகமாய்ப் படர்ந்த பயிர் போல நாட்டுமக்கள் நலிவுபடுவர் என்பதாம். (ம)

---

## 56. கொடுங்கோன்மை

*அஃதாவது - அரசன் நீதிமுறைமை தப்பிக் குடிகளை அநியாயம் பண்ணுகிறது.*

**551.** கொலைமேற்கொண் டாரிற் கொடிதே யலைமேற்கொண்
டல்லவை செய்தொழுகும் வேந்து.

*(இ - ள்.) பகைமைவைத்துக் கொல்லுகிறவர்களிலும் பொல்லாதவனும், பொருண்மேல் ஆசையுடையனும்க் குடிகளை வாதைபண்ணி முறைமையல்லாத காரியங்களைச் செய்யு மரசன் (எ - று).*

*பகையாளி செய்கிறது ஒருநாளைத் துன்பம் ; பொல்லாத அரசன் செய்கிறது எப்பொழுதும் துன்பமாகலின், அவனிலும் அரசன் பொல்லாதவன் என்பதாயிற்று. (க)*

**552.** வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு.

*(இ - ள்.) வழிப்போகிறவர்களைப் பொருள்பறிப்பதற்கு வேலாயுதம் எடுத்துக்கொண்டு வழியிலே தனியே நின்று, வழிப் போகிறவனை, "உன் கையிலே இருக்கிற பொருளைத் தா" வென்று சொல்லுதலோடு ஒக்கும், பொல்லாதவனை அரசன் குடிகளைப் "பொருள் தம்மின்" என்று கேட்கிறது (எ-று).*

*கொடாவிட்டால் கொல்லுவன் என்பதாயிற்று. (உ)*

**553.** நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும்.

*(இ - ள்.) தன் நாட்டிலே உண்டாகிற தீமைகளைத் தினமும் ஆராய்ந்து, அதற்கு ஏற்ற முறைமையைச் செய்யாத அரசன், நாடோறும் நாட்டை இழந்துபோவான் (எ - று).*

*இழக்கிறதாவது - பலனெய்தாமை. (ங)*

**554.** கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு.

*(இ - ள்.) மேலே வரப்போகிறதை எண்ணாமல் முறைமை தப்பச் செய்யும் அரசன், அந்த அநியாயத்தினாலே முன்*

தேடின பொருளையும் இழந்து, பின், பொருளைக் கொடுக்கும் குடிகளையும் இழந்துவிடும் (எ - று).

முன் தேடின பொருளை இழக்கிறதற்குக் காரணம் மேல் வருங் கவியிற் சொல்லுகிறோம். (௪)

**555.** அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

(இ - ள்.) அரசன் முறைசெய்யாதபடியினலே குடிகள் துக்கப்பட்டு, அந்தத் துக்கத்தைப் பொறுக்கமாட்டாமல் அழுத கண்ணீர், கொடுங்கோலனாகிய மன்னவன்செல்வத்தைக் கெடுக்கிற ஆயுதமாம் (எ - று).

ஆயுதத்தைப்பார்க்கிலும் துக்கப்பட்டு அழுத கண்ணீர் கொடிய தாகையினலே, செல்வம் கடிதிற் றேய்ந்துபோம் (எ - ம்). (௫)

**556.** மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன்
மன்னுவா மன்னர்க் கொளி.

(இ - ள்.) அரசர்களுக்குக் கீர்த்தி யுண்டாகிறது செங்கோல் முறைமையாலேயாம்; அந்தச் செங்கோல் முறைமை இல்லாவிட்டால், அந்த அரசர்களுக்குக் கீர்த்தி யுண்டாகாது (எ - று).

கொடுங்கோலனுனல் அபகீர்த்தி வரும் என்பதாம். (௬)

**557.** துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு.

(இ - ள்.) மழையில்லாவிட்டால் பூமியிலே இருக்கிற சீவன்களுக்கு எத்தனை துக்கமுண்டோ, அத்தனை துக்கமுண்டாம், அரசன் நீதிமுறைமை தப்பி நடந்தால் அவன் நாட்டிலே இருக்கிற குடிகளுக்கு (எ - று).

மழை இல்லாதபோழ்து பசியாலும் வெயிலினுலும் வருந்துகிறுப்போலே, அரசன் நீதியாய் நடத்தாவிட்டால் குடிகளுக்கு எல்லாத் துக்கமுமுண்டாம் (எ - ம்). (௭)

**558.** இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.

*(இ - ள்.) நீதிமுறைமையாய் நடவாத அரசன்கீழே வாழு கிற குடிகளுக்குத் தரித்திரத்திலும் பொல்லாதது ஐசுவரியம் உண்டாயிருக்கிறது (எ - று).*

*அரசன் தனக்குரித்தான இறைப்பணத்தை வாங்கிக் கொண்டிராமல், பின்னையும் பொருளை விரும்பி முறைமை தப்ப நடந்தால், தண்டனை முதலாகிய உபத்திரவம் வருகிறது பொருளுடையவர்களுக் கானபடியினாலே, செல்வம் பொல்லா தென்பதாயிற்று.* (அ)

**559.** முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
யொல்லாது வானம் பெயல்.

*(இ - ள்.) மன்னவன் தான் செய்யுங் காரியங்களை முறை தப்பச் செய்தால், அவன்நாட்டிலே மேகங்கள் பருவத்துக்குப் பெய்யாது (எ - று).*

*பருவத்துக்கு மழையில்லாவிட்டால், சகல துக்கமும் உண்டாம்.* (௯)

**560.** ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்.

*(இ - ள்) உலகத்திலே இருக்கிற பிராணிகளைக் காத்து ரட்சிக்கும் அரசன் காவாவிட்டால், அவன்நாட்டிலே தருமம் இல்லாமலும், பசுக்கள் பாலில்லாமலும் போம்; அந்தணரும் வேதசாஸ்திரங்களை மறந்துவிடுவர் (எ - று).*

*அறுதொழிலாவன - ஓதல், ஓதுவித்தல், ஓமம்பண்ணுதல், ஓமம்பண்ணுவித்தல், கொடுத்தல், ஏற்றல். இவைகளையுடைய பிராம்மணர் வேதசாஸ்திரங்களைப் படியாமல் விட்டபடியிலே பருவத்துக்கு மழைபெய்யாது; ஆனபடியினாலே, கொடுங் கோலனாகிய அரசன் ராச்சியத்திலே பொல்லாங்குகளெல்லாம் குடியாயிருக்கும் என்பதாம்.* (௧௦)

---

## 57. வெருவந்தசெய்யாமை

அஃதாவது - குடிகள் அஞ்சுவதும், பகுதி அஞ்சுவதும, தான் அஞ்சுவதுமான தொழில்களைச் செய்யாமை. இவைசெய்தல் கொடுங்கோன்மை என்பதாம்.

**561.** தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
லொத்தாங் கொறுப்பது வேந்து.

*(இ - ள்.)* ஒருவன் தனக்கு எளியவனானவனை உபத்திரவம் பண்ணினால், அதனைக் கேட்டு, இரண்டுபேரையும் சரியாகப் பார்த்து ஆராய்ந்து, குற்றமுள்ளவனை அதற்கு ஏற்கத் தண்டிக்கிறவனே அரசன் (எ - று)

குற்றத்துக் கேற்கத் தண்டனை பண்ணினால், பிறகு அந்தக் குற்றங்களைச் செய்யார் என்பதாம். (க)

**562.** கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்.

*(இ - ள்.)* குற்றத்துக்குத் தக்க தண்டனை பண்ணத் தொடங்குகிறபோது, வெகுவாய் தண்டனை பண்ணப்போகிறாப் போலே கோபித்துக்கொண்டு, தண்டிக்கிறபோது பிரமாணந் தப்பாமற் செய்க, செல்வந் தன்னைவிட்டு நீங்காமல் நெடுங் காலம் நிற்க வேண்டுவார் (எ - று).

வெகுவாகத் தண்டனை பண்ணப் போகிறாப்போலே கோபித்துக் கொள்ளுகிறது குற்றம் செய்கிறவர்கள் பயப்பட வேண்டி ; மட்டாகத் தண்டிக்கிறது எவர்களும் பயப்படாத படிக்கு (எ - ம்). (உ)

**563.** வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயி
னொருவந்த மொல்லைக் கெடும்.

*(இ - ள்).* குடிகள் பயப்பட்டு நடுங்கத்தக்க செயல்களைச் செய்து நடக்கும் வெங்கோலனுமாயின், அரசன் சீக்கிரத்திலே கெட்டுப்போவான் (எ - று).

பொல்லாங்கு செய்தவர்கள் கொப்பெனக் கெட்டுப் போவரர்கள் (எ - ம்). (ங)

**564.** இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும்.

*(இ-ள்.) குடிகளாலே "நம்முடைய அரசன் பொல்லாத வன்" என்று சொல்லப்படுகின்ற வார்த்தையுடைய அரசன், ஆயுசுங் குறைந்து செல்வமுங் கொப்பென இழக்கும் (எ - று).* (௪)

**565.** அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து.

*(இ - ள்.) தன்னைக் காணவேண்டினவர்களுக்குக் காணக் கிடையாதவனாய், கண்டவர்களுக்குப் பொல்லாத முகத்தை உடையவனான ராசாவுடைய பெரிய செல்வம், பேயால் காணப்பட்டாற் போல்வ தொரு குற்றமுடைத்து (எ - று).*
*இப்படிப்பட்டவனைச் சேர்வார் இல்லாதபடியினாலே, அவன் செல்வம் தனக்கும் பிறர்க்கும் பயன்படா தென்பதாம்.* (௫)

**566.** கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வம்
நீடின்றி யாங்கே கெடும்.

*(இ - ள்.) கடிய சொல்லையும் தயையில்லாமையையு முடையவன்செல்வம் நெடுநாள் நில்லாமல் அப்பொழுதே கெட்டுப்போம் (எ - று).*
*நெடுஞ்செல்வமாவது-அநேக நாள்தொட்டு வர்த்தித்து வருகிற செல்வம். அது இவன் பொல்லாமையாலே கடுகக் கெட்டுப்போம் (எ - ம்).* (௬)

**567.** கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
னடுமுரண் டேய்க்கு மரம்.

*(இ - ள்.) கடினமான வார்த்தையும் குற்றத்தின் மிக்க தண்டமும் அரசனுடைய பலத்தைக் கெடுக்கும் (எ - று).*
*அரமானது இரும்பைத் தேய்க்கிறாப் போலே கெடுக்கும் என்பதாம்.* (௭)

**568.** இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு.

(இ - ள்.) அரசன் ஒரு காரியத்தைச் செய்கிறபோது மந்திரிகளுடனேயும் தன் சுற்றத்தாருடனேயும் ஆலோசனை பண்ணிச் செய்யாமல், தன் கோபத்தினாலேயும் கர்வத்தினாலேயும் எண்ணாமற் செய்தால், அந்தக் காரியம் தப்பிதமாய் அதனாலே அவன் செல்வம் கெடும் (எ - று).

மூர்க்க புத்தியினாலே தூரம் விசாரியாமற் செய்து கெடுவன் என்பதாம். (அ)

**569.** செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.

(இ - ள்.) சண்டை வருவதற்குமுன்னே தனக்கு அரணாகிய காவலைப் பண்ணிக்கொள்ளாத அரசன், சண்டை வந்தபோது அரண் இல்லாதபடியினாலே பயப்பட்டுச் சீக்கிரத்திலே கெட்டுப்போவான் (எ - று).

அரண் இல்லாவிட்டால் தன்னைச் சேர்ந்தவர்கள் விட்டுப் போவார்கள்; அவர்கள் போனால், தான் தனியனா யிருந்து கெடுவன் என்பதாம். (கூ)

**570.** கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.

(இ - ள்.) கடுங்கோலனான அரசன், நீதிநூல் முதலானவைகளைக் கல்லாதபேரைத் தனக்குத் துணையாகக் கூட்டிக் கொள்வன்; அந்தக் கூட்டத்தைச் சுமந்து கொண்டிருக்கிற பூமிக்கு வெகுபாரம் (எ - று).

கடுங்கோல் என்பது மிக்க தண்டனை. தனக்கு இசைந்தாரையல்லது கூட்டாமையால், அவர்களைச் சுமக்கிறது வெகு பாரமாயிற்று. (கo)

---

## 58. கண்ணோட்டம்

அஃதாவது - தன்னுடனே சினேகம் பண்ணினபேர் சொன்ன காரியங்களை மறுக்கமாட்டாமை. இது அவர்கள்-மேல் கண்ணோட்டமாகிய தயை யுண்டானபடியினாலே அப் பெயர்த்தாயிற்று.

**571.** கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையா னுண்டிவ் வுலகு.

(இ - ள்.) கண்ணோட்ட மென்று சொல்லப்படுகின்ற தயை அரசரிடத்திலே உண்டானபடியினாலே, இந்த வுலகம் சுகமாய் இருக்கின்றது (எ - று).

அரசர் தயையில்லாவிட்டால் லோகத்துக்குச் சுகமில்லை.

**572.** கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை.

(இ - ள்.) உலகஇயற்கை கண்ணோட்டத்தினாலே யுண்டாம்; ஆகலான், அந்தக் கண்ணோட்ட மில்லாதவர்கள் உண்டாகிறது பூமிக்குப் பாரம் (எ - று).

உலகவியற்கையாவது-பெரியோர்கள் சொன்ன முறைமை தப்பாமல் நடக்கிறது. ஒருவர் செய்த குற்றங்களைப் பொறுக்கிறது முதலான இவை செய்யாத மனுஷர் தமக்கும் பிறர்க்கும் பயன்படார் (எ - ம்). (உ)

**573.** பண்ணென்னும் பாடற் கியைபின்றேற் கண்ணென்னுங்
கண்ணோட்ட மில்லாத கண்.

(இ - ள்.) இராகம் பாடுகிறவன் பாடுகிறதினுடைய லட்சணங்களை அறியாவிட்டால், அந்த ராகத்தால் என்ன பலன் உண்டாம். அதுபோல, கண்ணோட்டமில்லாத கண்கள் என்ன பயனைச் செய்யும் (எ - ம்).

பாடுகிற லட்சணமாவது - பாலையாழ் முதலாகியதும், நெஞ்சின் உள்ளாகிய மிடற்றிலே எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பித்தம், குடிலமென ஐந்தும், பெருவண்ணம் இடைவண்ணம் வனப்புவண்ணம் என்னும் வண்ணங்கள் எழுபத்தாறு

மாம். இவைகளோடு கூடாத ராகத்தினாலே பலன் இல்லாதது போல, கண்ணோட்டமாகிய தயையோடு கூடாவிட்டால் கண்ணாலே பலனில்லை (எ - ம்). (௩)

**574.** உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண்.

(இ - ள்.) கண்டவர்களுக்கு முகத்திலே கண்கள் இருக்கிறப்போலே காண்பிக்கிறதல்லாமல் வேறொன்றில்லை. அளவிறவாத கண்ணோட்டமில்லாத கண்கள் ஒரு பலனையும் செய்யமாட்டா (எ - று). (௪)

**575.** கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும்.

(இ - ள்.) ஒருவன் கண்ணுக்கு ஆபரணமாவது கண்ணோட்டம்: அந்தக் கண்ணோட்டமில்லாவிட்டால், அந்தக் கண்கள் அறிவுடையவர்களாலே புண்ணென்று சொல்லப்படும் (எ - று). (௫)

**576.** மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்.

(இ - ள்.) ஒடுதற்குரிய கண்ணோட்டமில்லாதவர்கள் நடந்து திரிந்தாலும், மண்ணோடே பொருந்திநிற்கிற மரத்தினை யொப்பர் (எ - று).

மனுஷனுககுத தயையில்லாவிட்டால், அவன் மரத்தோடு ஒப்பன் (எ - ம்). (௬)

**577.** கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்ட மின்மையு மில்.

(இ - ள்.) கண்ணோட்டமில்லாதவர் கண்ணுண்டாயிருந்தாலும் கண்ணுடையவர்கள் அல்லர்; கண்ணுடையவர்கள் கண்ணோட்டமில்லாமல் இருக்கிறதுமில்லை (எ - று).

கண்ணுடையவர்களானதற்கு லட்சணம் காட்சிக்கண்ணே அது ஓடுதல் (எ - ம்). (௭)

**578.** கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு.

(இ - ள்.) முறைசெயலாகிய தங்கள் தொழில் அழியாமற் கண்ணோட வல்ல வேந்தர்களுக்கு உரிமைஉடையது இவ்வுலகம் (எ - று).

அரசர்களுடனே சிநேகமானபேர் பிறரை வாதைப்படுத்திஞல் அவர்கள்பேரிலே பட்சம் வையாமற் தண்டித்தலும் முறைசிதையாதவழிக் கண்ணோடலும் ஒருவற்கு இயல்பாகலின், இவ்விரண்டும் உடைய ராசாக்களுக்கு உலக முழுதும் தம்வசமா மென்பதாம். (அ)

**579.** ஒறுத்தாற்றும் பண்பினர் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

(இ - ள்.) தம்மை ஒறுக்கு மியல்புடையாரிடத்தும் கண்ணோட்ட முடையராய் அவர் செய்த குற்றத்தைப் பொறுக்கிறதே அரசர்க்குத் தலையான இயல்பு (எ - று). (கூ)

**580.** பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

(இ - ள்.) தம்முடன் சிநேகிதமானபேர் நஞ்சையிட்டாலும் அவர்கள்மேலே கண்ணோட்டத்திஞலே அந்த நஞ்சைத் தள்ளமாட்டாமல் உண்டு, பின்னையும் அவர்களுடனே சிநேகமாய் இருப்பர்கள், எல்லாராலும் விரும்பப்பட்ட கண்ணோட்டத்தை உடையவர்கள் (எ - று).

நாகரிகம் என்பது கண்ணோட்டம். அரசர் தம்மாட்டுக் குற்றஞ் செய்தாரை யொறுது கண்ணோட்டஞ் செய்ய வேண்டும் (எ - ம்).

---

*

## 59. ஒற்றாடல்

அஃதாவது - பகைவர் பிறர் சிநேகிதர் என்னும் மூன்று திறத்தாரிடத்திலேயும் நடந்த காரியங்களை அறிகிறதற்கு ஒற்றுரை ஆளுகிறது. முன்னே சொன்ன லட்சணத்தையுடைய அரசர்கள் ஒற்றரையாள வேண்டும் என்பதாம்.

**581.** ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண்.

(இ - ள்.) ஒற்றும் கீர்த்தியுடனே கூடின நீதிநூலும் ஆகிய இந்த விரண்டையும் அரசன் தன் கண்களிரண்டு மென்று தெளிக (எ - று).

ஒற்றுத் தன்கண்செல்லமாட்டாத பரப்பெல்லாம்போய்க் கண்டு அங்கங்கே நடந்த காரியங்களை யெல்லாம் சொல்லு கிறதினாலேயும், நீதிநூல் நடந்த காரியங்களுக்கு நன்மைதீமை அறிவிக்கிறதினாலேயும், இந்த இரண்டையும் தனக்கு ஊனக் கண்ணாகவும் ஞானக்கண்ணாகவுந் தெளிந்துகொண்டு நடக்க வேணும் மென்பதாம். (க)

**582.** எல்லார்க்கு மெல்லாம் நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்.

(இ - ள்.) எல்லாரிடத்திலேயும் நடக்கிற காரியங்களை யெல்லாம் நாள்தோறும் ஒற்றராலே விரைந்து யறிதல் அரச னுக்கு உரித்தான தொழில் (எ - று.)

எல்லார்க்கு மென்றது-பகைவர், பிறர், சிநேகித ரென்னப்பட்ட மூன்று திறத்தாரையும். எல்லா மென்றது-நல்லவும் பொல்லாதனவுமாகிய சொற்களையுஞ் செயல்களையும். அவை நிகழ்ந்த போதே அவற்றிற்குத்தக்க வழியாகப் பரிகரித்தல் வேண்டும் (எ - ம்).

583. ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில்

(இ - ள்.) ஒற்றினாலே எல்லார்கண்ணும் நடக்கிற காரியங்களை யறிந்து, அதனா லெய்தும் பலன்களை யறியாத வரசன் வெற்றியடையக் கிடந்தது வேறொரு நெறி யில்லை (எ - று).

அவர்கள்அவர்கள் நடக்கிறதுஞ் சொல்லுகிறது மறியாமற் பகைவற் கெளியவனாவன். ஆனபடியினாலே, ஒற்று வேண்டு மென்பதாம். (௩)

584. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று.

(இ - ள்.) தம் காரியஞ்செய்வார் சுற்றத்தார் பகைவரென்று சொல்லப்பட்ட அனைவரையுஞ் சொற்செயல்களான ஆராய்வானே ஒற்றனாவான் (எ - று).

தன்காரியஞ் செய்கிறபேர் செய்கிறதும், சுற்றத்தார் தன்னிடத்தும் நாட்டிடத்தும் செய்கிறதும், பகைவர் தன் அற்றம் ஆராய்தலும் மேல் தெறப்படுதலும் முன்னிட்டுத் தன்னிடத்துச் செய்வனவும் அறிந்தாராய்ந்து அவற்றிற் கேற்றன செய்ய வேண்டுதலின், மூவகையாரையும் எஞ்சாமல் ஆராய வேணும் (எ - ம்). (௪)

585. கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகாஅமை வல்லதே யொற்று.

(இ - ள்.) ஒற்றப்பட்டார் கண்டால் சந்தேகப்படாத வடிவோடு பொருந்தி, அவர்கள் அண்டையிலே யிருக்கையிலே அவர்கள் கடினமாகப் பார்க்கிற பார்வைக்கும் பயப்படாமல் மனத்திடமாயிருந்து மறவாமற் கேட்டிருக்கவல்லவனே ஒற்றனாவான் (எ - று).

சந்தேகப்படாத வடிவாவன - பார்ப்பார், வணிகர் முதலாயினோர்வடிவு. (௫)

586. துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று.

(இ - ள்.) சகலத்தையும் துறந்தவர்களாயும் விரதசீலாசாரங்களுள்ளவர்களாயும் உள்புகுதற்கரிய விடங்களெல்லாம்

உள்புகுந்து ஆராய வேண்டியதை யாராந்தறிகிறதிலே அவர்கள் கண்டு பிடித்துக்கொண்டு எத்தனை வாதைப் படுத்திக் கேட்டாலும் தன்னையின்னானென்று வெளிப் படுத்தாதவனே ஒற்றனாவான் (எ - று).

விரதவொழுக்கங்க ளுள்ளவர்களே கபடஞ் செய்யா ரென்று துன்பஞ்செய்யாது விடுவர் (சு)

**587.** மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
ஐயப்பா டில்லதே யொற்று.

(இ - ள்.) ஒற்றப்பட்டார் மறையச் செய்த காரியங்களை அவர்க்குள்ளாயினாரால் கேட்கவல்லனாய்க் கேட்டறிந்த செயல்களிற் பின்னை ஐயப்படாது துணியவல்லவனே ஒற்ற னாவான் (எ - று).

மறைந்தவை சொல்லுகிறவர்களை யறிந்து, அவர்கள் உபத் திரவம் பண்ணுமற் றானே கேட்டதாகச்சொல்லி, அதற்கேற்ற சொல்லாகச் செயலாக முன்னே விளைத்து, காரியங்களைக் கேட்டுச் சொல்லுகிறபோது சந்தேகப்படாமல் சொல்லவேணு மென்பது. ஐயப்பட்டுச் சொன்னால் அரசனால் அதற்கேற்ற செயல்களைச் செய்யப் போகாது. (எ)

**588.** ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோர்
ஒற்றினா லொற்றிக் கொளல்.

(இ - ள்.) ஓரொற்றன் கண்டுவந் தறிவித்த காரியத்தைப் பின்னையோரொற்றனை விட்டுப் பார்த்துவரச் சொல்லிப் பிறகு தெளிக (எ - று)

ஒருவன் ஒற்றப்பட் டவர்களோடு கூடிக்கொண்டு மாறுபடக் கூறலும் கூடுமாகலின், ஒருவன்மாற்றந் தேறப் படாது (எ - ம்). (அ)

**589.** ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப்படும்.

(இ - ள்.) ஒற்றரை யாளுமிடத்து ஒருவனையொருவன் அறியாமல் ஆள்க ; அப்படி ஆண்ட ஒற்றர்மூவரை ஒரு

பொருள்மேல் வேறுவேறு விட்டால், அம் மூவர் சொல்லு கிறதும் பயனால் ஒத்திருந்தால், மெய்யென்று தெளியப்படும் (எ - று).

ஒருவனை யொருவன் அறிந்தால் மூவரும் பேசிக்கொண்டு ஒப்பச் சொல்லுவர் (எ - ம்). (கூ)

590. சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை.

(இ - ள்.) மறைந்து நின்று கேட்டுவந்து சொன்ன ஒற்ற னுக்குச் செய்யுஞ் சிறப்பைப் பிறரறியச் செய்ய வேண்டாம். பிறரறியச் செய்தால், தன் மனசிலே வைத்திருக்கிற ரகசியத் தைப் பிறரறியப் பண்ணினதாம் (எ - று)

ரகசியமாவது - அவன் ஒற்றனாவதும், அவன் சொன்னது மாம். சிறப்புச் செய்யின், அயலார் சிறப்புப்பெற்றவன் யாரென்றும், பெறுதற்குக் காரணம் யாதென்றும் கேட்டு விரோதம் பண்ணுவர். (கo)

---

## 60. ஊக்கமுடைமை

அஃதாவது- மனஞ்சலியாமற் காரியஞ் செய்கிறதிலே முயற்சியுடையராதல்.

591. உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லா
ருடைய துடையரோ மற்று.

(இ - ள்.) ஒருவரை உடைய ரென்று சொல்லச் சிறந்தது ஊக்கமே. அந்த ஊக்கமில்லாதவர்கள் மற்றதென்ன வுண்டா யிருந்தாலும் இல்லாதவர்கள் (எ - று).

பொருள் முதலாகிய துண்டாயிருந்தாலும், அதைக் காத்து ரக்ஷிக்கத்தக்க ஊக்கமில்லாவிட்டால், இழந்துபோவார் (எ - ம்). (க)

**592.** உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

*(இ - ள்.) ஊக்கமுடைமையே ஒருவற்கு நிலைநின்ற வுடைமையாவது ; மற்றைப் பொருள் முதலான வுடைமைகள் நில்லாமல் விட்டு நீங்கிப்போம் (எ - று).*

*ஊக்கம் உள்ளத்துப் பண்பாகலின் அதற்கு நிலைநிற்றலும், பொருள் உடம்பினும் வேறுயழிதலின் அதற்கு நிலைநில்லாமையும் சொல்லப்பட்டன.* (உ)

**593.** ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்க
மொருவந்தங் கைத்துடை யார்.

*(இ - ள்.) பொருளை யிழந்தாராயினும் 'யாம் கைப்பொருளை யிழந்தோ'மென் றங்கலாயார், நிச்சயமான அறிவை கைப்பொருளாக வுடையார் (எ - று).*

*பொருள் வந்தபோதே ஒளியாமல் தர்மம் பண்ணவேணுமென்பதாம். அறஞ்செய்யாதவர் பொருளிழந்துபோவர் (எ - று).* (ங)

**594.** ஆக்க மதர்வினுய்ச் செல்லு மசைவிலா
வூக்க முடையா னுழை.

*(இ - ள்.) அசைவில்லாத ஊக்கத்தை யுடையானிடத்திலே பொருள் தானே வழிகேட்டுக்கொண்டு வரும் (எ-று).*

*அசைவில்லாத ஊக்கமாவது - வறுமை முதலானவற்றுற் றளராமை.* (ச)

**595.** வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
முள்ளத் தனைய துயர்வு.

*(இ - ள்.) நீர் நின்ற வளவினவாம் நீர்ப்பூக்களுடைய காம்பு ; அதுபோல, மனுஷர்களுக்கும் தங்கள் அறிவுக்குத் தக்க உயர்ச்சி யுண்டாம் (எ - று).*

*உயர்ச்சி - பொருள்படைகளால் மிகுதல்.* (ரு)

**596.** உள்ளுவ தெல்லா முயர்வுள்ளன் மற்றது
தள்ளினுந் தாளாண்மை நீர்த்து.

(இ - ள்.) ஒருவன் நினைக்கிறதெல்லாம் தன்னுடைய உயர்ச்சியையே நினைக்க; அந்த உயர்ச்சி வந்தெய்தாமற் போனாலும் பெருமையுடைத்து (எ - று).

நினைத்த கருமம் நல்லதானால், அது ஆகாவிடினும், பெரியோர் பழியாரென்பதாம். (சு)

**597.** சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு.

(இ - ள்.) யானை கூரிய வம்பாற் காயம் பட்டவிடத்துந் தளராது தன் பெருமையை நிலைநிறுத்தும்; அதுபோல, ஊக்கமுடையார் தாங் கருதிய உயர்ச்சிக்குத் தப்பு வந்தாலும் தளராமல் தம் பெருமையை நிலைநிறுத்துவர் (எ - று).

தாங்கள் நினைத்த கருமத்துக்கு விக்கினங்கள் வந்தாலும், அறிவுடையார் அவற்றைப் பரிகரித்து முடிப்பர் (எ - ம்). (எ)

**598.** உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) ஊக்கமில்லாதவர்கள் இந்த உலகத்தாருக்குள்ளே 'யாம் வண்மை யுடையோ' மென்று தம்மைத் தாம் மதித்தலைப் பெறார் (எ - று).

ஊக்கமில்லாவிட்டால் முயற்சி, பொருள், கொடை, செருக்கு இவைகள் முறையே யில்லாமற்போம்; இவை யில்லாவிட்டாற் சந்தோஷமில்லை யென்பதாம். (அ)

**599.** பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

(இ - ள்.) எல்லாமிருகத்துக்குள்ளேயும் பெரியது யானை; அது கூர்மையான கொம்பை யுடையது; ஆயினும் புலி யெதிர்ப்பட்டால் அதற்குப் பயப்படும் (எ - று).

புலியின் மிக்க வுடம்பும் கூரிய கொம்புமுடைய யானை ஊக்கமில்லாதபடியினாலே, ஊக்கமுடைய புலிக்கு அஞ்சுமாறு

போல, வலியுஞ் சேனையு முடையவர்கள் ஊக்கமில்லாராயின் அஃதுடையவர்களுக் கஞ்சுவர் (எ - ம்). (கூ)

**600.** உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு.

(இ - ள்.) ஒருவனுக்கு அறிவு ஊக்கமிகுதி ; அந்த ஊக்க மிகுதியில்லாதவர் மனுஷராகார்; மரங்களோடொப்பர். வடிவு மாத்திரமேயல்லாமல் அறிவு பேதமில்லை (எ - று).

மனுஷ்யாக்கைக்கு ஏற்ற அறிவில்லாதபடியினாலே 'மர' மென்றும், மரத்திற்குள்ள பலனில்லாதபடியினாலே 'மக்களா தலே வேறு' என்றுங் கூறினர். (கo)

---

## 61. மடியின்மை

அஃதாவது - நினைத்த காரியங்களைச் செய்கிறபோது சோம்புதல் இல்லாமல் திடமாயிருக்கிறது.

**601.** குடியென்னுங் குன்று விளக்க மடியென்னு
மாசூர மாய்ந்து கெடும்.

(இ - ள்.) ஒருவன் தான் பிறந்த குடி யென்னப்பட்ட விளக்கு, தன்னிடத்திலே மடி யென்னப்பட்ட இருள் வந்தடர, நந்திக் கெட்டுப்போம் (எ - று).

ஒருவன் உலகத்துக்கு ஏற்க நடக்கிற காலமெல்லாம் தன் வங்கிசம் பிரகாசமாயிருக்கும் ; உலகவியற்கை தப்ப நடந்தால், அவன் வங்கிசம் பிரகாசமில்லாமற் கெட்டுப்போம் (எ - ம்).

**602.** மடியை மடிய வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

(இ - ள்.) தான் பிறந்த குடியை மெத்தமெத்த உயரும் நற்குடியாகச் செய்ய வேண்டினவன், மடியைக் கெட்டுப்போக நடக்க வேணும் (எ - று).

முயற்சியோடுகூடி நடந்தால் மடி கெடும். மடியைப் பார்க்கிலும் பொல்லாதது பின்னை ஒன்று இல்லை. அந்த மடி கெட்டுப்போக நடந்தால் தாமும் பெருமைஅடைவர்; தாம் பெருமை அடையவே குடியு முயரும் (எ - ம்). (உ)

**603.** மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து.

(இ - ள்.) விட்டுவிடத்தக்க மடியைத் தன் மனசிலே வைத்திருக்கப்பட்ட அறிவில்லாதவன் பிறந்த குடி அவனுக்கு முன்னே தானே அழிந்துபோம் (எ - று).

மடியைக் கைக்கொண்டவன்குடி அழிவில் முற்படும் (எ - ம்). (ங)

**604.** குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு.

(இ - ள்.) மடியின்கண்ணே வீழ்தலான் நல்ல முயற்சியில்லாதவர்களுக்கு அவர்கள்குடியும் கெட்டுப்போய்க் குற்றமும் பெருகும் (எ - று).

விவேகமில்லாதவர்களுக்குக் குற்றம் அதிகமாம் (எ - ம்).

**605.** நெடுநீர் மறவி மடிதுயி லொன்குங்
கெடுநீரார் காமக் கலன்

(இ - ள்.) கொப்பெனச் செய்கிற காரியத்தை மெத்தெனச் செய்கிறோம் என்கிறதும், மறப்பும், மடியும், நித்திரையுமாகிய இந்த நாலும் சாகவேணும் என்கிறவர்களும் கெட்டுப் போகவேணுமென்கிறவர்களும் ஏறுங் கப்பல் (எ - று).

இந்த நான்கு காரியங்களை உடையவர்கள் கெட்டுப் போவர்கள் (எ - ம்). (ரு)

**606.** படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்
மாண்பய னெய்த லரிது.

(இ - ள்.) ஒருவனுக்குப் பூமிமுழுதும் ஆண்டவர்களுடைய செல்வம் தானே வந்து எய்தியவிடத்தும், மடி

யுடையவன் அதனால் வரப்பட்ட பலனை அடைகிறது அரிது (எ - று).

மடியுடையவனுக்கு பெரியசெல்வம் வந்தாலும், அந்தச் செல்வத்தை ரட்சிக்கத்தக்க முயற்சி இல்லாதபடியினாலே, அந்தச் செல்வம் அழியும் ; அழியவே அவன் துன்பம் நீங்காது (எ - ம்). (அ)

607. இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர்.

(இ - ள்.) மடியை விரும்பி நல்ல குணங்களை விரும்பாதார் தம்முடைய சுற்றத்தார் முன் கழறுதலை மிகச் செய்துபின், அவர்களாலே இகழ்ந்து பேசும் வார்த்தையைக் கேட்பார் (எ - று).

முன் இகழ்ந்து பேசினபடியினாலே பின் அவர்கள் பேசுகிறதற்கு மாறுத்தரஞ் சொல்லக்கூடாதபடியினாலே 'கேட்பர்' என்றார். (எ)

608. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும்.

(இ - ள்.) மடிமை நல்ல வங்கிசத்தானிடத்திலே தங்கி யிருந்தால் அது அவனுடைய சத்துருக்களுக்கு அவனை அடிமையாகப் பண்ணிவிடும் (எ - று).

அடிமையாவது- அவர்களால் ஏவப்பட்ட காரியங்களைத் தாழ்ந்து செய்தல் (எ - ம்) (அ)

609. குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

(இ - ள் ) ஒருவன் தன் மடிமையை ஒழித்துவிட்டால், அவன் குடியிலேயும் ஆண்மையிலேயும் வந்த குற்றங்கள் கெட்டுப்போம் (எ - று).

மடியானல்லாமல் பிற காரணங்களான் வந்த குற்றங் களும், மடியை விடவே, போம் (எ - ம்). (கூ)

610. மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
தாஅய தெல்லா மொருங்கு.

(இ - ள்.) மடிமையில்லாத அரசன், சகல லோகத்தையும் அளந்த சுவாமி கடந்த பரப்பெல்லாவற்றையும், வரிசையாலல்லாமல் ஒருங்கே அடையும் (எ - று).

மடியில்லாதவன் சகலபோகங்களையும் அடைவன் என்பதாம். (௬௰)

---

## 62. ஆள்வினையுடைமை

அஃதாவது - இடைவிடாத மெய்ம்முயற்சியை உடையனாதல். இது ஆள்வினையென்று காரியத்தாற் சொல்லப்பட்டது.

911. அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

(இ - ள்.) தம் சிறுமையை நோக்கி 'நாம் இந்தக் காரியத்தை முடிக்கிறது அருமை' என்று நினைத்து விசாரப்படாமல் இருக்கவேண்டும். அந்தக் காரியத்திற்கு ஏற்ற பெருமையை தமக்கு முயற்சி யுண்டாக்கும் (எ - று).

ஒரு காரியஞ் செய்யவேண்டின் அதை விடாது முயலவே தாம் பெரியராவர்; பெரியரானல் அரிய காரியங்களும் எளிதின் முடியும் (எ - ம்). (௧)

612. வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.

(இ - ள்.) காரியமாகிய குறையைச் செய்யாது விட்டாரை உலகமும் விடும். ஆகலால், செய்யப்படுங் காரியங்களை விடாமற் செய்யவேண்டும் (எ - று).

வினைக்குறையாவது - தாம் வாழ்நாள் குறைபடாமல் நிற்கும்வண்ணம் புண்ணியத்தைச் செய்தல். (௨)

**613.** தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) முயற்சி என்று சொல்லப்படுகின்ற உயர்ந்த குணத்தின்கண்ணே நின்றது, எல்லார்க்கும் உபகாரம் செய்தல் என்னும் மேம்பாடு (எ - று).

பொருளுடையவர்கள், பிறருக்கு உபகாரம் செய்தால், முயற்சியுடையார் என்பார் 'செருக்கு' என்றார். (ந)

**614.** தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.

(இ - ள்.) முயற்சியில்லாதவன் உபகாரம் பண்ண வேணு மென்று நினைக்கிறது, படையைக் கண்டால் அஞ்சும் பேடி தன் கையில் வாளை ஆளுந்தன்மை போல வில்லையாம் (எ - று).

பேடி வாளை எடுத்துக் கொண்டு சத்துருவைச் செயிக் கிறோம் என்று கருதிச் சென்றாலும், பயத்தால் செயிக்க மாட்டாதவாறு போல, முயற்சியில்லாதவன் உபகாரஞ் செய்ய நினைத்தாலும், தன் வறுமையாற் கூடாது (எ - ம்). (ச)

**615.** இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண்.

(இ - ள்.) ஒருவன் தனக்குச் சுகத்தை விரும்பாமற் காரியங்களையே முடிக்கிறதை விரும்புவான், தன் சுற்றத்தா ராகிய பாரத்தினுடைய துன்பத்தினை நீக்கி, அவர்களைத் தாங் குந் தூணும் (எ - று).

காரியத்தை வாஞ்சியாமற் காரணத்தை வாஞ்சிக்கிறவன் எல்லாப்பொருளும் எய்தும் என்பதாம். காரியமாகிறது வரப் போகிறது; காரணமாகிறது முன்செய்தது. (ரு)

**616.** முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்.

(இ - ள்.) ஒருவனிடத்திலே உண்டான முயற்சியாவது அவன் செல்வத்தினை வளர்க்கும்; முயற்சியில்லாமை தரித் திரத்தை அடைவித்து விடும் (எ - று).

வறுமை வந்துற்றால், எல்லாராலும் துன்புறுவான் (எ - ம்). (கூ)

617. மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள்.

(இ - ள்.) மடியுடையவனிடத்திலே மூதேவி இருப்பள்; மடியில்லாதானது முயற்சிக்கண்ணே மகாலட்சுமி விட்டுப் போகாமல் இருப்பாள் (எ - று). (எ)

618. பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி.

(இ - ள்.) பலனைத் தருவதாய விதியில்லாதது ஒருவற்கும் பழியன்று; அறியவேண்டுமவற்றை அறிந்து காரியஞ் செய்யாததே பழியாவது (எ - று).

அறியவேண்டுவனவாவது - வலி முதலாயின. அறிந்து விடாது முயலவே பலனும் என்பது கருத்து. (அ)

619. தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்.

(இ - ள்.) முயன்ற வினை விதிவகையால் நினைத்தபடிக்குப் பலன் தாராவிட்டாலும், முயற்சியினாலே தன் உடம்பு வருந்தினால் கூலியாகிலும் வரும்; விருதாவாய்ப் போகாது (எ - று).

தெய்வம் ரட்சிக்கும் என்று இராமல் முயற்சியாற் காரியஞ் செய்யவேண்டும் (எ - ம்). (கூ)

620. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

(இ - ள்.) பலனை விலக்குவதாய ஊழ்வினையையும் புறங் காண்பர், அந்த விலக்குக்கு இளையாமல் வினையை விடாமல் முயல்பவர் (எ - று).

ஊழ்வினை ஒருகால் இருகால்அல்லது பலகால் விலக்கலாகாமையின், பலகால் முயலுவர் பயன்எய்துவர் என்பதாம். தெய்வத்தால் இடுக்கண் வரினும், அதற்கு மனங்கலங்காமல் முயற்சி விடாமல் இருக்க வேண்டும் (எ - ம்). (கo)

## 63. இடுக்கணழியாமை

*அஃதாவது-வினையின்கண் முயல்வான், தெய்வத்தாலாதல் பொருளில்லாததினாலேயாதல் உடம்புவருத்தத்தாலாதல் தனக்கு உபத்திரவம் வந்தால், அதற்கு மனசு கலங்காமல் இருக்கிறது.*

**621.** இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில்.

*(இ - ள்.) ஒருவன் செய்த வினையால் தனக்கு உபத்திரவம் வந்தால், அதற்கு மனங்கலங்காது சந்தோஷப்படவேணும்: அந்த உபத்திரவத்தை மேன்மேலும் கெடுக்கவல்லது சந்தோஷத்தைப் போல்வது வேறொன்றில்லையாகலான் (எ-று).*

*சந்தோஷ முண்டாகவே துக்கம் கெடும் (எ - ம்).* (க)

**622.** வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும்.

*(இ - ள்.) வெள்ளத்தைப்போல அளவில்லாத துக்கங்களெல்லாம், அறிவுடையவன் தன் மனசிலே ஒன்றை நினைத்தவுடனே, கெடும் (எ - று).*

*ஒன்றை நினைக்கிறது-முன் செய்த தீவினை யென்பது.* (உ)

**623.** இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர்.

*(இ - ள்.) ஒருகாரியத்தைச் செய்கிற காலத்திலே அதற்கு வந்த துன்பத்திற்கு வருந்தாதவர் அத் துன்பத்துக்குத் தாங்கள் துன்பம் விளைப்பர் (எ - று).*

*வருந்துதல் - இளைத்து விட நினைத்தல்.* (ங)

**624.** மடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து.

*(இ - ள்.) வண்டி விலங்கினவிடத்திலே அதனை விலங்காமல் இழுக்கும் பகடுபோல, தான் எடுத்துக்கொண்ட*

காரியத்தை முடிக்கவல்லவனை வந்தடைந்த இடுக்கண் தானே துக்கப்படும் (எ - று).

பகடு வண்டியை இழுக்குங்கால், மருங்கு ஒற்றியும் மூக்கு ஊன்றியும் தாள் தவழ்ந்தும் சேற்றிலிருந்து அரிதின் உய்க்குமாறு போல, தன் மெய்வருத்தம் பாராது முயன்றுய்ப் பானுக்கு இடையூறு வாராது (எ - ம்). (ச)

**625.** அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும்.

(இ - ள்.) இடைவிடாது மேன்மேலும் இடுக்கண் வந் தனவாயினும், தன் மனசு திடம் விடாதவனுக்கு அந்த இடுக் கண்கள் தாமே கெட்டுப் போம் (எ - று). (ரு)

**626.** அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புத லறிந் தவர்.

(இ - ள்.) வறுமைக்காலத்து 'யாம் வறியமாயினம்' என்று மனத்திலே விசாரப்படுவரோ? செல்வக்காலத்து ஐசுவரியம் வந்ததென்று சந்தோஷப்படாதபேர் (எ - று).

பொருள்வந்து சந்தோஷப்படாதபேர் வறுமைக்காலத் தும் விசாரப்படார் (எ - ம்). (சு)

**627.** இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறுக் கொள்ளாதா மேல்.

(இ - ள்.) தேவகதி, மனுஷகதி, விலங்குகதி, நரககதி என்று சொல்லப்பட்ட நாலுகதிகளிலும் உள்ள உடம்புகள் துக்க மென்னும் வாளுக் கிரை யென்று கருதி, தனக்கு வந்த துக்கத்தைத் துக்கமாக நினையார் அறிவுடையார் (எ - று).

அறிவுடையவன், சரீரம் அநித்தியம் என்று, துக்கத்துக்கு விசாரப்படான் (எ- ம்). (எ)

**628.** இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
றுன்ப முறுத லிலன்.

(இ - ள்.) தன் உடம்புக்கு இன்பமானவற்றை விரும் பாதே, காரியத்தினாலே துக்கப்படுகிறதே இயல்பு என்று

தேறியிருப்பவன் தன் முயற்சியாலே துக்கப்படான் (எ - று). (அ)

**629.** இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன்.

(இ - ள்.) தான் செய்த காரியத்தினாலே தனக்கு இன்பம் வந்தபோது, அதனை அனுபவியாநின்று மனத்தால் விரும்பாதவன், துன்பம் வந்தபோதும் அதனை அனுபவித்து மனத்தால் வருந்தான் (எ - று).

இன்பத்தை விரும்பாதபடியினாலே, துன்பத்தை அனுபவித்தாலும் துக்கப்படான் (எ - ம்). (கூ)

**630.** இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு.

(இ - ள்.) ஒருவன் காரியஞ் செய்யுமிடத்து முயற்சியான் வந்த துன்பந்தன்னையே தனக்கு இன்பமாகக் கற்பித்துக் கொள்வனாகில், அதனால் தன் பகைவர் தன்னை எண்ணத் தக்க உயர்ச்சி உண்டாம் (எ - று).

துன்பத்தையும் இன்பமாக் கொண்டால், 'தொடங்கிய காரியம் முடிப்பன்' என்று பகைவர் அஞ்சுவர் (எ - ம்). (கo)

அரசியல் முற்றும்.

---

# அமைச்சியல்

## 64. அமைச்சு

அஃதாவது - அரசியல் நடத்தற்கேதுவாகிய அங்கங்களின் இயல்பு முப்பத்திரண்டதிகாரத்தாற் கூறுவான் எடுத்துக்கொண்டு, அமைச்சனதியல்பு பத்ததிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, முதற்கண் அமைச்சு கூறுகின்றார். அஃதாவது-மந்திரியுடைய குணலட்சணங்களைச் சொல்லுகிறது.

631. கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு.

(இ - ள்.) காரியஞ் செய்யுமிடத்து அதற்கு வேண்டிய ஆயுதங்களும், அதற்கேற்ற காலமும், அந்தக் காரியஞ் செய்கிறபோது இப்படிச் செய்தால் முடியுமென்பதும், அதனாற் பெறும் பலனும் அறிந்து செய்கிறவனே மந்திரியாவான் (எ - று). (க)

632. வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.

(இ - ள்.) ஒரு காரியஞ் செய்யுமிடத்திலே சலியாமல் இருக்கிறதும், குடிகளை ரட்சித்தலும், நீதிநூல்களைக் கற்றுச் செய்வன தவிர்வன அறிதலும், உற்சாகமும், தானே பொருள் காலம் செய்யுமாறு பலன் என்று சொல்லப்பட்ட ஐந்துடனே கூடிச் செய்யவல்லவனே அமைச்சன் (எ - று). (உ)

633. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

(இ - ள்.) பகை வந்த காலத்திலே பகைவர்க்குத் துணையாயினரைப் பிரித்தலும், தன் மனுஷரைப் போகவொட்டாமற்

பிரியஞ்சொல்லி நிறுத்திக்கொள்ளுகிறதும், முன்னே தன் ராசாவைவிட்டுப் பிரிந்துபோனவரைக் கூட்ட வேண்டிற் கூட்டுதலும் வல்லவனே மந்திரி (எ - று). (௩)

634. தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

(இ - ள்.) ஒருகாரியஞ் செய்ய வேண்டினபொழுது, பல வகை ஆலோசனை தோன்றினால், அவற்றுள் ஆகத் தக்கதை ஆராய்ந்து அறிகிறதும், அது செய்கிறபோது அதனால் வருகிற பலனை அறிந்து செய்கிறதும், ஒருத்தரைப் பிரிக்கிறதிலேயும் கூட்டுகிறதிலேயும் அவர்களுக்குத் துணிவு பிறக்க இதுவே செயல் என்று சொல்லுகிறதும் வல்லவனே மந்திரி (எ - று).

635. அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை.

(இ - ள்.) அரசராலே செய்யப்பட்ட தருமங்களை அறிந்து, தனக்கு வேண்டின கல்விகேள்விகளாலே நல்ல வார்த்தையை உடையவனும், எக்காலமும் காரியங்கள் செய்கிற திறமையை அறிந்தவன் அரசற்கு நல்ல துணையாம் (எ - று). (௫)

636. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை.

(இ - ள்.) தனக்குச் சுவபாவமாகிய அறிவைச் சாத்திரங்களுடனே கூட்டிவைத்துக்கொண்டிருக்கிற மந்திரிகளுக்கு மிக்க நுட்பத்தையுடைய சூழ்ச்சிகளாய் முன்நிற்பன யா உள? (எ - று).

எல்லாக் காரியங்களும் எளியனவாய் இருக்கும் (எ - ம்).

637. செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல்.

(இ - ள்.) சாத்திரப் பிரகாரத்தினாலே காரியஞ் செய்யும் வகையை அறிந்தபோதும், உலகத்திலே அப்பொழுது

நடக்கிற இயற்கையை அறிந்து அதற்கேற்கச் செய்யவேணும் (எ- று). (எ)

**638.** அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன்

(இ - ள்.) அறிந்துசொன்னவரது வசனத்தையுங் கேளாமல் தானும் அறியாவிட்டாலும், அந்தக் குற்றத்தினாலே அவனை இகழ்ந்துவிடாமல், அந்த ராசாவுக்கு உறுதியான வார்த்தை சொல்லுகிறது மந்திரிகளுக்கு முறைமை (எ - று).

**639.** பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ
ரெழுபது கோடி யுறும்.

(இ - ள்.) ராசாவின் அண்டையிலே இருந்துகொண்டு தப்பு நினைக்கிற மந்திரிஒருவனில் எழுபதுகோடி சத்துருக்கள் நல்லவராவர் (எ - று).

எதிர்த்த சத்துருக்களை வெல்லலாம்; அண்டையிலே இருந்து கேடு நினைக்கிறவர்களை வெல்லப்போகாது (எ - ம்).

**640.** முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர்.

(இ - ள்.) செய்யவேண்டின காரியங்களை முந்தி அடைவாக நினைத்துக்கொண்டிருந்தும், நிறைவேறச் செய்யாமல் விட்டுவிடுவர் திறமையில்லாதவர் (எ - று).

திறமையாவது - மேலே வரப்போகிற விகாதங்களை அறிந்து பரிகரித்துக்கொண்டு செய்கிறதும், தாங்கள் பயப்படாமல் கெட்டியாயிருக்கிறதுமாம். (௧௦)

---

## 65. சொல்வன்மை

அஃதாவது - தான் நினைத்த காரியம் முடிகிறதற்கேற்ற வார்த்தை சொல்ல வல்லவனாதல் என்பது.

**641.** நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று.

(இ - ள்.) பெரியவர்களாலே நல்ல வார்த்தையை உடையவன் என்று சொல்லப்பட்ட நாநலமுடையவனே நல்லவன். அந்த நாநலம் உலகத்தையெல்லாம் தனக்குச் சிநேகிதமாகப் பண்ணும் (எ - று).

நாவினுடைய நலம் பிறநலம்எல்லாவற்றினும் மிக்கது (எ - ம்). (க)

**642.** ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

(இ - ள்.) தனக்கும் தன்னையுடையவர்க்கும் செல்வமும் அழிவும் தன் வசனத்தால் வருமாதலால், அப்படிப்பட்ட சொல்லிலே சோர்வுகளைத் தங்களிடத்திலே வாராமற் காக்க வேணும் (எ - று).

நல்ல வார்த்தை செல்வத்திற்குக் காரணம்; பொல்லாத வார்த்தைக் கேட்டிற்குக் காரணம் (எ - ம்). (உ)

**643.** கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்.

(இ - ள்.) சிநேகமானவர்களை வேறுபடாமல் பிணிக்குங் குணங்களை அவாவி, பகைவர்கள் கேட்டால் முந்தின பகையை விட்டு நட்பினை விரும்பும் வண்ணம் சொல்லத்தக்கதே சொல்லாவது (எ - று).

சொல்லாவது-வழுவுதலில்லாதது, கொஞ்சமாயிருக்கிறது, பிரியமாயிருக்கிறது, பலன்களைக் கொடுக்கிறது, இனிதாயிருப்பது முதலானவற்றை யுடையதாம். (ந)

**644.** திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில்.

(இ - ள்.) நல்லதாகிய சொல்லைக் கேட்கிறவனுடைய திறமையை யறிந்து சொல்லுக; அந்தச் சொல்லுக்கு மேற்பட்ட அறமும் பொருளும் இல்லை (எ - று).

திறமை யறிந்து சொல்லுதலாவது - சொல்லுகிற வசனத்தினாலே, தமக்கும் அவர்க்கும் உண்டான ஏற்றக்குறைச்சலை யறிந்து சொல்லுதலாம். (ச)

**645.** சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.

*(இ - ள்.) தான் சொல்ல நினைத்த சொல்லைப் பிறி தொரு சொல்லாய் வெல்லவல்லதொரு சொல் இல்லாமையை யறிந்து, பிறகு அச் சொல்லைச் சொல்லுக (எ - று).*

*பிறிதோர் சொல்லாவது - பகைவர்சொல் (எ - ம்). (ரு)*

**646.** வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடன்
மாட்சியின் மாசற்றார் கோள்.

*(இ - ள்.) பிறருக்குத் தான் சொல்லுங்கால், அவர் பின்னையும் விரும்பிக் கேட்குமாறு சொல்லி, அவர்கள் தனக் குச் சொல்லுங்கால் அந்தச் சொல்லினுடைய பயனை யறிந்து கொள்ளுகிறது மந்திரிகளிலே குற்றமற்றவரியல்பு (எ - று).*

*பிறர்சொற்களிலே குற்றமுளவாயிருந்தாலும், அவை நோக்கி இகழார் (எ - ம்). (சு)*

**647.** சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
யிகல்வெல்லல் யார்க்கு மரிது.

*(இ - ள்.) தான் நினைத்த காரியங்களைப் பிறர்க் கேற்கச் சொல்லவல்லவனாய், வெகு சபை கூடியிருந்த இடத்திலே சோர்வில்லாதவனாய்ப் பயப்படாதவனை, மாறுபாட்டில் வெல்லுதல் எப்படிப்பட்டவர்களுக்கும் அரிது (எ - று).*

*சோர்விலனாவது - தான் நினைத்த காரியங்களை மறவா மற் சொல்லுதலாம். (எ)*

**648.** விரைந்து தொழில்கேட்கும் ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

*(இ - ள்.) சொல்லவேண்டிய காரியங்களை வரிசை யாய்த் தப்பாமற் சொல்லவல்லவர்களைக் கண்டால், உலகத்தார் அவற்றை விரைந்து ஏற்றுக்கொள்வர் (எ - று). (அ)*

**649.** பல சொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்ற தவர்.

*(இ - ள்.) குற்றமில்லாதனவாயிருக்கிற சில வார்த்தை களை முன்பின்னறிந்து வரிசையாய்ச் சொல்லமாட்டாதவர்*

பலவாய வார்த்தைகளைத் தொடுத்துச் சொல்ல விரும்புவர் (எ - று). (௯)

650. இணருழ்த்து நாறு மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.

(இ - ள்.) தான் கற்ற நூல்களைப் பிறரறியத் தக்கபடி விரித்துச் சொல்லமாட்டாதார், மலர்ந்தும் மணமில்லாத பூவோ டொப்பர் (எ - று).

மலர்ந்தாலும் மணமில்லாத பூ முடிக்கப்படாதவாறு போல, நூல்களைக் கற்றாலும் பிறருக்குத் தெரிய விரித்துச் சொல்லமாட்டாதவர் நன்கு மதிக்கப்படார் (எ - ம்). (௰)

---

## 66. வினைத்தூய்மை

அஃதாவது - செய்யப்படுங் காரியங்கள் பொருளே யன்றி அறமும் புகழுங் கொடுத்து நல்ல ஆதல்.

651. துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும்.

(இ - ள்.) ஒருவனுக்கு நல்ல துணை யுண்டானால், அது செல்வமொன்றையுங் கொடுக்கும்; செய்யப்படும் வினை நல்ல தானால், அவன் வேண்டிய எல்லாங் கொடுக்கும் (எ - று). (க)

652. என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

(இ - ள்.) தனக்கு இம்மையிலே புகழும் மறுமையிலே தருமமும் கொடாத காரியத்தை, என்றைக்குஞ் செய்யாமல் விட்டுவிடவேணும் (எ - று). (உ)

653. ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர்.

(இ - ள்.) மேலே செல்வம் வரவேணும் என்று நினைத்துக் காரியஞ் செய்கிறவர்கள், தங்கள் கீர்த்தி கெடத்தக்க காரியங்களைச் செய்யாமல் தவிர்க (எ - று).

செல்வம் நிலையற்றது ; புகழ் எந்நாளும் நிற்குமானபடியினாலே, புகழ்கெடத்தக்க காரியங்களைச் செய்யவேண்டாம் (எ - ம்). (௩)

654. இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

(இ - ள்.) தமக்குத் துக்கம் வந்தாலும் அது தீரும் பொருட்டுக் குற்றம் வரத்தக்க காரியங்களைச் செய்யார், நல்ல நெறிகளை உடையவர் (எ - று).

சிறிதுபொழுதிலே விட்டுப்போகிற துக்கத்துக்காக, நெடுங்காலம் அபகீர்த்தி நிற்கத்தக்க காரியங்களைச் செய்யலாகாது (எ - ம்). (௪)

655. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

(இ - ள்.) 'நாம் என்ன காரியஞ்செய்தோ' மென்று பின் தானே விசாரப்படத்தக்க காரியங்களைச் செய்யாமல் இருக்க வேணும் ; அல்லாமல், மயங்கி அறிவில்லாமல் ஒருகாற் செய்தால், பின் அவ் விரங்கல்களைச் செய்யாமல் இருக்கவேணும் (எ - று).

என்ன காரியஞ் செய்தோ மென்று விசாரப்பட்டால், அது தீர்க்கும் வழி அறியாதவன் என்றும் மனசு திடமில்லாதவனென்றும் பலனில்லாத காரியஞ்செய்தா னென்றும் தன்பழியைத் தானே தூற்றுகின்றா னென்றும் எல்லாராலும் இகழப்படுதலின், இரங்கி விசாரப்படாமலிருக்கிறதே நல்லது (எ - ம்). (௫)

656. ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

(இ - ள்.) தன்னைப் பெற்ற தாயானவள் பசித்திருக்கக் கண்டாலும், அதற்காகப் பெரியோர்கள் பழிக்கத்தக்க காரியங்களைச் செய்யவேண்டாம் (எ - று). (௬)

**657.** பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை.

*(இ - ள்.) அறிவிலார் தீவினையைச் செய்து அதனால் பழியைத் தம்மேற்கொண்டு பெற்ற செல்வத்திலை, அது மேற்கொள்ளாத அறிஞர் அனுபவிக்கும் மிக்க தரித்திரமே உயர்ந்தது (எ - று).* (எ)

**658.** கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதா
முடிந்தாலும் பீழை தரும்.

*(இ - ள்.) பெரியோர்கள் ஆகாதவை என்று சொன்ன காரியங்களைத் தாமும் ஆகா என்று விடாமல், பொருளுக்காக ஆகாத காரியங்களைச் செய்து முடித்தாலும், அவை பிறகு துக்கத்தைக் கொடுக்கும் (எ - று).* (அ)

**659.** அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை.

*(இ - ள்.) ஒருவன் பொல்லாத காரியங்களைச் செய்து, பிறர் விசாரப்படத் தேடின பொருள்களெல்லாம் இம்மையிலே அவன் தானே விசாரப்படத்தக்கதாய்ப் போய்விடும்; நல்ல காரியங்களைச் செய்து தேடின பொருள்கள் முன்னே இழந்து போனாலும், பின் வந்து பலன்களைக் கொடுக்கும் (எ - று).* (கூ)

**660.** சலத்தாற் பொருள்செய்தே மாக்கல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

*(இ - ள்.) ஒருவன் பொல்லாத காரியங்களைச் செய்து பொருளைத் தேடிவைத்துக்கொள்ளுகிறது எப்படிப்போல என்றால், பச்சைப்பானையிலே தண்ணீரை வார்த்து அதற்குக் கனம் பண்ணுகிறுப்போலேயாம் (எ - று)*

*செய்கிறபோது நன்மைபோலே இருந்து, பிறகு கேடு* ***உண்டாகும் (எ - ம்).*** (கo)

## 67. வினைத்திட்பம்

அஃதாவது - நல்ல காரியங்களைச் செய்துமுடிக்கிற வனுக்கு வேண்டிய மனத்திண்மை.

**661.** வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்பம்
மற்றைய வெல்லாம் பிற.

*(இ - ள்.) ஒருகாரியம் செய்கிறதிலே கெட்டி என்று சொல்லப்படுகிறது அவனுடைய மனசுத் திடமே; அது வல்லாமல் மற்றைய எல்லாம் கெட்டியல்ல (எ - று).*

*மற்றைய என்றது-காரியம் செய்வதற்கு வேண்டின ஆயுதங்கள் சேனை முதலியவற்றின் திண்மைகள் (எ - ம்).* (௧)

**662.** ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப ராய்ந்தவர் கோள்.

*(இ - ள்.) நீதிபரராயிருப்பவர்களுடைய நினைவு குற்றம் வரத்தக்க காரியங்களைச் செய்யாமையும், செய்யப்பட்ட காரியம் கருமவசத்தினாலே பழுதுபடின் அதற்கு விசாரப்படாமலிருக்கிறதும் ஆகிய இவ் விரண்டின வழி என்பர் நூலோர் (எ - று).*

*செய்த பிறகு விசாரப்பட்டால், அது தீர்க்கும்வகை அறியான் என்றும் பிறர் இகழ்வர் (எ - ம்).* (௨)

**663.** கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி
னெற்றா விழுமந் தரும்.

*(இ - ள்.) செய்யவேண்டிய காரியங்களை முடிந்தபின் அறியும்வகை பண்ணி, அதற்கு முன்னெல்லாம் மறைத்துப் பிறரறியாமற் செய்கிறதே மனசுத் திடமாவது; அப்படியல்லாமல், செய்யும்பொழுது பிறர் அறிந்தால், அது செய்கிறவனுக்கு ஒருகாலும் நீங்காத துக்கம் கொடுக்கும் (எ - று).*

*பகைவர் அறிந்தால் காரியங்களை விகாதம் பண்ணுவர் (எ - ம்).* (௩)

**664.** சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்.

*(இ - ள்.) "நாம் இந்தக் காரியத்தை இப்படிச் செய்வோ" மென்று கெட்டியாய்ச் சொல்லுகிறது எல்லாருக்கும் எளிதாய் இருக்கும்; சொன்ன காரியத்தை அப்படியே செய்து முடிக்கிறது எல்லார்க்கும் அருமையாம் (எ - று).* (ச)

**665.** வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க
ணூறெய்தி யுள்ளப் படும்.

*(இ - ள்.) எண்ணத்தாலே கெட்டிக்காரனாய், மற்றுமுள்ள லட்சணங்களாலும் குறையில்லாதவன் செய்யுங் குற்றமில்லாத காரியம் அரசனாலே சந்தோஷப்பட்டு எந் நாளும் நினைக்கப்படும் (எ - று).*

*அரசன் நினைத்தால், செய்தவனுக்குப் பெரிய செல்வம் வந்தெய்தும் (எ - ம்).* (ரு)

**666.** எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

*(இ - ள்.) தாம் நினைத்தபடியே எல்லாக்காரியத்தையும் செய்து முடித்து அந்தப் பலத்தை அடைவர், நினைத்தவர் கெட்டி மனசை உடையரானால் (எ - று).* (சா)

**667.** உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்ன ருடைத்து.

*(இ - ள்.) ஓடுகிற பெரிய தேருக்குக் கடையாணிபோலக் காரியத்திலே சமர்த்தனானவன் உருவு கொஞ்சமாயிருந்தாலும், அவனுருவைக் கண்டு இகழவேண்டாம் (எ - று).*

*அச்சினுடைய ஆணி சிறிதாயிருந்தும் பெரியதாய் இருக்கிற தேரினுடைய வண்டியை கழலவொட்டாமல் நிறுத்துகிறப்போல, உருவு கொஞ்சமாயிருந்தாலும் மனசுத்திடமுள்ளவன் பெரிய காரியங்களைச் செய்து முடிப்பன் (எ - ம்).* (எ)

**668.** கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல்.

*(இ - ள்.) மனசு தெளிந்து செய்யவேணும் என்று நினைத்த காரியத்தை ஆலஸ்யம் பண்ணுமல் செய்யவேணும் (எ - று).*

*மனசு கலங்கினுல், செய்வதுஞ் தவிர்வதும் அறியப் போகாது; தெளிந்த காரியத்தை ஆலஸ்யம் பண்ணினுல் பின்பு நிறைவேறுது (எ - ம்.)* (அ)

**669.** துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.

*(இ - ள்.) காரியஞ் செய்கையிலே உடம்புவருத்தத்திலே துக்கம் வெகுவாய் வந்தாலும், அதனைப் பொறுத்துச் செய்ய வேணும்: பிறகு சுகத்தையும் நன்மையையும் கொடுக்கிற காரியமானுல் (எ - று).* (கூ)

**670.** எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.

*(இ - ள்.) காரிய ஆலோசனையிலே தெரிந்து பண்ணுகிற கெட்டி மனசை 'இது நமக்கு நல்லது' என்று கொள்ளாதவர்களை, மற்றைக் கெட்டியெல்லாம் உண்டாயிருந்தாலும், பெரியோர் எண்ணுர் (எ - று).*

*மனசு உறுதியில்லாதவர்க்குப் படை, அரண், நட்புமுதலாகிய திடங்களெல்லாம் உண்டாயிருந்தாலும், நினைத்த கருமம் முடியாதாம்; ஆகவே, மனசு திடமாகவே, சகலகாரியமும் முடியும் (எ - ம்).* (கo)

## 68. வினைசெயல்வகை

அஃதாவது - மனசு திடமுடையவன் அக் காரியங்களைச் செய்கிற வகை என்பது.

**671.** சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குத றீது.

(இ - ள்.) ஆலோசனைக்கு வேண்டிய வகையெல்லாம் விசாரித்து ஆலோசனை பண்ணி, இதற்குத் தப்பில்லை என்று நிச்சயித்துத் துணிந்தபிறகு, அந்தக் காரியத்தைச் செய்யாமல் ஆலஸ்யம் பண்ணுகிறது பொல்லாது (எ - று).

பிறகு பார்த்துக்கொள்வோம் என்று எண்ணின், வெகு குற்றம் வந்துவிளையும் (எ - ம்). (க)

**672.** தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

(இ - ள்.) ஆலோசனையிலே பார்த்து மெத்தெனச் செய்ய வேண்டின காரியத்தை மெள்ளச் செய்யவேணும்; சீக்கிரமாய்ச் செய்யவேண்டிய காரியத்தைக் கொப்பெனச் செய்ய வேணும் (எ - று). (உ)

**673.** ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.

(இ - ள்.) ஒருகாரியஞ் செய்யுங்காலத்துத் தனக்குச் செல்வாக்குண்டானால், பலவந்தத்திலே செய்து முடிக்கலாம்; செல்வாக்கு இல்லாமல் சமானமானபோதும் எளியவனானபோதும் சாமமாகிய நல்ல வார்த்தையினாலேயும் தானமாகிய இரப்பு வார்த்தையினாலேயும் செய்து முடிக்கவேணும் (எ - று). (ங)

**674.** வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்
றீயெச்சம் போலத் தெறும்.

(இ - ள்.) செய்யத்தக்க காரியமும் செயிக்கவேண்டிய பகையும் என்று சொல்லப்பட்ட இரண்டும் நிறைவேறச்

செய்து முடியாமல் குறைவைத்தால் நெருப்புப் பற்றின விடத்திலே அவித்துச் சேஷம் வைத்தாற்போல, பின்பு அதிக மாய் வளர்ந்து கெடுக்கும் (எ - று).

ஆனபடியினலே, செய்யவேண்டின காரியங்களை நிறை வேறச் செய்யவேணும் (எ - ம்). (௪)

**675.** பொருள் கருவிகாலம் வினையிடனொ டைந்து
இருடீர வெண்ணிச் செயல்.

(இ - ள்.) ஒருகாரியஞ் செய்யுமிடத்துப் பொருளையும் ஆயுதங்களையும் காலத்தையும் காரியத்தையும் இடத்தையும் நன்ருக வாராய்ந்து செய்யவேணும் (எ - று).

பொருள் என்றது-செலவும் ஆதாயமும்; கருவி என்றது-தன் சேனையும் மாற்ருன்சேனையும். காலம் என்றது-தமக் காங் காலமும் பிறர்க்காங் காலமும்; காரிய மென்றது-தாம் வல்ல வினையும் பிறர் வல்ல வினையும்; இடம் என்றது-தாம் வெல்லும் இடமும் பிறர்வெல்லும் இடமும். இவ் வைந்தையும் தாம் வெல்லுந் திறத்தைத் தபபாமல் எண்ணிச் செய்ய வேணும் (எ - ம்) (௫)

**676.** முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

(இ - ள்.) ஒருகாரியஞ்செய்யுங்காலத்து, அது முடிக்கத் தக்க முயற்சியும், அதற்கு வரப்பட்ட இடையூறும், அந்த இடையூறு நீங்கினல் தான் எய்தும் பலனும் சீர்தூக்கி ஆராய்ந்து செய்க (எ - று). (௬)

**677.** செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கொளல்.

(இ - று.) ஒருகாரியத்தைச் செய்யத் தொடங்கினன் செய்யும் முறைமையாவது, அந்தக் காரியத்தை முன்னே செய்து பலன்பெற்றவன்மனத்தை அறிந்துகொண்டு செய்ய வேணும் (எ - று).

முன் செய்தவன்மனசை அறிந்தால் அழிகிறதும் ஆகிற தும் அறியலாம் (எ - ம்). (எ)

678. வினையான் வினையாக்கிக் கோட லனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

(இ - ள்.) ஒரு காரியஞ் செய்கிறவன் அந்தக் காரியத்தி ஞலே பின்னையுமொரு காரியத்தை முடித்துக்கொள்ள வேணும். அது மததாரையால் நனையப்பட்ட கபோலத்தை யுடைய யானையாலே பின்னையும் ஒரு யானையைப் பிடிக்கிற தனேடு ஒக்கும் (எ - று).

செய்யப்போகிற காரியத்திஞலே பின்னையுமொரு காரியம் முடியத்தக்க உபாயம் நினைத்துச்செய்யவேணும் (எ - ம்). (அ)

679. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல்.

(இ - ள்.) காரியஞ்செய்கிறவன் தன் சினேகிதருக்கு நல்லது செய்கிறதிலும், தன் பகைவரைத் தனக்கு உறவாகச் செய்துகொண்டு காரியஞ்செய்கிறது நல்லது (எ - று).

சினேகிதருக்கு நன்மைசெய்து, பகைவரைச் சாம பேதங் களிஞலே உறவாக்கிக்கொள்ளுகிறது மிக நன்று (எ - று). (கூ)

680. உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.

(இ - ள்.) கொஞ்சமான ராச்சியத்திலே இருக்கிற மந்திரி கள், தங்களிலும் பலவந்தர் வந்து எதிர்த்தால், தங்கள் சேனை நடுங்குதலுக்குப் பயப்பட்டு, எதிராளியை வணங்கிச் சமா தானம் பண்ணிக்கொள்வர் (எ - று).

எளியாரோடு சந்திக்கு வலியார் இயைதல் அரிதாகலின், 'பெறின்' என்ருர். எளியாராயினுர் எதிராளியை வணங்கிச் சமாதானம் பண்ணிக்கொள்ளவேணும் (எ - ம்). (௧0)

---

## 69. தூது

அஃதாவது - எதிராளியிடத்திலே போய்த் தான் தெரிந்து சொல்லிவருகிறதும், சொன்னது சொல்லிவருகிறதும். தான் சொல்லிவருகிறவன் மந்திரியோடொப்பன்; சொன்னது சொல்லிவருகிறவன் மந்திரியிலுங் கால்வாசி குணங் குறைந்தவன்.

**681.** அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

(இ - ள்.) தயையுடையவனும், நல்லகுடியிலே பிறந்தவனும், அரசர்கள் சந்தோஷப்படத்தக்க குணமுடையவனுமாயிருக்கிறவனே தூதனாவான் (எ - று). (க)

**682.** அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று.

(இ - ள்.) தன்னுடைய அரசனிடத்திலே தயையுடையவனும், தன் அரசனுக்கு ஆகிற காரியத்தை யறியும் அறிவுடையவனும், அந்தக் காரியத்தை மறுமண்டலத்து அரசர்களுடனே சொல்லுகிறபோது ஆராய்ந்தறிந்து சொல்லுகிறவனுமாயிருக்கிறவனே தூதனாவான் (எ - று).

இப்படிப்பட்ட தூதுவனுக்கு மந்திரியின் குணங்களும் வேண்டும் (எ - ம்). (உ)

**683.** நூலாரு ணூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

(இ - ள்.) வேலாயுதங்களையுடைய மறுமண்டலத்து அரசர்களண்டையிலே போய்த் தன் அரசனுக்கு வென்றிதருங் காரியத்தைச் சொல்லுகிறவனுக்கு இலக்கணமாவது, நீதிநூலை யறிந்த மந்திரிகளைப்பார்க்கிலும் தான் அந் நீதிநூல்களைக் கற்றுவல்லனாதல் (எ - று). (ங)

**684.** அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு.

(இ - ள்.) சுவபாவமான அறிவும், கண்டபேர் சந்தோஷப் படத்தக்க நல்ல வடிவும், ஆராய்ந்து அறிந்த கல்வியும் இந்த மூன்று குணமுமுடையவன் தூதுபோக வல்லவன் (எ - று).

இவற்றால் நன்கு மதிப்புடையவனாகவே, வினை இனிது முடியு மென்பது கருத்து. (சு)

685. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது.

(இ - ள்.) வேற்றரசருக்குத் தன் அரசன் சொன்ன காரியங்களைச் சொல்லும்வழி நன்றாய்த் தெரியச் சொல்லியும், பொல்லாத காரியங்களைச் சொல்லுகிறபோது கடினவார்த்தைகளைச் சொல்லாமல் நல்ல வசனங்களினாலேயே அவன்மனது குளிரச்சொல்லியும், தன் அரசனுக்கு நன்மைவர நடக்கிறவனே தூதனும் (எ - று).

பலவிதமான காரியங்களுக்கு உடன்படாதார் அவற்றிற்குக் காரணமானதொரு காரியத்தைச் சுருக்கமாகச் சொன்னால் அதற்கு உடன்படுவர்; பொல்லாத காரியங்களுக்கு மனமகிழச் சொன்னால், பொல்லாங்கு தெரியாமல் உடன்படுவர். ஆனபடியினாலே தன் காரியந் தப்பாமல் முடியும் (எ - ம்). (௫)

686. கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்
றக்க தறிவதாந் தூது.

(இ - ள்.) நீதிநூல்களைக் கற்றுத் தான்போன கருமத்தைப் பகையாளிமனசு சந்தோஷப்படச் சொல்லுகையிலே, அவர்கள் கோபித்துக்கொள்ளுகிறதுக்குப் பயப்படாமல்,காலத்துக்குத் தக்க உபாயம் அறிகிறவனே தூதனும் (எ - று). (சு)

687. கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை.

(இ - ள்.) வேற்றரசரிடத்துத் தான் செய்யும் முறைமையறிந்து, அவர் சந்தோஷவேளை பார்த்துத் தான் சொல்லுகிறதுக்கு இடனறிந்து, சொல்லுகிற வரிசையை முன்னே விசாரித்துக்கொண்டு சொல்லுகிறவனே தூதர்களுக்குக்கெல்லாம் தலையானவன் (எ - று). (எ)

**688.** தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

(இ - ள்.) தன்னுடைய அரசன் சொன்ன வார்த்தையை அவன் சொன்னபடியே வேற்றரசருக்குச் சென்று சொல்லு வானது இலக்கணமாவது, பொருள் காமங்களாலே சுத்தனு தலும், தனக்கு மாற்றரசனுடைய மந்திரிகள் துணையாதலும், துணிவுடைமையு மென்று சொல்லப்பட்ட இந்த மூன்று குணங்களுடனேகூட மெய்ம்மை யுண்டாயிருத்தல் (எ - று).

பொருள் காமங்களாலே சுத்தனுகிறது - திரவிய ஆசையி னுலேயும் ஸ்திரீமோகத்தினுலேயும் மனது பேதியாமலிருக் கிறதாம். (அ)

**689.** விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

(இ - ள்.) தன் அரசன் சொன்ன வார்த்தையை வேற்றர சனுக்குச் சொல்ல உரியவன், தனக்கு வருகிற குற்றத்துக்குப் பயப்பட்டு, அவனுக்குத் தாழ்வான வார்த்தையைச் சொல் லாத திண்மையை உடையவன் (எ - று). (கூ)

**690.** இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

(இ - ள்.) தன் அரசன் சொன்ன வார்த்தையை வேற்றர சற்குச் சொல்லுகிறபோது, தன் பிராணனுக்கு அழிவு வந்தா லும், அதற்கு அஞ்சாமல் தன் அரசன் சொன்னபடியே சொல்லுகிறவனே தூதனுவான் (எ - று).

தன் உயிருக்கு அஞ்சாமல் அரசனுக்கு உறுதி உண்டாக்க வேணும் (எ - ம்). (க0)

---

## 70. மன்னரைச் சேர்ந்தொழுகல்

அஃதாவது-அரசர்களைச் சேர்ந்திருக்கிறவர்களுடைய லக்ஷணங்களைச் சொல்லுகிறது.

**691.** அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

(இ - ள்.) அரசர்கள் அண்டையிலே சேர்ந்திருக்கிறவர் தூரவிட்டுப் போகாமலும், அதிகமாக நெருங்காமலும் நடுவாகத் தீக்காய்கிறவர்களைப்போல இருப்பராக (எ - று).

மெத்தத் தூர இருந்தால் பலன் வாராது; மெத்தச் சேர்ந்திருந்தால் எண்ணிக்கை யில்லாமற்போம் (எ - ம). (க)

**692.** மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந் தரும்.

(இ - ள்.) தாம் சேர்ந்திருக்கும் அரசர்கள் ஆசைப்பட்ட வஸ்துக்களை தாம் ஆசைப்படாம லிருக்கவேணும்; அப்படி இருத்தல் அவர்களுக்கு அந்த அரசனாலே நிலைபெற்ற செல்வத்தை கொடுக்கும் (எ - று).

அரசன் வேண்டின வஸ்துக்களைப் பதனம் பண்ணி, அவன் வேண்டினபொழுது கொடுத்தால், அந்த வஸ்துவை அனுபவித்த சந்தோஷத்தினாலே, அவ்வஸ்துவைக் கொடுத்தவனுக்கு வெகு சிறப்புச் செய்வர் (எ - ம்). (உ)

**693.** போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
றேற்றுதல் யார்க்கு மரிது.

(இ - ள்.) மந்திரிகள் தங்களைக் காக்க நினைத்தால், பெரிய குற்றங்கள் தங்களிடத்திலே வாராமற் காக்கவேணும்; அந்தக் குற்றம் வந்ததென்று கேட்டு அரசன் ஐயுற்றால், அவனைத் தேற்றுகிறது எவருக்கும் அருமையாம் (எ - று).

பெரிய குற்றமாவன - அரசன் செய்த குற்றங்களைச் சொல்லுதல், அரசனுக்கு உரிய பொருள்களை எடுத்துக் கொள்ளல் முதலாயின. ஒருவிதமாகத் தேற்றினாலும், கடளியைக் கண்டாற் பொருள் தோன்றுமாறு போல, குற்றஞ் செய்தவனைக் கண்டால் அக் குற்றம் தோன்றும் (எ-ம்) (ந)

**694.** செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக
லான்ற பெரியா ரகத்து.

(இ - ள்.) அரசன் அண்டையிலே இருக்கிறவர்கள், அரசன் முன்னே ஒருவன் காதிலே ரகஸியம் சொல்லுகிறதையும்,

ஒருவன் முகத்தைப் பார்த்துச் சிரிக்கிறதையுஞ் தவிர்த்திருக்க வேணும் (எ - று).

செய்தொழுகின், தன் குற்றம் கண்டு செய்தனவாகக் கருதுவன் (எ - ம்). (ச)

**695.** எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்கால் கேட்க மறை.

(இ - ள்.) அரசன் ஒருவனுடனே ரகஸ்யம் சொன்னால், அதைக் காதுகொடுத்துக் கேளாமலும், அவனை முடுகிக் கேளாமலும் இருக்கவேணும்; அவன் தானே சொன்னானாகிற் கேட்கலாம் (எ - று). (ரு)

**696.** குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.

(இ - ள்.) அரசனுக்குக் காரியஞ் சொல்லும்பொழுது அவன் குறிப்பை அறிந்து, சொல்வதற்கு ஏற்ற காலம் பார்த்து, வெறுப்பில்லனவும் வேண்டுவனவுமா யிருக்கிற காரியங்களை அரசன் விருப்பமாய்க் கேட்கும் வகையாற் சொல்லுக (எ - று).

குறிப்பறிதலாவது-காமம், கோபம் இவைமேலே நினைவாய் இருக்கையிலே சொன்னாற் பயனில்லை (எ - ம்). (சா

**697.** வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல்.

(இ - ள்.) பலன்பெரியனவும் அரசன் விரும்புவனவுமாய காரியங்களை அவன் கேளாவிட்டாலும் சொல்லவேணும்; பலன் இல்லாத காரியங்களை, அரசன் கேட்டாலும், சொல்லாமல் விடவேணும் (எ - று). (எ)

**698.** இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
வொளியோ டொழுகப் படும்.

(இ - ள்.) 'அரசர் நமக்கு இளையவர்' என்றும், 'இன்னமுறை உடையவர்' என்றும் இகழாமல், அரசருடைய ஒளிக்குத் தக்கபடியே நடக்கவேணும் (எ - று).

ஒளி - தாம் உறங்காதிற்கவும் உலகம் காக்கின்ற அவர் கடவுள்தன்மை. (அ)

699. கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.

(இ - ள்.) 'அரசன் நம்பேரிலே சந்தோஷமாய் இருக்கிறான்' என்று அரசனுக்கு வேண்டாத காரியங்களைச் செய்யார், குற்றமற்ற அறிவினையுடையவர் (எ - று). (கூ)

700. பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்.

(இ - ள்.) அரசன் அண்டையிலே நாம் வெகு நாளாய் இருக்கிறோம் என்று நினைத்து, நன்மை இல்லாத காரியங்களைச் செய்தால், அது அவனுக்குக் கேடு தரும் (எ - று).

அரசன் கோபித்தால் பிராண ஹானி வரும் (எ-ம்). (கo)

---

## 71. குறிப்பறிதல்

அஃதாவது - அரசன் நினைத்த காரியத்தை அவன் சொல்லாமலே அறிகிறது.

701. கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி.

(இ - ள்.) அரசன் நினைத்த கருமத்தை அவன் சொல்லாமலே முகத்தினாலேயும் கண்ணினாலேயும் அறிகிறவன், சமுத்திரஞ் சூழ்ந்த பூமிக்கு ஆபரணமாம் (எ - று). (க)

702. ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

(இ - ள்.) ஒருவன் மனத்திலே நினைத்ததைச் சந்தேகப் படாமல் நிச்சயமாக அறியவல்லவனை, சாமான்ய மனுஷனேயானாலும் தெய்வத்தோடே சரியாக எண்ணுக (எ-று). (உ)

**703.** குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.

*(இ - ள்.) தம்முடைய குறிப்பினாலே பிறர் நினைத்த காரியங்களை அறியுந்தன்மையாரை, உறுப்பாகிய பொருள் நாடு சேனை முதலானவைகளிலே அவன் வேண்டியதைக் கொடுத்தாகிலும், தமக்குத் துணையாகக் கொள்க (எ - று).* (௩)

**704.** குறித்தது கூறுமற் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு.

*(இ - ள்) ஒருவன் மனத்திலே நினைத்ததை அவன் சொல்லாமல் அறிய வல்லவரோடு அறியமாட்டாதவர் உறுப்பால் ஒருதன்மையரேயானாலும், அறிவினாலே வேறு (எ - று)*

**705.** குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண்.

*(இ - ள்.) எல்லா வஸ்துக்களையும் அறியவல்ல தன் கண்களால் பிறர்குறிப்பினை அறியமாட்டாவிட்டால், அவனுக்கு அங்கங்களிலே எல்லாஞ் சிறப்பான கண்கள் பின்னை என்ன பலனைச் செய்யும் (எ – று)*

*குறிப்பறியமாட்டாதவன் பிரயோசனமற்றவன் (எ - ம்).*

**706.** அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டும் முகம்.

*(இ - ள்) பளிங்கின் மறைவிலே இருக்கிற வஸ்துவினுடைய நிறத்தை அந்தப் பளிங்கு காட்டுமாறுபோல, ஒருவன் நெஞ்சிலே நினைத்த நினைவை அவன்முகந்தானே காட்டும் (எ - று)* (சா)

**707.** முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
காயினுந் தான்முந் துறும்.

*(இ - ள்.) மனசிலே ஒருவன்பேரிலே கோபித்தாலும் சந்தோஷித்தாலும், அந்தக் குறிப்பை வாயினாலே சொல்லுகிறதுக்குமுன்னே முகம் அறிவிக்கும் (எ - று).*

முகம் சந்தோஷத்திற்கு மலர்ந்தும் கோபத்திற்கு வாடியும் இருக்கும் (எ - ம்). (எ)

**708.** முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) தன் மனத்திலே நினைத்ததைக் குறிப்பா லறிந்து அந்தக் குறையைத் தீர்க்கவல்லவர்களைக் கண்டால் அவர்கள் - முகத்தைப் பார்த்து நிற்கிறதே போதும் (எ - று).

அவர்கள்முகத்தைப் பார்த்து நின்றால், அவர்கள் இவன் முகத்தைப் பார்த்துக் குறைதீர்ப்பர் (எ - ம்). (அ)

**709.** பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) அரசனுக்குத் தன்னுடைய பார்வைவேற்றுமையை அறியவல்ல மந்திரிகளே வேணும். அப்படிப்பட்ட மந்திரிகள் வேற்றுவேந்தரிடஞ் சென்றால், அவர்கள் மனசிலே இருக்கிற பகையையும் சந்தோஷத்தையும் சொல்லாவிட்டாலும், அவர்கள்கண்பார்வையினாலேயும் முகக்குறிப்பினாலேயும் அறிவார்கள் (எ - ம்). (கூ)

**710.** நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற.

(இ - ள்.) 'யாம் நுட்பமான அறிவுடையோ' மென்றிருக்கிற மந்திரிகள் அரசர்கள்கருத்தினை அளக்குங் கோலாவது, கண்களல்லாமற் பின்னையொன்று இல்லை (எ - று).

இங்கிதம், வடிவு, தொழில், சொல் என்பன முதலாக பிறர்மனத்தை அறியும் பிரமாணங்கள் பலவும் உளவாயினும், இவைகளெல்லாம் அறிந்தவழி அவரான் மறைக்கப்படும். கண் மனத்துடனே கூடினதானபடியினாலே மறைக்கப்போகாதென்பதனாலே, கண் பிரித்துக் கூறப்பட்டது. (கO)

---

# 72. அவையறிதல்

அஃதாவது - அரசனுடனே இருந்த சபையினுடைய லட்சணத்தை அறிகிறது.

711. அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர்.

(இ - ள்.) செஞ்சொல், இலக்கணைச்சொல், குறிப்புச் சொல் என்னும் மூவகைச்சொல்லையும் அறிந்த நன்மையினை உடையவர், தாம் ஒன்றைச் சொல்லவேண்டினால், அப்பொழுது சபையை அறிந்து ஆராய்ந்து விசாரித்துச் சொல்லுக (எ - று).

ஆகிற வசனத்தையே சொல்லவேண்டும்; ஆகாத வசனங்களைச் சொல்ல வேண்டாம் (எ - ம்). (க)

712. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லி
னடைதெரிந்த நன்மை யவர்.

(இ - ள்.) சொற்களினுடைய நடையை அறிந்தவர்கள், சபையிலே ஒன்றைச் சொல்லவேண்டினால், அதன் செவ்வியை ஆராய்ந்து அறிந்து, வழுவுதல் இல்லாமற் சொல்லுக (எ - று).

கேட்டோர்க்கு விருப்பம் உண்டாகவும், தனக்கு நல்ல பொருள் பலனாகவும் சொல்ல வேணும் (எ - ம்). (உ)

713. அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉ மில்.

(இ - ள்.) சபையினுடைய அளவை அறியாது ஒன்று சொல்ல நினைப்பவர் சொல்லின் வகையையும் அறியார்; அவர்க்குக் கற்று வல்ல கலையு மில்லை (எ - று).

சபையை அறியாமற் சொல்பவர் எல்லாராலும் இகழப் படுவர் (எ - ம்). (ங)

714. ஒளியார்முன் னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

(இ - ள்.) அறிவினாலே பெரியவர்களுடைய சபையிலே தானும் அறிவுடையனாய் இருக்கவேணும்; அறிவில்லாத

வெள்ளைகள்சபையிலே வெண்ணிறச் சுண்ணாம்பின் தன்மை-யைக் கொள்ளவேணும் (எ - று).

அறிவில்லாதார்முன்னே தன்னுடைய கல்வியறிவைச் சொன்னால், அவர்கள் இகழ்ந்து வாதிப்பார்கள் (எ - ம்)

சுதைவண்ணம் கொளல் - அறியாமையை மேற்கொளல்.

**715.** நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருண்
முந்து கிளவாச் செறிவு.

(இ - ள்.) நல்லதென்று சொல்லப்பட்ட குணங்களி லெல்லாவற்றிலும் நல்லது, தன்னிலும் பெரியவர்கள்சபை-யிலே தான் ஒன்றினை முந்திச் சொல்லாமல் இருக்கிறது (எ - று).

பெரியோர்கள்முன்னே ஒன்றைச் சொன்னால், குற்றம் வந்து, இகழப்படுவர். ஆனபடியினாலே, முந்தி ஒன்றைச் சொல்லாமல் அடங்கியிருக்கிறதே நல்லது (எ - ம்). (ரு)

**716.** ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

(இ - ள்.) மோக்ஷமடைய வேண்டி நல்ல நிலைகளிலே நின்றான்ஒருவன் அந்த நிலை குலைந்து வீழ்ந்ததோடு ஒக்கும்: பெரிய நூல்களைக் கற்று அவற்றின் பொருளை அறிந்த பெரியோர்கள்முன்னே ஒருவன் சொன்ன வசனம் குறைபடுகிறது (எ - று). (சு)

**717.** கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

(எ - ள்.) குற்றமற்ற சொற்களை அறிந்து சொல்லத் தக்க பெரியவர்கள்சபையிலே பலநூல்களையும் சொல்லின், அவர்களுடைய கல்வி விளக்கமாய் எல்லாராலும் அறியப்படும் (எ - று). (எ)

**718.** உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று.

(இ - ள்.) பிறர் சொல்லாமல் கல்வியின் பொருள்களைத் தாமே அறியவல்லவர்கள்சபையில், கற்றவன் ஒருவசனத்தைச்

சொல்லல், தானே வளருகிற பயிர் நின்ற பாத்தியிலே தண்ணீரை வார்த்தாற் போலாம் (எ - று).

கற்றார்முன் சொன்னால் மிகவும் அதிகமாம் (எ - ம்). (அ)

719. புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையு
ணன்கு செலச்சொல்லு வார்.

(இ - ள்.) நல்லோர்கள் இருந்த சபையிலே நல்லபொருள்களை அவர்கள் மனத்துக்கேற்கச் சொல்லுகிறவர்கள், அறிவில்லாத புல்ல ரிருந்த சபையிலே, நல்லபொருள்களை மறந்தும் சொல்லாமல் இருக்கவேணும் (எ - று).

கற்றவர் அறிவிலார்சபையிற் பேசினால், அவரைச் சபையின் தன்மை அறிந்திலர் என்று நல்லோர் இகழ்வர்; அவர் சொல்லும் பொருள்களை அறியமாட்டாமையால், புல்லோர் அலக்ஷியம் செய்வர் (எ - ம). (கூ)

720. அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல்.

(இ - ள்) நல்லவர்கள், தம்மோடொத்த நல்லவர்கள் அல்லாத புல்லர்சபையிலே ஒன்றைச் சொல்லாமல் இருக்க வேணும்; சொன்னால், அச் சொல் சாக்கடையிலே விழுந்த அமுதத்தோடு ஒக்கும் (எ - று).

சாக்கடையிலே விழுந்த அமிர்தம் பயன்படாததுபோல, நல்லவர்வசனமும் பிரயோஜன மில்லாமற்போம் (எ-று). (கo)

---

## 73. அவையஞ்சாமை

அஃதாவது - சொல்லுதற்குரிய சபையினை அறிந்து, சொல்லுகிறபோது பயப்படாமல் இருத்தல்.

721. வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர்.

(இ - ள்.) நூல்களைக் கற்றுவல்லவராயினோர், சபையிலே ஒன்றைச் சொல்லுகிறபோது, வழுவுதலில்லாமல் சொல்லுவர் (எ - று). (க)

**722.** கற்றருட் கற்ற ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார்.

(இ - ள்.) 'கற்றவர்எல்லாரினும் இவர் நன்றாய்க் கற்றவ'ரென்று உலகத்தாரால் சொல்லப்படுவார்: கற்றவர் இருக்கிற சபையிலே தாம் கற்ற நூற்பொருள்களை அவர்கள் மனத்திற்கு ஏற்கச் சொல்ல வல்லவர் (எ - று). (உ)

**723.** பகையகத்துச் சாவா ரெளிய ரரிய
ரவையகத் தஞ்சா தவர்.

(இ - ள்.) சண்டையிலே பயப்படாமல் போய்விழுந்து சாகவல்லவர் உலகத்திலே மெத்த வுண்டு; சபையிலே போய்ப் பயப்படாமல் சொல்லவல்லவர் கொஞ்சம் (எ-று). (ங)

**724.** கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்.

(இ-ள்.) பலநூல்களையும் கற்றவர்களுடைய சபையிலே தாம் கற்ற கல்வியை அவர்கள்மனசுகொள்ளச் சொல்லி, அதிலும் மிகுந்த கல்வியைப் பெரியவர்களிடத்திலே அறிந்து கொள்க (எ - று).

எல்லாம் ஒருவர்க்குக் கற்கக்கூடாமையால், வேறுவேறான கல்வியுடையார் பலர் இருந்த சபையிலே தாம் கற்றவற்றைச் சொல்லி, அவர்கள் கற்றதெல்லாம் கற்கப்போகாவிட்டாற் கேட்டறியலாம் (எ - ம்.) (ச)

**725.** ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

(இ - ள்.) சொல்லிலக்கணநெறியான் அளவைநூல்களைக் கற்க; அப்படிக் கற்றவன், வேற்றுவேந்தரிடம் போனால், அவர்கள்சபையிலே அவர்கள் சொன்ன சொற்களுக்குத் தான் உத்தரம் சொல்லுதற்பொருட்டு (எ - று). (ரு)

**726.** வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடெ
னுண்ணவை யஞ்சு பவர்க்கு.

(இ - ள்.) மனத்திடமில்லாதவர்களுக்கு வாளுடனே என்ன காரியமுண்டு? அதுபோல, நுண்ணியாரது சபைக்குப்

பயப்படுகிறவர்களுக்குச் சாத்திரங்களுடனே யென்ன பல னுண்டாம் (எ - று).

சபைக்குப் பயப்படுகிறவர் நூலுக்குரியர் அல்லர் (எ - ம்). (சா)

727. பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
அஞ்சு மவன்கற்ற நூல்.

(இ - ள்.) சண்டையிலே பயப்படுகிறவன் கையிலே யிருக்கிற வாள்போலேயாம், சபையிலே சொல்லப் பயப்படுகிறவன் கற்ற நூல் (எ - று).

சண்டைபண்ணமாட்டாதவன் கையில் வாள் பிரயோசனமில்லாதது போல, சபையிலே சொல்லமாட்டாதவன் கற்ற நூலும் பிரயோசன மில்லாமற் போம் (எ - ம்). (எ)

728. பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு
ணன்கு செலச்சொல்லா தார்.

(இ - ள்.) நல்லவர்க ளிருந்த சபையிலே நல்ல சொற்பொருள்களைப் பயத்தினாலே அந்தச் சபைக்கேற்கச் சொல்லமாட்டாதவர்கள், பல நூல்களையும் கற்றாலும், உலகத்தாருக்குப் பிரயோசனமில்லை (எ - று).

பெரியோர்கள்முன்னே சொல்லமாட்டாதபடியினாலே, கல்வி யுண்டென்று அறிவாரில்லை (எ - ம்). (அ)

729. கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்தும்
நல்லா ரவையஞ்சு வார்.

(இ - ள்.) நல்ல நூல்களைக் கற்று அவற்றின் பயனை யறிந்தும், நல்லோர்க ளிருந்த சபையிலே சொல்லப் பயப்பட்டவர்களை உலகத்தார் கல்லாதவர்களினுங் கடையானவர்கள் என்று சொல்லுவார்கள் (எ - று).

தாம் கற்ற கல்வியைப் பெரியோர்கள்முன்னே சொல்லாவிட்டால், தாமும் பயனெய்தாது, பிறரறியச் சொல்லமாட்டாதபடியினாலே பிறருக்கும் பயன்படாது, கல்வித் துன்பமே எய்தியிற்றலின், உலகத்தார் கல்லாதவனினுங் கெட்டவனென்று சொல்லுவார் (எ - ம்). (கூ)

**730.** உளரெனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.

(இ - ள்.) தாம் கற்ற கல்வியைச் சபையிலே சொல்லமாட்டாதவர்கள், பிராணனுடன் இருந்தாலும், செத்தாரோடொப்பர் (எ - று).

அவர் கற்ற கல்வி பிரகாசமில்லாதபடியினால், நடைப்பிணம் என்று இகழப்படுவர். (எ - ம்). (௰)

அமைச்சியல் முற்றும்

---

## 71 நாடு

அஃதாவது - ராசாக்களாலேயும் மந்திரிகளாலேயும் காக்கப்பட்ட நாட்டினுடைய லக்ஷணத்தைச் சொல்லுகிறது.

**731.** தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.

(இ - ள்.) எந்நாளும் நல்ல பயிர்களை யிடுகிறவர்களும், பெரியோர்களும், கெடாத செல்வமுடையவர்களு மிருக்கிறதே நாடாவது (எ - று).

நல்ல பயிர்கள் - அறுவகை ருசியு முண்டாக்குபவை. பெரியோர்கள் - நீதிமார்க்கந் தப்பாமல் நடக்கிறவர்கள். கெடாத செல்வர் - சத்தியத்துடனே தேடின திரவியமுடையவர்கள். இவர்களுண்டாகவே, அரசனுக்கும் மற்றுமுண்டான பேருக்குஞ் செல்வங் குறைபடாது (எ - ம்). (க)

**732.** பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு.

(இ - ள்.) அளவிறந்த பொருள்களையுடைமையால் பிறதேசத்தாரும் விரும்பத்தக்கதாய், கேடில்லாமல் மிக விளைவதே நாடாவது (எ - று).

கேடில்லாமல் விளைகிறது - வெகுமழை பெய்கிறதும், கிளி, குருவி, பக்ஷி இவைகள் பயிரை உபத்திரவம்பண்ணுமை

இருக்கிறதுமாம். வெகுமழை பெய்கிறது அரச அநீதியினாலே; கிளி முதலானவை வாதைபண்ணுகிறதும் அரசனுடைய அநியாயத்தினாலே ஆகும். (உ)

733. பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு.

(இ - ள்.) பிறநாடுகளிலே இருக்கிற மாடுகள் மனிதர்களெல்லாம் கூடிக் கலகத்தினாலே வந்தால், எல்லாம் பொறுத்துக்கொண்டு, தன அரசனுக்கு இறையுண்டானதெல்லாங் கொடுப்பதே நாடாவது (எ - று).

பிறதேசத்தினின்றும் வந்தவர்களுக்கும் தம் நாடுபோலப் பயன்படவேண்டும் (எ - ம்). (ங)

734. உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியைவது நாடு.

(இ - ள்.) வெகு பசியும், விடாத வியாதியும், புறத்துநின்று வந்து உபத்திரவம் பண்ணும் பகையும் இல்லாமல் இருக்கிறதே நாடு (எ - று).

வெகுபசி யில்லாமல் இருக்கிறது, பயிரிடுகிற குடிகள் இருக்கிறதினாலேயும் வெகுவாய் விளைகிறதினாலேயு மாம். விடாத வியாதி இல்லாதது, வெகுகாற்றும் வெகுகுளிரும் வெகுஅனலும் உண்ணப்படும் பொருள்களின் தீமையும் இல்லாமையினாலே ஆம். புறப்பகையில்லாதது, அரசன் ஆற்றலும் நல்லசேனையும் காடும் கோட்டைகொத்தளம் முதலானவையும் உடைமையினாலே ஆம். (ச)

735. பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
கொல்குறும்பு மில்லது நாடு.

(இ - ள்.) கபடமனதாயிருக்கிற திரளும், கூட இருந்தே பாழாக்குபவர்களும், பக்குவம் வந்தால் ராசாவை வாதை பண்ணும் துஷ்டர்களும் இல்லாததே நாடாவது (எ - று).

736. கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை.

(இ - ள்.) பகைவராலே கெடுக்கப்படாததாய், ஒருகாலத்திலே கேடு வந்தாலும் அப்பொழுதும் தன் வளப்பம் குன்றா

நாட்டினை, எல்லா நாட்டினும் தலை என்று பெரியோர்கள் சொல்லுவர் (எ - று).

கேடறியாதது - அரசன் ஆற்றலானும், தேவர்கள் பூசை குறைபடாமல் நடக்கிறதினாலும் வரும் (எ - ம்).

**737.** இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு.

(இ - ள்.) கீழ்நீர் மேல்நீர் எனப்பட்ட தண்ணீரும், வாய்ப்பான மலையும், மலையினின்றும் வரும் அருவியாறும், நல்ல அரணாகிய காவலும் உடையது நாட்டிற்கு அவயவமாம் (எ - று).

கீழ்நீராவது துரவு கிணறு; மேல்நீராவது ஏரி குளம்; வருபுனலாவது ஆறு. இவைகள் உண்டானால் மழை பெய்யாத காலத்திலேயும் வளமை குன்றாமல் விளையும் (எ - ம்). (எ)

**738.** பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம
மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

(இ - ள்.) வியாதியில்லாமையும், செல்வமுடைமையும், விளைவும், நல்ல ருசிகளையுடைய வஸ்துக்களும், நல்ல காவலும் எனப்பட்ட இவ் வைந்தும் நாட்டிற்கு ஆபரணம் (எ - று).

**739.** நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.

(இ - ள்.) நாட்டிலே இருக்கிறவர்கள் தேடிவருந்தாமற் செல்வம் அடைவிக்கிறதையே பெரியோர் நாடென்று சொல்லுவர். தேடிவருந்தச் செல்வம் அடைவிக்கிற நாடுகள் நாடல்ல (எ - று). (கூ)

**740.** ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.

(இ - ள்.) வேந்தனோடே கூட்டம் இல்லாத நாடு, முன் சொல்லப்பட்ட செல்வங்களெல்லா முடைத்தாயிருந்தாலும், பலனில்லை (எ - று).

வேந்தனோடு கூட்டம் இல்லாதது - அரசன் குடிகள்-பேரிலே தயைஇல்லாமல் இருக்கிறதும், குடிகள் அரசன்-பேரிலே விசுவாசமில்லாமல் இருக்கிறதுமாம். அரசன் தயை இல்லாவிட்டால், எத்தனை செல்வமிருந்தாலும், வெல்லப் போகாது (எ - ம்). (கo)

---

## 75. அரண்

அஃதாவது-அந்த நாட்டுக்குப் பகைவராலே உபத்திரவம் பண்ணப் போகாத காவலை உடையது (எ - ம்).

**741.** ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.

(இ - ள்.) இடம் பொருள் ஏவல் என்று சொல்லப்பட்ட மூன்றுவகையு முடையராய்ப் பகைவர்மேலே தண்டுபோகிற-வர்களுக்கும் அரண் வேண்டியிருக்கும்; அதுவல்லாமல், தம் பேரிலே வருகிறவருக்கு அஞ்சித் தன்னையே அடைகிறவனுக்-கும் அரணாகிய காவல் வேணும் (எ - று)

அரணில்லாத வழி அழிவர் (எ - ம்). (க)

**742.** மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண்.

(இ - ள்.) மாணிக்கத்தைப் போலத் தெளிவாயிருக்கிற நீரும், வெளியாயிருக்கிற நிலமும், மலையும், குளிர்ந்த நிழலை யுடைய காடும் உடையதே அரணாவது (எ - று).

என்றும் வற்றாமல் இருக்கிற நீரும், நெருங்கின காடும், அதற்கப்புறம் நீரும், நிழலும் இல்லாத வெளியும், மலையும் இருக்கிறதே யரணாவது. நீரும் நிழலு மில்லாவிட்டால், பகைவருக்கு ஆதரவில்லாமற்போம் ; ஆதரவில்லாவிட்டால், வெல்லப்போகாது (எ - ம்). (உ)

**743.** உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி
னமைவர ணென்றுரைக்கு நூல்.

(இ - ள்.) உயரமும் அகலமும் கெட்டியும் அருமையுமுடைய மதிலை அரண் என்று சொல்லுவர் நூலோர் (எ-று)

உயரம் - ஏணிக்கு எட்டாதது; அகலம் - பகைவராலே சுரங்கம் வெட்டப் போகாத அடியகலமும், அகத்தோர் நின்று சண்டைபண்ணத் தக்க தலையகலமும். கெட்டியாவது, கடப்பாரை உலக்கை குந்தாலி முதலியவைகளினாலே இடிக்கப் போகாதது. அருமையாவது - யந்திரங்களை உடைமையால் பகைவர் அணுகற்கு அரியது (எ - று). (௩)

**744.** சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண்.

(இ - ள்.) காக்க வேண்டின வழிகள் கொஞ்சமாய், அகலமான விடத்தையுடையதாய், தன்மேல் வந்த பகைவர்மனச் சந்தோஷத்தைக் கெடுக்கவல்லதே அரண் ( எ - று).

சிறுகாப்பாவது-வாசல்வழி அல்லாமல் மற்றவிடங்களெல்லாம் காடும் மலையும் தண்ணீருமாய் இருக்கிறது. பேரிடமாவது-அதிலே இருக்கப்பட்ட மனுஷர்மாடுகள் சஞ்சரிக்கச் சௌக்கியமாய் இருக்கிறது. பகைவர் மனது கெடுக்கிறது-மாற்றார் செயிக்கிறேமென்று வந்தவர்கள் பார்த்தவுடனே இதைச் செயிக்கிறது அருமை என்று விசாரப்படுகிறது. (எ - ம்). (௪)

**745.** கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்.

(இ - ள்.) பகைவராற் செயிக்கிறதற்கு அரிதாய், பலவகை உணவுப்பொருள்கள் உடையதாய், உள்ளே இருக்கப்பட்டபேருக்குச் சௌக்கியமாய் இருந்து சண்டைபண்ணத் தக்கதாய் நீர்மையை உடையதே அரண் (எ - று). (௫)

**746.** எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண்.

(இ - ள்.) உள்ளே இருக்கிற பேர்களுக்கு வேண்டிய வஸ்துக்களை யெல்லாம் உடையதாய், பகைவரால் உபத்திரவம் வரின் அதனைப் பரிகரிக்கும் நல்ல வீரர்களை யுடையதே அரண் (எ - று).

நல்ல வீரர்கள் ஆவார் - இராசாவிடத்திலே அன்பும் தருமநீதியும் வீரமும் உடையவர். (சா)

747. முற்றியு முற்று தெறிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண்.

(இ - ள்.) உட்புகுவதும் வெளிவருவதும் ஒழியும்வகை நெருங்கிச் சூழ்ந்தும், அப்படிச் சூழாமல் நெகிழ்ந்தவிடம் பார்த்து ஒருமுகமாய்க் கூடிப் பொருதும், உள்ளே இருக்கிறவர்களுக்கு இலஞ்ச பரிதானங்கள் கொடுத்து உபாயசற்பனை பண்ணியும் கொள்ளுதற்கு அரியதே அரணாவது (எ-று). (எ)

748. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண்.

(இ - ள்.) சேனைப்பெருமையாலே வந்துசுற்றிக்கொண்ட புறத்தோரை, உள்ளே இருக்கிறபேர், தாங்கள் இருக்கிறவிடம் விடாமல் நின்று பொருது வெல்வதே அரண் (எ - று).

நின்றவிடம் விட்டுப் பேர்ந்தால், அவ்விடத்திலே பொருது செயிப்பர் (எ - ம்). (அ)

749. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண்.

(இ - ள்.) போர் தொடங்கின மாத்திரத்திலே பகைவர் கெடத்தக்கதாய், உள்ளே இருக்கிற பேர் பண்ணின சண்டை செயம் வரத்தக்கதே அரணாவது (எ - று). (கூ)

750. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண்.

(இ - ள்.) அரசனுக்கு வேண்டிய காவல் காடு மலை நீர் நிழல் முதலானவைகளெல்லாம் உண்டாயிருந்தாலும், சண்டை பண்ணுகிறதிலே கெட்டி இல்லாதவர்களிடத்திலே அரண் இல்லை (எ - று).

சண்டையிலே கெட்டியாவது - சலியாமல் இருக்கிறதும், அளவறிந்து செய்கிறதும், உலகத்திற் கேற்க நடக்கிறதுமாம். (கO)

---

## 76. பொருள்செயல்வகை

அஃதாவது - மெத்தவும் நாட்டிலேயும், அரணிலேயும், ஆக்கவும் காக்கவும் படுவதாய பொருளைத் தேடுகிறது.

751. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

(இ - ள்.) ஒரு பிரயோசனமாக எண்ணப்படாதவரைப் பிரயோசனவான்களாகச் செய்யவல்ல பொருளே ஒருவனுக்குப் பொருளாகிறது; பின்னை வேறு பொருள் இல்லை (எ - று).
பிரயோசனமாக எண்ணப்படாதவர்கள் அறிவில்லாதாரும் இழிகுலத்தாருமாம்; இவர்களை அறிவுடையாரும் உயர்ந்த குலத்தாருமாக ஆக்குதலே பொருள் ஆவது (எ - ம்). (க)

752. இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.

(இ - ள்.) எல்லாக் குணங்களும் உடையராயினும், பொருள்இல்லாரை எல்லாரும் இகழ்வர்; எல்லாப் பொல்லாங்கும் உடையராயினும், பொருள்உடையாரை எல்லாரும் புகழ்வர் (எ - று). (உ)

753. பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று.

(இ - ள்.) பொருளென்று எல்லாராலும் சிறப்பாய்ச் சொல்லப்பட்ட அவியாத விளக்கு, தன்னைச் சத்தியத்துடனே தேடினவர்களுக்கு, அவர்கள் நினைத்த தேசத்திலே போய், பகை என்னும் இருளைக் கெடுக்கும் (எ - று). (ந)

754. அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

(இ - ள்.) செய்கிற காரியத்தைப் பொல்லாங் கில்லாமல் நல்ல வழியிலே செய்து தேடின பொருள், அவனுக்குத் தருமத்தையும் இன்பத்தையுங் கொடுக்கும் (எ - று).

நியாயமார்க்கமாக வந்த பொருளினாலே தானமும் பூசையும் பண்ணினால், நெடுங்காலஞ் செல்வங் குறைபடாமல் நின்று இன்பம் பயக்கும் (எ - ம்). (௪)

**755.** அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.

(இ - ள்.) தாம் குடிகளிடத்திலே செய்யும் அருளோடும் அவர் தம்மிடத்திலே செய்யும் அன்போடும் கூடாத பொருளை அரசர் கைக்கொள்ளாமல் விட்டுவிடவேணும் (எ - று).

"அருளோடு மன்போடும்" வரும் பொருளாவது - நியாய மார்க்கமாக வருகிற பொருள். அநியாயமாய் வருகிற பொருள், பச்சைப்பானையிலே வார்த்த பால்போல, தேடினவனோடு தானும் கெடும் (எ - ம்). (௫)

**756.** உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.

(இ - ள்.) ஒருவர் கொடாமல் தானே வந்து சேருகிற பொருளும், சுங்கமாகிற பொருளும், தன் சத்துருவைக் கெடுத்து எடுத்துக்கொண்ட பொருளும் ராசாவுடைய பொருளாம் (எ - று).

ஒருவர் கொடாமல் வருகிற பொருளாவது - நிலத்திலே கண்டெடுத்த பழம்பொருள் (எ - ம்). (௬)

**757.** அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு.

(இ - ள்.) அன்பினாலே பெறப்பட்ட அருள் என்கிற பிள்ளை, பொருள் என்கிற செவிலித்தாயால் வளரும் (எ - று).

பொருளால் வளர்வதாவது-வறுமையுற்று வந்தவர்களுக்குத் தன் பொருளைக் கொடுத்து அவர்கள்வறுமையை நீக்கவே அருளுண்டாமென்பது. (௭)

**758.** குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை.

(இ - ள்.) தன் கையிலே பொருளுண்டாக விருக்கிறவன் ஒரு காரியத்தைச் செய்ய நினைக்கிறது, மலைமேலே நின்று யானைச்சண்டையைப் பார்க்கிறதற்குச் சரி (எ - று).

மலையின்மேலே இருக்கிறவன் பயமும் வருத்தமும் இல்லாமல் யானைப்போர் பார்க்கிறாப் போலே, கைப்பொருளுண்டானவனும் பயப்படாமல் வல்லவர்களை யேவி நினைத்த காரியம் செய்து முடிப்பன் (எ - ம்). (அ)

759. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில்.

(இ - ள்.) தமக்கு ஒரு காரியம் வேணும் என்று நினைக்கிறவன், பொருள் உண்டாகிற வழியைச் செய்யவேணும். அது, சத்துருக்களை யெல்லாம் கொஞ்சமாக்கிப் போடும் ஆயுதம். அதிலும் கூர்மையான ஆயுதம் வேறில்லை (எ - று).

பொருள் உண்டாகவே, பெரும்படையும் நட்பும் உடையராவர்; ஆகவே, அதுகண்டு பகைவர் தாமே அடங்குவர் (எ - ம்). (கூ)

760. ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு.

(இ - ள்.) நியாயவழியாலே பொருளை மிக அதிகமாகத் தேடினவர்களுக்கு அறமும் இன்பமும் எளிய பொருள்களாகும் (எ - று).

பொருளினாலே தருமமும் சுகமும் எளிதாய் முடியும். (கo)

---

## 77. படைமாட்சி

அஃதாவது - பொருளாலே ஆவதாய் வெல்வதாய சேனையினுடைய நன்மை.

761. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை.

(இ - ள்.) யானை, குதிரை, தேர், காலாள் என்று சொல்லப்பட்ட நாலுவகை உறுப்புக்களாலும் நிறைந்து, சண்டை -

யிலே காயம்படுகிறதற்கு அஞ்சாமல் நின்று வெல்லுஞ் சேனை, இராசாவினுடைய செல்வங்கள் எல்லாவற்றுள்ளும் பெரியதான செல்வம் (எ - று).

நல்ல சேனை யுண்டாகவே, எல்லாச் செல்வங்களும் வந்தெய்தும் (எ - ம்). (க)

**762.** உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துந்
தொல்படைக் கல்லா லரிது.

(இ - ள்.) தான் சிறிதாயபொழுதும், இராசாவுக்குச் சண்டையிலே தோல்வி வந்தால், தன்மேல் ஆயுதங்கள் படுகிறதற்குப் பயப்படாமல் நின்று காக்கவல்ல திடம், அவன்முன்னோரைத் தொடங்கி வரும் மூலப்படைக்கல்லது உண்டாகாது (எ - று).

மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என்னும் அறுவகைப்படையிலே-யும் மூலப்படையே சிறப்புடையது. மூலப்படைக்கு நாடும், பொருளும், யானையும், குதிரையும் கொடுத்து இரட்சிக்க வேணும் (எ - ம்). (உ)

**763.** ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

(இ - ள்.) எலிகள் திரளாகக்கூடிக் கடலோசைபோலே ஆரவாரித்தாலும் நாகப்பாம்புக்கு என்ன தீங்கு வரும்? அந்த நாகம் மூச்சுவிட்ட அவ்வளவினாலே எலிகள் தாமே கெட்டுப் போகும் (எ- று).

இந்த உவமையாலே, வீரரல்லாதார் பலர்கூடி ஆரவாரம் பண்ணினால், அதற்கு வீரன் அஞ்சான். அவன் போர்க்கு எழுந்தவுடனே, அவர்கள் தாமே கெடுவர் என்பது பெற்றாம். வீரரல்லாதார் பலரினும் வீரன் ஆவானஒருவனை ஆளுகிறதே நல்லது (எ - ம்). (ங)

**764.** அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

(இ - ள்.) சண்டையிலே கெட்டோடிப் போகாமல், பகைவர்களாலே வெல்லப் போகாதாகிய பாரம்பரியமாய்வந்த

சேவகத்தை உடையவர்களாய்க் கெட்டியாய் இருக்கிறதே சேனை (எ - று).

வழிவந்த வன்கண்மை - "கன்னின்ற னெந்தை கணவன் களப்பட்டான், முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர்— பின்னின்று, கைபோய்க் கணையுதைப்பக் காவலன் மேலோடி, எய்போற் கிடந்தானென் னேறு" (பு. வெ, வாகை - 22) என்பதனால் அறிக. (௪)

**765.** கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை.

(இ - ள்.) எமன்தானே கோபித்துக்கொண்டு மேலே வந்தாலும் மனசு ஒத்து நின்று எதிர்க்கத்தக்க மனவலிமை (ஆற்றலை) யுடையதே படை (எ - று).

மிகப் பலர் மனசொத்து நிற்கிறதற்குக் காரணம், அரசன்மேல் அன்பு (எ - ம்). (௫)

**766.** மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
மெனநான்கே யேமம் படைக்கு.

(இ - ள்.) கெட்டியும், மானமும், வீரராயினோர் நடந்த வழியே நடக்கிறதும், அரசனாலே இவர்கள் நல்லவர்கள் என்று நம்பப்படுகிறதும் ஆகிய இந்த நாலுகுணமுமே படைக்கு அரணாவது (எ - று).

இவற்றால், முறையே, பகைவரைக் கடிதிற் கொன்று நிற்றலும், ராசாவுக்குத் தாழ்வு வாராமல் காத்தலும், தோற்றோடிப் போனவரது முதுகில் கூரிய ஆயுதத்தை எடுத்து வீசாமையும், பகைவர்க்கு வசப்பட்டுத் தன் அரசனை வஞ்சியாமையும் ஆகிய செய்கைகள் பெறப்பட்டன. (௬)

**767.** தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து.

(இ - ள்.) மாற்றாரால் வகுக்கப்பட்டுத் தன்மேல் வந்த படையின் போரை விலக்கும் வகையறிந்து பிரிந்து நின்று, அவர்கள் விட்ட படைவகுப்பினைத் தன்மேல் வாராமல் தடுத்து, தான் அதன்மேலே செல்வதே படையாவது (எ - று). (௭)

768. அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்.

(இ - ள்.) சேனை, பகைவர்மேலே சென்று கொல்லுந் திண்மையும், அவர்கள் தன்மேலே வந்தால் பொறுக்கத்தக்க வலிமையும் இல்லாவிட்டாலும், அலங்காரத்தினாலே பெருமை பெறும் (எ - று).

அலங்காரமாவது-தேர் யானை குதிரைகளும், கொடி சிலை குடை மேளவாத்தியங்களும். பாடு - கண்ட அளவில் பகைவர் அஞ்சும் பெருமை. (அ)

769. சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை.

(இ - ள்) தன்னைக் கொஞ்சம் பண்ணிக்கொள்ளுகிறதும், மனதிலே விடாத வெறுப்பும், தரித்திரமும் இல்லாவிட்டால், படை பகையை வெல்லும் (எ - று).

தரித்திரமாவது-சம்பளம் கொடாதது. செல்லாத் துனியாவது-தன் பெண்சாதி பிள்ளைகளை நினைக்கிறதும், குற்றமான காரியங்களைச் செய்கிறதுமாம். இப்படிச் செய்தால், படை வெல்லாது (எ - ம்). (கூ)

770. நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில்.

(இ - ள்.) சண்டைபண்ணும்போது வீரரானவர்கள் வெகுவாயிருந்தாலும், அதற்குத் தலைவனான துரை யில்லா-விட்டால், சேனை நில்லாது (எ - று).

தலைவன் இல்லாதபோது 'சண்டைபண்ணுவதைப் பார்க்கிறவர்களில்லை' யென்று விட்டுப் போவார் (எ - ம்). (கo)

## 78. படைச்செருக்கு

அஃதாவது - அந்தச் சேனையினுடைய மிக்க வீரத்தனத்தைச் சொல்லுகிறது.

771. என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்.

(இ - ள்.) பகைவர்களே! என் தலைவன் எதிரே நின்று அவன் வேலின் வாயிலே விழுந்து பிறகு கல்லின்கண் நின்ற வீரர் அனேகம் பேர் உண்டு. நீங்கள் உங்கள் உடலிலே பிராணன் இருக்க வேண்டினீராகில், என்னுடைய தலைவனுடனே சண்டைபண்ணுகிறதை விடுங்கள் (எ - று).

கல்லின்கண் நின்ற - பெயர் பொறிக்கப்பட்டு நின்ற; கல்லில் தெய்வவடிவாய் ஆவேசித்து நின்ற. (க)

**772.** கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.

(இ - ள்.) காட்டிலே திரிகிற முயலை யெய்து கொன்ற அம்பை ஏந்தலினும், யானையை எய்து தப்பிப்போன வேலை ஏந்துதலே நன்று (எ - று).

முயலை எய்கிறதிலும், யானைமுன்னே நிற்றல் அரிதென்பதாம். (உ)

**773.** பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு.

(இ - ள்.) பகைவர் எதிர்த்தபோது அவர்கள்பேரிலே தயையில்லாமற் செயிக்கிறதையே பெரிய வாண்மை என்று சொல்லுவர்; அந்தப் பகைவர்க்குத் தாழ்வு வந்தபோது அவர்கள்மேலே தயைவைத்து அந்தக் குறையைத் தீர்க்கிறது அந்த ஆண்மைக்குக் கூர்மை என்று சொல்லுவர் (எ - று).

ஊராண்மையாவது - இராவணன் சண்டையில் தன் சேனையெல்லாம் போய்த் தனியனாய் அகப்பட்டபோது ராமசுவாமி கண்டு, அவனைக் கொல்லாமல் விட்டு, "இன்றுபோய் நாளை உன் சேனைகளையெல்லாங் கூட்டிக்கொண்டு யுத்தத்துக்கு வா" என்று அனுப்பிவிட்டது போல என்பது. (ந)

**774.** கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.

(இ - ள்.) கையிலே இருந்த வேலைத் தன்மேல் வந்த யானையோடு போட்டுப் பின்னையும் வருகிற யானைக்குப் போட வேல் தேடுகிறவன், தன் மார்பிலே பட்டு உருவி இருக்கிற

வேலைக் கண்டு பிடுங்கிக்கொண்டு சந்தோஷப்படுவன் (எ - று).

கைவேலை யானையினுடனே போக்கினது - யானையைக் கொல்லுமாறு விடுதல். சந்தோஷப்படுகிறது, தான் தேடின வேல் கிடைத்ததனால். (ச)

775. விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி
னொட்டன்றோ வன்க ணவர்க்கு.

(இ - ள்.) பகைவரைக் கோபித்துக்கொண்டு பார்த்த கண், அவர்கள் தன்மேலே வேலை யெறிய அது பொறுக்க-மாட்டாமல், அந் நோக்கை அழித்து இமைக்குமாயின், அதுவும் சேவகனானவனுக்குத் தோல்வியாம் (எ - று). (ரு)

776. விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து.

(இ - ள்.) தனக்குச் சென்ற வயசை யெண்ணி, அதிலே சண்டைபண்ணிக் காயம் படாத நாளையெல்லாம், பிரயோசன மில்லாமற் கழிந்துபோன நாட்களுடனே வைப்பன் வீரனான சேவகன் (எ - று).

விழுப்புண்-முகத்திலேயும் மார்பிலேயும் பட்ட புண். (சு)

777. சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

(இ - ள்.) வீரனானவன், பூமியிலே தன் புகழ் நிற்க வேண்டி, உயிர்வாழ்கிறதை வேண்டான். அப்படிப்பட்ட-வர்கள் காலிலே வீரக்கழல் கட்டுகிறது அலங்காரமன்று; அந்தப் புகழே அவர்களுக் கலங்காரமாம் (எ - று). (எ)

778. உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர்.

(இ - ள்.) சண்டை வந்தபோது பயப்படாமல் அதன்-மேலே செல்லும் வீரர், தம் ராசா 'அது வேண்டா' என்று கோபித்தாலும், அவ் வீர மிகுதியிலே குன்றார் (எ - று).

வீரனானவன், சண்டை வந்தால், தோள்தட்டிக்கொண்டு புறப்படுவான் (எ - ம்). (அ)

779. இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்.

*(இ - ள்.) தாங்கள் சொன்ன வஞ்சினந் தப்பாதபடிக்குப் போய்ச் சாகவல்ல வீரர்களை, அது தப்பியவாறு சொல்லி யிகழ வல்லவர் யார்? (எ - று).*

*சொன்ன வஞ்சினமாவது - இன்னது செய்யேனாகில் இன்னனாவேனென்று சபதங்கூறுகிறது.* (௯)

780 புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பின் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து.

*(இ - ள்.) ராசா தனக்குச் செய்த நன்றிகளை நினைத்து, தன் ஆண்டவன் கண்களிலே நீர் பெருகத் தக்கதாகச் சண்டையிலே சாகத்தக்க சாவை யிரப்பாகக் கேட்டுக் கொண்டாகிலுஞ் சாகிறது நல்லது (எ - று).*

*வீட்டிலே பெண்சாதி பிள்ளைகள் அழப் பழவினையாலே வாதைப்பட்டுச் சாகிறதிலும், யுத்தத்திலே தன் னாண்டவன் விசாரப்படச் சாகிறது நல்லது (எ - ம்).* (௧௦)

---

## 79. நட்பு

*அஃதாவது - அரசனுக்குத் தொழிலிலே உதவி செய் கிற சினேகம்.*

781. செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்குரிய யாவுள காப்பு.

*(இ - ள்.) சினேகத்தைப் போலச் செய்துகொள்ளுகிற-துக்கு அரியபொருள்கள் யாவை உள? சினேகம்பண்ணிக்-கொண்டால் அதுபோலே பகைவர் செய்கிற உபத்திரவம் புகுவதற்கு அரிய காவலாவன யாவை உள? (எ - று).*

*சினேகம்பண்ணுகிறதுக்கானவன் கிடைக்கிறதும், கிடைத்தால் சினேகம்பண்ணுகிற உபாயமும், சினேகம் பண்ணினால் பிரியாம லிருக்கிறதும் அருமையாம். நல்ல சினேகித னுண்டானால், பகைவர் பயப்பட்டுப் பொல்லாங்கு செய்யார் (எ - ம்).* (௧)

**782.** நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

(இ - ள்.) அறிவுடையவர்களுடனே உறவுபண்ணினால் வளர்பிறையைப் போல நாள்தோறும் அதிகமாம்; அறிவில்லாதவர்களுடனே நட்புச்செய்தால் தேய்பிறைச்சந்திரனைப் போலே நாள்தோறும் குறையும் (எ - று).

அறிவுடையாரும் அறிவுடையாரும் சினேகம்பண்ணினால் முன்பு குறைந்து பின்பு பெருகும். அறிவில்லாதாரும் அறிவில்லாதாரும் சினேகம்பண்ணினால் முன்பு பெருகிப் பின்பு குறையும் (எ - ம்). (௨)

**783.** நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

(இ - ள்.) நற்குணமுடையவர்களுடனே கொண்ட உறவு-நல்லறிவைக் கொடுக்குஞ் சாத்திரத்தைக் கற்கிறபோது பிரயாசமாயிருந்து, கற்று அதன் பொருளை யறிந்தபிறகு, சுகத்தைக் கொடுக்கிறாப்போலே-நட்புச் செய்யுமளவும் அருமையாயிருந்து பிறகு நல்ல பலத்தைக் கொடுக்கும் (எ - று). (௩)

**784.** நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

(இ - ள்.) ஒருவனுடனே ஒருவன் சினேகம்பண்ணுகிறது முகத்துமுன்னே சிரிப்பு வரத்தக்க வார்த்தைகளைச் சொல்லி நகைக்கிறதுக் கன்று; அவனுக்கு வேண்டாத காரியங்கள் நடக்கிறதை யறிந்தால், முந்தி கண்டித்துப் புத்தி சொல்லுகிறதுக்கு (எ - று).

முந்திச் சொன்னால் அந்தப் பொல்லாங்கு வாராமற் பரிகரித்துக்கொள்ளலாம். பாவமும் பழியும் வருகிற நகையாகிய சிரிப்பைப் பண்ணுகிறதினாலே பலனில்லை. (௪)

**785.** புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும்.

(இ - ள்.) ஒருவனோடொருவன் சினேகமாதற்குக் கூட்டுறவும் பழகுகிறதும் வேண்டாம்; இரண்டு பேருக்கும் அறிவு சரியாயிருந்தால் அதுதானே சினேகத்தைக் கொடுக்கும் (எ - று).

கூட்டுறவாகிறது - ஒரு ஊரிலே யிருக்கிறது. பழகுகிற தாவது - பலகாலுங் கண்டு பேசுகிறது. (ரு)

786. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.

(இ - ள்.) கண்டபொழுது முகம்மாத்திரம் மலரச் சொல்லுகிறது சினேகமன்று; மனசு சந்தோஷப்பட நடக்கிறதே சினேகம் (எ - று).

உள்ளும் புறமும் ஒத்திருக்கிறதே நட்பாவது. (சு)

787. அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு.

(இ - ள்.) கேடுதருந் தீநெறிகளை விலக்கி, நன்னெறிகளைச் செலுத்தி, விலக்கவும் போகாத பொல்லாங்குகளைத் தானும் கூட அனுபவிக்கிறதே சினேகமாவது (எ - று). (எ)

788. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு.

(இ - ள்.) உடுத்த ஆடை கழன்றபோது கைகள்போய் அதனைக் கெட்டியாய்க் கட்டியுடுத்து அவமானத்தை நீக்கியது போலே, சினேகிதனுக்குத் துக்கம் வந்தவுடனே தான் போய் அதனைத் தீர்ப்பதே நட்பாவது (எ - று). (அ)

789. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்று நிலை.

(இ - ள்.) சினேகத்துக்கு ராச்சிய மேதென்றால், எந்நாளுந் திரும்பாம லியல்பாகச் சினேகம்பண்ணித் தருமத்திலேயும், பொருளிலேயும் குறைபடாமல் தாங்குகிறதே (எ - று).

எந்நாளும் திரும்பாதது - மறுமையிம்மைக் குறுதியாகிய அறம் பொருள்களிற் றளர்ந்தால், அந்தத் தளர்ச்சியை நீக்குதலாம். (கூ)

790. இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு.

(இ - ள்.) "இவர் நமக்கு இத்தனை தயையுடையவர்; நாம் இவர்க்கு இம் மாத்திரம் அன்பினர்" என்று சொன்னாலும், சினேகம் கொஞ்சமாய்ப் போகும் (எ - று).

நாமிவரென்று வேற்றுமை யில்லாமலிருக்கிறதே சினேக மென்பது. (கo)

---

## 80. நட்பாராய்தல்

அஃதாவது - சினேகம்பண்ணவேண்டின பேரை அறிந்தே சினேகம் பண்ணவேண்டுதலின், அவரை ஆரா யுந் திறம்.

**791.** நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

(இ - ள்.) நட்பினை விரும்பி அதில் நிற்பார்க்கு, ஒருவன் குணங்களை ஆராய்ந்து அறிந்து நட்புச்செய்தாற் பின்பு பிரிகிறதில்லையாம். ஆராய்ந்து விசாரியாமல் நட்புச்செய்தாற் கேடு வரும் (எ - று).

நல்ல குணவான் ஆனால் நட்புச் செய்யலாம்; பொல்லாத வனானால் சிநேகம் பண்ணப்போகாது (எ - ம்). (க)

**792.** ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.

(இ - ள்.) குணமும் நடத்தையும் நல்லன் என்கிறதைப் பலகாலும் பலவற்றாலும் ஆராய்ந்து நட்புக்கொள்ளாதவனுக்குக் கடைசியிலே தான் சாகத்தக்க துக்கம் வரும் (எ - று).

குணமும் செயலும் பொல்லாதவனாய் இருக்கிறவனோடே சிநேகம்பண்ணினால், அவன்மேற் பகையெல்லாம் தன்மேலே வந்து, அந்தப் பகையினாலே தனக்குப் பிராணஹானி வரும் (எ - ம்). (உ)

**793.** குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனு மறிந்தியாக்க நட்பு.

(இ - ள்.) ஒருவன் குணத்தினையும் அவன் வங்கிசப் பிறப்பையும் குற்றத்தையும் அவனுடைய சிநேகிதரையும் ஆராய்ந்து அறிந்து சிநேகம்பண்ணவேணும் (எ - று).

குற்றமில்லாதார் உலகத்து இல்லையானபடியினாலே, அவர் செய்கிற குற்றம் பொறுத்தக்கதாகில் நட்புக்கொள்ளலாம் ; பொறுக்கப்படாதானால் நட்புக்கொள்ளவேண்டாம் (எ - ம்).

**794.** குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.

*(இ - ள்.) உயர்ந்த குடியிலே பிறந்து தன்னிடத்திலே உலகத்தார் சொல்லும் நிந்தைக்கு அஞ்சுகிறவனைக் கண்டால், அவனுக்குச் சிலபொருள் கொடுத்தாகிலும் நட்புக்கொள்ள வேணும் (எ - று).*

*நல்ல குடியிலே பிறந்தவர்கள் பழியான காரியங்களைச் செய்யார். பழிக்கு அஞ்சுகிறவர்கள் பிறர் செய்த பிழையைப் பொறுப்பார்கள். தாங்கள் குற்றங்களைச் செய்யாமையும் பிறர் செய்த பிழையைப் பொறுக்கிறதுமான குணங்களை யுடையவர்கள் நட்பு மெத்தவும் நல்லது (எ - ம்). (௪)*

**795.** அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

*(இ - ள்.) தான் உலகவழக்கமல்லாத காரியத்தைச் செய்ய நினைத்தால் அழத்தக்க கடின வார்த்தைகளைச் சொல்லி விலக்கவும், செய்தாற் பின்பும் செய்யவொட்டாமல் நெருக்கிப்பிடிக்கவும், நல்ல காரியங்களைச் செய்யாவிட்டால் அதட்டிச் செய்விக்கவும் வல்லவர்களை ஆராய்ந்துபார்த்து நட்புக்கொள்ளவேணும் (எ - று). (௫)*

**796.** கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.

*(இ - ள்.) ஒருவனுக்குக் கேடு என்பது, தன்னுடைய சுற்றத்தார் மனதுகளை எஞ்சாமல் அளப்பது ஒரு கோல்; அக் கேட்டிலும் ஒரு நல்லறிவு பிறக்கும் (எ - று).*

*சிநேகிதன் மனத்தையும் செயல்களையும் ஆராய்ந்தால், இவனுக்கு நல்லறிவும் அவனுக்கு அடக்கமும் வரும் (எ - ம்). (௬)*

**797.** ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

(இ - ள்.) ஒருவனுக்குப் பெறப்பட்ட பேருவது, அறிவில்லாதவனுடனே சிநேகம்பண்ணினால், அதைக் கழியவிட்டு அவரின் நீங்குதல் (எ - று).

அறிவில்லாதவனுடைய சிநேகத்தை விடாவிட்டால், அவன் செய்கிற தீங்கினாலே அறிவுடையவனுக்கும் கேடுவரும் (எ-ம்). (எ)

798. உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
அல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.

(இ - ள்.) தன்னுடைய ஊக்கம் குறைந்து போகிறதற்குக் காரணமாகிய காரியங்களைச் செய்ய நினைக்க வேண்டாம். அதுபோல, தனக்கொரு துக்கம் வந்தபோது விட்டுப்போகிறவனுடனே சிநேகம் பண்ணவேண்டாம் (எ - று). (அ)

799. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை
யுள்ளினு முள்ளஞ் சுடும்.

(இ-ள்.) ஒருவனோடொருவன் சிநேகமாய் இருக்கையிலே ஒருவனுக்குக் கேடு வந்தபோது அவனை விட்டுப்போனால் அவனுடைய சிநேகத்தைப் பிராணன் போகிறபோது நினைத்தாலும் நெஞ்சு சுடும் (எ - று).

ஆபத்துக்கு உதவாதவனுடைய சிநேகத்தை நினைத்தாலும் பொல்லாங்காய் இருக்கும் (எ-ம்). (கூ)

800. மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு.

(இ - ள்.) குற்றமற்றவர்களுடைய சிநேகத்தையே பண்ணவேணும்; அறிவில்லாதவர்களுடனே சிநேகம்பண்ணினாலும், அவர் வேண்டியதொன்றைக் கொடுத்தாகிலும், விட்டுவிடவேண்டும் (எ - று).

குற்றமற்றவர்களுடைய நட்பு இம்மையிலே கீர்த்தியும், மறுமையிலே புண்ணியமும் உண்டாக்கும். அறிவில்லாதாருடைய சிநேகம் துக்கத்தைப் பண்ணுவிக்கிறபடியினாலே விடவேண்டும் (எ - ம்). (கம)

---

# 81. பழமை

அஃதாவது-சிநேகிதருடைய பழமையினாலே அவர்கள் செய்த பிழைகளைப் பொறுத்தலாம்.

**801.** பழமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

(இ - ள்.) பழமையென்று சொல்லப்படுவது யாது என்றால், ஒருவனுக்குச் செய்யவேண்டிய காரியத்தைச் சற்றும் குறைபடாமல் செய்ய உடன்படும் நட்பு (எ - று).

செய்ய வேண்டியவை-சிநேகிதருக்கு வேண்டிய காரியத்தைத் தானே செய்தலும், அவன்பொருளைத் தன பொருளாகவே பார்க்கிறதும், வணக்கமும் பயமும் இல்லாமல் இருக்கிறதுமாம். (க)

**802.** நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன்.

(இ - ள்.) சிநேகிதத்துக்கு அவயவமாவது சிநேகிதருக்கு உரிமையாய்ச் செய்யப்பட்ட காரியம். அதனால், அவ் வுரிமைக்கு உரியராதல் சான்றோர்க்கு முறைமை. (எ - று). (உ)

**803.** பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.

(இ - ள்.) நல்ல காரியங்களைச் செய்கிறதற்குத் தன்னால் கூடாவிட்டாலும், தன்னுடைய சிநேகிதர் தனக்குச் செய்யும் நல்ல காரியங்களுக்குத் தான் உடன்படாவிட்டால், அவனுடைய சிநேகம் என்ன பலனும்? (எ - று). (ந)

**804.** விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்.

(இ - ள்.) தன்னுடைய காரியத்தைச் சிநேகிதர் கேளாமற் செய்தால், அதற்குச் சந்தோஷப்பட்டு விரும்பியிருப்பர் அறிவுடையவர் (எ - று).

தன் காரியத்தைத் தான் அறியாமலே செய்து முடிக்கிறது மிக நன்று (எ - ம்). (ச)

**805.** பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

*(இ - ள்.) தாம் வெறுக்கத்தக்க காரியங்களைத் தன்னுடைய சிநேகிதர் செய்தால், அறிவில்லாமற் செய்தான் என்றாகிலும், சிநேகிதத்தினால் செய்தான் என்றாகிலும் நினைத்துக் கொள்ளவேண்டுமல்லாமல், பகையாற் செய்தான் என்று நினைக்கப்போகாது (எ - று).* (ரு)

**806.** எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துத்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு.

*(இ - ள்.) சிநேகம்வேண்டி இருக்கிறபேர், பழையவர்களாய் இருக்கிற சிநேகிதர் 'சிநேகம்விட்டுப் போகிறோம்' என்றாலும், போகவொட்டாமற் நிறுத்திக்கொள்ளுவார்கள் (எ - று).*

*பழையவர்களாய் இருக்கிறவர் நட்பை விட்டால் கெடுவர் (எ - ம்).* (சு)

**807.** அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

*(இ - ள்.) தன்னுடைய சிநேகிதர் தனக்கு அழிவு வரத்தக்க காரியங்களைச் செய்தாலும், அறிவுடையவர்கள் அவர்கள் சிநேகம் விடார் (எ - று).*

*பழையராய் வந்த சிநேகிதர் செய்த குற்றத்தைப் பொறுத்துக்கொள்ள வேணும் (எ - ம்).* (எ)

**808.** கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்க நட்டார் செயின்.

*(இ - ள்.) சிநேகிதர் செய்த குற்றங்களைத் தாங்களேயன்றிப் பிறர் சொன்னாலும் கொள்ளாத உரிமை அறியவல்லவர்களுக்கு, அவர்கள் குற்றம்செய்த நாள்களும் நன்மைசெய்த நாள்களோடு ஒக்கும் (எ - று).*

*குற்றங்களாவன - கேளாமற் பொருள்களை எடுத்துக் கொள்ளுகிறது, வணங்காதது, பயப்படாதது முதலாயின.*

809. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு.

(இ - ள்.) பழையவர்களான சிநேகிதர்கள் செய்த பிழையைப் பார்த்து அவர்கள்சிநேகத்தை விடாத பேர்களை உலகத்தார் விடாமற் சிநேகிப்பார்கள் (எ - று).

சிநேகிதர் பிழைபொறுக்கிறதைக் கண்டு "நான் செய்த பிழையையும் பொறுப்பர்" என்று எண்ணிச் சிநேகம்பண்ணுவர் (எ-ம்). (கூ)

810. விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார்.

(இ - ள்.) பழைய சிநேகிதர்பிழையைப் பொறுத்து அவரிடத்திலே சிநேகம்விடாதாருடன் பகைவர்களும் சிநேகம் பண்ண நினைப்பர் (எ - று).

பிழைபொறுத்தலாவது-குற்றம் செய்தவிடத்தும் முன்பு போல் அன்பு விடாமல் இருக்கிறது. (கo)

---

## 82. தீநட்பு

இனி, பொறுக்கப்படாத குற்றமுடைமையின் விடற்பாலதாய நட்பு, நட்பாராய்தற்கண் சுருங்கச் சொல்லிய துணையான் அடங்காமையின், அதனை இரண்டுவகைப் படுத்தி, முதற்கண் தீநட்புச் சொல்லுகிறார். தீநட்பாவது-பொல்லாத குணத்தாருடனே சிநேகம் பண்ணுகிறது.

811. பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

(இ - ள்.) வெகுவான சிநேகிதம் இருந்தாலும் பொல்லாத குணமுடையவர்களுடனே கொண்ட உறவு வளர்கிறதிலும் குறைந்துவிடுகிறதே நல்லது (எ - று).

பொல்லாதவர்களுடனே கொண்ட உறவு அதிகமானால் கேடு வரும் ; குறைந்தாற் கேடு வாராது (எ - ம்). (க)

**812.** உறினட் டறிவொருஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென்.

*(இ - ள்.) தங்களுக்குப் பிரயோசனமானபோது சிநேகம் பண்ணி, பிரயோசனமில்லாதபோது சிநேகம் விட்டுப்போகும் அறிவில்லாதாருடைய உறவைப் பெற்றதனால் என்ன பலன்? பெறாவிட்டால் என்ன பலன் இல்லாமற்போம்? (எ - று).*

*இப்படிப்பட்ட குணமுடையவர்களைப் புறத்தியாராகப் பார்த்துக்கொள்ள வேணும் (எ - ம்). (உ)*

**813.** உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர்.

*(இ-ள்.) சிநேகத்தை எண்ணுமற் பொருள் வருகிறதைப் பார்க்கிற சிநேகிதர்களும், கொடுப்பாரை எண்ணுமற் பொருளையே காரணமாக எண்ணுகிற வேசிகளும், பிறர் கெடுகிறதைப் பாராமல் அவர்கள் மறக்கப் பார்த்து அவர்கள் பொருளைத் திருடிக்கொள்ளுகிற கள்வரும் சரி (எ - று). (ங)*

**814.** அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
தமரிற் றனிமை தலை.

*(இ - ள்.) பகைவர்சண்டை வாராதமுன்னேயெல்லாம் சிநேகமாய் இருந்து சண்டையிலே போட்டுவிட்டு வருகிற குதிரையைப்போல, அறிவில்லாதவர்களுடைய சிநேகத்திலும் அவர்களைவிட்டு நீங்கித் தனியே இருக்கிறது மெத்த நல்லது (எ - று).*

*அறிவில்லாதவர்களைச் சிநேகமாக நம்பினால், கேடு வரும்; அவர்கள் இல்லாவிட்டால் கேடு வாராது (எ - ம்). (ச)*

**815.** செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலி னெய்தாமை நன்று.

*(இ - ள்.) சிநேகிதரான துர்ச்சனருக்கு உபசாரங்களைச் செய்திருந்தும், துணையாகாதவர்களுடைய சிநேகம் உண்டா-கிறதிலும், இல்லாமற் போகிறது நல்லது (எ - று).*

*துணையாகாதது-ஆபத்துக்குதவாமல் விட்டுப் போகிறது (எ - ம்). (ரு)*

**816.** பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும்.

*(இ - ள்.) அறிவில்லாதவனுடைய நெருங்கிய சிநேகத்தினும் அறிவுள்ளவனுடைய பகை கோடியத்தனை நல்லது (எ - று).*

*அறிவுடையவன்பகையால் ஒரு பொல்லாங்கும் வாராது; அறிவில்லாதவன் சிநேகத்தால் பொல்லாங்கே வரும் (எ - ம்).*

**817.** நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும்.

*(இ - ள்.) தாம் அறியத்தக்கவராகாது முகவிச்சையாய் நகைக்கிறவர்களுடைய சிநேகத்தினாலே வருகிற பலத்தினும், பகைவரால் வருவன பத்துக்கோடி மடங்கு நல்லவை (எ - று).* (எ)

**818.** ஒல்லுங் கரும முடற்றுபவர் கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

*(இ - ள்.) தம்மாலே முடியுங் காரியத்தை 'முடியா' தென்று சொல்லி ஆலஸ்யம்பண்ணுகிறவர்களுடைய சிநேகத்தை, அவர்கள் அறியாமலேயே, விட்டுவிட வேண்டும் (எ - று).*

*விடுகிறதை அவர்கள் அறியச் சொல்லினும், விடுகின்றவாறே தோன்றினும் அப்பொழுதே பரிகரித்துக்கொண்டு பின்னையும் உறவாய்இருக்க வேண்டுவராதலின், 'சொல்லாடார்' என்றும், 'சோரவிடல்' என்றும் கூறினார்.* (அ)

**819.** கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

*(இ - ள்.) சொல்லுகிறதும் செய்கிறதும் ஒவ்வாமல் வேறாக இருக்கிறவர்களுடைய சிநேகம், நினைவிலே யல்லாமல், கனவிலேயும் ஆகாது (எ - று).*

*சொல்லுகிறபோது நன்மையாய்ப் பேசி, காரியத்திலே பகைபண்ணுகிறவர்களுடைய சிநேகம் ஆகாது (எ - ம்).* (கூ)

**820.** எனைத்துங் குறுகுத லோம்பல் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு.

*(இ - ள்.) தான் தனியே வீட்டிலே இருக்கிறபோது உறவாடி, பிறகு சபையிலே இருக்கிறபோது தன்னை இகழ்ந்து பேசிப் பழிக்கிறவர்களுடைய சிநேகம் சற்றும் பண்ணாமல் பரிகரித்துவிடவேண்டும் (எ - று).*

*தனியே இருக்கிறபோது உறவுசெய்து பலர்முன்னே பழிக்கிறவர்கள் தன்னை ஒருகாலும் சேராமற் காத்துக் கொள்ளவேணும் (எ - ம்).* (௧௦)

## 83. கூடா நட்பு

*அஃதாவது-மனத்திலே பகைவைத்துக்கொண்டு அந்தப் பகையைச் சாதிக்கப் பக்குவம் வரும் அளவும் பொய்யுறவு பண்ணிக்கொண்டு இருக்கிறது என்பது.*

**821.** சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

*(இ - ள்.) மனத்திலே உறவில்லாமற் பகையாய், வெளியிலே உறவாயிருக்கிறவர்களுடைய சிநேகம், ஒன்றை வைத்து ஒன்றாலே வெட்டி நறுக்குவதற்கிடமான பட்டடையோடொக்கும் (எ - று).*

*பட்டடை, நறுக்குகிற பரியந்தம் சுமந்துகொண்டிருந்து, பக்குவம் வந்தபோது இரண்டாய்த் துண்டிக்கும். அதுபோல, மனத்திலே பகையும் வெளியிலே உறவுமாய் இருக்கிறவர்கள் பக்குவம் வந்தபோது கொல்லுவார்கள் (எ - ம்).* (௧)

**822.** இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

*(இ - ள்.) தனக்கு உற்றார்போல விருந்து மனத்திலே உறவில்லாதாருடைய சிநேகம், ஸ்திரீசனங்களின் மனதுபோல, தமக்கான இடம் பெற்றால் வேறுபடும் (எ - று).*

*நட்புவேறுபடுதலாவது-பழைய பகையே ஆதல் (எ - ம்).*

**823.** பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதல் மாணுர்க் கரிது.

*(இ - ள்.) நல்லனவாய பல நூல்களைக் கற்றவிடத்தும் அதனலே மனந்திரும்பி சிநேகம் ஆகிறது பகைவர்களுக்கு இல்லை (எ - று).*

*நல்ல நூலாவன - மனது குற்றந் தீர்ப்பன. மனது நல்லதாகிறது - கோபம் விடுகிறது. மனசிலே பகை இருக்கிறவர்களைக் கல்விஉடையவர்கள் என்று சிநேகம்பண்ணலாகாது (எ - ம்). (௩)*

**824.** முகத்தி னினிய நகாஅ வகத்தின்னு
வஞ்சரை யஞ்சப் படும்.

*(இ - ள்.) கண்டபொழுது முகத்துக்கு நல்லவனுகச் சிரித்து மனத்திலே பகையாய் இருக்கிற வஞ்சகரைக் கண்டால் பயப்படவேணும் (எ - று).*

*மனத்திலே இருக்கிற பகையைப் புறத்து வெளிப்படுத்தாமையானும், மனத்திலே யிருக்கிற குறிப்பை அறிவிக்கும் முகத்தாலேயும் தோன்றுமையானும் மறைக்கும் வஞ்சகருக்குப் பயப்படவேண்டும் (எ - ம்). (௪)*

**825.** மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினுற் றேறற்பாற் றன்று.

*(இ - ள்.) மனத்தினுலே உறவுகலவாதவரை யாதொரு காரியத்தினுஞ் சொல்லினுலே தெளிகிறது முறைமைத்தன்று (எ - று).*

*மனசிலே பகையாய் இருக்கிறவர்கள் சொல்லுகிற பிரிய வார்த்தையை மெய்யென்று நம்ப வேண்டாம் (எ - ம்). (ரு)*

**826.** நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ
லொல்லை யுணரப் படும்.

*(இ - ள்.) உறவின்முறையாரைப்போலே நல்ல வசனங்களைச் சொன்னுலும் பகைவர்வார்த்தைகளை மெய் என்று நம்பப்போகாது (எ - று).*

அவர்சொல் சொன்னபடியே செய்யாதாகிறதை அந்த க்ஷணத்திலே அறியப்படும் (எ - ம்). (சு)

**827.** சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான்.

(இ - ள்.) வில்லுடைய வணக்கம் எதிர்த்தவர்களுக்குத் தீங்கு செய்யும்; அதுபோல, பகைவர் சொல்லும் சொல்லினுடைய வணக்கத்தையும் "நமக்கு நன்மை செய்யும்" என்று எண்ணவேண்டாம் (எ - று).

பகைவர் வணங்குகிறது தீங்குசெய்ய வென்று அஞ்சிக் காக்கவேண்டும் (எ - ம்). (எ)

**828.** தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னா
ரழுதகண் ணீரு மனைத்து.

(இ - ள்.) பகைவர்குறிப்பை அறியவல்லவர்களுக்கு அவர் கும்பிடுகிறபோதும், அந்தக் கைக்குள்ளே ஆயுதம் மறைவாய் இருக்கும்; அழுகிறபோதும், அப்படித்தானே ஆயுதம் மறைந்திருத்தற்கு இடனாகும் (எ - று).

பகைவர், தாம் நண்பர் என்பதனைத் தங்கள் கையாலேயுங் கண்ணாலேயுந் தேறச்செய்து, பிறகு சமயம்பார்த்துக் கொல்லுவர் (எ-ம்). (அ)

**829.** மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று.

(இ - ள்.) பகையை அறியவொட்டாமல் புறத்திலே உறவை மெத்தச் செய்து, மனத்திலே தம்மை இகழும் பகைவரைத் தாமும் அப்படியே வெளியிலே உறவாய் மனத்திலே அந்த உறவை வையாமல் விட்டுவிடவேணும் (எ - று).

உள்ளே ஒருவகையும் மேலே ஒருவகையும் செய்கிறது ஆகாது; ஆனாலும், வஞ்சகரான பகைவர்களிடத்திலே ஆம் (எ - ம்). (கூ)

**830.** பகைநட்பாங் காலம் வருங்கான் முகநட்
டகநட் பொரீஇ விடல்.

(இ - ள்.) தன் பகைவர் தனக்குச் சிநேகிதராய் நடக்கிற காலம் வந்தால், தானும் அவரோடு முகத்தாலே உறவு பண்ணி மனத்திலே அந்த உறவை விட்டு பிறகு அந்த முகத் துறவையும் தவிர்க்கவேண்டும் (எ - று).

நட்பாகிற காலமாவது தம்மாலும் பகையென்று வெளிப் பட நீக்கலாகாத் சமயம் (கo)

---

## 84. பேதைமை

அஃதாவது - யாதொன்றையும் அறியாமல் இருக் கிறது.

**831.** பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல்.

(இ - ள்.) ஒருவனுக்குப் பேதைமை என்கிறது யாதென் றால், தனக்குக் கேடு வருகிற காரியத்தைச் செய்து, பலன் வரு கிற காரியத்தை விடுகிறது (எ - று).

கேடு வருகிற காரியமாவது-தரித்திரம், பகை, பழி பாவங் கள் வருகிறது. பலனாகிறது - புகழ் அறங்கள். பேதைமை என் பது எல்லாக் குற்றங்களிலும் அதிகமான குற்றம் (எ - ம். (க)

**832.** பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்.

(இ - ள்.) ஒருவனுக்குப் பேதைமையுளெல்லாம் மிக்க பேதைமையாவது, தனக்காகாத ஆசாரஒழுக்கத்தின்மேலே ஆசைவைத்துச் செய்கிறது (எ - று).

இம்மை மறுமை இரண்டுக்கும் ஆகாது என்று பெரி யோர்கள் சாத்திரத்திலே சொன்ன காரியங்களைச் செய்கிறது மிக்க பேதைமை (எ - ம்). (உ)

**833.** நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

(இ - ள்.) நாண வேண்டியதற்கு நாணாமையும், நாட வேண்டியதற்கு நாடாமையும், எல்லாரிடத்திலும் முறிந்த

சொல்லையும் செய்கைகளையும் உடைமையும், யாதொன்றி னையும் பேணுமையும் பேதையின் தொழில் (எ - று.)

நாணவேண்டுமவை-பழி, பாவங்கள். நாடவேண்டுமவை-கருமங்களிலே செய்கிறதும் தவிர்கிறதும். பேணவேண்டு மவை - குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம் முதலியவை (எ - ம்).

**834.** ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

(இ - ள்.) மன வசன காயங்கள் அடங்குவதற்கு ஏது வான சாத்திரங்களைக் கற்றும், அவ் வடக்கத்தான் வரும் பயனை அறிந்தும், அந்தப் பொருளைப் பிறருக்குச் சொல்லியும், தான் அடங்கி அந்த ஆசாரத்தின்படியே நடவாத பேதையைப் போலப் பேதையானவர்கள் உலகத்தி லில்லை (எ - று).

இந்தப் பேதைமையைத் தீர்க்க வேறு மருந்து இல்லை. (ச)

**835.** ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு.

(இ - ள்.) ஒருபிறப்பிலே அறிவில்லாதானுய் இருப்பவன், எழுபிறப்புக்களிலே நரகத்திலே பிறந்து, துக்கத்தை அனுபவிப்பான் (எ - று).

அறிவில்லாதவன் ஒருபிறப்பிலே செய்த கொடிய வினை யினுலே, ஏழேழுபிறப்பும் நரகம் உண்டாம் (எ - ம்). (ரு)

**836.** பொய்படு மொன்றே புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.

(இ - ள்.) செய்கிற முறைமை அறியாத பேதையானவன் ஒருகாரியத்தைச் செய்யத் தொடங்கினுல், அந்தக் கருமமுங் கெட்டு, தானுங் குற்றத்தை அடைவான் (எ - று).

கருமம் கெடுகிறது - பின்னை ஆகாதது. தான் குற்றப்படு கிறது - எல்லாராலும் இகழப்படுகிறதாம். (சா)

**837.** ஏதிலா ரார்த் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை.

(இ - ள்.) பேதையானவனுக்கு முன் செய்த புண்ணியத்திஞலே ஐஸ்வர்யம் வந்தால், அவனுக்குரியவரல்லாதபேர் அந்த ஐஸ்வர்யத்தை அனுபவிப்பர் ; உரிமையானவர்கள் பசித்திருப்பார் (எ - று). (எ)

838. மைய லொருவன் களித்தற்ருற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின்.

(இ - ள்.) பேதையானவன் தன் கையிலே ஒருபொருள் உண்டாகப் பெற்ருல், பயித்தியக்காரர் கள்ளைக் குடித்து மயங்கிஞற்போலும் (எ - று).

அறிவில்லாதவனுக்குச் செல்வம் வந்தால், பயன் வாராது (எ - ம்). (அ)

839. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்.

(இ - ள்.) பேதையானவனுடைய சிநேகம் மெத்த நல்லது. அது எப்படி என்ருல், சிலநாளிலே அவனை விட்டுப் பிரிந்தால் அதனுலே குற்றம் வாராது (எ - று).

ஆஞல், அறிவுடையவர்சிநேகம் விட்டுப் பிரிந்தால் வெகு துக்கம் வரும். (கூ)

840. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்ருற் சான்ருேர்
குழாஅத்துப் பேதை புகல்.

(இ - ள்.) பெரியவர்கள்சபையிலே பேதையானவன் போஞல், கழுவாத காலைச் சுகத்தைக் கொடுக்கிற படுக்கைக் கட்டிலின்மேலே வைத்தாலொக்கும் (எ - று).

கழுவாத காலால் மிதித்த அமளி பழிக்கப்படுமாறு போல, பேதையானவன் புகுந்த சபையும் பழிக்கப்படும் (எ - ம்). (கo)

---

## 85. புல்லறிவாண்மை

அஃதாவது - தான் சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவுடையனாக எண்ணிக் கொண்டு பெரியோர் சொன்ன வுறுதிவசனங்களைக் கைக்கொள்ளாமை யென்பது.

**841.** **அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை**
**யின்மையா வையா துலகு.**

*(இ - ள்.) ஒருவனுக்கு இல்லாமையாகிய தரித்திரங்களுக் குள்ளே மெத்த தரித்திரமாவது அறிவில்லாமையே; பொருளில் லாமையை அதுபோல வறுமையாக எண்ணார் உலகத்தார் (எ - று).*

*அறிவாவது - நல்லறிவு. அறிவில்லாதவர்கள் செல்வம் எய்தியிருந்தும் இம்மைமறுமைப்பயன் எய்தார். அறிவுள்ள வர்கள் தரித்திரமானபோதும் விரதசீலாச்சாரங்களை விடாமல் நடந்து மறுமைப்பயனை யெய்துவர் (எ - ம்). (க)*

**842.** **அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது**
**மில்லை பெறுவான் றவம்.**

*(இ - ள்.) புல்லறிவுடையார் மனச் சந்தோஷத்துடனே ஒருவனுக்கு ஒருபொருளைக் கொடுத்தால், அது வாங்கிக் கொள்ளுகிறவன் செய்த புண்ணியமே யல்லாமல், வேறொன்று மில்லை (எ - று).*

*கொடுக்கிறவன் இம்மைமறுமைகளை வேண்டிக்கொடுக்க வேணும் (எ - ம்). (உ)*

**843.** **அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை**
**செறுவார்க்குஞ் செய்த லரிது.**

*(இ - ள்.) அறிவில்லாதவர்கள் தாமே தம்மை வருத்தும் வருத்தம் பகைவர்க்கும் செய்தல் அரிது (எ - று).*

*பகைவர் தாம் அறிந்த ஒரு காரியத்தைக் காலம் பார்த்துக் கொண்டிருந்து செய்வர். வறுமை பழி பாவங்களைப் பகைவர் செய்யமாட்டார் (எ - ம்). (ங)*

**844.** வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு.

*(இ - ள்.)* புல்லறிவுடையவ னென்று சொல்லப்படுகிறது ஏதென்றால், தன்னைத் தானே நல்லறிவுடைய னென்று சொல்லுகிற மயக்கம் (எ - று).

வெண்மையாவது - இளமையான அறிவு; முதிர்ந்த அறிவின்மை. (ச)

**845.** கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும்.

*(இ - ள்.)* புல்லறிவாளர் தாம் கல்லாத நூல்களைக் கற்றேமென்று வெகுமானமாய்ச் சொல்லிக்கொள்ளுகிறது, நன்றாய்க் கற்ற நூலிலும் பிறருக்குச் சந்தேகத்தை விளைக்கும் (எ-று).

சந்தேகமாவது-கல்லாத நூலைக் கற்றேமென்று சொல்லக் கேட்டு, அதனைப் பரீட்சை கேட்கிறபோது வாராதபடியினாலே, "அந் நூலில் வல்லவர் என்று சொல்லுவதும் இங்ஙனந் தான் இருக்குமோ?" என்று எண்ணுவது. (ரு)

**846.** அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி.

*(இ - ள்.)* புல்லறிவாளர் தங்களிடத்திலே வரப்பட்ட குற்றங்களை அறிந்தும் கடியாமல், புடைவைகளாலே தங்கள் சரீரத்தை மறைத்துக் கொள்ளுகிறது புல்லறிவாம் (எ - று).

குற்றம் மறைத்தலாவது - பொல்லாங்குகளைச் செய்யாதிருக்கிறது. (சா)

**847.** அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

*(இ - ள்.)* பெறுதற்கரிய உபதேசப்பொருளைப் பெற்றாலும் அதனை மனத்திலே வையாமல் மறந்துபோகும் புல்லறிவாளன், அந்த உபதேசவுறுதி அறியாமையால், தனக்குத் தானே கேடு தேடிக்கொள்வான் (எ - று). (எ)

848. ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

(இ - ள்.) புல்லறிவாளன் தனக்குறுதியான காரியத்தை அறிவுடையார் சொல்லவும் செய்யான் ; தானும் அறியான் ; அவ் வுயிர் போகிற பரியந்தம் நிலத்துக்குப் பொறுத்தற் கரியதொரு நோயாம் (எ - று).

மலைகளையும சமுத்திரங்களையும் பொறுத்துச் சுமந் திருக்கிற பூமிக்கு, பாவியானவர்களின் உடம்பு பெரும்பாரமா யிருக்கும் (எ - ம்). (அ)

849. காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு.

(இ - ள்.) தான் எல்லாமறிந்தவனென்று பெருமை சொல்லிக்கொண்டு பிறரை அறிவிக்கப்போகிறவன் அவனாலே தான் பழிக்கப்பட்டுத் தானறியவாதவனாவான். அறியாதவன், தான் கொண்ட நெறியை விடாமையால், அதனை அறிந்தவ னாக முடியும் (எ - று).

புல்லறிவாளற்கு எந்த வகையாலும் நல்லறிவு கொளுவக் கூடாது (எ - ம்). (கூ)

850. உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.

(இ - ள்.) பெரியோர்கள் அனேகம் பேர்களும் உண்டு என்று சொல்லுகிற பொருளைப் புல்லறிவாலே யில்லையென்று சொல்லுகிறவன் மனுஷனல்லன் ; பூமியிலே பேயென்று சொல்லப்படும் (எ - று).

பெரியோர்கள் உண்டு என்பன - தெய்வமும் மறுபிறப்பும் இருவினைப் பயனும் முதலானவை. இவற்றைத் தன் மதாச் சாரத்தினாலே இல்லை யென்று சொல்லுகிறவன் பேயோ டொக்கும் (எ - ம்). (௫0)

*

## 86. இகல்

அஃதாவது - இரண்டுபேர்கள் ஒருவர்க்கொருவர் கோபத்தினாலே சண்டைபண்ணிக் கெட்டுப்போவதற்குக் காரணமாகிய மாறுபாடு.

**851.** இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய்.

(இ - ள்.) எல்லா உயிர்களுக்கும் பிறவுயிர்களோடு கூட்டம் இல்லாமல் இருக்கிறதென்னும் பொல்லாங்கை வளர்க்கும் குற்றமே இகலாம் (எ - று).

நற்குணம் இல்லாததே தீக்குணமாம். (க)

**852.** பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி
இன்னாசெய் யாமை தலை.

(இ - ள்.) தன்னோடு கூடாமையைக் கருதி ஒருவன் ஒருவனுக்குப் பொல்லாங்கு செய்தாலும், அவனுடனே பகை பண்ணிக்கொண்டு திரும்பி அவனுக்குப் பொல்லாங்கு செய்யாமல் இருக்கிறதே நல்லது (எ - று).

இவனும் பொல்லாங்கு செய்தால், பகை வளர்ந்து, இரண்டுபேரும் கெடுவர் (எ - ம்). (உ)

**853.** இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும்.

(இ - ள்.) பகை யென்று சொல்லப்படுந் துக்கத்தைச் செய்கிற வியாதியை ஒருவன் தன் மனத்திலே இருக்கவொட்டாமல் நீக்கிவிட்டால், அது அவனுக்கு எந்நாளும் அழியாத புகழைக் கொடுக்கும் (எ - று).

பகை மனத்திலே இல்லாவிட்டால், எல்லோரும் உறவாவார்கள். அதனாலே, நினைத்த கருமமெல்லாம் முடியும் (எ - ம்). (ந)

**854.** இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

(இ - ள்.) பகையென்று சொல்லப்படுகின்ற துன்பம் எல்லாத் துன்பங்களிலும் அதிகமாம். அந்தப் பகையில்லாதவனுக்கு அவ் வின்மை இன்பத்துக்கெல்லாம் இன்பத்தைத் தரும் (எ - று).

துக்கத்திலும் அதிக துக்கமாவது - எல்லாருடனேயும் பகைத்துக்கொண்டு தன் பலம் போகிறது. இன்பத்துள் இன்பமாவது - எல்லாரும் சிநேகமானால் வேண்டியதெல்லாம் எய்துவது (எ - ம்). (௪)

855. இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர்.

(இ - ள்.) தன்மனத்திலே பகை தோன்றினால் அதனைப் பேணி அதிகமாக்காமல் தள்ளிப்போடுகிறவர்களை வெல்ல நினைக்கிறவர் யாருமில்லை (எ - று).

பகையில்லாதவர்களை ஒருவராலும் செயிக்கப் போகாது (எ - ம்). (௫)

856. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

(இ - ள்.) பிறரோடு பகைகொள்ளுகிறது தனக்கு நல்லதென்று அதனைச் செய்கிறவனது உயிர்வாழ்க்கை சிறிது பொழுதிலே பிழைத்தலும், வகையறக் கெடுகிறதும் உண்டு (எ - று).

வகையறக் கெடுதலாவது-பிராணன் போவது (எ-ம்). (௬)

857. மிகன்மேவு மெய்ப்பொருள் காணா ரிகன்மேவ
லின்னா வறிவி னவர்.

(இ - ள்.) பகையோடு கூடிய பொல்லாத அறிவினையுடையார் வெற்றி பொருந்துதலையுடைய நீதிநூற்பொருள்களை அறியமாட்டார் (எ - று).

பொல்லாத அறிவாவது - தனக்கும் பிறருக்கும் கேடு தருவது. (௭)

**858.** இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு.

*(இ - ள்.) தன்மனத்திலே பகை தோன்றினால் அதனை வளரப்பண்ணாமல் தேய்த்துவிடுகிறதே யொருவனுக்குச் செல்வமாவது. இப்படிச் செய்யாம லந்தப் பகையை அதிகம் பண்ணுகிறவனுக்குக் கேடு வரும் (எ - று).* (அ)

**859.** இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு.

*(இ - ள்.) ஒருவனுக்குச் செல்வம் வருகிற காலம் வந்தால், பகையை நினையான். கேடு வருகிற காலத்து அப் பகையைச் செய்துகொள்ளுவான் (எ - று).*

*பகையினாலே கேடு வருகிற தல்லாமல், பிறராலே கேடு வாராது (எ - ம்).* (கூ)

**860.** இகலானா மின்னாத வெல்லா நகலானா
நன்னய மென்னுஞ் செருக்கு.

*(இ - ள்.) ஒருவனுக்குப் பகையினாலே பொல்லாங் கெல்லாம் வரும்; சிநேக மொன்றினாலே நல்ல நீதியென்னும் பெருஞ்செல்வங்களெல்லா முண்டாம் (எ - ம்).*

*பொல்லாங்காவன-வறுமை பழி பாவம் முதலியன.* (கo)

---

## 87. பகைமாட்சி

*அஃதாவது - பலவந்தனுடனே பகைகொண்டாலும், அறநீதிகளை வழுவாமல் நியாயமார்க்கமாகச் சண்டை பண்ணுகிறதாம்.*

**861.** வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை.

*(இ - ள்.) தன்னிலும் பலவானுக்குப் பகையாதலை விட்டு விட்டு, தன்னிலும் பலஹீனமானவனுடனே பகைசெய்க (எ - று).*

பலவான் - நல்ல சிநேகிதரும், நீதியும், நல்லறிவும் உடையவன். இவற்றை யுடையவர்களை வெல்லப் போகாது ; இவைஇல்லாதவரை வெல்வார்க்குப் பலம் கெடாமல் எளிதாய் வெல்லலாம் (எ - ம்). (க)

**862.** அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு.

(இ - ள்.) ஒருவன் தன் சுற்றத்தார்மேலே தயையு மில்லாமல், நல்ல துணையுமில்லாமல், சண்டைத்தொழிலுங் கல்லாமலிருக்கிறவனை வெல்லுகிறவனுக்குப் பலம் எந்த விதத்திலேயுங் கெடாது (எ - று)

நல்லதுணைவருந் தயையுஞ் சண்டைத்தொழில்வல்லமையு மில்லாதவனை வெல்லலாம் (எ - ம்). (உ)

**863.** அஞ்சு மறியா னமைவில னீகலான்
றஞ்ச மெளியன் பகைக்கு.

(இ - ள்.) ஒருவன் பயப்பட வேண்டாததற்குப் பயப் படுவான் ; அறிய வேண்டியதை யறியான் ; பிறருடன் சிநேக மிலன் ; கொடுக்கிறது மிலன் ; இப்படிப்பட்டவனை எளிதில் வெல்லலாம் (எ - று).

இந்த நாலு குணமும் உள்ளவன், பகையில்லாவிட்டா லும் கெட்டுப்போவான் (எ - ம்). (ந)

**864.** . நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது.

(இ - ள்.) ஒருவன் கோபத்தை விடான் ; நல்ல புத்தியு மில்லாதவன் ; அவனை வெல்லுதல் மெத்தவெளியது (எ-று).

கோபம் மிகுதி யுண்டானால் ஆலோசனையும் ரகசியமு மில்லாமற்போம் ; இவைஇல்லாதவனைக் காலமும் இடமும் பார்க்கவேண்டாமல் வெல்லலாம் (எ - ம்). (ச)

**865.** வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது.

(இ - ள்.) ஒருவன் நீதிநூலைப் படியான் ; அதிலே சொல்லப்பட்ட தொழில்களையுஞ் செய்யான் ; தனக்கு வரப்பட்ட பழியையும் பாரான் ; நற்குணமில்லாதவன் ; அவன் பகைவர்க்கு எளியனுய் நல்லவனும் (எ - று).

எதிலேயும் பத்திரப்படுத்தாமல் அதிசீக்கிரமாக மாண்டு போவதினாலே நல்லவன் (எ - ம்). (ரு)

**866.** காணுச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும்.

(இ - ள்.) தன்னையும் பிறரையுமறியாமற் கோபஞ் செய்துகொள்ளுகிறவன், வெகுவாக வாஞ்சையை யுடையவன், இப்படிப்பட்டவனுடைய பகையை விரும்பித் தேடிக் கொள்ளவேணும் (எ - று).

இவன் பகையை வெல்லாமற் றானே கெட்டுப்போவன் (எ - ம்). (சா)

**867.** கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து
மாணுத செய்வான் பகை.

(இ - ள்.) ஒரு காரியத்தைச் செய்ய உத்தேசித்திருந்து அதற்கு ஏலாதவற்றைச் செய்கிறவனது பகையைச் சில பொருளைக் கொடுத்தாகிலும் கொள்ளவேண்டும் (எ - று).

ஏலாத காரியமாவது - எளியவனைபோது வலிமை பண்ணுகிறதும், வலிமையுடையவனைபோது பயப்பட்டு அடங்கியிருக்கிறதும் முதலாயின. (எ)

**868.** குணனிலனுய்க் குற்றம் பலவாயின் மாற்றூர்க்
கினனிலனு மேமாப் புடைத்து.

(இ - ள்.) ஒருவன் குணம் ஒன்றும் இல்லாதவனுய், குற்றம் வெகுவாய் உடையவனுயின், அவன் பகைவற்குத் துணையாவான் (எ - று).

குணம் - அரசநீதி, படை அரண் முதலியன. குற்றம் - அன்பின்மை முதலியன. (அ)

869. செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின்.

(இ - ள்.) அறிவில்லாதவனாய்ப் பயப்படுகிறவனுமாய் இருக்கிற பகைவரை உடையவர்களுக்கு எந்நாளும் நீங்காத இன்பம் உண்டாம் (எ - று).

அறிவில்லாதவனும் பயப்படுகிறவனுமாய் இருக்கிறவனை எளிதால் வெல்லலாம். ஆனபடியினாலே, எல்லா வின்பங்களும் ஒருகாலே வந்தடையும். அதனாலே மறுமைக்கும் சுகம் உண்டாம் (எ - ம்). (௯)

870. கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி.

(இ - ள்.) நீதிநூலைக் கல்லாதவனுடனே பகைபண்ணிக் கொள்ளுகிறதினாலே வரப்பட்ட கொஞ்சமான பொருளைக் கைக்கொள்ளாதவனை என்றும் கீர்த்தி யடையாது (எ - று).

நீதிஅறியாதவனை வெல்லுகிறது எளிதாய் இருக்கவும், அதுசெய்யமாட்டாதவனைப் புகழ் சேராது (எ - ம்). (௧௦)

---

## 88. பகைத் திறந் தெரிதல்

அஃதாவது-மாறாத பகையை உண்டாக்குகிறதினாலே வருகிற குற்றமும், முன்னுண்டாயிருந்த பகையை நட்பாக்குகிறதும், அவற்றில் செய்கிறதும், தவறுகிறதும், அதனை விடுகிற காலமும், அந்தப் பகையை விடாவிட்டால் வருகிற குற்றமும் இத் திறங்களை ஆராய்தல் (எ - ம்).

871. பகையென்னும் பண்பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று.

(இ - ள்.) பகையென்று சொல்லப்படுகின்ற பொல்லாங்கை யொருவன் விளையாட்டுக்காகிலுஞ் செய்கிறது நல்லதன்று (எ - று).

பகையென்று நினைத்தால் அதுவே மனத்திலே இருந்து பொல்லாங்காய்த் தோன்றி, விளையாட்டாகச் செய்யப் போனாலும் மெய்யாம் (எ - ம்). (க)

**872.** வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.

*(இ - ள்)* ஒருவன் வில்லை உடையவர்களாகிய ஆயுதங்களைப்பிடித்திருக்கிறவர்களுடனே பகைபண்ணிக்கொண்டாலும், சொல்லையுடைய வித்வான்களுடனே பகைகொள்ள வேண்டாம் (எ - று).

ஆயுதங்களைப்பிடித்தவர்களுடனே பகையானால், தனக்கு மாத்திரம் கேடுவரும்; சொல் வல்ல வித்துவான்கள் முதலானவர்களுடனே பகையானால், தன் வம்சத்தாருக்கும் கேடு வருகிறது தப்பாது (எ - ம்). (உ)

**873.** ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

*(இ - ள்.)* தான் தனியனாய்இருந்து, பலருடனேயும் பகைபண்ணிக்கொள்ளுகிறவன், பயித்தியக்காரனிலும் அறிவில்லாதவன் (எ - று).

தனியனாவது - சுற்றத்தார் சினேகிதர் படை அரண் முதலியவை இன்மை. பயித்தியக்காரனுக்குக் கேடு வாராது; அறிவில்லாதவனுக்குக் கேடு வரும்; பலரோடும் பகைகொண்டால் மிகவும் கேடு வரும் (எ - ம்). (ந)

**874.** பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு.

*(இ - ள்.)* பகைவரை எந்த விதத்தினாலேயும் தனக்குறவாகப் பண்ணிக்கொள்ளவல்ல ராசாவினுடைய குடையின் கீழே தங்கியிருக்கும் உலகம் (எ - று).

பகைவரை உறவாக்கிக்கொள்ள வல்லவனுக்கு எல்லாரும் சினேகமாவர் (எ - ம்). (ச)

**875.** தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று.

(இ - ள்.) தான் தனியனாய்த் துணையில்லாமல் இருக்கையிலே, பகைவர் இரண்டு பேரானால், அப் பகை இரண்டனுள் தனக்குச் சரிப்போன ஒருவனை உறவுபண்ணிக்கொண்டு, மற்றொருவனைச் செயிக்க வேணும் (எ - று).

இருவரும் பகையானால் வெல்லப்போகாது (எ - ம்). (ரு)

876. தேறினுந் தேரு விடினு மழிவின்கட்
டேருன் பகாஅன் விடல்.

(இ - ள்.) பகைவரை முன்னே தெளிந்தானாகிலும் தெளியாவிட்டாலும், தனக்கு வேறேயொரு காரியத்தினாலே தாழ்வு வருகிறதானால், அப்பொழுது அந்தப் பகைவரைக் கூட்டிக்கொள்ளாமலும் விட்டுவிடாமலும் மத்தியத்திலே நிறுத்திவைக்கவேண்டும் (எ - று).

முன்னே தெளிந்தாலும் இப்பொழுது உளவாயிருந்து கெடுப்பார்கள்; தெளியாவிட்டாலும் இப்பொழுது விட்டு விட்டாற் பகைவருக்குத் துணையாயிருந்து கெடுப்பார்கள். ஆனபடியினாலே, புறத்தியாக நிறுத்தவேணும் (எ - ம்). (சு)

877. நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து.

(இ - ள்.) ஒருவன் குறையைத் தாமே அறியாத சினேகிதர்க்குத் தன் குறையைச் சொல்ல வேண்டாம்; வலிமையில்லாமை பார்த்திருக்கிற பகைவர்முன்னே தன் வலிமையில்லாமையை வெளிப்படுத்தாமலடக்கிக்கொண்டு பலவானென மெச்சிக்கொண்டிருக்கவேணும் (எ - று).

கூடப் பழகியிருக்கிறவர்கள் தன் குறையையறிந்து தீராவிட்டால், சொன்னதினாலே பிரயோசனமில்லை (எ - ம்). (எ)

878. வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு.

(இ - ள்.) தான் செய்கிற காரியத்தின் வகையையறிந்து, அதை முடிப்பதற் கேற்பத் தன்னை அதிகமாக்கி, மறப்பும் பாபமும் வாராமல் தன்னைக் காத்துக்கொண்டால், தன் பகைவரிடத்திலே யுண்டான சந்தோஷம் கெடும் (எ - று).

வகையறிதலாவது - வலியனுய்த் தான் போர்செய்யும் விதமும், மெலியனுய அளவில் போரை ஒழியும் விதமும். அதிகமாகிறதாவது - பொருள்படைகளை வெகுவாய்ச் சேர்த்துக்கொள்ளுகிறதாம். பகைவர் சந்தோஷப்படுகிறதாவது - 'இவற்ருல் வெல்வோம்' என்று எண்ணி மகிழ்ந்திருத்தல். (அ)

879. இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

(இ - ள்.) பிடுங்கிப் போடவேண்டிய முள்மரத்தைச் சிறியதாயிருக்கையிலேதானே வாங்கிப் போடவேணும்; பெரியதாய் முற்றின பிறகு வாங்கிப் போடப்போனுல், அது அவன் கைகளைக் கெடுத்துப்போடும் (எ - று).

அப்படிப்போல, களையவேண்டிய பகைவரைக் கொஞ்சமாயிருக்கும்போதே செயித்துவிடவேணும்; அப்படியல்லாமற் பகைவர் பலவந்தரான பிறகு செயிக்கப்போனுல், தன்னையே கொல்லுவர் (எ - ம்). (கூ)

880. உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

(இ - ள்.) தன்னுடனே பகையைப் பண்ணிக்கொள்ளுகிறவர்பலத்தைக் கெடுக்கத்தக்க சத்துவமுண்டாயிருந்தும், அது அத்தனையில்லையென்று இகழ்ந்து சும்மா இருக்கிறவர்கள் தம் உயிரும் உண்டாகப் பெருர் (எ - று).

தன் உயிர் உண்டாகாதது - பகைவர் பலவான்களானுற் றன்னைக் கொல்லுவது. (கO)

---

## 89. உட்பகை

அஃதாவது - மனத்திலே பகையை வைத்துக்கொண்டு, தாங்கள் நினைத்த காரியம் முடியுமளவும் உறவுபோலேயிருந்து, காரியம் முடிந்தவுடனே பகைவராயிருக்கிறது.

881. நிழனீரு மின்னுத வின்னு தமர்நீரு
மின்னுவா மின்னு செயின்.

(இ - ள்.) ஒருவன் அனுபவிக்கவேண்டிய நிழலும் நீரும் முன்பு நன்றாயிருந்தாலும், பின்பு நோய்செய்தால், பொல்லா தனவாம். அதுபோல, சுற்றத்தாராலும் முன்பு நல்லவர்களா யிருந்து பின்பு பொல்லாங்குசெய்தால், அவர்கள் பகைவரே (எ - று). (க)

**882.** வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

(இ - ள்.) வாளைப்போல் கொல்லுகிறோமென்று வெளியா யிருக்கிற பகைவர்களுக்குப் பயப்பட வேண்டாம்; சுற்றத்தார் போல உறவாயிருக்கிற பகைவர்களுக்குப் பயப்படவேணும் (எ - று).

வெளியாய்ப் பகையாயிருக்கிறவர்களை அறிந்து எச்சரிக் கையாயிருந்து தப்பித்துக்கொள்ளலாம்; வெளியிலே உறவா யிருந்து மனதிலே பகையாயிருக்கிறவர்களை யறியவும் காக்கவும் படாமையினாலே அஞ்சவேணும் (எ - ம்). (உ)

**883.** உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

(இ - ள்.) உட்பகையா யிருக்கிறவர்களுக்குப் பயப்பட்டுத் தன்னைக் காத்துக்கொண்டிருக்கவேணும். அப்படியிராவிட் டால் தனக்கோரிடையூறு வந்தபோது, குயவன் மண்ணை வெட்டுங் கருவிபோலே அப் பகைவர் கெடுப்பர் (எ - று).

காக்கிறதாவது-உட்பகைவர் தன்னைச் சேராமலும், அவர் களுக்கு இடங்கொடாமலும் இருக்கிறது. (ங)

**884.** மனமாணா வுட்பகை தோன்றி னினமாணா
வேதம் பலவுந் தரும்.

(இ - ள்.) வெளியிலே உறவுபோலிருந்து உள்ளே பகையா யிருக்கிற பகைவருண்டானால், அந்தப் பகைவர், சுற்றத்தார் வச மாகாமைக்கு ஏதுவாகிய வெகுகேடுகளைச் செய்வர் (எ - று).

உள்ளுறவில்லாதவர்கள் காலம்பார்த்துக்கொண்டிருந்து கெடுப்பர் (எ - ம்). (ச)

**885.** உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா
னேதம் பலவுந் தரும்.

*(இ - ள்.) புறத்திலே உறவாய் உள்ளே பகைவைத்துக் கொண்டிருக்கிறவர்கள் ஒருவனுக்குண்டானல், அந்தப் பகைவர் அவனுக்குப் பிராணஹானிபரியந்தம் வருகிற குற்றங்களைச் செய்பவர் (எ - று).*

*அக் குற்றங்கள் - புறப்பகைக்கு உறவாயிருந்தே அது தெரியாமல் நின்று கொல்லுதல் முதலிய வஞ்சனைகளைச் செய்தலும், மந்திரிகள் முதலாயினுரைப் பிரித்தலுமாம். (ரு)*

**886.** ஒன்றுமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றுமை யொன்ற லரிது.

*(இ - ள்.) பகைமை தனக்கு உள்ளானவர்களிடத்திலே பிறந்தால், அவன் சாகாமல் இருக்கிறது அருமை (எ - று).*

*பொருள் படை முதலியவற்றால் பெரியவனானாலும், உட்பகையை வெல்லப்போகாது (எ - ம்). (சு)*

**887.** செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி.

*(இ - ள்.) செப்பை மூடினல் மேலே யொன்றுபோலே இருந்து உள்ளே வேருயிருக்கும். அதுபோல, வெளியிலே உறவாய் உள்ளே பகையாயிருக்கிறவர்கள் மனத்தில் தம்முள் கூடார் (எ - று). (எ)*

**888.** அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி.

*(இ - ள்.) முன்னே வளர்ந்த குடியானலும் உட்பகை உண்டான குடி, அரத்தாலே அராவப்பட்ட இரும்புபோலே, தேய்ந்துபோம் (எ - று). (அ)*

**889.** எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு.

(இ - ள்.) எள்ளிலே பாதியத்தனை உட்பகை யுண்டா னாலும், பெருமையெல்லாம் அழியவருங் கேடு அச் சிறிய உட்பகையினிடத்ததாம் (எ - று).

உட்பகை கொஞ்சமா யிருந்தாலும், தனக்குப் பக்குவம் வந்தபோது பெரியதாய் வளர்ந்து, ஒருவன் பெருமையெல்லாம் கெடுக்கும் (எ - ம்). (கூ)

890. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.

(இ - ள்.) மனதுஒருமித்து உறவுசெய்யாதவருடனே கூடிவாழ்கிறது, ஒருவீட்டிலே பாம்புடனே கூடி இருக்கிறப் போலேயாம் (எ - று).

பாம்பும் மனுஷனும் ஒருகுடிசையிலே இருந்தால், எப்போதாகிலும் அது அவனைக் கடித்துக் கொல்லுதல் உறுதி. ஆகவே, அவ் வுவமையால், அவனுயிர்க்கு இறுதி வருதல் ஒருதலை என்பது பெற்றோம். (கo)

---

## 90. பெரியாரைப் பிழையாமை

அஃதாவது - சாத்திரத்தினாலேயும் ஆசாரத்தினாலே யும் தவசினாலேயும் பெரியோர்களானவர்களையும், ஐஸ்வரிய பலங்களாலே பெரியவர்களானவர்களையும் இகழ்ந்து பேசாமலிருத்தல். இகழ்ந்து பேசினால் சீக்கிரத்திலே கெடுவர் (எ - ம்).

891. ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை.

(இ - ள்.) தாங்க ளெடுத்த காரியமெல்லாம் முடிக்கவல்ல வர்களை அவமதியாமலிருக்கிறதே தனக்குத் தீங்குவாராமற் காக்கிற காவலிலே யெல்லாவற்றினும் மிக்கது (எ - று).

நினைத்த கருமங்களை முடிக்கவல்லவர்களை இகழ்ந்தவ னுக்கு அப்பொழுதே கேடு வரும் (எ - ம்). (க)

892. பெரியாரைப் பேணு தொழுகிற் பெரியாரார்
பேரா விடும்பை தரும்.

(இ - ள்.) சாத்திர நீதி தவசுகளாலே பெரியோர்களான வர்களை இகழ்ச்சிசெய்தால், அந்த இகழ்ச்சி, பெரியவர்களாலே அவனுக்கு எந்நாளும் நீங்காத துன்பங்களைக் கொடுக்கும் (எ - று).

நீங்காத துன்பங்களாவன-இம்மையிலே தீராமல் மறுமை யிலேயும் அனுபவிக்கிற நரகதுன்பங்களாம். (உ)

893. கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி
னாற்று பவர்க ணிழுக்கு.

(இ - ள்) ஒருவன் தனக்குக் கேடு வேண்டினால், மறு மண்டலத்து ராசாக்களுடனே சண்டைபண்ணிக்கொள்ள வேணும்; துக்கம் வேண்டினால் பெரியவர்களுக்குப் பொல் லாங்கு செய்க (எ - று).

அந்தப் பெரியோர்களுக்கு யமனும் பயப்பட்டுக் காலம் பார்த்திருப்பன் (எ - ம்) (௩)

894. கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
காற்றாதா ரின்னா செயல்.

(இ - ள்.) மூவகை யாற்றலுடைய பெரியவர்களுக்கு, அவையில்லாத சிறியவர்கள் தாம் முற்பட்டுத் தீமைகளைச் செய்தல், தானே வருகிற கூற்றுவனைக் கைகாட்டி அழைக் கிறதற்குச் சரி (எ - று).

வறுமையுடையவர்கள் பெரியவர்களுக்கு உபத்திரவம் பண்ணுவார்கள். அப்படிப்பட்டவர்களுக்குப் பொல்லாங்கு செய்தாற் கொப்பெனக் கெடுப்வர் (எ - ம்). (௪)

895. யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.

(இ - ள்.) பகைவர்க்கு வெய்ய பலமுடைய ராசாவி னாலே கோபிக்கப்பட்டவர்கள் தப்பிப்போய் எங்கேயும் பிழைக்கமாட்டார்கள் (எ - று.)

அரசனுக்குப் பகையானவனை வைத்துக்காக்கத்தக்கவர் ஒருவரும் இல்லை (எ - ம்). (ரு)

**896.** எரியாற் சுடப்படினும் உய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

(இ - ள்.) காட்டுக்குள்ளே போனவனொருவன், காடு பற்றிக்கொண்டு அடப்பட்டாலும், ஒருவகையாலே தப்பிப் பிழைக்கலாம். தவசினாலே பெரியவர்களுக்குக் கோபம் வருமாறு நடந்தவர்கள், எந்த விதத்தினாலேயும் பிழைக்க மாட்டார்கள் (எ - று).

தீச் சுட்டால் மருந்துகளினாலே ஆற்றலாம்; பெரியோர்கள் கோபித்துக்கொண்டால் அதை ஒருவராலும் ஆற்றப் போகாது. அந்தக் கோபத்தினாலே, பொல்லாங்கு வரச்செய்தவன் கெடுவன் (எ - ம்). (சு)

**897.** வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னாந்
தகைமாண்ட தக்கார் செறின்.

(இ - ள்.) சாபானுக்ரக சமர்த்தராகிய தவசிகள் இராசாவைக் கோபித்தால், அந்த இராசாவினுடைய உறுப்பும் அவன் இராச்சியமும் அவன் தேடிவைத்த பெரும்பொருளும் என்ன பிரயோஜனமாம்; ஒருபிரயோசனமும் ஆகாமல் விருதாவாய் கெட்டுப்போம் (எ - று).

உறுப்பு-நாடு அரண் படை அமைச்சு என்றவை. அரசன் ஐசுவரியகர்வத்தினாலே அருந்தவர்மாட்டுப் பிழைசெய்தால், அவர்கள்கோபத்தீயாலே அவனுடைய செல்வமெல்லாம் வெந்துவிடும் (எ - ம்). (எ)

**898.** குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.

(இ - ள்.) மலைக்குச் சமானமான அருந்தவர், ஒருவன் செய்த குற்றத்தினாலே, அவனைக் கெட நினைத்தாராகில், நிலைபெற்றாற்போலுஞ் செல்வர் தம் குடியோடும் மாய்வர் (எ - று).

வெயிலும் மழையுங் காற்றும் பொறுக்கும் மலைபோலே சலியாமலிருக்கும் அருந்தவர் கோபித்தால், வெகுபொருளைத் தேடிவைத்துக்கொண்டு 'நமக் கழிவில்லை' யென்றிருக்கிற வர்களும் கொப்பனக் கெட்டுப்போவார்கள் (எ - ம்). (அ)

**899.** **ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து**
**வேந்தனும் வேந்து கெடும்.**

(இ - ள்.) காத்தற்கரிதாகிய பெரிய விரதங்களையுடையார் கோபித்தால், அவர்கள்பெருமையினாலே இந்திரனும் தன் பதம் இழந்து கெட்டுப் போவான் (எ - று).

மகாவிரத முடையவர்கள் கோபித்தா லெப்படிப்பட்ட செல்வரும் அழிந்துபோவர் (எ - ம்).

**900.** **இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்**
**சிறந்தமைந்த சீரார் செறின்.**

(இ - ள்.) நல்ல தவசையும் பெருமையையும் உடைய அருந்தவர் கோபித்தால், மிகப் பெரிய சார்பினை யுடையவர் களானாலும் தப்பிப் பிழைக்கமாட்டார்கள் (எ - ம்).

சார்பு - அரண், படை, பொருள், நட்பு என்பவை. சீர்-தவம். (௧0)

---

## 91 பெண்வழிச் சேறல்

அஃதாவது - தன்வழியே நடத்தற்குரிய பெண்சாதி வழியே தான் நடக்கிறதாம்.

**901.** **மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்**
**வேண்டாப் பொருளு மது.**

(இ - ள்.) இன்பத்தை வேண்டித் தன் பெண்சாதியை விரும்பி அவள் சொன்னபடியே கேட்டு நடக்கிறவன், தனக்குத் துணையான தர்மத்தினைச் செய்யமாட்டான். உத்தியோகங்களைச் செய்து பொருளைத் தேடுபவர்களும் அதற்கு இடையீடென்று இகழும் பொருளும் அவ் வின்பமே (எ-று).

பெண்ணாசையை விரும்பினவர்களுக்கு அறமும் பொருளும் சேரா (எ - ம்). (க)

902. பேணது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.

(இ - ள்.) தன் ஆண்மையை விட்டு மனையாளது பெண்மையை விரும்பினவனுடைய பெரிய செல்வம், உலகத்திலே உண்டான ஆண்பிள்ளைகளுக்கெல்லாம் நாணமுண்டாகத் தக்கதாக, அவனுக்கு நாணத்தைக் கொடுக்கும் (எ - று).

பெண்வழியே நடக்கிறவன், தன் செல்வத்தைக் கொடுக்கவும் அனுபவிக்கவும் தனக்குச் சுதந்திரமில்லாதபடியினாலே, அந்தச் செல்வத்தைக் கொடுக்கிறதும் அவளானபடியினாலே, ஆண்பிள்ளைகளுக்கெல்லாம் நாணமாம் (எ - ம்). (உ)

903. இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத் தரும்.

(இ - ள்.) ஒருவன் தன் பெண்சாதியிடத்துத் தாழ்தற்கு ஏதுவாய அச்சம், அப்படி நடவாமல் நல்லவர்களாய பெரியவர்களிருக்குஞ் சபையிலே போனால், அவனுக்கு எந்நாளும் நாணுதலைக் கொடுக்கும் (எ - று).

பெண்சாதிக் கஞ்சி நடக்கிறவனை யாரு மெண்ணார். அதனாலே, எல்லாக் குற்றமும் விளையும் (எ - ம்). (ந)

904. மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று.

(இ - ள்.) தன் பெண்சாதிக்குப் பயப்பட்டு நடக்கிறவனுக்கு மறுமைப்பய னில்லை. அவனுடைய ஆண்மையும் சௌரியமும் நல்லவர்களாலே கொண்டாடப்படா (எ - று).

இல்லறம் செய்கிறதற்குத் தான் கர்த்தனல்லாதபடியினாலே, மறுமைப்பயன் இல்லை யென்றார். (ச)

905. இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நல்ல செயல்.

(இ - ள்.) தன் மனையாளுக்குப் பயப்படுகிறவன், தான் தேடின பொருளேயானாலும், நல்லவர்களுக்கு நல்ல காரியங்களைச் செய்தலை எந்நாளும் அஞ்சுவான் (எ - று).

நல்லார் - தேவர்கள், அருந்தவர்கள், பெரியோர்கள், தகப்பன, குருக்கள், நல்ல உறவின்முறையார் முதலாயினோர். நல்ல காரியங்கள் செய்தலாவது - அவர்கள் வேண்டுவன கொடுத்தல். (ரு)

**906.** இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர்.

(இ - ள்.) தன்னுடைய பெண்சாதிதோளுக்குப் பயப்படுகிறவன் வீரதத்துவ முண்டாகிய தேவர்களைப் போல இந்த லோகத்திலே வாழ்ந்தாலும், அவனுக்கு ஆண்மை யில்லை (எ - று).

பகைவரை வென்றாலும், தன் பெண்சாதிக்குப் பயப்படுகிறவனுக்கு ஆண்மை யில்லை (எ - ம்). (சு)

**907.** பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னுணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து.

(இ - ள்.) நாணமில்லாமல் தன் பெண்சாதி சொன்ன வேலைகளைச் செய்துகொண்டு திரிகிறவன் ஆண்மையிலும், நாணமுடைய பெண்மையே பெருமையுடைத்தாம் (எ - று).

ஆண்பிள்ளையைத் தன் சொற்படி நடக்கப்பண்ணுகிறதினாலே, பெண்மையே பெரியது (எ - ம்). (எ)

**908.** நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர்.

(இ - ள்.) தாம் நினைத்தபடியல்லாமல் தம் பெண்சாதி சொற்படி நடக்கிறவர், தம்மோடு சினேகம்பண்ணினவரது குறையை முடிக்கமாட்டார்; அதல்லாமல், மறுமைக் குறுதியான தருமங்களைச் செய்துகொள்ளமாட்டார் (எ - று).

பெண்சாதி சொல்லுகிறபடி நடக்கிறவர் இம்மை மறுமைக்கு வேண்டுவன செய்யமாட்டார் (எ - ம்). (அ)

**909.** அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில்.

*(இ - ள்.) தன் தருமம் செய்கிறதும், அந்தத் தருமம் செய்துமுடிப்பதற்கு வேண்டிய பொருள்கள் தேடுகிறதும், இரண்டிலும் புறத்தியான இன்பம் செய்கிறதும் தன் மனையாள் ஏவல்செய்கிறவனுக்கு உண்டாகா (எ - று).*

*பெண்சாதி சொன்னபடி செய்கிறவனுக்குத் தான் வேண்டியபடி செய்ய முடியாது (எ - ம்). (௯)*

**910.** எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.

*(இ - ள்.) காரியத்தை நன்றாய் விசாரித்துச் செய்கிற ஆலோசனையையும், அதனால் ஆகிய செல்வத்தையு முடைய வர்களுக்குத் தம் மனையாளைச் சேருகிறதினாலே விளையும் பேதைமை எக்காலத்தும் உண்டாகாது (எ - று).*

*மனையாளைச் சேர்ந்தவழியும் காரியாகாரியங்களை அறிகிற ஆலோசனையை விடாமல் இருக்கவேணும் (எ - ம்). (௧௦)*

---

## 92. வரைவின் மகளிர்

*அஃதாவது - தம்முடைய போகத்தை விலைகொடுப் பார் யாவருக்கும் கொடுக்கிறதல்லாமல், இவர்கள் நல்ல வர்கள் பொல்லாதவர்கள் என்ற வரம்பில்லாமற் பணமே காரணமாக வாஞ்சிக்கிற மகளிரின் குணங்கள்.*

**911.** அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா
ரின்சொ லிழுக்குத் தரும்.

*(இ - ள்.) ஒருவன்மேலே தயையா யாசைப்படாமல் பொருளையே காரணமாக வாஞ்சிக்கிற பரஸ்திரீகள், அவனது பொருள் தம் கையிலே அகப்படும்அளவு அவன்மேலே விசுவாசம்போலே இருந்து சொல்லுகிறவார்த்தை. பிறகு அவனுக்குப் பொல்லாங்கு தரும் (எ- று).*

பரஸ்திரீகள் முதலில் அமுதம்போலே இருந்து, கைப்பொருள் ஆண்டபிறகு, விஷம்போல ஆவார்கள் (எ - று). (க)

**912.** பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல்.

(இ - ள்.) ஒருவன்கைப்பொருளை அளந்தறிந்து அந்தப் பொருள் தமக்கு வந்தெய்துமளவும் அவனுக்கு நன்மை சொல்லும் பரஸ்திரீகள்செய்கைகளை ஆராய்ந்தறிந்து அவர்களைச் சேராமல் விடவேணும் (எ - று). (உ)

**913.** பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று.

(இ - ள்.) கொடுப்பாரை விரும்பாமற் பொருளையே விரும்புகிற பொதுமகளிருடைய இணக்கம், இருளாயிருக்கிற வீட்டிலே திக்கற்றுக் கிடக்கிற பிணத்தைக் கூலிக்கு எடுக்கிற தோடொக்கும் (எ - று).

பிணமெடுக்கிறவன் மனத்திலே அருவருப்பாய் இருந்தும் கூலிக்காக எடுக்கிறுப்போலே, பரஸ்திரீகள் சாதியுஞ் செயலுங் கண்டு அகத்தால் அருவருப்பாரா யிருந்தும் பொருளுக்காகப் புறத்தால் தழுவுவர் ; அதனை ஒழிக (எ - ம்). (ந)

**914.** பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர்.

(இ - ள்.) தனக்கின்பமானவர்களை இகழ்ந்து பொருள் கொடுப்பாரையே விரும்பும் பரஸ்திரீகளுடைய புல்லிய நலத்தை, தயையோடு கூடிய பொருளை ஆராய்ந்து செய்யுமறிவினையுடையார் தீண்டார் (எ - று). (ச)

**915.** பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்.

(இ - ள்.) பொருள்கொடுக்கிறவர்களுக்கெல்லாம் பொதுவான வாசையினை யுடைய பரஸ்திரீகளது புல்லிய போகத்தை மதிநன்மையாலே நல்லறிவுடையவர் தீண்டார் (எ - று).

மதிநலமாவது - முன்செய்த புண்ணியத்தினாலே வருகிற வறிவாம். இதுபோலே கல்வி முதலானவற்றினாலே வருகிற வறிவு பயன்படாது. (ரு)

**916.** தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.

*(இ - ள்.) ஆடல் பாடல் அழகுகளினாலே சந்தோஷித்துத் தங்களுடைய புல்லிய போகத்தைப் பொருள்கொடுப்பார்க்கெல்லாம் பரப்பும் பரஸ்திரீகள்தோளை அறிவொழுக்கங்களாலான தம் புகழை உலகத்திலே பரப்பவேண்டினவர் தீண்டார் (எ - று).*

*பரஸ்திரீகளுக்கு ஆடல்பாடல் அழகு மூன்றும் உடைமையேம்பாடாகலின், 'தகை' என்றார்.* (சு)

**917.** நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்ப்பவர் தோள்.

*(இ - ள்.) நெஞ்சிலே பிறவற்றை ஆசைப்பட்டு அவை காரணமாகக் கொடுப்பாரை யுடம்பாற் புணரும் பரஸ்திரீகள் தோளை, நிறையால் திருந்திய நெஞ்சம் இல்லாதவர் சேர்வர் (எ - று).*

*பொருள் காரணம் அல்லாமற் புணர்ச்சி காரணமில்லாதவர்களென்று அறிந்து, அறிவுடையார் சேரார்; அறிவில்லாதவர் சேர்வர் (எ - று).* (எ)

**918.** ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

*(இ - ள்.) வடிவு, சொல், செயல்களால் வஞ்சிக்கவல்லவர்களான பரஸ்திரீகள்முயக்கம், அந்த வஞ்சனைகளை ஆராய்ந்தறிய மாட்டாதவர்களுக்கு அணங்குதாக்கு என்று சொல்லுவர் நூலோர் (எ - று).*

*அறிவில்லாதவர்களுக்குப் பரஸ்திரீகள் முன்பு நல்லவர் போலிருந்து பின் பிராணனையும் கொள்ளுவர் (எ - ம்).* (அ)

**919.** வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு.

*(இ-ள்.) உயர்ந்தோர் இழிந்தோர்க ளென்று எண்ணுமற் பொருள்கொடுப்பாரையெல்லாம் புணரும் பரஸ்திரீகளின் தோள்கள், குற்றத்தை அறியமாட்டாத கீழ்மக்கள் புகுந்து அழுந்தும் நரகமாம் (எ - று). (௯)*

**920.** இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

*(இ - ள்.) பரபுருஷன்மேலே மனதாய் இருக்கிற பெண்டிரும் கள்ளுக்குடிக்கிறதும், சூதாடுகிறதும் இந்த மூன்றும் திருமகளாலே துறக்கப்பட்டவர்களுக்குச் சிநேகம் (எ - று).*

*பரஸ்திரீகளைச் சேருபவர்களிடத்திலேயும், சூதாடுகிறவர் களிடத்திலேயும், கள்ளுக்குடிக்கிறவர்கள் இடத்திலேயும் மகா லக்ஷ்மி இல்லை (எ - ம்). (௧௦)*

---

## 93. கள்ளுண்ணுமை

*அஃதாவது - ஆசாரமும் அறிவும் கெடுக்கிறதற்குக் காரணமான கள்ளைக் குடியாமல் இருத்தல்.*

**921.** உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார்.

*(இ - ள்.) கள்ளைக் குடிக்கவேணும் என்று வாஞ்சையாய் இருக்கிறவர் தமக்கு வருகிற நன்மைதீமைகளை அறியார்; முன் னுண்டாயிருந்த பிரகாசத்தையும் இழப்பர் (எ-று). (௧)*

**922.** உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
னெண்ணப் படவேண்டா தார்.

*(இ - ள். ) அறிவுடையவர்களானவர்கள் கள்ளினை உண்ணுமலிருக்கவேணும். கள்ளைக் குடித்தால் பெரியோர்க ளெல்*

லாங் கள்ளுண்டவனை இகழ்வார்கள். கள்ளுண்பவர் அறிவும் ஆசாரமும் இழப்பர் (எ - று). (உ)

**923.** ஈன்றாள் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

(இ - ள்.) என்ன செய்தாலுங் கண்டு சந்தோஷப்படுகிற தாய்முன்னேயானாலுங் கள்ளுண்டு களிக்கிறது பொல்லாதாயிருக்கும்; ஒருகுற்றமும் பொறாத பெரியோர்கள்முன்னே கள்ளுண்டு களிக்கிறது அவருக்கு யாதா யிருக்கும்? (எ - று).

கள்ளுண்டால் அறிவும் நாணமும் இழந்துவிடும்; அது கண்டால் தாயானவளுக்கும் பொல்லாதாயிருக்கும். தாய்க்குப் பொல்லாதானால், உலகத்தாருக்குப் பொல்லாதாகிறது சொல்லவேண்டா (எ - ம்). (ந)

**924.** நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு.

(இ - ள்.) கள்ளென்கிறது எல்லாருக்குங் குற்றமாயிருக்கும். அதனைக் குடிக்கிறவர்களுக்கு நாணமென்று சொல்லப்படுகிற ஸ்திரீ எதிரே நில்லாமல் வெட்கி அப்பாலே போவாள் (எ - று).

கள்ளைக் குடிக்கிறவர்களுக்கு நாணமும் அபிமானமும் கெட்டுப்போம் (எ - ம்). (ச)

**925.** கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.

(இ - ள்.) பொருளைக் கொடுத்துத் தன் னுடம்பை மறப்பதனைக் கொள்ளுதல், முன்செய்த தீவினையாலே செய்கிறதறியாமையைத் தனக்குக் காரணமாக உடைத்து (எ - று).

அறிவுடையார் கள் குடியார்; அறிவில்லாதவர் கள் குடிப்பர் (எ - று). (ரு)

**926.** துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று
நஞ்சுண்டார் கள்ளுண் பவர்.

(இ - ள்.) தூங்குகிறவனும் செத்தவனும் கள்ளைக் குடித்தவனும் நஞ்சுதின்றவனும் இந்த நாலுபேரும் சரி. ஆனாலுந் தூங்குகிறவனை எழுப்பினால் எழுந்திருப்பான். செத்தவன் சுவாசமில்லாமல் சும்மாக் கிடப்பான். விஷந்தின்றவன் மணி மந்திர ஔஷதங்களினாலே பிழைப்பான். கள்ளுக்குடிக்கிறவன் இவர்களைப்போலச் சும்மா இராமல் நல்லோர்கள் பெரியோர்கள் முதலானபேரை உபத்திரவம் பண்ணுவான். ஆனபடியினாலே சரியல்ல (எ - ம்). (௬)

**627.** உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

(இ - ள்.) ஒருவரும் அறியாமல் மறைந்திருந்து கள்ளைக் குடித்தாலும், பிறகு அந்தக் கள்ளினாலே அறிவு மயங்கினது கண்டு, 'இவன் கள்ளைக் குடித்தான்' என்று உள்ளூரார் எல்லாருஞ் சிரிப்பார்கள் (எ - று). (௭)

**928.** களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும்.

(இ - ள்.) மறைந்துநின்று கள்ளைக் குடித்து, 'நான் கள்ளைக் குடிக்கிறதில்லை' என்று சொல்லி, தன்னுடைய ஆசார ஒழுக்கங்களைச் சொல்லுகிறதை விட்டுவிடு; அது பிறகு எல்லாராலும் அறியப்பட்டு வெகு குற்றங்களாகும்; அனைவரும் அவனை இகழ்வார்கள் (எ - று). (௮)

**929.** களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

(இ - ள்.) கள்ளுக்குடிக்கிறவனைக் கள்ளுக்குடியாதவன் கள்ளுக்குடிக்கிறது ஆகாதென்று திருஷ்டாந்தங்களைக் காட்டித் தெளிவிக்கிறது, தண்ணீருள்ளே மூழ்கிக்கிடக் கிறவனை விளக்கைப் பிடித்துக்கொண்டு தேடுகிறதோடொக்கும் (எ - று).

தண்ணீருக்குள்ளே விளக்கு நில்லாததுபோல, கள்ளுக் குடிக்கிறவனுக்கு நீதிமார்க்கம் சொன்னால், அவன் மனத்துக் காரணம் செல்லாது (எ - ம்). (௯)

930. கள்ளுண்ணுப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு.

(இ - ள்.) கள்ளுக்குடிக்கிறவன் ஒருத்தன், கள்ளைக் குடியாதபோது, பின்னை யொருவன் கள்ளைக் குடித்து மயங்கிக் கிடக்கிறதனைக் கண்டு, 'நான் குடிக்கிறபோது மிப்படி யறிவும் மயங்கிக் கிடப்பே'னென்று நினையாதே, அவன் மயக்கத்தையே பார்த்துக்கொண்டிருப்பான் (எ - று).

அறிவுடையவர்கள், கள்ளுண்டு மயங்கினவனைக் கண்டாகிலும், கள்ளுண்ணுமல் விட்டுவிடவேணும் (எ - ம்). (௩௦)

---

## 94. சூது

அஃதாவது - தர்மார்த்த காமங்களுக்கு விகாதமான சூதினது இயல்பு.

931. வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

(இ - ள்.) சூதாடுகிறதிலே கெட்டிக்காரனுய்த் தான் வெல்லத்தக்கவனுனாலும், சூதினை விரும்பவேண்டாம். அது ஏனென்றால், சூதாடிப் பொருள்தேடிக்கொண்டு சுகமாயிருந்தவர்க ளில்லை. சூதினாலே பொருள்தேடினவர்கள், தூண்டிலிலே குத்தியிருக்கிற மீனைத் தண்ணீருக்குள்ளேயிருக்கிற மீன்விழுங்கிச் செத்தாற்போல, கெட்டுப்போவார்கள் (எ - று) (௧)

932. ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
னன்றெய்தி வாழ்வதோ ராறு.

(இ - ள்.) சூதாடுகிறவன் ஒருகால் ஒருபொருளை வென்று, பிறகு அந்த ஆசையினுலே 'இன்னும் வெல்லுவோ'மென்று நூறுபொருளை இழந்து தரித்திரனுய்க் கெட்டுப் போவன். அதல்லாமல், சூது பொருளால் அறமும் இன்பமும் எய்தி வாழ்கிற நெறிஆகாது (எ - று). (௨)

**933.** உருளாய மேவாது கூறிற் பொருளாயம்
போஓய்ப் புறமே படும்.

*(இ - ள்) பாய்ச்சிகையினாலே வரப்பட்ட சூதாயத்தை மெய் என்று நம்பிச் சூதாடினால், அவன் பொருளும் அவனுக்குப் பொருள் வருகிற வழியும் அவனை விட்டு நீங்கி, அவன்பகைவர்களிடத்திலே போய் நிற்கும் (எ - று).*

*சூதாடுகிறவனுக்குத் தன்னுடைய திரவியத்தையும், அது வருகிற வழியையும் அறிந்து காக்க இயலாது (எ - ம்). (ந)*

**934.** சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.

*(இ - ள்.) சூதை விரும்பி ஆடுகிறவனுக்கு அந்தச் சூதுத் முன்னில்லாத துக்கங்கள் பலவும் உண்டாக்கி, முன் உண்டான கீர்த்தியையெல்லாம் கெடுத்து, வெகு தரித்திரத் தைக் கொடுக்கும் (எ - று). (ச)*

**935.** கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார்.

*(இ - ள்.) முதலில் சூதாடினவன் பிறகு விட்டுவிட்டே னென்று சொல்லினும், சூதாடுகிற விடத்திலே வந்தால் சூதாடாமற் சும்மா இருக்கமாட்டான். அவன்கையிலே சூதுத் தொழில் இருக்கும் என்று அறியவேண்டும் (எ – று). (ரு)*

**936.** அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார்.

*(இ - ள்.) சூதாடுகிறவன் இம்மையிலே வயிறு நிறையச் சாப்பிடாமல் எந்நேரமும் துக்கப்படுவன்; மறுமை யில் நரகத்திலே வீழ்வன் (எ - று). (சா)*

**937.** பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின்.

*(இ - ள்.) ஒருவன் அறம்பொருள்இன்பங்கள் செய்யா மல் சூதாடுகிறதிலே பொழுதுபோக்கினானாகில், அந்தச் சூது*

அவன்செல்வத்தினையும் நற்குணங்களையும் போக்கடிக்கும் (எ - று).

ஆகவே, சூதாடாமல் அறம்பொருள் இன்பங்களையே செய்யவேணும் (எ - ம்). (எ)

**938.** பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது.

(இ - ள்.) சூதாடினவனுக்கு அச் சூது செய்கிற காரியம், அவன் பொருளையெல்லாங் கெடுத்துப்போட்டு, பொய் சொல்லத்தக்கதாகப் பண்ணி, தயையும் கெடுத்து, இம்மையிலேயும் மறுமையிலேயும் துக்கப்படப் பண்ணுதலாம் (எ - று). (அ)

**939.** உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின்.

(இ - ள்). ஒருவன் சூதை விநோதமான தொழில் என்று ஆடினானாகில், அவனுடைய பிரகாசமும், கல்வியும், செல்வமும், ஆகாரமும், உடையும் ஆகிய இந்த ஐந்து வகையும் கெட்டுப்போம் (எ - று). (௯)

**940.** இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர்.

(இ - ள்.) சூதாடுகிறவனுக்குக் கைப்பொருளையெல்லாம் இழந்துபோம்அளவும் சூதாடவேண்டும் என்று விருப்பம் உண்டாயிருக்கும். அதுபோல, உடம்பாலே மூவகைத் துன்பங்களையும் அநுபவிக்கும்அளவும் அந்த உடம்பின்மேலே சீவனுக்கு ஆசை யுண்டாயிருக்கும் (எ - று). (௧0)

---

## 95. மருந்து

அஃதாவது-முன்செய்த பொல்லாங்குகளினாலேயும், உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன ஒவ்வாதாகிய காரணங்களிலேயும், மனுஷர்க்கு வருகிற வாதம், பித்தம், சிலேத்துமம் என்னும் வியாதிகளைத் தீர்க்கும் மருந்ினுடைய கூறுபாடு.

**941.** மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.

*(இ - ள்.)* வாதம், பித்தம், சிலேத்துமம் என்று சொல்லப்பட்ட மூன்றும் அதிகமானாலும் குறைச்சலானாலும் உபத்திரவப்படுத்தும் (எ - று).

இவைகளிலே ஒன்று மிஞ்சினாலும் குறைந்தாலும், சரீரத்தை வேதனை பண்ணும் (எ - ம்). (க)

**942.** மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்.

*(இ - ள்.)* ஒருவன் முன்சாப்பிட்ட வஸ்துக்கள் செரித்ததைக் குறிப்பால் அறிந்து, பிறகு சாப்பிட்டால், அவனுக்கு மருந்து என்கிறது வேண்டாம் (எ - று).

குறிப்பால் அறிகிறதாவது-சரீரம் தளருகிறது, பொறிகள் கலங்குகிறது, பசிமிகுதல்முதலாயின. பசி மிகுந்தபிறகு சாப்பிடுகிறவனுக்கு வியாதி வாராது என்பது கருத்து. (உ)

**943.** அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு.

*(இ - ள்.)* முன் சாப்பிட்டது செரித்தபிறகு மட்டாகச் சாப்பிட்டால், அவன்சரீரம் வியாதியில்லாமல் நெடுநாள் நிற்கும் (எ - று)

பெறுதற்கருமையாகிய மனுஷயாக்கையைப் பெற்றும், சீக்கிரமாய் விழுந்துபோனால், தருமம் வாராது. நெடுநாள் நின்றால், தருமார்த்தங்கள் தேடிக்கொள்ளலாம் (எ - ம்). (ங)

**944.** அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

*(இ ள்.) முன் சாப்பிட்டது செரித்ததை அறிந்து, பிறகு பசிக்கிறபோது உண்ணுகிறதிலே, தன் சரீரத்துக்கு மிதமான பதார்த்தங்களைச் சாப்பிடவேணும் (எ - று).*

*மிகப் பசித்தபிறகு சாப்பிடவேண்டும் என்றது - தான் கொண்ட விரத நியமங்கள் தப்பாமல் நடந்தபிறகு சாப்பிட வேணும் (எ - ம்). (ச)*

**945.** மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு.

*(இ - ள்.) வாதம், பித்தம், சிலேத்துமம் என்னப்பட்ட மூவகையும் அதிகப்படாத வஸ்துக்களை, தன் மனது வேண்டிய படியல்லாமல், வியாதி வாராதபடிக்குச் சாப்பிட்டால், அவனுக்கு வியாதிகளாலே துக்கமும் வாதையும் வாரா (எ - ம்).*

**946.** இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும்
கழிபே ரிரையான்க ணோய்.

*(இ - ள்.) பசி அறிந்து சற்றுக் குறையச் சாப்பிடுகிறவனிடத்திலே இன்பம் நீங்காது நிற்கும்; அதுபோலே, வெகுவாகச் சாப்பிடுகிறவன் இடத்திலே வியாதி நீங்காமல் நிற்கும் (எ - று).*

*இன்பமாவது - வாத, பித்த, சிலேத்துமங்கள் தங்கள் இருப்பிடம் விட்டு மிஞ்சாமல் இருக்கிறதாம். (சூ)*

**947.** தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோயள வின்றிப் படும்.

*(இ - ள்.) தன் சரீரப்பிரகிருதியும், அதற்கேற்ற உணவும், அது சாப்பிடுகிற காலமும் அறிந்து உண்ணாமல், வேண்டிய பொழுது வேண்டிய வஸ்துவைத் தன் வயிறு நிறைய உண்டால், அவனுக்கு இலக்கமில்லாத வியாதிகள் வரும் (எ - று).*

**948.** நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

(இ - ள்.) வைத்தியனானவன் வியாதியஸ்தனைப் பார்த்து, இது இன்ன வியாதி என்றும் இன்னதினாலே வந்ததென்றும் அறிந்து துணிந்து, அது வருத்துகிற உபத்திரவம் தீர்க்கும் வழியையும் அறிந்து, பிறகு மருந்து கொடுக்கவேணும் (எ - று).

அது தீர்க்கும் வழி - அறுத்தல், சுடல், இரத்தம்வாங்கல், கழுவுதல் முதலானவை. (அ)

**949.** உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல்.

(இ - ள்.) வியாதியஸ்தன் குணத்தையும், வியாதியினுடைய குணத்தையும், அது தன்னாலே தீர்க்கிறதுக் கேற்ற காலத்தினையும் வைத்தியசாத்திரம்படித்தவன் அறிந்து செய்யவேணும் (எ - று).

வியாதியஸ்தன் குணம்-பலம், அறிவு, வேதனைகளாம். வியாதியினுடைய குணம்-சாத்தியம், அசாத்தியம் முதலியன.

**950.** உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து.

(இ - ள்.) வியாதிக்கு மருந்தாவது, அந்த வியாதியஸ்தன், அதைத் தீர்க்கப்பட்டவன், அவனுக்கு ஆயுதமாகிய மருந்து, அண்டையிலே இருக்கிறவன் என்னும் நான்கு பகுதியை யுடைய நான்குதிறத்தது (எ - று).

வியாதியஸ்தன்குணம் நாலாவன - பொருளுடைமை, வைத்தியன் சொன்னபடியே நடக்கிறது, வியாதியினுடைய நிலையை அறிகிறது, மருந்து தின்கிற வேதனைக்குப் பயப்படாமற் பொறுக்கிறது. வைத்தியன்குணம் நாலாவன - வியாதியைக் காண்பதற்குப் பயப்படாமல் இருக்கிறது, ஆசாரியன் இடத்திலே படித்த கல்வியாலே சூட்சுமமான அறிவுண்டாய் இருக்கிறது, எந்நாளும் வைத்தியம் பண்ணுகிறது,

மனத்திலே கபடம் இல்லாமற் சுத்தனாய் இருக்கிறது. மருந்தின் வகை நாலாவன - பலவியாதிகளுக்கும் ஆனது, சுவை அதிகமாய் இருக்கிறது, வியாதியைத் தீர்க்கிறதினாலே பேர் பெறுகிறது, எளிதாய்த் தேடிக்கொள்ளுகிறது. அண்டையிலே இருக்கிறவன்குணம் நாலாவன - வியாதியஸ்தன்மேலே பட்சம் உண்டாய் இருக்கிறது, மனசும் வசனமும் சுத்தமாய்க் கபடமில்லாமல் இருக்கிறது, வைத்தியன் சொன்னபடி செய்கிறது, அறிவுடையவனாய் இருக்கிறது என்பவை. இவை நாலும் கூடினால்அன்றி வியாதி தீராது (எ - ம்). (௰)

அங்கவியல் முற்றிற்று

---

# ஒழிபியல்

## 96. குடிமை

அஃதாவது - உயர்ந்த குடியின்கட் பிறந்தாரது தன்மை.

951. இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.

(இ - ள்.) செம்மையாய் நடக்கிறதும், நாணமும் நல்ல குடியிலே பிறந்தாரிடத்திலே அல்லாமல் மற்றவர்களிடத்திலே சுபாவமாக உளவாகா (எ - று).

செம்மையாய் நடக்கிறதாவது - கருத்துஞ் சொல்லுகிறதுஞ் செய்கிறதும் ஒன்றுக்கொன்று மாறுபடாமல் சரியாய் இருக்கிறது. நாணமாவது - பழிபாவங்களுக்குப் பயப்பட்டுச் செய்யாமல் இருக்கிறதாம். இவை நல்ல குடியிலே பிறந்தவர்களுக்கு ஒருவர் கற்பியாமல் சுபாவமாக உண்டாம்; மற்றவர்களுக்குக் கற்பித்தாலும் நெடிது நில்லா (எ - ம்). (க)

952. ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார்.

(இ - ள்.) உயர்ந்த குடியிலே பிறந்தவர்கள் தமக்கு உரிய ஆசாரமும் சத்தியமும் நாணமும் ஆகிய இந்த மூன்றின் கண்ணும் தப்பாமல் நடப்பார்கள் (எ - று). (உ)

953. நகையீகை இன்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.

(இ - ள்.) நல்ல குடியிலே பிறந்தாரிடத்திலே தரித்திரரானவர்கள் வந்தால், முகமலர்ந்து சந்தோஷமாய் இருக்கிறதும், உண்டான மாத்திரம் கொடுக்கிறதும், நல்ல வார்த்தை

சொல்லுகிறதும், அவர்களை இகழாமல் இருக்கிறதுமான இந்த நான்கு குணமும் சுபாவமாக உண்டாம் (எ - று). (௩)

**954.** அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.

(இ - ள்.) அநேக கோடி திரவியங்கள் வருகிறதானாலும், நல்ல குடியிலே பிறந்தவர்கள், தங்களுடைய ஒழுக்கங்கள் கெடத்தக்க காரியங்களைச் செய்யார் (எ - று). (௪)

**955.** வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று.

(இ - ள்.) பாரம்பரியமாய் நல்லதாய் இருக்கிற குடியிலே பிறந்தவர்கள், தங்கள் திரவியம் குறைந்து கொடுக்கிறதற்கு இல்லாமற் போனாலும், தரித்திரரைக் கண்டால் நல்ல குணங்களினின்று நீங்காமல் நல்ல வார்த்தை சொல்லுவார்கள் (எ-று).

பாரம்பரியமாய் நல்ல குடியாவது - தகப்பன், பாட்டன், இருபாட்டன், முப்பாட்டன் முதலானபேர் நல்லவர்களாய் இருக்கிறதாம். (௫)

**956.** சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார்.

(இ - ள்.) குற்றமில்லாத நல்ல குடியிலே பிறந்து அந்தக் குடிக்கு ஏற்க வாழவேணும் என்று நினைத்திருக்கிறவர், தங்களுக்குத் தரித்திரம் வந்தபோதும், அது தீரவேணும் என்று இழிவான காரியங்களைச் செய்யார் (எ - று).

இழிவான காரியங்களாவன - தங்கள் குடிக்கு ஏற்றவை அல்லாத காரியங்கள் (எ - ம்). (௬)

**957.** குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

(இ - ள்.) நல்ல குடியிலே பிறந்து நல்லவர்களாயிருக்கிறவர்களிடத்திலே கொஞ்சமான குற்ற முண்டாயினும் அது, ஆகாசத்திலே திரிகிற சந்திரனிடத்திலே யிருக்கிற மறுவைப் போல, பெரியதாகத் தோன்றும் (எ - று).

பெரியதாகத் தோன்றுகிறது - உலகமெல்லாம் பரந்து வெளிப்படுதல். (எ)

958. நலத்தின்க ணூரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்.

(இ - ள்.) நல்ல குலத்திலே பிறந்தவனிடத்திலே தயையில்லாவிட்டால், அவனை அந்தக் குலப்பிறப்பிலே சந்தேகப்படுவர் உலகத்தார் (எ - று).

சந்தேகப்படுகிறதாவது - 'இவர் இந்தக் குலமாமோ அல்லவோ' என்று எண்ணுவது. (அ)

959. நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

(இ - ள்.) நிலத்தினுடைய நன்மையை அதிலே முளைத்த முளை காட்டும்; அப்படிப்போல, குலத்தினுடைய நன்மையை அதிலே பிறந்தவர்களின் வாயிற்சொற்கள் காட்டும் (எ - று).

முளை நன்றாய்ப் பெரியதாயிருந்தால் அவ்விடம் நல்ல நிலம் என்று அறியலாம்; நல்ல வசனமும் நல்ல குணமு முண்டாயிருந்தால், அவனை நல்ல குலவானென்று அறியவேணும் (எ - று). (கூ)

960. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு.

(இ - ள்.) ஒருவன் தனக்கு நன்மையை வேண்டினானால், தன் பழிபாவங்களுக்குப் பயப்பட்டு நாணுடையனாயிருக்கவேணும்; நல்ல குலமுடையவனாகவேண்டினால், தன்னை வணங்கினவர்களுக்குத் தானும் வணக்கமுடையவனாயிருக்கவேணும் (எ - று).

நன்மை - புகழ்புண்ணியங்கள். (கo)

## 97. மானம்

அஃதாவது - எந்நாளும் தன் நல்ல நடக்கையைக் கைவிடாமலிருக்கிறதும், கர்மவசத்தாலே தனக்கொரு குற்றம் வந்தாற் பிராணனை விடுகிறதுமாம். இது நல்ல குலத்தார்க்கு வேண்டுவதாம்.

**961.** இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல்.

*(இ - ள்.)* செய்யாத காரியங்களைச் செய்து தாழ்வில்லாத பெரிய செல்வம் வருமாறுலும், தங் குடிக்குத் தாழ்வு வருங் காரியங்களைச் செய்யவேண்டாம் (எ - று).

பிராணன் போவதாக வந்தா லிழிவான காரியங்களைச் செய்து பிழைக்கலா மென்று சொல்லுவர் வேதம் படித்தபேர். அதனை யாகாதென்று மறுக்கிறுர். பிராணன் போனுலும் இழிவான காரியம் செய்யலாகாது ; சரீரம் அநித்தியம் ; மானம் கெட்டால் அபகீர்த்தி போகாது (எ - ம்). *(க)*

**962.** சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

*(இ - ள்.)* தனக்குக் கீர்த்தி வரவேண்டு மென்று செய்கிற விடத்திலேயும், தம் குடிக்கு ஒவ்வாத காரியங்களைச் செய்யார், மானத்தையும் புகழையும் நிறுத்துதலை விரும்புகிறவர்கள் (எ - று). (உ)

**963.** பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு.

*(இ - ள்.)* நல்ல குடியிலே பிறந்தவர்களுக்குப் பெரிய செல்வம் உண்டானபோது எல்லாருக்கும் வணங்கி நடந்து கொள்ள வேண்டும்; தரித்திரம் வந்த காலத்திலே வணங்காமல் விரதசீலங்களுடனே கூடியிருக்க வேணும் (எ - று).

செல்வம் வந்த காலத்திலே வணங்காவிட்டடல், கீழானவன் என்று சொல்லுவார்கள் ; தரித்திரம் வந்த காலத்திலே வணங்கினுல் தாழ்வாக வெண்ணுவார்கள் (எ - ம்). *(ங)*

**964.** **தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்**
**நிலையி னிழிந்தக் கடை.**

*(இ - ள்.) நல்ல குடியிலே பிறந்தவர்கள் தங்களுடைய ஆசாரங்களை விட்டுத் தாழ்ந்து நடந்தால், தலையிலே இருந்து தரையிலே விழுந்த மயிரோடு ஒப்பர் (எ - று).*

*தலையிலே மயிர் இருக்கிறபோது கோதவும் முடிக்கவும் படும்; தாழ விழுந்தால், கையாலும் தீண்டாமல் இகழப்படும்; அதுபோலே, ஆசாரத்தை விட்டவனும் இகழப்படுவன் (எ - ம்).* (௪)

**965.** **குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ**
**குன்றி யனைய செயின்.**

*(இ - ள்.) குடிப்பிறப்பால் மலைபோல உயர்ந்தோரும், தாழ்தற்கு ஏதுவான காரியங்களை ஒரு குன்றிமணியளவுமாத்திரம் செய்தாலும், தாழ்ந்து கெட்டுப்போவர் (எ-று).* (௫)

**966.** **புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்**
**றிகழ்வார்பின் சென்று நிலை.**

*(இ - ள்.) மானத்தைவிட்டுத் தன்னை அவமதிப்பார் பின்னே ஒருவன் போய் நிற்கிற நிலை இந்த உலகத்திலே கீர்த்தி பயவாது; மறுமையிலே தேவலோகத்துச் செலுத்தாது (எ-று).*

*இம்மை மறுமை இரண்டும் இழக்கத்தக்கதாகிய மானம் கெடுகிறதினாலே, என்ன பலனுண்டாம்? (எ - ம்).* (௬)

**967.** **ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே**
**கெட்டா னெனப்படுத னன்று.**

*(இ - ள்.) தன்னை இகழ்வார்பின்னே திரிந்து பொருள் பெற்று வாழ்கிறதிலும், அவர்கள்பின்னே திரிந்து அனுசரியாமற் கெட்டுப்போனான் என்று சொல்லுகிறது நல்லது (எ - று).* (௭)

**968.** **மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை**
**பீடழிய வந்த விடத்து.**

(இ - ள்.) உயர்ந்த குடிப்பிறப்பும் மானமும் அழிய வந்தபோது பிராணனை விடவேணுமல்லாமற் பிரயோசன மில்லாத சரீரத்தைக் காக்கிறது இனிமேலும் சாகாமல் இருக் கிறதற்கு மருந்தாமோ ? (எ - று).

பிராணனை விட்டாகிலும் மானத்தைக் காக்கவேணும் (எ - ம்). (அ)

**969.** மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்ன
ருயிர்நீப்பர் மானம் வரின்.

(இ - ள்.) கவரிமான், தன் மயிர்களிலே ஒரு மயிர் அறுந் தாலும், பிராணனை விடும். அதுபோல, மானம் கெட வந் தால், உத்தமரானவர்கள் பிராணனை விடுவார்கள் (எ - று).

பிராணனும் மானமுஞ் சரியல்ல ; பிறந்து பிறந்து இறக்கிறதான சீவனை விட்டாகிலும், பெருமல் நிற்கிற மானத்தைக் காக்கவேணும் (எ - ம்). (கூ)

**970.** இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு.

(இ - ள்.) தமக்கு ஒரு குற்றம் வந்தபோது அதைப் பொறுத்துக்கொண்டு உயிர்வாழாமல் பிராணனை விட்டவர் களுடைய கீர்த்தியை எந்நாளும் உலகத்தார் கொண்டாடுவர் (எ - று). (கo)

---

## 98. பெருமை

அஃதாவது - செய்தற்கு அரிய காரியங்களைச் செய் கிறதும், ஐஸ்வரியத்தினலே கர்வியாமல் இருக்கிறதும் பிறருடைய குற்றங்களைச் சொல்லாமல் இருக்கிறதும் முன்னிருந்த நிலையினும் அதிகமான ஆசாரமாய் நடக் கிறதும், முன்னிருந்த ஆசாரங்களிலே குறைபடாமல் இருக்கிறதும் ஆகிய நற்குணங்களால்] பெரியாரது தன்மை.

**971.** ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல்.

*(இ - ள்.) ஒருவனுக்குக் கீர்த்தியாவது பிறராலே செய்தற்கு அருமையாகிய காரியங்களைச் செய்யவேணும் என்று மேன்மேலும் நினைக்கிறதாம்; ஒருவனுக்குக் குற்றமாகிறது நல்ல காரியங்களைச் செய்யாமல் இழிவான காரியங்களைச் செய்து பிழைக்கிறது (எ - று).*

*செய்தற்கு அருமையாவன-தருமம் தானம் விரதம் சீலாசாரம் முதலியன.* (க)

**972.** பிறப்பொக்கு மெல்லாவுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

*(இ - ள்.) எல்லா மனுஷருக்கும் பிறப்புச் சரியானாலும், அவரவர்கள் செய்கிற தொழில்வேற்றுமையினாலே, சிறப்பாகிய தன்மைகள் சரியாகா (எ - று).* (உ)

**973.** மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.

*(இ - ள்.) செய்தற்கரிய காரியங்களைச் செய்யமாட்டாதவர் உயர்ந்த விடத்திலே இருந்தாலும் பெரியவர்களாகார்; செய்தற்கரிய விரத சீலாசார தானதருமங்களைச் செய்யும் பெரியோர்கள் தாழ்ந்த விடத்திலே இருந்தாலும் சிறியராகார் (எ - று).*

*சிறியவர் செல்வமுண்டாயிருந்தாலும் பெரியராகார்; பெரியவர் தரித்திரவான்களானாலும் சிறியராகார் (எ - ம்).*

**974** ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

*(இ - ள்.) கபடமில்லாத மனத்தையுடைய ஸ்திரீகள் பதிவிரதாபாவங்கள் கெடாமல் காத்துக்கொண்டு நடக்கிறப்போலே, பெருமைக்குணம்வேண்டினவர்களும் தம்முடைய நீதிநெறிமுறைமை கெடாமல் தம்மைத்தாமே காத்துக்கொண்டிருக்கவேணும் (எ - று).*

*பதிவிரதாபாவம் உண்டான ஸ்திரீகள் பிரகாசமானாற் போல, நீதிநெறிமுறைமையுள்ளவர்களும் பெரியவர்களாவர் (எ - ம்).* (சு)

**975.** பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல்.

*(இ - ள்.) பெருமையுடையவர்கள் தரித்திரரானாலும் செய்தற்கரியதான தங்கள் நடக்கையை விடாமற் செய்வர் (எ - று).*

*நல்ல நடக்கைகளை விட்டால் பெருமை போம் (எ - ம்).*

**976.** சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு.

*(இ - ள்.) 'பெரியவர்களை வணங்கி நடந்து அவர்களியல் பினைக் கொள்வோ' மென்கிற நினைவு சிறியவர்களுக்கு இல்லை (எ - று).*

*சிறியவர் தங்கள் செல்வமும் கல்வியுங் கண்டு மகிழ்ந்திருப்பர் என்பது கருத்து.* (சா)

**977.** இறப்பே புரிந்த தொழிற்றுஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.

*(இ - ள்.) பெரியோரிடத்திலே சேர்ந்து இருக்கத்தக்கதான சிறப்பு சிறியவர்களுக் குண்டானாலும், அவர்கள் தம் கல்வியினையும் செல்வத்தினையும் அதிகமாகப் பார்த்துக் கொண்டு இறுமாந்து இருப்பார்கள் (எ - று).* (எ)

**978.** பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து.

*(இ-ள்.) பெருமையுடையவர்கள், அச் சிறப்பு உண்டான காலத்திலேயும், இறுமாப்பில்லாமல் வணங்கி நடப்பார்கள்; சிறுமைக்குணமுடையவர், அஃது இல்லாதபோதும், தம்மைத் தாமே மகிழ்ந்துகொண்டு இருப்பர் (எ - று).* (அ)

**979.** பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்.

*(இ - ள்.) பெருமைக்குணமாவது, செல்வம் உண்டானாலும் வறுமை வந்தாலும், இது முன்செய்த வினை என்று மகிழாமல் இருக்கிறது; சிறுமைக்குணமாவது, செல்வம் இல்லாத போது செல்வம் உள்ளவனாக தன்னைத்தானே மதித்துக் கொண்டிருக்கிறது (எ - று).* (௯)

**980.** அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

*(இ - ள்.) பெருமைக்குணமுடையார் பிறர்குற்றத்தை மறைத்துக் குணத்தையே சொல்லுவர்; சிறுமைக்குண முடையவர் பிறர்குணங்களை மறைத்துக் குற்றத்தையே சொல்லுவர் (எ - று).* (௧௦)

## 99. சான்றாண்மை

*அஃதாவது-பெருமையுள் அடங்காத பல குணங்களாலும் நிறைந்து அவற்றை ஆளுந் தன்மை.*

**981.** கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

*(இ - ள்.) 'நமக்குத் தக்கது இது' என்று அறிந்து நல்ல குணங்களுடனே கூடி இருக்கிறவர்களுக்கு, எல்லா நற்குணங்களு மியல்பாயிருக்கும் (எ - று).*

*சில குணங்களில்லாவிட்டாலும், சாந்தகுணம் உடையவர்களுக்கு எல்லாக்குணங்களு முண்டெனப்படும் (எ - ம்).* (௧)

**982.** குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று.

*(இ - ள்.) சான்றோர்நலமாவது குணங்களாலாகிய நலமே. இதல்லாமல் அவயவங்கள்நலமுஞ் செல்வநலமுஞ் நலமல்ல (எ - று).*

அவயவநலமும் செல்வநலமும் உண்டாயிருந்து குணநல மில்லாவிட்டால், ஒரு பிரயோசனமு மில்லை (எ - ம்). (உ)

983. அன்புநா ணொப்பரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண்.

(இ - ள்.) எல்லாரிடத்திலேயும் தயையாயிருக்கிறதும், பழிபாவங்களுக்குப் பயப்படுகிறதும், எல்லாருக்கும் உபகாரம் பண்ணுகிறதும், பழையவர்கள்மேலே சிநேகம் விடாமல் இருக்கிறதும், எப்பொழுதும் மெய்சொல்லுகிறதும் இந்த ஐந்தும் சால்பு என்கிற பாரத்தைத் தாங்குகிற தூண்களாம் (எ - று).

இந்த ஐந்து குணங்களும் இல்லாதவர் சான்றோ ரென்னப்படார் (எ - ம்). (ந)

984. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

(இ - ள்.) நோன்பாவது ஒரு சீவனையுங் கொல்லாம லிருக்கிறதாம்; அதல்லாத மற்றவையெல்லாம் நோன்பலவாம். அதுபோல, பிறருடைய குற்றங்களைச் சொல்லாமலிருக்கிறதே சால்பென்பது (எ - று).

நோன்புக்குக் கொல்லாத விரதம் பெரியதானாற்போல, பிறர்குற்றஞ்சொல்லாமலிருக்கிறதே சால்பிற்குச் சிறந்தது (எ - ம்). (ச)

985. ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

(இ - ள்.) ஒரு கருமத்தைச் செய்துமுடிக்கிறவனது பல மாவது அந்தக் காரியத்துக்குத் துணையானவர்களை வணங்கிக் கூட்டிக்கொள்ளுகிறதாம்; சான்றோர் தம் பகைவரைப் பகைமை யொழிக்குங் கருவியும் அதுவே (எ - று). (ரு)

986. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்.

(இ - ள்.) சால்பு என்னப்பட்ட பொன்னின் அளவு அறிகிறதற்கு உரைகல்லாகிய செயல் ஏதென்றால், தன்னிலும் பெரியோர்களிடம் கொள்ளுந் தோல்வியைத் தன்னிலும் தாழ்ந்தவரிடமும் கொள்ளல் (எ - று). (சு)

**987.** இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு.

(இ - ள்.) தனக்குப் பொல்லாத காரியங்களைச் செய்தவர்களுக்கும் தான் நன்மைகளைச் செய்யாவிட்டால் அவன் சான்றாண்மை என்ன பிரயோசனத்தைச் செய்யும்? (எ - று).

பொல்லாங்குசெய்தவர்களுக்கும் நல்லது செய்யாவிட்டால், அவர்கள் சான்றோர் எனப்படார் (எ - று). (எ)

**988.** இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

(இ - ள்.) சான்றோரென்று சொல்லப்பட்ட பலமுண்டாயிருந்தால், அவர்களுடைய தரித்திரங் குற்றமாகாது (எ - று).

நற்குணமுடையவன், தரித்திரனாயிருந்தாலும், பெரியவனென்று சொல்லப்படுவான் (எ - ம்). (அ)

**989.** ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்.

(இ - ள்.) சான்றாண்மையாகிய கடலுக்குக் கரை என்று சொல்லப்பட்ட பெரியோர்கள், உலகமாகிய பூமி பெயர்ந்தாலும், தங்கள் நிலையிற் றிரியார் (எ - று). (கூ)

**990.** சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
றாங்காது மன்னோ பொறை.

(இ - ள்.) பல குணங்களாலேயும் நிறைந்த சான்றவர் தங்கள் நிலைமை கெட்டால், பூமி பாரம் பொறாது (எ - று).

சான்றோர்கள் தங்கள் நிலைமை கெடுகிறதுமில்லை; பூமி பாரம் பொறாமலிருக்கிறது மில்லை (எ - ம்). (கம)

---

## 100. பண்புடைமை

அஃதாவது - பெருமைசான்றாண்மைகளில் தாம் வழு வாமலிருந்து எல்லாரியல்பு மறிந்து ஒத்து நடக்கிறதாம்.

**991.** எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு

(இ - ள்.) எல்லார்க்கும் எளியனாய் நன்மையையுடைய னாய் இருந்தால், பண்புடைமை என்கிற குணம் தானே வந்து சேரும் (எ - று). (க)

**992.** அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

(இ - ள்.) பிறரிடத்திலே அன்புடையவனாய் இருக்கிறதும், நல்ல குடியிலே பிறந்து உலகத்துக் கேற்க நடக்கிறதும் ஆகிய இந்த இரண்டு குணமும் ஒருவனுக்குண்டானால், அவனைப் பண்புடையவ னென்று சொல்லுவார்கள் (எ - று). (உ)

**993.** உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு.

(இ - ள்.) பெறுதற்கரிய மனுஷசரீரத்தை எடுத்தாலும், நல்ல குணமில்லாவிட்டால் பெரியவர்களுடனே சரியன்று; நல்ல குணமும் நல்ல செயல்களும் உண்டாயிருக்கிறதே நல்ல வர்களுடனே சரி (எ - று). (ங)

**994.** நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பாண்புபா ராட்டு முலகு.

(இ - ள்.) நீதியையும் தருமத்தையும் விரும்பியிருக்கிற படியினாலே, பிறருக்கும் தமக்கும் பலனாகிறவர்களுடைய நன்மையை உலகத்தார் கொண்டாடுவார்கள் (எ - று). (ச)

**995.** நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

(இ-ள்.) ஒருவனை விளையாட்டுக்கு இகழ்ந்து பேசுகிறதும் பொல்லாததா யிருக்கும். ஆனபடியினாலே, பிறருடைய குணங்களை அறிந்து நடக்கிறவர்களிடத்திலே பகை உண்டானாலும், அது பகையாகாது; நல்ல குணமே உண்டாம் (எ - று).

பிறர்குணங்களை அறிந்தவர் பொல்லாங்குசெய்யாமல் நன்மையே செய்வார்கள். அதனாலே, பகையும் உறவாயிருக்கும் (எ - ம்). (ரு)

**996.** பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மண்.

(இ - ள்.) பண்புடையவர்களான நல்ல குணமுடையவர்கள் உண்டாகிறபடியினாலே உலகஇயற்கை எந்நாளும் உண்டாய் வருகிறது. பண்புடையவர்கள் இல்லாவிட்டால், உலக இயற்கை மண்ணிலே புகுந்து கெட்டுப்போம் (எ - று). (சா)

**997.** அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

(இ - ள்.) மனுஷருக்குரிய பண்பில்லாதவர், அரத்தின் கூர்மைபோலும் கூர்மையான புத்தியை யுடையராயிருந்தாலும், ஓரறிவாகிய மரத்துக்குக்குச் சரி (எ - று).

அரமானது தன்னுடனே சேர்ந்தவற்றைப் பொடியாக்குவது போலே, கூர்மையான புத்தியிருந்தாலும் தயையில்லாத பேர் தங்களைச் சேர்ந்தவர்களைக் கெடுப்பர் (எ - று). (எ)

**998.** நண்பாற்று ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்று ராதல் கடை.

(இ - ள்.) தன்னுடனே சினேகம்பண்ணுமற் பொல்லாங்கு செய்கிறவர்களுக்கும் தான் நல்லவனாய் நன்மை செய்யாவிட்டால், அறிவுடையவனுக்குக் குற்றமாம் (எ - று).

எல்லாருக்கும் நன்மை செய்யவே அறிவுடையனும் (எ - ம்). (அ)

**999.** நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

(இ - ள்.) நன்மையா யொருவனுடனே சிநேகம்பண்ணி மகிழமாட்டாதவனுக்குப் பகற்பொழுது இருளாயிருக்கும் (எ - று).

பண்பில்லாதவன் உலகஇயற்கை அறியமாட்டாமையால், உலகம் இருளாயிருக்கும் (எ - று). (கூ)

1000. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

(இ - ள்.) நல்ல குணமில்லாதவன் முன்செய்த நல்வினையாலே எய்திய பெருஞ்செல்வம் ஒருவருக்கும் பிரயோசனமாகாமற் கெட்டுப் போகிறது எப்படி என்றால், நல்ல பாலைக் காயாத பானையில் வார்த்தால் அது கெட்டுப் போவது போலே (எ - று).

கெட்ட பால் ஒருவருக்கும் ஆகாததுபோல, நற்குணமில்லாதவன்செல்வமும் ஒருவருக்கும் பயன்படாது (எ - ம்). (கo)

---

## 101. நன்றியில் செல்வம்

அஃதாவது-நல்ல குணமில்லாதவன் தேடின பொருள் தேடினவனுக்கும் பிறருக்கும் பயன்படாமற்போகிறபடியினாலே, அவன்குற்றத்தை அந்தப் பொருள்மேலே வைத்துச் செல்லுகிறது.

1001. வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில்.

(இ - ள்.) தன் மனையெல்லாம் நிறையப் பொருள் தேடி வைத்தும் லோபத்தாலே அந்தப் பொருளை அனுபவியாதவன், பிராணனுடனே இருந்தாலும், செத்தவனோ டொப்பான். அந்தப் பொருளாலே அவனுக்குப் பிரயோசனமொன்று மில்லை (எ - று).

தேடின பொருளைப் பிராணனுடனே இருக்கையிலே தர்மங்களிலே செலவழித்துத் தானும் நுகராவிட்டால், செத்துப்போனபிறகு அந்தப் பொருளால் இவன் செய்யப் போவ தொன்றுமில்லை (எ - ம்). (க)

1002. பொருளானு மெல்லாமென் றீயா திவறு
மருளானு மாணப் பிறப்பு.

*(இ-ள்.) பொருளொன்றுண்டானல், அதனாலே எல்லாம் உண்டென்றறிந்து பொருளைத் தேடிப் பிறர்க் கீயாமல் அதன் மேலே ஆசைவைத்தால், அவன் பேயாய்ப் பிறப்பான் (எ-று).*

*பொருள்தேட வறிந்தவன், அதனைச் செலவழித்துப் பலன் கொள்ள அறியாத மயக்கத்தினாலே, பசித்து வந்தவர்களுக்குக் கொடான். ஆனபடியினாலே, இவனும் பேயாய்ப் பிறந்து பசி அடங்காமல் திரிவான் (எ-ம்).* (உ)

1003. ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

(இ-ள்.) *'யாம் வெகுவாகப் பொருள்தேட வேண்டு' மென்று நினைத்துப் பொருள் தேடிவைத்து, அதன் பயனாகிய கீர்த்தியையும் தர்மத்தையும் விரும்பாதவன் பிறந்தது பூமிக்குப் பாரமாம் (எ – று).*

*பொருளைத் தேடினவன் தருமத்தை வேண்டல் செய்யாது, வைத்துக்காக்கிற துக்கத்தையும் அந்தப் பொருள் கெட்டுப்போனால் வருகிற துக்கத்தையும் வேண்டிய அறிவின்மைபற்றி, 'நிலக்குப் பொறை' என்றார்.* (௩)

1004. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா
னச்சப் படாஅ தவன்.

*(இ-ள்.) ஒருபொருளையும் கொடுத்தறியாமையின், ஒருவராலும் நச்சப்படாதவன், தான் செத்துப்போனபிறகு ஈண்டு ஒழிந்து நிற்பதாக எந்தப் பொருளை நினைப்பனே (எ-று).*

*பொருளைக் கொடுத்தவனுக்கே கீர்த்தியுண்டாகும்; கொடாதவனுக்கு இம்மை மறுமை இரண்டிலேயும் அந்தப் பொருளாலே பிரயோசனமில்லை (எ-ம்).* (௪)

1005. கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

(இ - ள்.) பொருளைப் பிறருக்குக் கொடுக்கிறதும் தான் அனுபவிக்கிறதும் ஆகிய இந்த இரண்டும் இல்லாதவனுக்கு, அநேக கோடி திரவியம் உண்டானாலும், ஒன்றுமில்லை (எ - று).

**1006.** ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
நீத லியல்பிலா தான்.

(இ - ள்.) தான் அனுபவிக்கிறதும் கொடுக்கிறதும் இல்லாதவன் அச் செல்வத்துக்கே ஒரு நோய் (எ - று).

பெரியோர்களுக்குக் கொடுக்கிறதற்கும் தான் அனுபவிக்கிறதற்கும் யோக்கியமாகிய பொருளைப் புதைத்துவைத்துச் சிறைசெய்கிறபடியினாலே, அந்தப் பொருளுக்கு அவன் ஒரு வியாதியாம் (எ - ம்). (௬)

**1007.** அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகுநலம்
பெற்றா டமியண்மூத் தற்று.

(இ - ள்.) ஒருபொருளும் இல்லாதார்க்குக் கொடாதவன் செல்வம் விருதாவிலே போகிறது, நல்ல வடிவையும் குணத்தையு முடைய யௌவன வயசுடைய ஸ்திரீ கொடுப்பாரின்மையின், புருஷன் இல்லாமல் தனியாயிருந்து மூத்த தன்மைத்து (எ- று).

காலங்கழிந்தால் அது பின்னை வாராது. பொருளுடையவனுக்குந் தன் பலம்போய் வயசுமுதிர்ந்தாற் பிறகு கொடுக்கக் கூடாது (எ - ம்). (௭)

**1008.** நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று.

(இ - ள்.) தரித்திரரானவர்களுக்கு ஒன்றும் கொடாதவன் செல்வம் பெற்றிருக்கிறது, நடுத்தெருவிலே விஷமான எட்டிமரம் பழுத்தாப்போலே (எ -று). (௮)

**1009.** அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர்.

(இ - ள்.) ஒருவன், பொருளைக் கொடாமலிருக்கிற நிமித்தமாய்ச் சுற்றத்தார்மேலும் சிநேகிதர்மேலும் அன்புசெய்தலை

ஒழிந்து, தான் வேண்டுவனவற்றையும் அனுபவியாமல் தன்னை வருத்தியும், இரக்கிறவர்களுக்குக் கொடாமலும், தேடிவைத்த பொருள், அவன்வமிசத்தாருக்கும் ஆகாது. அதனைப் பிறர் கொண்டுபோய் அனுபவிப்பார்கள் (எ - று).

பிறராவர்-அரசன் கள்ளர் அன்னிய ரென்பவர். (௯)

1010. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

(இ - ள்.) புகழுடைத்தாய செல்வத்தினையுடையவர் கொடுக்கிறதினாலே தரித்திரம் வாராது; வந்தாலும் கொடப் பெனத் தீரும். அது எதுபோலவெனில், உலகத்தை யெல்லாம் நிலைநிறுத்தும் மழை ஒருவேளை இல்லாமற் போனாலும், கொஞ்சநாளையிலே வெகுமழைபெய்யும் (எ - று). (௧0)

---

## 102. நாணுடைமை

அஃதாவது - நல்ல குணங்களை உடையவர்கள் தங்களுக்கு ஆகாத காரியங்களுக்கு நாணுகிற தன்மை.

1011. கருமத்தா னாணுத னாணுத் திருநுத
லல்லவர் நாணுப் பிற.

(இ - ள்.) நல்லவர்களுடைய நாணமாவது பொல்லாத காரியங்களுக்குப் பயப்படுகிறது. இதுவல்லாத பிற, நல்ல நெற்றியையுடைய குலஸ்திரீகளின் நாண்கள் (எ - று). (௧)

1012. ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.

(இ - ள்.) உண்கிறதும் உடுக்கிறதும் முதலாக மற்று முண்டானதெல்லாம் மனுஷஜீவனுக்கெல்லாம் சரியானாலும், நல்லவர்களுக்கு அழகாவது நாணமுடையது (எ - று). (௨)

1013. ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னு
நன்மை குறித்தது சால்பு.

(இ - ள்.) எல்லா உயிர்களும் உடம்பைத் தமக்கு நிலையாகக் கொண்டிருக்குமதுபோல, நாணமென்னப்பட்ட நன்மையை யுடையதே நற்குணம் (எ - று). (ங)

1014. அணியன்றே நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேற்
பிணியன்றே பீடு நடை.

(இ - ள்.) பெரியோர்களுக்கு நாணுடைமையே ஆபரணமாம். அந்த ஆபரணம் இல்லாவிட்டால், அவருடைய பெருமிதநடை கண்டவர்களுக்குப் பிணியாம் (எ - று).

1015. பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு.

(இ - ள்.) பிறருக்கு வருகிற பழியும் தமக்கு வருகிற பழியும் சரியாக எண்ணி நாணுகிறவர்களை உலகத்தார் நாணம் இருக்கும் இட மென்று சொல்லுவார்கள் (எ - று).

பிறர்பழியும் தன்பழியும் சரியாக எண்ணுகிறது-பிறருக்கு வந்தது தனக்கு வந்ததாகப் பார்த்து நாணுகிறதாம். (ரு)

1016. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

(இ - ள்.) பெரியோர்கள் நாணுடைமையைத் தமக்குப் பாதுகாப்பாகக் கொள்ளுவதல்லாமல், பெரியதான பூமியைக் கொள்ள நினையார் (எ - று). (சு)

1017. நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார் நாணாள் பவர்.

(இ - ள்.) நாணினுடைய நன்மையை அறிந்து அதனை விடாமல் நடக்கிறவர்கள், அந்த நாணம் கெட வந்தால், பிராணனை விடுவார்கள் ; பிராணன் போவதென்றாலும், நாணத்தை விடார்கள் (எ - று). (எ)

1018. பிறர்நாணத் தக்கது தானாணா னாயி
னறநாணத் தக்க துடைத்து.

(இ - ள்.) கேட்டவர்களும் கண்டவர்களும் நாணத்தக்க பழியை ஒருவன் தான் நாணாமல் செய்தால், அந் நாணமை

அவனைத் தருமம் விட்டுநீங்கத்தக்க குற்றத்தினை உடையது (எ - று).

பழிபாவங்களுக்கு நாணுதவர்களைத் தருமம் சேராதென்பது கருத்து. (அ)

1019. குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
நாணின்மை நின்றக் கடை.

(இ - ள்.) ஒருவனுக்கு ஆசாரம் தப்பினால், அது அவன் குடிப்பிறப்பொன்றையே கெடுக்கும்; நாணங் கெட்டால், அது அவனுடைய நன்மைகளை யெல்லாம் கெடுக்கும் (எ - று).

ஆசாரம் கெடுகிறதிலும் நாணம் அழிகிறது மிகப் பொல்லாதது (எ - ம்). (கூ)

1020. நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று.

(இ - ள்.) மனத்திலே நாணமில்லாத மனுஷர் நடமாடித் திரிகிறது, மரப்பாவை சூத்திரக்கயிற்றினாலே உயிருடையதாக மயக்கினாற் போலும் (எ - று).

நாணமில்லாதவர் பிணத்தோ டொப்பர் (எ - ம்). (கo)

---

## 103. குடிசெயல்வகை

அஃதாவது - ஒருவன் தான் பிறந்த குடியை உயரச் செய்தலின் திறம்.

1021. கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில்.

(இ - ள்.) தன் குடியை அதிகமாக்குவதின்பொருட்டுத் தொடங்கிய காரியம் முடியாமையின், எண்ணிய கருமம் செய்கிறதற்குக் கையொழியேன் என்று சொல்லுகிறவனுக்கு அது போலே பெருமையான காரியம் வேறொன்றுமில்லை (எ - று).

1022. ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி
னீள்வினையா னீளுங் குடி.

(இ - ள்.) முயற்சியும் நிறைந்த அறிவும் என்று சொல்லப்பட்ட இரண்டையு முடையதாய் எந்நாளும் இடைவிடாதே செய்கிற கருமத்தாலே ஒருவன்குடி உயரும் (எ - று).

நிறைந்த அறிவாவது-சுபாவமாய் இருக்கிற அறிவுடனே பிறிதொன்றைக் கண்டு அறிகிறதுமாம். (உ)

1023. குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும்.

(இ - ள்.) தன் குடியை யுயரச்செய்யவேணு மென்று நினைத்து அதற் கேற்ற கருமங்களைச் செய்கிற ஒருவனுக்குத் தெய்வம் ஆடையைக் கெட்டியாய்க் கட்டிக்கொண்டு சகாயமாய்வந்து முன் நிற்கும் (எ - று). (ந)

1024. சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.

(இ - ள்.) தன் குடியை உயரச் செய்யவேணு மென்று அதற்கேற்ற காரியங்களைச் செய்யப்போனால், அந்தக் கருமம் தனக்குத்தானே முடியும் (எ - று).

தெய்வம் துணையானால் சீக்கிரமாக எல்லாக் காரியமும் முடியும் (எ - ம்). (ச)

1025. குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு.

(இ - ள்.) குற்றமான காரியங்களைச் செய்யாமல் தன் குடியை உயரச்செய்கிறவனை உலகத்தாரெல்லாருந் தங்களுக்கு நல்ல உறவாகச் சுற்றிக்கொண்டிருப்பார்கள் (எ - று).

குற்றமாவன-தர்மம்நீதிகளுக்கு மறுதலையாய செயல்கள்.

1026. நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல்.

(இ - ள்.) ஒருவனுக்கு நல்ல ஆண்மை என்று சொல்லுகிறது தான் பிறந்த குடியை ஆளுந் தன்மையைத் தனக்கு உளதாக்கிக் கோடல் (எ - று).

குடியினை உயரச்செய்தலாவது - தன் வங்கிசத்திலே பிறந்தவர்களை உயரச்செய்து தன்வழியே நடக்கப் பண்ணிக் கொள்ளுகிறதாம். (சு)

1027. அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை.

(இ - ள்.) சண்டை பண்ணுகிற போர்க்களத்திலே அனேகம் பேர் போய் நின்றாலுஞ் சண்டைபண்ணி வெல்லுதல் பலவான்கள்மேலதானாற்போல, குடியிலே பிறந்தவர்கள் பலராலும் அதன் பாரம்பொறுத்தல் அதுவல்லார் மேலதாம். (எ - று).

குடியைத் தாங்குகிறவனே பெரியவன் (எ - ம்.) (எ)

1028. குடிசெய்வார்க் கில்லைப் பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும்.

(இ - ள்.) தன் குடியை உயரச் செய்கிறவன் அதனைச் செய்யாமல், காலத்தை நோக்கி மடியினைச் செய்துகொண்டு மானத்தை நினைத்தானாகில், அக் குடி கெடும். குடிசெய்கிறவன் காலம் பாராமற் செய்ய வேணும் (எ - று).

காலம் நோக்கி மடிசெய்தல்-பனி, குளிர், வெயி லென்று பின்னர்ச் செய்கிறே னென்கிறது. மானமாவது - ' இந்தக் குடியிலே பிறந்தவர்க ளெல்லாருஞ் சுகமாக இருக்க நான் ஒருவன்மட்டும் பிரயாசைப்படுவேனோ' என்று நினைக்கிறதாம். இப்படி நினைத்தாற் குடி உயராது (எ - ம்). (அ)

1029. இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு.

(இ - ள்.) தன் குடியிலுண்டான குற்றத்தைப் போக்கடிக்கப் பாடுபடுகிறவனுடைய உடம்பு துக்கத்துக்கு இருப்பிடமாம் (எ - று).

'என் குடியிலுள்ளவர்களெல்லாம் இன்பமுற்று உயரவே, யான் இம்மையிலே கீர்த்தியும் மறுமையிலே தேவலோகமும் பெறுகிறபடியினாலே, இந்த உடம்புவருத்தம் நல்ல' தென்று சொல்லுவர் அறிவுடையவர். (கூ)

1130. இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று
நல்லா ளிலாத குடி.

(இ - ள்.) குடியைத் தாங்கவல்ல நல்ல பிள்ளை பிறவாவிட்டால், அந்தக் குடி குற்றமாகித் தோன்றிக் கெட்டுப்போம் (எ-று). (கo)

---

## 104. உழவு

அஃதாவது - வாணிகர்க்கும் வேளாளர்க்கும் உரித்தாய உழுதற்றொழில்.

1031. சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
லுழந்து முழவே தலை.

(இ - ள்.) உழுதுபயிரிடுகிறவன் உடம்புவருத்தத்தைப் பார்த்து அந்தத் தொழிலைச் செய்யாமல் மற்றைத் தொழிலைச் செய்து திரிந்து பொருளை அடைந்தவிடத்தும், உண்பதற்காகப் பயிரிடுகிறவனண்டைக்கு வரவேணும். ஆனபடியினாலே. உழுதுபயிரிடுகிறதே பெரிய தொழில் (எ - று).
மற்றைத் தொழில்களெல்லாம் அதன்பிறகே (எ - ம்).

1032. உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து.

(இ - ள்.) உழுகிற தொழிலைச் செய்யமாட்டாமல் மற்றைத்தொழில்களைச் செய்து திரிகிறவர்களை யெல்லாந் தாங்குகிறபடியினாலே, உழுகிறவர்கள் உலகத்து ஜனமாகிய தேரைத் தாங்குகிற அச்சாணி (எ - று). (உ)

1033. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்.

(இ - ள்.) எல்லாரும் உண்ணத்தக்கதாக உழுது பயிரிட்டுத் தாமும் உண்டு வாழ்கிறவர்களே வாழ்கிறவர்கள்; மற்றவர்களெல்லாரும் பிறரைத் தொழுது அதனாலே தாமுண்டு அவரைப் பின்செல்லுகிறவர் (எ - று).

பிறரைத் தொழுது அவர்கள் கொடுக்க வாங்கிக்கொண்டு தம் பிராணனைக் காப்பாற்றிக்கொள்ளுகிறவர்கள் தமக்குரியரல்லர் (எ - று). (௩)

1034. பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர்.

(இ - ள்.) உழுகிற தொழிலாலே நெல்லையுடையோர், பல வேந்தர்குடைநிழலதாய பூமியெல்லாம், தங்கள் ராசாவின் குடையின்கிழே காண்பர் (எ - று).

உழுது பயிரிடுகிறதினாலே தங்கள் ராசாவுக்குச் செல்வம் பெருகி உலக மெல்லாம் இவனதாகக் காண்பர் (எ - ம்).

இரக்கிறவர்களுக்கு உறவும், பூமியாளுகிறவனுக்குச் செல்வமும் உழவரே. (௪)

1035. இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

(இ - ள்.) தன் கையாலே உழுது பயிரிட்டு உண்கிறவர் பிறரைத் தாம் இரவார். தங்களைக் கேட்டு இரக்கிறவனுக்கு அவர் வேண்டினதை யொளியாமற் கொடுப்பார் (எ - று).

உழுகிறவர்கள்செல்வம் பழுதுபடாது (எ - ம்). (௫)

1036. உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை.

(இ - ள்.) உழுகிறவர்கள்கை மடங்கி அந்தத் தொழிலைச் செய்யாவிட்டால், எல்லாரும் வேண்டி உண்ணத்தக்க உணவும் துறந்தவர்களுக்கு அந்தத் துறவறத்திலே நிற்கிறது மில்லாமற் போம் (எ - று).

உழுதுபயிரிடுகிறது இல்லாவிட்டால், உலகத்திலே இம்மை மறுமை வீடென்கிற பயன்கள் நிகழா (எ - ம்). (௬)

1037. தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.

(இ-ள்.) ஒரு நிலத்தை உழுகிறவன் ஒரு பலப் புழுதிமண் கஃசாகத் தக்கதாகக் காயவிட்டால், அதிலே இடுகிற பயிருக்கு

ஒருபிடி எருவும போடாமல் தானே நன்முய்ப் பணைத்து விளையும் (எ - று). (எ)

1038. ஏரினு நன்ரு லெருவிடுதல் கட்டபி
னீரினு நன்றதன் காப்பு.

(இ - ள்.) பயிருக்கு உழுகிறதிலும் எருப்போடுகிறது நல்லது ; உழுது எருப்போட்டுப் பயிரிட்டபிறகு, களைபறித்து வேலிகட்டிக் காக்கிறது தண்ணீர் நிறைக்கிறதிலும் நல்லது (எ - று).

பயிரிடுகிறவனுக்கு உழுதல், எருப்போடுதல், களைபறித்தல் தண்ணீகட்டல், மாடு மேயாமல் காத்தல் என்று சொல்லப்பட்ட ஐந்து வகையுஞ் செய்ய வேண்டும் (எ - ம்). (அ)

1039. செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
தில்லாளி னூடி விடும்.

(இ - ள்.) அந்த நிலத்தையுடையவன் நாள்தோறும் போய்ப் பார்த்து அந்தப் பயிருக்குச் செய்யவேண்டினது செய்யாமல் மடிந்திருந்தால், அந்தப் பயிர், அவன் பெண்சாதியைப் போலே, தன்னுள்ளே வெறுத்துக்கொண்டு அவனுடனே பிணங்கிப்போம் (எ - று).

பெண்சாதியைச் சேராமல் விட்டுப் பிரிந்திருந்தால், அவள் வெறுத்துப் பிணங்கி வாடி இருக்கிறுப்போலே, பயிரும் நாள்தோறும் பாராவிட்டால் வாடி இளைத்து விளையாமற் போம் (எ - ம்). (கூ)

1040. இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும்.

(இ - ள்.) 'நாம் தரித்திரர்' என்று விசாரப்பட்டு இருக்கிறவரைக் கண்டு பூமிதேவி தன்னுள்ளே சிரிப்பாள் (எ-று).

உழுது பயிரிட்டு உண்ணமாட்டாதபடியினுலே சிரிப்பாள் (எ - ம்). (கo)

---

## 105. நல்குரவு

அஃதாவது-தான் அனுபவிக்க வேண்டினது ஒன்றும் இல்லாமை.

1041. இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது.

(இ - ள்.) ஒருவனுக்குத் தரித்திரம்போலப் பொல்லாதது எது என்றால், தரித்திரமே பொல்லாதது (எ - று). (க)

1042. இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும்.

(இ - ள்.) தரித்திரம் என்று சொல்லப்பட்ட பாவி ஒருவனுக்கு வந்தால், அவனுக்கு இம்மைஇன்பமும், மறுமைப்பயனும் இல்லையாம் (எ - று).

இம்மையின்பமாவது - வேண்டிய வஸ்துக்களை அனுபவித்தலாம். மறுமைப்பயனாவது தானதருமங்களைப் பண்ணுகிறதாம். (உ)

1043. தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை.

(இ - ள்.) ஒருவனுக்குத் தரித்திரம் என்று சொல்லப்பட்ட குற்றம், தன் வங்கிசத்தார் நடந்த நல்ல நடக்கையையும், அதற்கேற்ற நல்ல வசனங்களையும் கெடுக்கும் (எ - று). (ங)

1044. இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்.

(இ - ள்.) பொல்லாத வசனங்களைச் சொல்லாத நல்ல குடியிலே பிறந்தவர்களுக்குத் தரித்திரம் வந்தால், அது பொல்லாத வசனங்களைச் சொல்லத்தக்கதாய் நல்ல குணங்களை மறப்பிக்கும் (எ - று).

தரித்திரம் வந்தால், நல்ல குணங்களை மறந்துவிடுவர் (எ - ம்). (ச)

**1045.** நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

*(இ-ள்.) தரித்திரம் என்னப்பட்ட துன்பத்திலே பல துன்பங்களும் வந்து விளையும் (எ - று).*

*பல துன்பமாவன - தரித்திரனானவன் ஐசுவரியவான்கள் வாசலிலே நிற்கிற துன்பமும், அவர்களைக் காண்கிற துன்பமும், கண்டால் அவர்கள் இன்று நாளை என்று மறுக்கிற துன்பமும், அவர் கொடுக்கிற துன்பமும், கொடுத்தால் அது கொண்டுவந்து சாப்பிடத்தக்கது, உடுக்கத்தக்கது இவற்றைத் தேடுகிற துன்பமும் முதலாயின. (ரு)*

**1046.** நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

*(இ - ள்.) மெய்யான சாத்திரங்களை அறிந்து நல்ல பொருளைச் சொன்னாலும், தரித்திரர்சொல் பொருள் இல்லாததாய்த் தோன்றும் (எ - று).*

*பிரயோசன மல்லாததாவது - தரித்திரன்சொல்லை ஐசுவரியவான் விரும்பிக் கேட்டால் அவன்குறை தீர்க்கவேணும் என்று பயப்பட்டு யாவரும் கேளார்; ஆனபடியினாலே, பிரயோசனம் இல்லாததாய் முடிதல். (சு)*

**1047.** அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

*(இ - ள்.) தருமத்துடனே கூடாத தரித்திரத்தை யுடையவன், தன்னைப் பெற்ற தாயாலும் புறத்தியாரைப் போலப் பார்க்கப்படுவான் (எ - று).*

*தரித்திரம் தருமத்துடனே கூடாமை - காரியம் காரணம் இரண்டும் ஒன்றாய்க் கூடி நினைத்தபடியே முடியாததாம். தரித்திரனானவன் தான் வாங்கிக்கொள்ளுகிறதே அல்லாமல் கொடுக்கக்கூடாதபடியினாலே, சுற்றத்தாரும் அவனைத் துறப்பர் (எ - ம்). (எ)*

**1048.** இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு.

(இ - ள்.) நேற்றுக் கொன்றது போல வந்து பொல்லாத காரியத்தைச் செய்த தரித்திரம் இன்றைக்கும் என்னிடத்திலே வருகிறதோ? வந்தால், அதற்கு என்ன செய்வேன்? (எ - று).

பொல்லாத காரியமாவன - முன் சொல்லிய துன்பங்கள்.

1049. நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது.

(இ - ள்.) மந்திரமருந்துகளினாலே ஒருவனுக்கு நெருப்புக்குள்ளே நித்திரை பண்ணலாம்; தரித்திரம் வந்தால், ஒன்றினாலேயும் நித்திரை வாராது (எ - று).

நெருப்பினும் தரித்திரம் பொல்லாது (எ - ம்). (௯)

1050. துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்குங் காடிக்குங் கூற்று.

(இ - ள்.) அனுபவிக்க வேண்டும் பொருள்கள் இல்லாதவர் தங்களால் செய்யத்தக்கதாவது, துறந்து சந்நியாஸம் பண்ணுகிறதே. அது செய்யாவிட்டால், புறத்தியார்வீட்டிலே இருக்கிற உப்புக்கும், காடிக்கும் கூற்று வரும் (எ - று).

தரித்திரனானவனுக்கு மானம் அழியாமற் செய்ய வேண்டினது துறவேயாம். சுற்றத்தார் சேராமல் துறந்தாலும், தான் துறந்தவன் கனம்பெறுவன் (எ - ம்). (௧௦)

---

## 106. இரவு

அஃதாவது - இரந்து உண்டு பிழைக்கிறது.

1051. இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி
னவர்பழி தம்பழி யன்று.

(இ - ள்.) தரித்திரர் தமக்கிரத்தற் கேற்றவர்களைக் கண்டால் அவரிடம் இரக்க; அவர்கள் இல்லையென்று ஒளித்தாராயின், அவர்களுக்குக் குற்றமாவதல்லது தமக்குக் குற்றமில்லை (எ - று).

இரத்தற்கேற்றவர்கள் - கேட்பதற்குமுன்னே அறிந்து கொடுக்கிறவர்களும், கேட்டது மறுமற் கொடுக்கிறவர்களுமாம். (க)

1052. இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறுஅ வரின்.

(இ - ள்.) இரக்கிறதும் சுகமாம், இரக்கப்பட்ட பொருள் இரக்கிறவனைத் துக்கப்படுத்தாமல் வந்தால் (எ - று).

துக்கப்படாமல் வருகிறதாவது-கொடுக்கிறவர்கள் இன்று நாளை என்று திருப்பாடலும், மானமழிய வைது திட்டாமலுங் கொடுத்தாற் சுகமாம் என்பதாம். (உ)

1053. கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎரு டைத்து.

(இ - ள்) ஒளியாமற் கொடுக்கவல்லவர்களும், இரக்கிறவன்மனது அறிந்து கொடுக்கிறவர்களுமாய் இருக்கிறவர்கள்முன்னே நின்று இரக்கிறதும் தரித்திரற் கொரு அழகாம் (எ - று).

தரித்திரர் கேட்ட பொருள் குப்பென வந்தால் அது மிக நன்மையாம். (ங)

1054. இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றுதார் மாட்டு.

(இ - ள்.) தன் உடைமையை இரக்கிறவர்களுக்குக் கொடாமல் ஒளிக்கிறதைக் கனவிலேயும் அறியாதவர்களிடத்திலே போய் ஒருபொருளை இரக்கிறது தான் கொடுக்கிறதோடொக்கும் (எ - று).

ஒளியாமற் கொடுக்கிறதினலே தன் புகழ் கெடாது. அதனலே கொடுக்கிறதற்குச் சரியாமென்றார். (ச)

1055. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது.

(இ - ள்.) இரக்கிறவர்கள் தம் குறையைச் சொல்லமாட்டாமல் முன்னே நின்ற மாத்திரத்திலே, அது அறிந்து தமக்

குள்ளது ஒளியாமற் கொடுக்கிறவர் சிலர் உலகத்திலே உண்டானபடியினாலே, இரக்க வருகிறார்கள் (எ - று).

அப்படிக் கொடுக்கிறவர்கள் இல்லாவிட்டால், மானத்தை விடாமல் பிராணனை விடுவர் (எ - று). (ரு)

1056. கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும்.

(இ - ள்.) தமக்கு உள்ள பொருளை யொளிக்கிறதாகிய வியாதி யில்லாதவரைக் கண்டால் மானம் விடாமல் இருக்கிறவர்க்கு, இரப்பினாலே வரப்பட்ட துக்கங்களெல்லாம் சேரக் கெட்டுப்போம் (எ - று).

ஒளிக்கிறதாவது - கேட்டவர்க்கு உதவாதது. (சா)

1057. இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து.

(இ - ள்.) தன்னை அவமதியாமலும் பொல்லாத வார்த்தைகளைச் சொல்லாமலும் கொடுப்பாரைக் கண்டால், இரக்கிறவன்மனது தன்னுள்ளே வெகு சந்தோஷத்தை அடையும் (எ - று).

அவமானம் பேசாதவர்கள் நல்லவசனம் சொல்லுவர் ; அதனாலே சந்தோஷமாம் (எ - ம்). (எ)

1058. இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால
மரப்பாவை சென்றுவந் தற்று.

(இ - ள்.) தரித்திரத்தினாலே இரக்கிறவர்கள் இல்லாவிட்டால் குளிர்ந்த இடத்தையுடைய உலகத்துள்ளே சனங்கள் பிறந்து சஞ்சரிக்கிறது, உயிர் இல்லாத மரப்பாவை சூத்திரக் கயிற்றினாலே கூத்தாடுவதனோடு ஒக்கும் (எ - று).

இரக்கிறவர்களுக்குக் கொடுத்துப் புகழும் புண்ணியமுஞ் செய்துகொள்ளாதவர்கள் செத்தாரோடு ஒப்பர் (எ - ம்).

"ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ்வாரே வன்கணவர்" என்று சாத்திரங்களும் சொல்லும். (அ)

1059. ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோண்
மேவா ரிலாஅக் கடை.

(இ - ள்.) ஐஸுவரியவான்களிடத்திலே தரித்திரர்கள் வந்து இரவாவிட்டால், கொடுக்கிறவர்களுக்கு என்ன புகழுண்டாம்; ஒரு கீர்த்தியுமில்லை (எ - று).

கொடுக்கிறதில்லாவிட்டால் கீர்த்தியு மில்லையாம். (கூ)

**1060.** இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி.

(இ - ள்.) கொடுக்கிறவர்களுக்குப் பொருளுதவாதபோது 'இவன் நமக்குக் கொடுக்கவில்லை' என்று அவனைக் கோபித்துக் கொள்ளாமல் இருக்கவேணும். அப்படிக் கோபித்துக்கொள்ளாமல் இருந்தால், அவன் தரித்திரம் நாளிலே விட்டுப் போம் (எ - று).

'நாம் பொருள்தேடுகிறத்துக்கு இத்தனை பிரயாசப்படுகிறோமே; அப்படியல்லவா அவனும் வருத்தப்படுகிறான்' என்று எண்ணி, கோபியாமல் இருக்கவேணும். அப்படி நற்குணமாய் எண்ணினால், அதனாலே அவன் வறுமை தீரும் (எ - ம்). (கO)

---

## 107. இரவச்சம்

அஃதாவது - மானங் கெடுகிறதாகிய இரப்புக்குப் பயப்படுகிறதாம்.

**1061.** கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு
மிரவாமை கோடி யுறும்.

(இ - ள்.) தமக்குள்ள பொருளை ஒளியாமல், இரவலர் வந்தது தான் செய்த புண்ணிய மென்று சந்தோஷப்பட்டுக் கொடுக்கிற கண்போலச் சிறந்தவர்களிடத்திலேயும் இரவாமலிருக்கிறது, இரந்துகொண்டு செல்வம் அடைகிறதிலுங் கோடி நன்மை (எ - று). (க)

**1062.** இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக உலகியற்றி யான்.

(இ - ள்.) இந்த உலகத்தைப் படைத்தவன் இதிலே பிறக்கிற ஜீவன்களுக்குச் செல்வத்துடனே வாழ விதியாமல்

இரந்து பிழைக்க வென்று படைத்தானுனல், அவனும் இரக்கிறவர்களைப் போலே எங்கும் இறந்து கெட்டுப்போகவேணும் (எ - று).

சீவன்களுக்கெல்லாம் ஆயுஸும், வேண்டிய உண்டியும், அதற்கேற்ற தொழிலும் பழவினைவசத்தினுலே கருவொடு கலந்த அன்றே அவன் கற்பிக்குமன்றே? அவற்றுட் சில பேர்க்கு இரக்கிற தொழிலைக் கற்பித்தானுயின், அவனும் கெடுவன் (எ - ம்)

செய்தது அனுபவிக்கவேணும் என்கிற நியாயத்தாலே இரப்பைப் படைத்தவனும் கெடவேணும். முற்பகை செய்யிற் பிற்பகை விளையும் அன்றோ. (உ)

1063. இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில்.

(இ - ள்.) 'தரித்திரத்தினுலே வந்த துக்கத்தை, முயற்சியாலே நீக்கக்கடவோ' மென்று நினையாமல், 'இரந்துண்டு நீக்கக்கடவோ' மென்று நினைக்கிற வன்மையைப்போல வேறு வலிமைப்பாடுடையது இல்லை (எ - று).

வறுமை தீருவதற்கு நியாயமான முயற்சியும் உற்சாகமும் இருக்க, நியாயம் அல்லாத இரப்பால் தீர்க்க நினைக்கிறதனுல் வன்மை ஆயிற்று. (ந)

1064. இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே இடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு.

(இ - ள்.) உண்ண உடுக்க இல்லாமல் தரித்திரம் வந்தபோதும், பிறரிடத்திலே போய் இரப்பதற்குச் சம்மதியாத நன்மை, எல்லா உலகமுங் கொள்ளாத பெருமையை உடையது (எ - று).

தரித்திரம் வந்தவிடத்தும் இரவாமல் முயற்சியாலே பிழைக்கிறது உத்தமமாம் (எ - ம்). (ச)

1065. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில்.

(இ - ள்.) நியாயமான முயற்சியால் தான் கொண்டுவந்தது தெளிந்த தண்ணீர்போல இருக்கிற புல்லரிசிக்கூழானாலும், அதைச் சாப்பிடுவதற்குமேலே நல்லதில்லை (எ - று).

தான் தேடிவந்த பொருள் எத்தனை கொஞ்சமானாலும், குற்றமான இரப்பாலே வந்ததல்லாமல், தனது உடைமை ஆதலின், அமுதத்தோ டொக்கும். (௫)

1066. ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
இரவி னிளிவந்த தில்.

(இ - ள்.) தண்ணீர் கிடையாமல் வருத்தப்படுகிற பசு-வைக் கண்டு தருமபுத்தியாய் நினைத்து, ' இந்தப் பசுவுக்குத் தண்ணீர் கொடுங்கோ ' வென்று கேட்டாலும், அந்த இரப் பைப்போல நாவுக்குக் குற்றமானது வேறொன்றில்லை (எ - று).

தருமத்துக்கானாலும் இரந்து செய்யலாகாது (எ - ம்).

1067. இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று.

(இ - ள்.) இரக்கிறவர்களை யெல்லாம் யான் இரவா நின்றேன், ' நீங்கள் இரந்தாலும், தமக்கு உள்ளது ஒளிக்கிற வர்களை இரக்க வேண்டாம் ' என்று கூறி (எ - று).

ஒளிக்கிறவர்களை இரந்தால், மானங் கெடப் பேசு வார்கள். ஆன படியினாலே, ஒளிக்கிறவர்களை இரக்கலாகாது (எ - று). (௭)

1068. இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

(இ - ள்.) ' தரித்திர மென்கிற சமுத்திரத்தை இரப்பு என்னும் படகினாலே தாண்டுவோ' மென்று, இரப்பென்னும் படகிலே ஏறிக்கொண்டு தரித்திரமென்னுங் கடலிலே ஓடுகிற-போது, தன்பொருளை யொளிக்கிறவன் என்கிற கெட்டித் தரையோடு தாக்குமாயின், அப் படகு பிளந்துபோம் (எ-று).

இரக்கிறவன், இல்லை என ஒளிக்கிறவனைக் கண்டவுடனே, கெடுவன் (எ - ம்). (௮)

1069. இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ளதூஉ மின்றிக் கெடும்.

(இ - ள்.) ஐசுவரியவான்கள் முன்னே தரித்திரர்கள் போய் நின்று இரந்து நிற்கிற கொடுமையை நினைந்தால், எம் மனசு உருகும்; ஐசுவரியவான்கள் பொருள் இருக்கையிலே இல்லை என்கிற கொடுமையை நினைத்தால், அவ் வுருகுமளவு தானுமின்றிப் பிராணன் போம் (எ - று).

'இரப்பை நினைத்தால் நம் உள்ளம் உருகுகின்றதே! இரந்து பெறும் யாசகர்மனம் எவ்வாறு இருக்குமோ!' என்றார் பிறரும். (௯)

1070. கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர்.

(இ - ள்.) ஒளிக்கிறவர்கள் இல்லை என்று சொன்னவுடனே, இரக்கிறவன்பிராணன் போம்; இரக்கிறவன் தா வென்று கேட்டபொழுது ஒளிக்கிறவன்பிராணனும் போகாநிற்கும். பிராணன் போனால், பின்னை இல்லை என்று எப்படிச் சொல்லுவா னென்றால், ஏழு புரையிலே ஒரு புரைக் குள்ளே ஒளித்திருக்கும் (எ - று).

ஒளித்திருக்கிறதாவது - இரக்கிறவன் கேட்டதற்கு 'என்ன சொல்லுவோ'மென்று ஏங்கிஇருத்தலாம். இரக்கிற வனுக்குப்பிராணன் போகிறதாவது 'இவன் இல்லை என்றானே! இனி நாம் என்ன செய்வோம்?' என்று ஏங்கியிருத்தலாம். ஆதலால், இரப்பிலும் இல்லைஎன்கிறது பொல்லாததாம் (எ - ம்).

---

## 108. கயமை

அஃதாவது - நற்குணங்களொன்றும் இல்லாத துர்ஜனர்தன்மைகளைச் சொல்லுகிறதாம்.

1071. மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில்.

(இ - ள்.) துர்ஜனர் வடிவாலே மனுஷரோடு ஒப்பர்; வடிவொத்தாலும் குணம் ஒவ்வாது. இப்படி ஒப்பாரை மிருக சாதியிலேயும் விருட்சசாதியிலேயும் கண்டதில்லை (எ - று).

துர்ஜனரைக் குணங்களால் அறிகிறதல்லாமல், வடிவால் அறியப்படாது (எ - ம்). (க)

**1072.** நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

(இ - ள்.) தமக்கு உறுதியான காரியங்களை அறிகிறவர்களைப்பார்க்கிலும் அவை அறியாத துர்ஜனர் நல்லவர்கள். அது ஏனென்றால், இம்மை மறுமை மோட்சங்களுக்கு உரிய புகழ் தருமம் ஞானம் இவற்றை அறிந்து செய்கிறவர்கள், வெகு தானதருமங்களைப் பண்ணப் பெற்றோமில்லை என்றும், செய்கிற இவற்றிற்கு என்ன விகாதம் வருமோ வென்றும், இவற்றிலே தப்பிதம் வந்தால் பகை பழி பாவங்களுள் எது வருமோ வென்றும் மனத்திலே விசாரப்படுவர். துர்ஜனர், புகழ் தருமம் ஞானங்களைச் செய்யாமல், பகைபழிபாவங்களைச் செய்யாநின்றும், ஒரு விசாரமும் இல்லாமல் இருப்பர் (எ - று).

துர்ஜனர் பகை பழி பாவங்களுக்கு அஞ்சார் (எ-ம்). (உ)

**1073.** தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்.

(இ – ள்.) தேவர்களும் கயவர்களும் ஒருதன்மையர்; அது எப்படியென்றால், தேவர்கள் எப்படிச் செய்தாலும் தண்டிப்பாரில்லை; துர்ஜனரும் தங்களைத் தண்டிப்பாரில்லை யென்று தாங்கள் நினைத்தபடியே செய்வர் (எ -று).

துர்ஜனர், செய்வது தவிர்வது அறியாமல், வேண்டியபடியே செய்து, கெடுவர் (எ - ம்). (ந)

**1074.** அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.

(இ - ள்.) கீழானவன், தன்னிலும் கொஞ்சமானவன் துன்மார்க்கனாய் நடந்தால், அவனைக் கண்டு அவன்முன்னே தன்

நடக்கைகளைக் காட்டி, தான் அவனிலும் பெரியவன் என்று இறுமாந்துகொண்டிருப்பன் (எ - று). (௪)

1075. அச்சமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது.

(இ - ள்.) துர்ஜனருடைய ஆசாரங் கண்டால் பயம்வரும்; அது ஏனென்றால், அவர்கள் மனதிலே கபடம் எண்ணிக் கொண்டு, ஆசாரம் பண்ணுவார்கள். அது தெளிய வறிந்து, கபடமில்லாவிட்டால், சில நாள் ஆசாரமாய் நடந்து பிறகு கெட்டுப்போவார்கள் (எ – று).

துர்ஜனருடைய ஆசாரத்தை மெய் யென்று நம்பவேண் டாம் (எ - ம்). (௫)

1076. அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

(இ-ள்.) கயவர் தாங்கள் கேட்ட காரியத்தை எங்கெங்கும் எல்லாருக்கும் சொல்லுவர் ; அதனாலே, அடிக்கப்பட்ட இடு-கோடு ஒப்பர் (எ - று).

மறை-இரகஸ்யங்கள்; பிறரறிந்தால் குற்றம் வரும் என்று மறைத்துச் சொல்லிய சொல். (௬)

1077. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

(இ - ள்.) துர்ஜனர், தங்கள் தாடையில் அடிக்க வல்ல கைகளை உடையவர்க்கல்லாமல் மற்றவர்களுக்கு சாப் பிட்டுக் கழுவின கையைத் தெறிக்கச்சொன்னாலும் தெறி-யார் (எ - று.)

துர்ஜனர் தங்களை அடித்து உதைக்கிறவர்களுக்கு எல் லாப் பொருளும் கொடுப்பர் ; நல்லதனமாகச் சொல்லி இரப் பாய்க் கேட்டாலும் ஒரு துரும்பும் கொடார் (எ - ம்). (௭)

1078. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

(இ - ள்.) தரித்திரன் வந்து தன் குறையைச் சொன்ன-வுடனே தங்களாலானமாத்திரம் உபகாரம்பண்ணுவார்-கள் பெரியோர்கள்; துர்ஜனர், கரும்பைப்போல, அடித்து நெருக்கினவர்களுக்குத் தங்கள் பொருளெல்லாம் கொடுப்பர் (எ - று). (அ)

**1079.** **உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்**
**வடுக்காண வற்றாகுங் கீழ்.**

(இ - ள்) பிறர் செல்வத்தினாலே பட்டும் பவவந்தியும் உடுத்துக்கொள்ளுகிறதையும், பலருடனேகூடச் சாப்பிடுகிறதையும், துர்ஜனர் கண்டால், அவற்றைப் பொறாமல், அவர்-கள்பேரிலே குற்றமொன்றும் இல்லாவிட்டாலும், குற்றமுண்டாக்கவல்லவர்களாவர் (எ - று).

துர்ஜனர் பிறர்செல்வங்களைக் கண்டால் பொறாமையுற்று அவர்களுக்குக் கேடு தேடுவர் (எ - ம்). (கூ)

**1080.** **எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்**
**விற்றற் குரியர் விரைந்து.**

(இ - ள்.) துர்ஜனர், தமக்கு ஏதாகிலும் ஒருதுக்கம் வந்தால், அதனையே மனத்தில் எண்ணிக்கொண்டு தங்களைப் பிறருக்கு விற்றற்கு உரியர்; அதுவல்லாமல், பின்னை ஒன்றுக்கும் உரியரல்லர் (எ - று).

ஒரு துக்கமாவது - உணவில்லாமை போல்வது. கயவர் எந்த இழிதொழிலானாலும் செய்வர்; அவர்கள் துர்க்குணமறிந்து யாவருங் கொள்ளார்; கொள்ளாவிட்டாலும் வலியக்கொண்டு, 'கொள்ளுங்கோ'வென்று சொல்லுவர். கயவர் ஒருதொழிலுக்கும் உதவார் என்பது கருத்து. (கo)

**ஒழிபியல் முற்றும்**

பொருட்பால் முற்றும்



அறத்துப்பால் இயல் அதிகாரத்தொகைக்கு வெண்பா :

*பாயிரம் நான்கில் லறமிருபான் பன்மூன்றே*
*தூய துறவறமொன் றூழாக - ஆய*
*அறத்துப்பால் நால்வகையா ஆய்ந்துரைத்தார் நூலின்*
*திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து.*

பொருட்பால் இயல் அதிகாரத்தொகைக்கு வெண்பா :

*அரசியல் ஐயைந் தமைச்சியல் ஈரைந்*
*துருவல் லரணிரண்டொன் றொண்கூழ் - இருவியல்*
*திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்*
*றெண்பொருள் ஏழாம் இவை.*

# காமத்துப்பால்

இனி, அந்தப் பொருளைத் துணைக்காரணமாக உடைய இன்பங் கூறுகின்றார். இன்பமாவது-ஐம்புலன்களு மொருகாலத் தொருபொருளால் நுகர்கின்ற இன்பமாம். வடநூலுக்குள்ளே போசராசன் 'சுவை பல வென்று சொல்லுவார் சொல்லுக; நாம் கூறுகிறது இன்பச்சுவை ஒன்றையுமே' என்று இதனையே மிகுத்துக் கூறினான். இது புணர்ச்சி பிரிவென இருவகைப்படும்.

## களவியல்

புணர்ச்சியைக் களவென்றும, பிரிவைக் கற்பென்றும் வகுத்து உலகநடையோடு ஒப்பும் ஒவ்வாமையு முடையவாக்கிக் கூறுகின்றார். களவாவது - பிணி மூப்பிறப்பில்லாமல் எந்நாளும் ஒருசரியாய், உருவுந் திருவும் பருவமும் குலமும் குணமும் அன்பும் முதலியவற்றால் சரியொத்திருக்கிற தலைமகனும் தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவுமன்றித் தாங்களே ஒருவர்க்கொருவர் எதிர்ப்பட்டுப் புணர்ந்துவருவது. இதனை ஏழு அதிகாரத்தாற் கூறுவான் றொடங்கி, முதலிலே தகையணங்குறுத்தல் கூறுகின்றார்.

## 109. தகையணங்குறுத்தல்

### குறிஞ்சி

அஃதாவது-நாயகன், சிங்காரவனத்திலே விளையாடப் போன விடத்திலே தனியே நின்றாள் ஒரு நாயகியைக் கண்டு, விருப்பமாய்த் தானே வந்து பார்த்து, அவளுடைய சவுந்தரியம் தன்னை வருத்துகிறதைச் சொல்லுகிறது. இது கண்டவுடனே உண்டானதாதலால் முதலில்கூறுகின்றார்.

**1081.** **அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை**
**மாதர்கொல் மாலுமென் னெஞ்சு.**

தலைமகளுருவுமுதலியன முன் கண்டறியாதனவாய் மிகச் சிறப்பாய் இருந்தது கண்டு தலைமகன் சந்தேகப்படுகிறது.

(இ - ள்.) இந்த நீண்ட காதணியையுடையவள் இந்தத் தோப்பிலே இருக்கிற தேவதா ஸ்திரீயோ! அல்லாமல் ஒரு மயிலோ! அல்லாமல் ஒரு மனுஷ ஸ்திரீயோ! இவளை இன்னு ளென்று நிச்சயிக்கமாட்டாமல் என் நெஞ்சு மயங்குகின்றது (எ - று).

சித்திரத்திலே எழுதலாகா வடிவானபடியினுலே தேவஸ்திரீயோ என்றும், சாயலும் சோலையிலே நிற்றலும் பற்றி மயிலோ என்றும், தன் மனது அவள்மேலே ஆசைப்பட்டபடியினுலேயும் அவள் தன்னைப் பார்த்தபடியினுலேயும் மனுஷியோ வென்றும் சந்தேகப்பட்டதாம். (க)

**1082. நோக்கினு ளுேக்கெதிர் நோக்குத ருக்கணங்கு**
**தானைக்கொண் டன்ன துடைத்து.**

மனுஷஸ்திரீ என்று நிச்சயமபண்ணின தலைமகன அவள்பாாவையினுலே தனக்கு வந்த வருத்தஞ் சொலலுகிறது.

(இ - ள்.) இப்படிப்பட்ட அழகுடையவள் எனக்கெதிரே நின்று பார்த்தல், தானே தாக்கி வருத்தும் அணங்கு தன்னுடனே எதிர்த்து வருத்தம்பண்ணிச் சண்டைபண்ணுதற்குச் சேனையையும் கூட்டிக்கொண்டு வந்தாற்போலே இருக்கிறது (எ - று). (உ)

**1083. பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்**
**பெண்டகையாற் பேரமர்க் கட்டு.**

இதுவும் அது.

(இ - ள்.) கூற்றுவனென்று சாத்திரத்திலே சொல்லுகிறதைப் பண்டு கேட்டறிந்ததல்லாமற் கண்டறியேன்; இப்பொழுது கண்டறிந்தேன்; அது எப்படியென்ருல், பெண்மையுடனே பெரிய அமர்த்த கண்களையுடையது (எ - று).

பெண்மையாவது - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னும் நான்கு குணங்களோடு கூடியது. பெண்மையால் இன்பம்

பயத்தலும் உண்டாயினும், துக்கம்பண்ணுகிறது வெகுவான-படியினாலே 'கூற்று' என்று கூறினான். (௩)

**1084.** **கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்**
**பேதைக் கமர்த்தன கண்.**

இதுவும் அது.

(இ - ள்.) பெண்மை என்கிற பெருமையுடைய இந்த ஸ்திரீக்குக் கண்கள் தம்மைக் கண்டவர்கள்பிராணனை உண்-ணத்தக்கதாக அமர்த்திருந்தன (எ - று).

ஸ்திரீயினுடைய கண்கள் குணத்துக்கும் மென்மைக்கும் ஒவ்வாமற் பொல்லாதனவா யிருந்தன (எ - ம்). (௪)

**1085.** **கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர**
**னோக்கமிம் மூன்று முடைத்து.**

இதுவும் அது.

(இ - ள்.) என்னை வருத்துகிறபடியினாலே கூற்றுவனோ? என்னைப் பார்த்தபடியினாலே கண்ணோ? சுபாவமாகப் பயப்-படுகிறபடியினாலே மானோ? இன்னதென்று அறியேன் இந்தப் பெண்சாதியின் கண்களின் பார்வை இந்த மூன்று வகையையு முடையதாய் இருக்கும் (எ - று).

இவள்நோக்கம் இன்பமும் துன்பமும் ஒருங்கே செய்யா நின்றது (எ - ம்). (௫)

**1086.** **கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்**
**செய்யல மன்னிவள் கண்.**

இதுவும் அது.

(இ - ள்.) பிரியாத சிநேகத்தையுடைய புருவங்கள் அந்தக் கண்களை மறைத்தால், அவை அந்தப் புருவத்தைக் கடந்துவந்து எனக்கு நடுக்கத்தையுடைய துக்கத்தைப் பண்ண மாட்டா (எ - று).

அந்தப் புருவம் மறையாவிட்டால், பார்வையினாலே துக் கம் வரும் (எ - ம்). (௬)

**1087.** **கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்**
**படாஅ முலைமேற் றுகில்.**

அந்த ஸ்திரீயினுடைய முலைகளினுலே வரப்பட்ட வருத்தத்தைச் சொல்லுகிறது.

(இ - ள்.) அந்த ஸ்திரீயினுடைய முலைகளின்மேலே புடைவை போட்டு அவை கண்டபேரைக் கொல்லாமல் மூடியிருக்கிறது, மதயானை கண்டபேரைக் கொல்லப்போகுதென்று முகத்தை மறைத்துவைப்பதனோடொக்கும் (எ - று).

முலைகள் கொல்லுகிறதாவது-கண்டவர்கள் வருத்தமுறுகிறதாம். (எ)

**1088.** ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென் பீடு.

முகத்தினுலே வருகிற வருத்தங் கூறுகிறது.

(இ - ள்.) போர்க்களத்திலே வந்தெதிர்த்தவர்களெல்லாமென்னுடைய பலத்துக்குப் பயப்பட்டோடிப் போவார்கள்; அப்படிக்கொத்த கெட்டிவலிமை இவளுடைய முகத்துக்கு மாத்திரமே பயப்பட்டழிந்துவிட்டது (எ - று).

பயப்படுகிறது - மதியழிகிறதாம். (அ)

**1089.** பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து.

ஆபரணங்லத்தினுலான வருத்தங் கூறியது.

(இ - ள்.) புறத்திலே மான்பிணையோடொத்த பார்வையையும் உள்ளே நாணத்தையு முடைய இவளுக்கு, இவையேயாபரணமா யிருக்க, வேறே யாபரணங்களை யணிகிறதினுலே என்ன பலனுண்டு? (எ - று).

மான்பார்வை - பயப்பட்டுப் பார்க்கிறதாம். (கூ)

**1090.** உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று.

தலைமகளின் குறிப்பறிந்தவன் சொல்லுகிறது.

(இ - ள்.) காய்ச்சப்பட்ட கள், தன்னைக் குடித்தவனைக் களிப்பிக்கிற தல்லாமல், காமத்தைப் போலே, கண்டவர்களை மகிழப்பண்ணமாட்டாது (எ - று).

காமம் கண்டவர்களை யெல்லாம் மகிழப்பண்ணும் (எ-ம்).

## 110. குறிப்பறிதல்

*அஃதாவது - தலைமகன் தலைமகள்குறிப்பினை யறிதலும், தோழிகுறிப்பினை யறிதலும், அத் தோழி அவ்விருவர்குறிப்பினையும் அறிதலுமாம்.*

**1091.** இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

*தலைமகன் தலைமகள்மனக்குறிப்பினை அவள்பார்வையால் அறிந்தது.*

(இ-ள்.) இவளுடைய கண்களின் பார்வைகள் இப்பொழுது என்மே லிரண்டு வகையாயிற்று. அதெப்படியென்றால், ஒரு பார்வை யென்னை வாதை செய்விக்கிறது. ஒரு பார்வை யதற்கு மருந்தா யந்த வாதையைத் தணிப்பிக்கிறதாயிற்று (எ - று).

வாதை செய்விக்கிறதாவது - அவள்மனதிலே இருக்கிற காமவிகாரத்தை வெளியாக்குகிறது. வாதையைத் தணிப்பிக்கிறதாவது - தன்பேரிலே தயை வைக்கிறது. (க)

**1092.** கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது.

*இதுவும் அது.*

(இ - ள்.) இவள்கண்கள் நான் காணாதபடிக்கு என்னைப் பார்க்கிற பார்வை, புணர்ச்சியிலே பாதியல்லாமல், அதிகமாக வேண்டுமென்று பார்க்கிறது (எ - று).

தான் பார்க்கிறபோது பாராமல் நாணி இருந்தும், பாராத போது உற்றுநோக்கியும் வருதலால், 'களவு கொள்ளும்' என்றான். (உ)

**1093.** நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்.

*பார்வையினாலும் நாணினாலும் அறிந்தது.*

(இ - ள்.) நான் பாராதபோது தான் என்னை அன்போடு நோக்குவள்; நோக்கி மனதிலே ஒன்றை நினைத்துக்-கொண்டு நாணி நிற்பள். அக் குறிப்பு அன்பு என்கிற பயிருக்கு வார்த்த தண்ணீராயிற்று (எ - று).

அவள்பார்வையினாலே ஆசை அதிகமாம் (எ - ம்). (ங)

1094. யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும்.

நாணினாலும் மகிழ்ச்சியினாலும் அறிந்தது.

(இ - ள்.) நான் தன்னைப் பார்க்கிறபோது தான் என் எதிரே பாராமல் வணங்கி நிலத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும்; அதை யறிந்து நான் பாராவிட்டால், தான் என்னைப் பார்த்துத் தன்னுள்ளே மகிழ்ந்து சற்றே நகைப்பள் (எ - று).

மகிழ்கிறது புணர்தற் குறிப்பாம் என்பது. (ச)

1095. குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

இதுவும் அது

(இ - ள்.) என்னைச் செவ்வையாய்ப் பாராமல் ஒரு கண்ணைச் சிமிட்டினாற் போலே பார்த்துத் தன்னுள்ளே மகிழ்வள் (எ - று).

இனி இவளைப் பெறுதல் நிச்சயம் என்பது குறிப்பெச்சம்.

1096. உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ
லொல்லை யுணரப் படும்.

தோழி சொல்லுகிற வசனத்தை யறிந்த தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்.) புறத்தில் புறத்தியார்போல் கடின வசனங்களைச் சொன்னாலும், உள்ளே பகையில்லாதவர்வசனம் பிற்படுத்தல் குறையுற்றவர்களாலே கொப்பென அறியப்படும் (எ - று).

கடுஞ்சொல்லாவது - இவ்விடம் காவல்மிகுதியுடையது; புணர்ச்சிக்கு இடமன்று; வேண்டாம் என்பது. (ரு)

1097. செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு
முறாஅர்போன் றுற்றார் குறிப்பு.

இதுவும் அது.

(இ - ள்.) பிறகு சிநேகம் பண்ணவேணுமென்று மனத்திலே நினைத்து முந்தி கடின வார்த்தைகளைச் சொன்னதும்,

கோபமான பார்வையும் புறத்தியார்போல இருந்து நட்பாயினார்க்கு ஒரு குறிப்புப்பற்றி வருவன (எ - று).

முன்னே கடின வசனம் சொன்னுரென்று பயப்பட வேண்டாம் (எ - ம்). (எ)

**1098.** அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னேக்கப்
பசையினள் பைய நகும்.

*தன்னைப் பார்த்து மகிழ்ந்த தலைமகளைக் கண்டு தலைமகன் கூறியது.*

(இ-ள்.) என்மேல் கோபம்போல் சொன்ன வார்த்தையைப் பொறுக்கமாட்டாமல் நான் பிரியம் வரத்தக்கதாகப் பார்த்த பார்வையை அவளறிந்து மனது சந்தோஷப்பட்டுத் தன்னுள்ளே நகையாநின்றாள். நுடங்கிய இயல்பையுடையவளுக்கு அந்த நகையினாலே தோன்றுகின்றதொரு நன்மைக் குறிப்புண்டு (எ - று).

அந்த நன்மைக் குறிப்பாவது-தன்மேலே தயையுடையவள் (எ - ம்). (அ)

**1099.** ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

*தோழி மதியுடன்படுகின்றவள் தன்னுள்ளே சொல்லியது.*

(இ - ள்.) முன் அறியாதார்போல் ஒருவரையொருவர் பொதுநோக்கத்தால் நோக்குதல் இக் காதலை உடையார் கண்ணே யுண்டாம் (எ - று).

பொதுநோக்காவது - எல்லாரையும் ஒருசரியாய்ப் பார்க்கிறதாம். புறத்திலே யொருசரியாய்ப் பார்த்தாலும் உள்ளே காதலரிடத்திலே அன்பு உண்டு (எ - ம்). (௯)

**1100.** கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனு மில.

*இதுவும் அது.*

(இ - ள்.) தாம் இருவருள் ஒருவர்கண்களோ டொருவர்கண்கள் ஒக்கப் பார்த்தால், வாயினாலே சொல்லுகிற சொற்களென்ன பயனுண்டாம் (எ - று).

பார்வையினாலே இரண்டுபேரும் ஒருமித்தால் அதுவே யமையும். மனத்திலே தயையில்லாவிட்டால், வாயினாலே சொல்லுகிற சொற்கள் ஒரு பயனுமில்லாமற்போம் (எ-ம்). (கo)

---

## 111. புணர்ச்சிமகிழ்தல்

அஃதாவது - அப்படிக் குறிப்பா லறிந்து புணர்ந்த தலைமகன் அப் புணர்ச்சியை மகிழ்ந்து கூறுகிறதாம்.

**1101.** கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள.

இயற்கைப்புணர்ச்சியின் கடையிலே சொல்லியது.

*(இ-ள்.)* கண்ணினாலே கண்டும், செவியினாலே கேட்டும், நாவினாலே உண்டும், மூக்கினாலே மோந்தும், உடம்பாலே தீண்டியும் அனுபவிக்கப்பட்ட ஐம்புலனும் நல்ல வளையலையுடைய இந்த ஸ்திரீயினிடத்திலே உண்டாயின (எ-று).

வேறுவேறு காலங்களிலே வேறுவேறு பொருள்களால் அனுபவிக்கப்படுவன, ஒருகாலத்திலே இவளிடத்திலேயே அனுபவிக்கப்பட்டன (எ - ம்). (க)

**1102.** பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

இடந்தலைப்பாட்டின்கட் சொல்லியது.

*(இ - ள்.)* வாதம் பித்தம் சிலேத்துமம் இவ் வியாதிகளுக்கு மருந்தாவது அவைகளுக்கு மாறானவை; அப்படியல்லாமல், இந்த ஸ்திரீயாலே வந்த வியாதிக்கு இவள்தானே மருந்தானாள் (எ - று).

அவளைக் கண்டு வருந்திய வியாதி அவளைச் சேர்ந்து தீர்ந்தான் (எ -ம்). (உ)

**1103.** தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு.

'பிரதிசயவின்பத்திற் குரிய நீ இந்தச் சிற்றின்பத்திற்கு இச்சிக்கிறது தகா' தென்ற பாங்கற்குச் சொல்லியது.

(இ-ள்.) ஐம்புலன்களும் அனுபவிப்பவர்க்குத் தாம் விரும்பிய ஸ்திரீகளின் மெல்லிய தோளிலே தூங்குகிற நித்திரையைப் போல வருத்தப்படாமற் பெறலாமோ, சிற்றின்பத்தைத் துறந்த யோகிகளால் எய்தப்பட்ட சுவர்க்கலோகம்? (எ-று).

இந்த ஸ்திரீயினுடைய சுகம் எளிதாயெய்தலாம்; சுவர்க்கத்தை அடைகிறவர்கள் வெயிலும் குளிரும் பனியும் பசியும் நெடுங்காலம் பொறுத்து வருந்தியே அச் சுகத்தை அடைவார்கள் (எ-ம்). (௩)

**1104.** நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள்.

பாங்கற்கூட்டத்திறுதிக்கட் சொல்லியது.

(இ-ள்.) தன்னைவிட்டு நீங்கினால் சுடும்; சேர்ந்தால் குளிரும். இப்படிப்பட்ட நெருப்பை எனக்குக் கொடுக்கிறதற்கு இவள் எந்த உலகத்திலே தேடிக்கொண்டாள்? (எ-று).

அவளைக் கூடாதபொழுது துக்கப்படுகிறதினாலே அனலென்றும், சேர்ந்து மகிழ்வுற்றதினாலே குளிர்ச்சியென்றும் கூறினார். (௪)

**1105.** வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள்.

தோழியிற்கூட்டத் திறுதிக்கட் சொல்லியது.

(இ-ள்.) மெத்தவும் பிரியமான பொருள்களைப் பெறாமல் அவற்றின்மேல் விருப்ப முண்டானபொழுது அவை தாமே வந்து சுகத்தைப் பண்ணுமாறுபோல, இன்பத்தைப் பண்ணும்: எப்பொழுதும் பெற்றுப் புணர்ந்தாலும் பூவினை யணிந்த கூந்தலையுடைய ஸ்திரீயின் தோள்களே (எ-று).

ஸ்திரீகளைப் புணரப் பின்னையும் ஆசை அதிகமாம் (எ-ம்).

**1106.** உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள்.

இதுவும் அது.

(இ - ள்.) தன்னைப் புணராமல் வாடிய என் உயிர் அவளைப் புணர்ந்தபோதெல்லாந் துள்ளுகிறபடியினாலே, இந்த ஸ்திரீக்குத் தோள்கள் தீண்டத்தக்கதொரு அமுதத்தினாலே செய்யப்பட்டன (எ - று).

துள்ளுகிறதாவது - இன்பத்தினாலே மகிழ்கிறதாம். (சு)

**1107.** தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்று
லம்மா வரிவை முயக்கு.

'இவளை நீ மணந்துகொண்டு உலகோர் தமது பாத்துண்ணும இல்லறத்தோடு பொருந்தவேணடு'மென்ற தோழிக்குச் சொலலியது.

(இ - ள்.) அழகிய மாமைநிறத்தினையுடைய இந்த ஸ்திரீயினுடைய புணர்ச்சியின்பம், தன்னுடைய ஊரிலே யிருந்து தான்செய்கிற தொழிலினாலே வந்த பொருளைப் பிதிரர், தெய்வம், விருந்து, சுற்றத்தார் இவர்களுக்குக் கொடுத்துத் தன் பங்கைத் தான் சாப்பிட்டதோ டொக்கும் (எ - று).

'இல்லறஞ்செய்கிறவர்கள் பெறுகிற பலனை எனக்கு இவள்-புணர்ச்சியே தரும்' என்று மணந்துகொள்ள உடன்படாதவன் சொன்னதாம். (எ)

**1108.** வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.

'ஒத்த அன்புடைய உஙகளுக்கு ஒருபொழுதும விடாத புணர்ச்சியே இனிய' தென்று சொன்ன தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) நீ சொல்லுகின்ற தொக்கும்: ஒருபொழுதும் நெகிழாமையிற் காற்றினாலேயும் பிரிக்கப்படாத முயக்கம், ஒருவரையொருவர் ஆசைப்படுகிற இருவருக்கும் இனிதே (எ - று).

களவிற்புணர்ச்சியை மகிழ்ந்து மணந்துகொள்ளச் சம்மதியாதவன் கூறியவாறு. (அ)

**1109.** ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன்.

'கரத்தல்வேண்டாமையின் இடையறவில்லாத கூட்டமே இன்பப் பயனுடைத்' தென்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) புணர்ச்சி இனிதாதற் பொருட்டு வேண்டிய பிணக்கும், அந்தப் பிணக்கு மட்டறிந்து தீருகிறதும், அதன்பிறகு புணருகிறதும் என இவையே காமத்தை விடாதே எய்தியவர்கள் பெற்ற பலன் (எ - று).

'புருஷர்களுக்குப் பிரிவென்கிற தொன்றுண்டு; அது பரத்தையரைச் சேருகிறதும், அதை யறிந்து பெண்சாதி பிணங்கி நிற்கிறதும், தன்மேலே தப்பில்லை என்று சொல்லி அப் பிணக்கைத் தீர்க்கிறதும், பிற்பாடு இரண்டுபேரும் சம்மதித்துப் புணர்கிறதும் என இவை முன் மணந்தவர்கள் பெற்ற பலன். அப் பயன் இருதலைப்புள்ளின் ஓருயிராய உழுவலன்புடைய எமக்கு வேண்டா' என அம் மணந்தெய்தலை இகழ்ந்து கூறியவாறு. (கூ)

1110. அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

புணர்ந்து உடன்போகின்றவன் தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்.) நூல்களாலும் நல்ல வறிவினாலும் பொருள்களை அறியஅறிய முந்தின அறிவில்லாமை காண்டற்போல, சிவந்த இழையிணையுடையாளை இடைவிடாது செறியச் செறிய, காதல் அவளிடத்திலே காணப்படுகின்றது (எ - று).

களவிற்புணர்ச்சியில் அனேக இடையூறுகளால் எய்தப் பெறுமல் ஆசையுற்றவன், இதுபொழுது இடைவிடாமற் புணர்ந்த மகிழ்ச்சியினாலே, அளவில்லாத ஆசையுண்டாயிற்று (எ - ம்).

இப் புணர்ச்சிமகிழ்தல் தலைமகளுக்கு முண்டானாலும், அவளிடத்திலே குறிப்பாலாகிற தல்லாமல் வசனத்தாலே ஆகிறதில்லை. (கo)

---

## 112. நலம்புனைந்துரைத்தல்

அஃதாவது - தலைமகன் தலைமகள்நலத்தைப் புனைந்து சொல்லுகிறது.

1111. நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள்.

*இயற்கைப்புணர்ச்சியிறுதிக்கட் சொல்லியது.*

*(இ - ள்.) அனிச்சப்பூவே, நீ நன்றாய் வாழ்வாயாக; நீ எல்லாப்பூவினும் மென்மையுடையை. ஆயினும், எம்மாலே காதலிக்கப்பட்டவள் நின்னைப்பார்க்கிலும் மெல்லியள் (எ-று).*

1112. மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.

*இடந்தலைப்பாட்டின்கட் சொல்லியது.*

*(இ - ள்.) பொல்லாத நெஞ்சே, நானே காணப்பெற்ற இவள்கண்களைப் பலராலுங் காணப்படும் பூக்களை ஒக்கும் என்று நினைத்து, தாமரை குவளை நீலோற்பலம் முதலிய பூக்களைக் கண்டு மயங்காநின்றாய்; நின் அறிவிருந்தவாறு என் ? (எ - று).* (உ)

1113. முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

*கூட்டுதலுற்ற பாங்கனுக்குத் தலைமகன் தலைமகளியல்பு கூறியது.*

*(இ - ள்.) மூங்கில்போலுந் தோளினையுடையவளுக்கு நிறம் தளிர்போலே இருக்கும் ; பல் முத்துக்கள் போலே இருக்கும்; சுபாவமாகிய மணம் சுகந்த வாசனையா யிருக்கும்; கண்கள் வேலாயுதம்போல் இருக்கும் (எ - று).* (ங)

1114. காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று.

*பாங்கற்கூட்டத்துச் சென்று சார்தலுறுவான் சொலலியது.*

*(இ - ள்.) குவளைப்பூக்கள், இவள்கண்களைக் கண்டால் இவற்றிற்குச் சரியொவ்வே மென்று நினைந்து நாணி, தலையை இறைஞ்சி நிலத்தைப் பார்க்கும்.*

*நல்ல வியற்கையுடையவளின் கண்களைக் காணுதபடியினாலே தனக்குச் சரியில்லை என்று இறுமாந்து, ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டு இருக்கின்றன (எ-று).* (ச)

**1115.** அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ளுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.

*பகற்குறிக்கட் பூவணிகண்டு சொல்லியது.*

*(இ - ள்.) இந்த ஸதிரீ தன் மென்மையை அறியாது அனிச்சப்பூவை, காம்பினடியைக் களையாமல், முடித்தாள். இனி, இவளிடைக்கு நல்ல பறைகள் ஒலியா (எ - று).*

*'அனிச்சப்பூவினுடைய காம்பினடிச்சுமையைப் பொறுமல் இடை முரியும்; முரிந்தால், அதற்கு யான் ஏதுசெய்வே' னென்று விசாரப்பட்டான் (எ - ம்).* (ரு)

**1116.** மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

*இரவுக்குறிக்கண் சந்திரனைக கண்டு சொல்லியது.*

*(இ - ள்.) ஆகாசத்திலே இருக்கிற மீன்கள், தங்களுக்குப் பதியாயிருக்கிற சந்திரனையும் என்னுடைய ஸ்திரீமுகத்தினையும், இது சந்திரன் இது முகமென்று அறியமாட்டாமல், தங்கள் நிலையினை விட்டுக் கலங்கித் திரிகின்றன (எ - று).*

*சந்திரனைப் போலே உள்ளது முகம் (எ - ம்).* (சா)

**1117.** அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

*இதுவும் அது.*

*(இ - ள்.) அந்த மீன்கள் அப்படிக் கலங்குகிறதற்குக் காரணம் யாது? முன் குறைந்த கலை நிரம்பியே விளங்குஞ் சந்திரனுக்குள்ள மறுப்போல, ஸ்திரீ முகத்திலே மறு உண்டோ? (எ - று).*

*தேய்கிறநிலையிலேயும் வளர்வதனிலேயும் மறு உண்டான நிலையும் சந்திரனும் முகத்துக்குச் சரியன்று (எ - ம்).* (எ)

**1118.** மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி.

*இதுவும் அது.*

(இ - ள்.) சந்திரனே, வாழ்வாயாக, இந்த ஸ்திரீமுகத்தைப் போல நான் மகிழும்வகை யொளிவிட வல்லையாகில், நீயும் மேன்மேலே என் ஆசையுடையையாவாய் (எ - று).

மறுவுடைமையினுலே ஸ்திரீகள்முகத்தைப் போலப் பிரகாசிக்க மாட்டாய்; ஆனபடியினுலே, என்னுலேகாதலிக்கவும்படாய் (எ - ம்). (அ)

1119. மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றல் மதி.

இதுவுமது.

(இ-ள்.) சந்திரனே, மலர்போலுங் கண்ணையுடையாளின் முகத்தை யொக்க விரும்பினையாயின், யான் அன்றிப் பலர் காணத் தோன்றா தொழிக (எ - று).

முகத்தினுடைய நலமெல்லாந் தானே கண்டு அனுபவித்தாலுதலால், பலர் காணத் தோன்றலை இழித்துக் கூறினான். தோன்றின், நீ அதற்கு ஒவ்வாய் (எ - ம்). (கூ)

1120. அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம்.

உடன்போக்கு உரைத்த தோழிக்கு வழியருமை சொல்லி மறுத்தது.

(இ - ள்.) உலகத்திலே மெத்தென்று சொல்லப்பட்ட அனிச்சப்பூவும் அன்னப்பட்சியின் இறகும் ஸ்திரீகள்காலுக்கு நெருஞ்சிமுள்ளுப்போலே வருத்தஞ் செய்யும் (எ – று).

இப்படி மெத்தென்ற பாதம் கடினமாகிய தரையிலேயுங் கல்லிலேயும் நடக்கமாட்டாது (எ - ம்). (கo)

---

## 113. காதற்சிறப்புரைத்தல்

அஃதாவது - தலைமகன் தன் காதல்மிகுதி கூறலும், தலைமகள் தன் காதல்மிகுதி கூறலுமாம்.

1121. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

இயற்கைப் புணர்ச்சியினுடைய கடைசியிலே தலைமகன் தன்னயப்பு உணர்த்தியது.

(இ - ள்.) மெத்தென்ற வார்த்தையையுடைய இந்த ஸ்திரீயினுடைய வாலிய பல்லிலே ஊறிவருகிற வாய்நீர் பாலுந் தேனுங் கலந்தாற்போலும் (எ - று).

அதிகமாகிய தித்திப்பை உடையது (எ - ம்). (க)

1122. உடம்பொ டுயிரிடை யென்ன மற்றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.

பிரிந்துபோகப் பயப்பட்டவன் சொல்லுகிறது.

(இ - ள்.) உடம்புக்கும் உயிருக்கும் உறவு எத்தனை யுண்டோ அத்தனை யுண்டு, இந்த ஸ்திரீக்கு மெனக்கும் உறவு (எ - று).

உடம்பு முயிருங் கூடி யின்பங்களை யனுபவிக்கிறாப்போலே இந்த ஸ்திரீயும் நானும் கூடிச் சுகமனுபவித்தோம். இவளை விட்டுப் பிரியமாட்டேன் (எ - ம்). (உ)

1123. கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம்.

இடந்தலைப்பாட்டின்கண் தலைமகள் நீங்கினபோது சொல்லியது.

(இ - ள்.) என் கண்ணிலே கருப்புவிழியிலே யிருக்கிற பாவாய், நீ அவ்விடத்தைவிட்டு அப்பாலே போ ; நீ போகாவிட்டால், என்னாலே வாஞ்சிக்கப்பட்ட நல்ல முகத்தையுடையவளுக்கு இருக்க இடமில்லை (எ - று).

நான் இந்த ஸ்திரீயைக் காணவிட்டாலும் இவள் என் கண்ணுக்குள்ளே யிருக்கிறதல்லாமல் அப்பாற் போகிறதில்லை; ஆனபடியினாலே, உன்னுடனே கூடியிருக்க இடமில்லை. நின்னைப்பார்க்கிலும் நல்லவளானபடியினாலே, நீ அவளுக்கு அந்த இடத்தைக் கொடுத்து, அப்பாலே போவாய் (எ - ம்). (ங)

1124. வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து.

பகற்குறிக்கட் புணர்ந்துநீங்குவான் சொல்லியது.

(இ - ள்.) தெரிந்த இழையினையுடைய இவள் எனக்குப் புணருமிடத்து உயிருக்கு உடம்போடு கூடி வாழ்கிறதோ டொக்கும்; இவள் பிரிந்தபோது உயிர் உடம்பைவிட்டு நீங்கிச் சாகிறதோ டொக்கும் (எ - று). (ச)

1125. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம்.

ஒருவழித்தணந்து வந்த தலைமகனை 'பிரிந்தபோது எம்மையும் நினைத்து அறிவையோ' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) நல்ல சண்டையைப் பண்ணுங் கண்ணையுடையாள்குணங்களை யான் மறந்தேனாயின் நினைப்பேன்; ஒரு க்ஷணமாகிலும் மறந்தறியேன்; ஆனபடியினாலே, நினைக்கிறதையும் அறியேன் (எ - று).

குணங்களாவன - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு.

இப்போது சொன்னதெல்லாம் தலைமகன் வசனம். இனிச் சொல்லப்போகிறது தலைமகள்வசனம். (ரு)

1126. கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர்.

ஒருவழித்தணப்பின்கண் தலைமகனைத் தோழி இயற்பழிப்பள் என்று அஞ்சி, அவள் கேட்கத் தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்.) என் காதலர், யான் காணமற் பொருள்தேடப் போயினரென்று நினைத்தாலும், என் கண்களை விட்டுப் போகார்; யான் அறியாமற் கண்ணை மூடினால் வருத்தப்படுகிறதுமில்லை. ஆனபடியினாலே, என்னுடைய காதலர் மெத்த சூட்சுமமானவர் (எ - று).

இடைவிடாமல் நினைக்கிறதினால் எப்பொழுதும் முன்னே தோன்றுகிறபடியினாலே, கண்ணுள்ளே இருக்கிறார் என்றும், மூடினால் போகார் என்றும் கூறினாள். (சா)

1127. கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து.

இதுவுமது.

(இ-ள்.) காதலர் எப்பொழுதும் என்னுடைய கண்ணிலே இருக்கிறபடியினாலே, கண்ணிலே மையிடுகிறதுமில்லை; அது

ஏனென்றால், மையிடுகிற நேரமும் அவர் மறைவர் என்றெண்ணி (எ - று). (எ)

**1128.** நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து.

*இதுவுமது.*

*(இ - ள்.) காதலர் என் நெஞ்சினுள்ளே இருக்கிறானபடியினாலே, நான் சாப்பிடுகிறபோது வெம்மையுள்ள வஸ்துக்களைச் சாப்பிடுவதற்குப் பயப்படுகிறேன் ; அவருக்கு வாதை அதனால் வருமோ என்றஞ்சி (எ - று).*

*எப்பொழுதும் என் நெஞ்சில் இருப்பவரைப் பிரிந்து போனார் என்று எண்ணுவது என்ன புத்தி ? என்பது குறிப்பு.*

**1129.** இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
யேதில ரென்னுமிவ் வூர்.

*நாயகன் பிரிந்துபோனது பொறாமல் வருந்திய தலைமகளைக் கண்டு தோழி தலைமகனைப் பழித்தமை அறிந்து, தலைமகள் இயற்படச் சொல்லியது.*

*(இ-ள்.) என் கண் இமைத்து மூடினால் கண்ணுக்குள்ளே இருக்கிற காதலர் மறையப்போகிறார் என்று கண்சிமிட்டேன் ; இப்படி இருக்கையிலேயும் அவரைத் 'துயிலா நோய் செய்தார் அன்பிலர்' என்று சொல்லுவர் இந்த ஊரார் (எ - று).*

*ஒருபொழுதும் பிரியாதவரைப் பிரிந்தாரென்று பழிக்க வேண்டாம் (எ - ம்).* (கூ)

**1130.** உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர்.

*இதுவுமது.*

*(இ - ள்.) காதலர் எந்நாளும் என் மனத்திலே சந்தோஷத்துடனே இருப்பர். அதை அறியாது அவர் பிரிந்து போயினார், அன்பில்லாதவர் என்று சொல்லுவர் இந்த ஊரார் (எ - று).*

*பிரியாமையும் அன்பும் உடையாரை, அவை இல்லாதவ ரென்று பழிக்கவேண்டாம் (எ - ம்).* (கo)

*[குறிஞ்சி முற்றும்]*

# 114. நாணுத்துறவுரைத்தல்

[பாலை]

அஃதாவது - பிரிந்துபோன தலைமகன் தோழிக்குத் தன்னுடைய நாணம் துறக்கிறதைச் சொல்லுகிறதும், அறத்தொடு நிற்பிக்கலுற்ற தலைமகள் தன் நாணம் விடுகிறதைச் சொல்லுகிறதுமாம்.

**1131.** காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி.

பிரிந்தவன் சொல்லியது.

(இ - ள்.) தனக்கு அரியராய ஸ்திரீகளோடு காமத்தை அனுபவித்து, பிறகு அந்தக் காமம் பெறாமல் துக்கப்படுகிற புருஷர்களுக்கு மடலூர்கிறதல்லாமல் பின்னையொன்றும் பலமில்லை (எ - று).

மடல் ஊர்கிறதாவது-தலைவன் அந்த ஸ்திரீயைப் போலே படத்திலே எழுதிக்கொண்டு, அதைப் பார்த்துக் காம வருத்தம் தீருகிறது. (க)

**1132.** நோனா வுடம்பு முயிரு *மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து.

'நாணமுடைய உமக்கு மடலூர்கிறது முடியா'தென்று விலக்குகிறவனுக்குச் சொல்லியது.

(இ - ள்.) காமவருத்தத்தினைப் பொறாத உடம்பு முயிரும் மடலூர நினையாநின்றன, அதனை விலக்கும் நாணத்தைக் கெடுத்து (எ - று).

அறிவு முதலாயின நீங்கவும் நாணம் நீங்காது ; அதுவும் இதுபொழுது நீங்கிற்று (எ - ம்). (உ)

**1133.** நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல்.

'நாணமும் நல்லாண்மையும் உடையவர்களுக்கு மடலூர முடியா' தென்றவனுக்குச் சொல்லியது.

(இ - ள்.) நாணமும் நல்ல ஆண்மையும் பண்டு உடையேன்; இப்போது காமம் மிகுந்தபடியினாலே, நாணமும்

---

* கைக்கிளை நான்கில் ஒன்றாகிய " ஏறா மடற்றிறம் வெளிப்பட இரத்தல் " —இளம்பூரணம் - பொருள் - 55.

ஆண்மையு மிழந்து, காமம் மிக்கவர் ஏறும் மடலினை யுடையேன் (எ - று).

நாணம் இழக்கிறதாவது - இழிவான காரியங்களைச் செய்யத் துணிகிறது. நல்லாண்மையாவது - ஒன்றுக்கும் தளராமல் இருக்கிறது. (ங)

**1134.** காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.

'நாணமும் நலலாணமையும காமவெள்ளத்திற்குப் படகான-படியினாலே, அவை விட்டு நீங்கா' என்றவளுக்குச் சொல்லியது.

(இ - ள்.) நான் காமவெள்ளத்தைக் கடக்கிறதற்குப் படகாகக் கொண்ட நாணத்தையும் நல்லாண்மையையும், காமமாகிய வெள்ளம் இழுத்துக்கொண்டுபோகின்றது (எ - று).

காமத்தைக் கடக்கிறதற்கு நாணமும் ஆண்மையும் தெப்பமாகா (எ - ம்). (ச)

**1135.** தொடலைக் குறுந்தொடி தந்தாண் மடலொடு
மாலை யுழக்குந் துயர்.

'இந்த ஆற்ருமையும் மடலும் உமககு எப்படி வந்தன' என்றவளுக்குச் சொல்லியது.

(இ - ள்.) மாலைப்பொழுதிலே அனுபவிக்குந் துயரினையும் அதற்கு மருந்தான மடலினையும் முன்னே அறியேன்; இப்பொழுது எனக்கு மாலைபோலத் தொடர்ந்த சிறுவளையினை யுடையவள் தந்தாள் (எ - று).

காமம் எப்பொழுது முண்டானாலும் மாலைப்பொழுதிலே அதிகமாதலுடைமையின் 'மாலையுழக்குந்துயர்' என்ருர். (ரு)

**1136.** மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண்.

'மடலூரும் பொழுது, இன்றைக்கும் கழிந்தது' என்றவளுக்குச் சொல்லியது.

(இ - ள்.) உன் பேதை காரணமாக என் கண்கள் ஒரு-பொழுதும் தூங்குகிறதில்லை. அதனால் எல்லாரும் தூங்குகிற நடுஇரவிலும் நான் மடலூர்கிறதையே நினையாநின்றேன் (எ - று). (சா)

1137. கடலன்ன காம முழந்து மடலேருப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.

பேதைக்கு என்கண் படலொல்லா என்பதுபற்றி, 'அறிவில்லாரான ஸ்திரீகளிலும அஃதுடைய புருஷர்களன்றே பொறுப்பவர்கள்' என்றவளுக்குச் சொல்லியது.

(இ - ள்.) சமுத்திரம்போலக் கரையில்லாத காம நோயினை அனுபவித்தும் மடலூராமற் பொறுத்திருக்கின்ற பெண்பிறப்புப்போல மிக்க தகுதியையுடைய பிறப்பு உலகத்தில் இல்லை (எ - று).

பிறப்புவிசேடத்தால் அவ் வடக்கம் எனக்கில்லை; நீ அதனை அறிகின்றிலை (எ - ம்).

இவ்வேழும் தலைமகன் சொன்னது; மேல் தலைமகள் கூற்று. (எ)

1138. நிறையரியர் மன்னளிய ரென்னாது காம
மறையிறந்து மன்று படும்.

காவல மிக்குக் காமம் பெருகியபோது சொல்லியது.

(இ - ள்.) இவர் நிறையால் நாம் மிஞ்சிநடத்தற்கரியர் என்று பயப்படாமல், மிக அளிக்கத்தக்கார் என்று எண்ணுமல், மகளிர்காமமும் மறைத்தலைக் கடந்து வெளிப்படுவதாயிற்று (எ - று).

காமத்தை எப்படி மறைத்தாலும் வெளிப்படும் (எ - ம்).

1139. அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு.

இதுவும் அது.

(இ - ள்.) 'நான் முன் அடங்கியிருந்தபடியினாலே எல்லாரு மென்னை அறியார்கள்; இனி அப்படி நில்லாமல் நானே வெளிப்பட்டு அறிவிப்பேன்' என்று நினைத்தால், என் காமம் இவ்வூர் மறுகின்கண்மயங்கிச் சுழலாநின்றது (எ - று).

மயங்குதல் — அம்பல் ஆதல். மறுகுதல் — அலராதல்,

**1140.** யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.

செவிலிக்கு அறத்தொடு நின்றுவைத்து 'யான் நிற்கிறது எப்படி' என்று நகைத்த தோழியோடு வாடித் தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்.) 'அறிவில்லாதவர், நான் கேட்கிறதுமல்லாமற் கண்ணாலே காணுமாறும் என்னை நகையாநின்றார். அதேனெனில், யான் அனுபவிக்கிற காமநோயைத் தாமும் அனுபவிக்கவில்லை' என்று தலைவி வருந்தினாள் (எ - று).

'அவரும் என்போல வேதனைப்பட்டால் அறிவார்' (எ - ம்). (௧௦)

---

## 115. அலரறிவுறுத்தல்

அஃதாவது - பலரும் 'இவள் தன் நாயகனைப் பிரிந்து வாடுகிறாள்' என்று அலர்கூறுவதைத் தலைவனுக்குத் தோழி சொல்லி யறியப்பண்ணுகிறது.

**1141.** அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.

'நீ பிரிந்து போனது வெளிப்பட்டு எல்லாரும் அறிந்து அலராக வார்த்தைசொல்லுகிறார்கள்' என்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

(இ - ள்.) அப்படி எல்லாரும் 'இவள் வருந்துகிறாள்' என்று சொல்லவே என்னுடைய பிராணன் நிற்கிறது, அதனை, நான் செய்த பாக்கியத்தாலே, பலரும் அறியார் (எ - று).

'இவள் வருந்துகிறாள்' என்று சொல்லக் கேட்டபடியினாலே 'இவள் வருத்தம் தீர்க்கவேணும்' என்று தன் சீவன் இருக்கிறது. இல்லாவிடின் பிரிந்தபொழுதே போம் (எ - ம்).

**1142.** மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர்.

இதுவும் அது.

(இ - ள்.) மலரைப்போலும் கண்ணையுடையவளது எய்தற்கருமைஅறியாமல் இந்த ஊரார், அவளை எளியவளாக்கி,

அலராகிய வசையைச் சொல்லி, எனக்கு உபகாரத்தைச் செய்கின்றார் (எ - று).

உபகாரம் செய்தலாவது-தன் பிராணனை நிறுத்துகிறதாம்.

**1143.** உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து.

இதுவும் அது.

(இ - ள்.) எனக்கும் தலைமகளுக்கும் கூட்டம் உண்டானதை இந்த ஊரார் அறிந்தபடியினாலே இவர்கள் சொல்லுகிற வார்த்தையைக் கேட்ட என்னுடைய மனது, அவள்கூட்டத்தைப் பெறாமல் இருந்தாலும், பெற்றதுபோல இன்பமுடையதானது (எ - று).

இன்பமானது - அவள்கூட்டத்தை நினைக்கிற சந்தோஷமாம். (௩)

**1144.** கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
றவ்வென்னுந் தன்மை யிழந்து.

இதுவும் அது.

(இ - ள்.) என்னுடைய காமம் இந்த ஊரார் சொல்லுகிற வசைவார்த்தையாலே அதிகமாயிற்று; அவர்கள் சொல்லாமல் இருந்தால், முன்பு நினைத்தமட்டிலேயும் இராமல், அடங்கிச் சுருங்கிப்போம் (எ - று). (௪)

**1145.** களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது.

இதுவும் அது.

(இ - ள்.) கள்ளைக் குடிக்கிறவனுக்குக் களிக்குந்தோறும் கள்ளுண்டல் நன்றாய் இருக்கும். அதுபோல, எனக்குக் காமம் பலரும் வசைசொல்லுகிற பரியந்தம் நன்றாம் (எ - று).

களிப்பு-மிகுந்த சந்தோஷம். (௫)

**1146.** கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று.

(இ - ள்.) யான் காதலனைக் கண்ணாலே காணப்பெற்றது ஒரு நாளேயாயினும், அலராகிய வசை ஒருநாளல்லாமல், சந்தி-

ரீனை இராகு மறைக்கிறது உலகமெங்கும் பிரகாசமானாற்போல, எங்கும் பரவிற்று (எ - று). (௬)

**1147.** ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொன்
னீராக நீளுமிந் நோய்.

(இ - ள்.) இந்தக் காமநோயாகிய பயிர், இந்த வூர் ஸ்திரீ சனங்கள் சொல்லுகிற வசைவார்த்தை எருவாகவும், அந்த வசையைக் கேட்டுத் தாயானவள் கோபித்துக்கொண்டு சொல்லுகிற வார்த்தை தண்ணீராகவும், வளராநின்றது. இனி ஊரவர்சொல்லுகிறதும் தாய் சொல்லுகிறதும் பொறுக்க வேணும் (எ - று). (௭)

**1148.** நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றுற் கௌவையாற்
காம நுதுப்பே மெனல்.

(இ - ள்.) அயல் மனுஷர் சொல்லுகிற வசையினாலே நாம் காமத்தை அடக்குவோம் என்று நினைக்கிறது, நெய்யை வார்த்து நெருப்பை அவிக்க நினைக்கிறதற்குச் சரி (எ - று).

வசையாலே அதிகமாகிறதல்லாமல் அடங்காது (எ - ம்).

**1149.** அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை.

(இ - ள்.) தன்னை எதிர்ப்பட்டபோது 'உன்னைவிட்டுப் பிரியேன், நீ பயப்படவேண்டாம்' என்றவர், எல்லாரும் நாணத்தக்கதாக, நம்மைப் பிரிந்துபோனார். இனி நாம் பலராலே சொல்லப்பட்ட வசைக்கு அஞ்சக்கூடுமோ? கூடாது (எ - று).

பலரும் விசாரப்படப் பிரிந்தவரை மறத்தல்கூடாது (எ - ம்).

**1150.** தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்கு மிவ்வூர்.

(இ - ள்.) நாயகனுடனே கூடப்போகிறதற்குக் காரணமாய் நாம் பண்டே விரும்புவதாய அலரைச் சொல்லுகிறார். இனி நாம் அவரை விரும்பினால் அதற்கு உடன்படுவர். ஆகையால், இவ் வலர் நமக்கு நன்றாயிற்று (எ - று).

இந்த இருபது பாட்டும் புணர்தல்நிமித்தம். (௰)

---

## 116. பிரிவாற்றுமை

அஃதாவது - தலைமகன் பிரிந்துபோதற்குத் தலைவி ஆற்றுளாந் தன்மை.

**1151.** செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

*(இ - ள்.) நீ என்னைப் பிரியாமல் இருக்கிற வார்த்தை யுண்டானுல் அதை எனக்குச் சொல்; அதல்லாமல் நீ பிரிந்து போய் விரைந்து வருகிறதானுல், அந்த வார்த்தையைப் பிரிந்த பிறகும் பிராணனுடனே இருக்கிற பேருக்குச் சொல் (எ - று).*

*நாயகனைப் பிரிந்தவுடனே உயிர்போகிறது உத்தமமான கற்பு; பிரிந்தபின்னும் பிராணன் இருக்கிறது மத்திமமான கற்பு (எ - ம்).* (க)

**1152.** இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு.

*(இ - ள்.) இவர் இத்தனை நாளும்போலே யல்லாமல் இப்பொழுது நம்மிடத்திலே இனிதான பார்வை உடையரானபடியினுலே, அவர் பிரிவுக்குப் பயப்படுகின்றேன் (எ - று).*

*நாம் இவரைப் பிரியவொட்டாமற் புணர்ச்சியிலே மகிழ்ச்சி செய்யவேணும் என்பது கருத்து.* (உ)

**1153.** அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.

*(இ - ள்.) பிரிந்து போகேன் என்ற தம் சொல்லும் பிரிந்தால் நாம் ஆற்றுமையும் அறிந்த காதலர்கண்ணும் ஒரோவழிப் பிரிவு நிகழ்தலான், அவர் சொல்லும் தலையளியும்பற்றி நம்மிடத்திலே அன்புடையவர் எனத் தேறுகிறது அரிது (எ - று).*

**1154.** அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு.

*(இ - ள்.) நம்மைக் கண்டபொழுதே நம்பிக்கை சொல்லி ஆணையிட்டு 'உன்னை விட்டுப் பிரிகிறதில்லை; நீ அஞ்ச வேண்டா' மென்றவர் தாமே பிறகு பிரிந்துவிட்டுப் போனால், அவர் சொன்ன வார்த்தையை மெய்யென்று நம்பினவர்க்குத் தப்புண்டோ (எ - று).*

*'சொல்லுகிறதுஞ் செய்கிறது மொவ்வாமைக் குற்றம் அவர்க்கு எய்தும் ; எய்தாவகை அழுங்குவி' என்பது கருத்து.*

**1155.** ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு.

*(இ - ள்.) என்னுயிரைக் கொல்லாமற் காத்தியாயின், என்னுயிரை ஆள அமைந்தவருடைய பிரிவை நிறுத்துவாயாக; அப்படி நிறுத்துவார் இல்லாமல் அவர் பிரிந்துபோனால், என்னுயிரும் போய்விடும்; உயிர் போனாற் பிறகு நாயகனைக் கூடுகிற தருமையாம் (எ - று).*

*ஆளுதற்கமைதல்-எனக்கு இறைவராய் இருத்தல்.*

**1156.** பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை.

*தலைமகன் பிரிவுணர்த்தியவாறு வந்து சொல்லிய தோழிக்குத் தலைமகள் சொல்லுகிறது.*

*(இ - ள்.) நம்முடைய விரகவாசைமிகுதி அறிந்த தலைவர் தாமே நம் முன்னே நின்று தம்முடைய பிரிவினைச் சொல்லுவரானால், இப்படிப்பட்ட கெட்டிமனதுடையவர் பிறகு நம்முடைய ஆற்றாமைஅறிந்து வந்து நம்மைச் சேருவர் என்னும் ஆசை விட்டுப்போம் (எ - று).*

*இப்போது விட்டுப்போகிறவர் திரும்பி வந்து நம்மைச் சேருகிறது எங்கே? (எ - ம்). (சு)*

**1157.** துறைவன் துறந்தமை தூற்றுகொன் முன்கை
யிறையிறவா நின்ற வளை.

(இ - ள்.) நாயகன் என்னை விட்டுப் பிரியப்போகிறதை அவனெனக்குச் சொல்லாதமுன்னே என் முன்கையிலே நின்றுழலுகிற வளைகள் அறிந்து எனக்குச் சொல்லா- நின்றன, நீ யறிவிக்கவேண்டாம் (எ - று).

வளைகள் அறிதலாவது - கையிலே இந்தண்டைக் கந்தண்டை யுழலுகிறதினாலே யறிந்ததென்றும், நாயகன் பிரிந்து- போகிறானென்று கேட்டவுடனே சரீரம் வாடிக் கைவளைகள் கழன்று தாழ விழுகிறதினாலே யறிவித்ததென்றுமாம். "நீ அவன்பிரிவைக் கெட்டியாக உண்டாக்குவித்து வந்து சொல்லுகிறதினாலே, நீயும் இந்த வளைகள் செய்தனவே செய்தாய்" எனப் புலந்து சொன்னதாம். (எ)

**1158.** இன்னா தினனில்லூர் வாழ்த லதனினு
இன்னா தினியார்ப் பிரிவு.

(இ - ள்.) ஸ்திரீகளுக்குத் தங்கள் குறிப்பை யறியும் தோழியர் இல்லாத ஊரிலே இருந்து வாழ்கிறது பொல்லாதா யிருக்கும்; அதிலும் பொல்லாதாயிருக்கும் தங்கள் நாயகனைப் பிரிகிறது (எ - று).

**1159.** தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.

(இ - ள்.) நெருப்பு தன்னைத் தொட்டாற் சுடுமல்லாமல் காமநோய்போலப் பிரிந்தவர்களைச் சுடமாட்டுமோ? மாட் டாது (எ - று).

காமம் எத்தனை தூரத்திலே இருந்தாலும் சுடும் (எ - ம்).

**1160.** அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்.

'தலைவியர் பிரிவாற்றியிருப்பர்; நீ அப்படி இருக்கவில்லை' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) நீ சொல்லுகிறது மெய்யாம். நாயகன் பிரிவு சொல்லியபோது அதற்குச் சம்மதித்து, அவன் பிரிந்து போகிற- போது வருகிற துக்கத்தையும் நீக்கி, பிரிந்து போனபிறகு வந்த துக்கத்தையும் பொறுத்து, பின்னையும் இருந்து உயிர்- வாழ்கிற ஸ்திரீகள் உலகத்திலே பலர் (எ - று).

பண்டு புருஷனுடனே கூடி இன்பமாயிருக்கிறவர்கள் அந்த வின்பமும் இழந்து துன்புற உடன்படுதல் அரிது. நாயகன் போன பரஸ்தலங்களிலே அவனுக்கு என்ன உபத்திரவம் வருமோ என்றும், அவர் வருகிற பரியந்தம் நான் எப்படித் தனியே இருப்பேனென்றும், அவர் எப்போது வருவார் என்றும் இப்படிப் பட்ட துக்கங்கள் பலவுமுண்டு. இவற்றைப் பொறுத்துப் பிராணனுடனே இருக்கிறது அரிதாம். பிரிந்து போன பிறகு அவர் வருகிற பரியந்தம் மனதுக்குள்ளே இருக்கிற காமவிகார வேதனையையும், புறத்திலே சந்திரன் குயில் தென்றல் யாழிசை குழலிசை முதலாயின வந்து அந்நோயை வளர்ப்பதையும் பொறுத்திருக்கிறவர் உலகத்திலே ஒருவரும் இல்லை (எ - ம்). (௧௦)

---

## 117. படர்மெலிந்திரங்கல்

அஃதாவது - நாயகன் பிரிந்து போனதினாலே, தலைமகள் தன்னுடைய துக்கத்தை எப்பொழுதும் நினைத்தலின், அதனால் மெலிந்திரங்குதல்; நாயகனும் நாயகியைப் பிரிந்து போன விடத்திலே அவளை நினைத்துக்கொண்டு விசாரப்படுகிறதுமாம்.

**1161.** மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க்
ஊற்றுநீர் போல மிகும்.

'காமநோயை வெளியாக்குகிறது உன்னுடைய நாணத்துக்கு ஏலா' தென்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) இந்தக் காமநோயைப் பிறர் அறியாமல் யான் வெட்கத்தினாலே மறைக்கிறேன். இப்படி மறைக்கச்செய்தேயும் இந்தக் காமநோய் அந்த நாணத்தைக் கடந்து, இறைக்கிறவர்களுக்கு ஊற்றுத் தண்ணீர் அதிகமாகிறாப் போலே அதிகமாகிறது (எ - று).

இப்படி அதிகமாகிறதை மறைக்கிறது எப்படி ? (எ - ம்).

**1162.** கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும்.

'இவ்விடத்திலே யிருக்கிறவ ரறியாமல் மறைத்தல், நாயகன் அறியத் தூது விடல் இரண்டனுள் ஒன்று செய்யவேணும்' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) இந்தக் காமவிரக நோயை மறைக்கவு மாற்றேன்; இந்த நோயைத் தந்தவர்க்குச் சொல்லவேணும் என்றாலும் எனக்கு வெட்கமாயிருக்கிறது. இதற்கு என்ன செய்வேன்? (எ - று).

காமநோய் ஒருகாலைக்கொருகால் அதிகமாதலிற் 'கரத்தலு மாற்றேன்' என்றும், நாயகன்அண்டைக்குத் தூதுஅனுப் பினால் இன்னும் பிராணனுடனே இருக்கிறாள் என்று அறியப் படும் ஆதலால் 'நாணுத்தரு'மென்றும் கூறினாள். (உ)

**1163.** காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனா வுடம்பி னகத்து.

இதுவுமது.

(இ - ள்.) காமநோயும் அதனைச் செய்தவர்க் கறிவிக் கிறதற்கு ஒட்டாத வெட்கமும், என்னுடைய உடம்பிலே, உயிர் காவடித்தண்டாக, அதன் இருபுறத்தும் தூங்கா நிற்கும் (எ - று).

தூங்குகிறதாவது - காமமும் நாணமும் ஒன்றற்கொன்று அதிகமாகாமல் சரியாயிருக்கிறதாம். (ங)

**1164.** காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்து
மேமப்புணை மன்னு மில்.

(இ - ள்.) யாவர்க்கும் உளவாய் வருகின்ற காமக்கடலும் புணையும் என்னும் இரண்டனுள்ளும் எனக்குண்டாகின்றது காமக்கடலே; அதனை நீந்தும் அரணாகிய தெப்பமில்லை (எ - று).

தெப்பமாவது, நாயகிக்கு நாயகனும் நாயகனுக்கு நாயகி யும். (ச)

**1165.** துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

தூதுவிடாதது கண்டு தோழியோடு புலந்து சொல்லியது.

(இ - ள்.) இன்பமான காரியத்தைச் செய்வதற்கு உரிய சினேகிதரிடத்திலே துன்பமான பொல்லாங்கைச் செய்யவல்லவர்கள், துன்பஞ்செய்வதற்கு உரிய பகைவரிடத்திலே, என்ன செய்வார்களோ? (எ - று).

தனக்கு உறவாயிருக்கையிலேயும் தன் வார்த்தையைக் கண்டுந் தூதுஅனுப்பாமல் இருக்கிறவள், தனக்குப் பகையானால், என்ன செய்வாளோ? (எ - ம்). (ரு)

1166. இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது.

'காமத்தினால், இன்பமுற்றவர்களுக்கு அதனினும் துன்பமும் வரும்' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) காமம் புணர்வால் இன்பஞ் செய்கிறது கடல்போலப் பெரிதாயிருக்கும்; அந்தக் காமமே புணராமற் பிரிந்தால், அதனாலே வருகிற துக்கம் அந்த இன்பக்கடலினும் பெரிய கடலாயிருக்கும் (எ - று). (சா)

1167. காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன்.

'காமக்கடல் நீந்தப்படும்' என்றாட்குச் சொல்லியது.

(இ - ள்.) காமமாகிய கடலை நீந்தாமல் இருக்கவில்லை; நீந்தியும், அதற்குக் கரைகாணேன். அதற்குக் கரைகாணுக் காலம் எல்லாரும் நித்திரைபண்ணுகிற அரையிருள்; அப் பாதி ராத்திரியிலேயும் ஒருவரும் துணையில்லாமல் நான்மாத்திரம் தனியே இருக்கிறேன். இது என் வினைப்பயன் (எ - று).

கரைகாணாதது - ஒருகாலைக் கொருகால் அதிக மாகிறது.

1168. மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
வென்னல்ல தில்லை துணை.

இரவின் கொடுமைசொல்லி யிரங்கியது.

(இ - ள்). இந்த இராத்திரியானது இந்த வுலகத்திலே இருக்கிற சீவன்களை எல்லாம் தானே நித்திரைபோகப்பண்ணினபடியினாலே, என்னையல்லாமல் வேறு துணையில்லை (எ-று).

நான் துணையாகிறது - நித்திரையில்லாமல் விழித்துக் கொண்டிருத்தல். ராத்திரியும் எங்கும் பரவி யிருக்கிறது. ஆகலின், நானே துணையானேன் (எ - ம்). (அ)

**1169.** **கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நா**
**ணெடிய கழியு மிரா.**

இதுவுமது.

(இ - ள்.) இந்த ராத்திரிக்காலங்கள் நாயகனோடு கூடி இன்பமுற்ற நாள்களிலே கொஞ்சமாயிருந்து, நாயகனைப் பிரிந்து வருத்தப்படும் நாளில் பெரியனவாய் அக் கொடியார் கொடுமைக்குமேல் கொடுமைசெய்கின்றன (எ - று).

நாயகனைப் பிரிந்த வருத்தத்தினாலே ராத்திரிக்காலம் நெடியதாய்ப் பொல்லாதாய் இருக்கின்றது (எ - ம்). (கூ)

**1170.** **உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்**
**நீந்தல மன்னோவென் கண்.**

'உன் கண்கள் பேரழகு அழிகின்றன ஆகலின், நீ அழவேண்டா' மென்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) மனதுபோலக் காதலர் உள்ள தேசத்துக்குக் கொப்பெனப் போகத் தக்கனவாயின், என் கண்கள் இங்ஙனம் வெள்ளமாகிய தந்நீரை நீந்தா (எ - று).

மனத்திற்குச் செலவாவது நினைக்கிறதானபடியினாலே, உள்ளம்போலக் கண்கள் கடிதிற் செல்லமாட்டா என்பது கருத்து. (கo)

---

## 118. கண்விதுப்பழிதல்

அஃதாவது - கண்கள் நாயகனைக் காணாமல் வருந்தி வாடி விசாரப்படுகிறது.

**1171.** **கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்**
**தாங்காட்ட யாங்கண் டது.**

'நின் கண்கள் வருந்துகின்றன; நீ யாற்றவேண்டு' மென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(இ - ள்.) இத் தணியா வியாதியை நான் அறிந்தது இந்தக் கண்கள் காதலரை எனக்குக் காட்டினபடியினாலே யன்றோ? இப்போது நம்மைக் காட்டச்சொல்லித் தாம் அழுகின்றது எப்படி ? (எ - று).

இப்பொழுதும் தாமே காட்டுகிறதல்லாமல் நாங் காட்டுகிற தெங்கே? (எ - ம்). (க)

1172. தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைத லுழப்ப தெவன்.

இதுவுமது.

(இ-ள்.) மேல் வருகிறதை ஆராய்ந்து அறியாமல் அன்று காதலரைப் பார்த்துநின்ற கண்கள் இன்று 'இத் துக்கம் நம்மாலே வந்ததானபடியினாலே பொறுக்கவேணும்' என்று எண்ணாமல் விசாரப்படுகிறது என்கருதி? (எ - று).

மேல் வருகிறதாவது - நாயகன் பிரிந்துபோய் வருத்துதல். முன்னே வருவதை அறிந்து காவாதவர்கள், அது வந்தால், பொறுக்கவேணுமல்லாமல் விசாரப்பட்டால் தீராது (எ - ம்).

1173. கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து.

இதுவுமது.

(இ - ள்.) இந்தக் கண்கள் அன்று தாமே காதலரை விரைந்து நோக்கி, இன்றுந் தாமே இருந்து அழுகிற இது நம்மாலே சிரிக்கத்தக்க வியல்பை யுடைத்து (எ - று).

வருகிற காரியத்தை முன்னே அறிந்து பரிகரித்துக்கொள்ளாதவர் பலராலும் நகைக்கப்படுவர் (எ- ம்). (ங)

1174. பெயலாற்றா நீருலந்த வுண்க ணுயலாற்றா
வுய்வினோ யென்க ணிறுத்து.

இதுவுமது.

(இ - ள்.) இந்தக் கண்கள் யான் கடைத்தேறமாட்டாமலுக் கேதுவாகிய ஒழிவில்லாத நோயை என்னிடத்திலே நிறுத்தி, தாம் அழமாட்டாமல் நீர்வற்றிவிட்டன (எ – று).

நோயை நிறுத்துதலாவது - பிரிந்துபோகிறதும் பின்பு வந்து கூடாமையும் உடையாரைக் காட்டியதனால் நோயைநிலை

பெறச் செய்தல். இன்னாத காரியத்தை எமக்கு முன்பு செய்த படியினாலே, தமக்குப் பொல்லாங்கு தானே வந்தது (எ - று).
தமக்குப் பொல்லாங்காவது - தாமே வருந்தி வாடுகிறது.

**1175.** படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண்.

*இதுவுமது.*

*(இ - ள்.) எனக்குக் கடலினும் பெரிதாகிய காம நோயைச் செய்த என் கண்கள், அந்தப் பாவத்தினாலே தாமும் நித்திரையில்லாமல் துக்கப்பட்டு அழுகின்றன (எ - று).*
*காமநோய் பார்வையினால் வந்தபடியினாலே, அதைக் கண்கள் செய்ததாக்கிக் கூறினாள். (ரு)*

**1176.** ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிதற்பட் டது.

*இதுவுமது.*

*(இ - ள்.) எமக்கிந்தக் காமநோயினைச் செய்த கண்கள் தாமுந் துயிலாம லழுகிறது மிக நன்று (எ - று).*
*தம்மாலே வருத்தமுற்ற எமக்கு அவ் வருத்தம் தீர்ந்தாற் போன்றது (எ - ம்). (சா)*

**1177.** உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்.

*இதுவுமது.*

*(இ - ள்.) அன்று காதலரை யாசைப்பட்டுக் கண்ட கண்கள் இன்று தூங்காமல் அழுங்கலாகிய துன்பத்தினை யனுபவித்துத் தம்முள்ளே யிருக்கிற நீர்அற்றுப்போக (எ - று).*
*கண்கள் அழுதழுதுநீரற்றுப் போகும் (எ - ம்). (எ)*

**1178.** பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண்.

*'காதலர் பிரிந்து போனவரல்லர்; இங்கே தானே யிருக்கிறார். அவரைக் காணுமளவும் நீ பொறுக்க வேணும்' என்ற தோழிக்குச் சொல்லியது.*

(இ - ள்.) மனத்தி லாசையில்லாமல் பேச்சுமாத்திரத் திலே யாசையுடையவர் இங்கே யிருக்கிறார். அவராலே பலன் என்ன? அவரைக் கண்கள் காணாதமைகின்றனவில்லை (எ-று).

சொன்னபடி செய்யாதவர்களாலே ஒரு பிரயோசனமு மில்லை (எ - ம்). (அ)

1179. வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ரூற்றன கண்.

'நீயு மாற்றி நின் கண்களும் துயில்வனவாதல்வேண்டு' மென்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) காதலர் வாராத நாளிலே வரவுபார்த்துத் தூங்காது, வந்த நாளிலே அவர் பிரிந்துபோகப்போகிறா ரென் கிற பயத்தினாலே தூங்கா ; ஆனபடியினாலே, இரண்டுவகை யாலேயும் என் கண்கள் பொறுத்தற் கரிய துன்பத்தை யுடையன (எ - று).

என் கண்களுக்கு எந்நாளும் நித்திரையில்லை (எ-ம்). (கூ)

1180. மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போ
லறைபறை கண்ணா ரகத்து.

'காதலரை இந்த வூரார் பழியாமல் அவர்கொடுமையை மறைக்க வேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) யான் காதலர்கொடுமையை மறைத்துக் கொண்டிருக்கவும், என் கண்கள் வாடிப் புலர்ந்திருக்கிறதினால், இந்த வூரார்க்கு நான் மறைக்கிறதை அறிகிறது மெத்த எளிது (எ - று).

உள்ளே யிருக்கிறதைப் புறத்தியாருக்கு அறியப்பண்ணு கிறதினாலே 'அறை பறை கண்' என்றார். (ய)

(பாலைநிலம் முற்றும்)

---

## 119. பசப்புறுபருவரல்

[முல்லைநிலம்]

அஃதாவது - நாயகன் பிரிந்துபோனதைப் பொறுக்க மாட்டாமையினாலே, உடம்பு வேறு நிறமாய் வெளுத்துப் பசலைபூக்கிறதாம்.

**1181.** நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற.

*முன்பு நாயகன் பிரிந்துபோதற்குச் சம்மதித்த நாயகி, பிற்பாடு அதுபொறுக்கமாட்டாமற் பசந்தவழி, தன்னுள்ளே சொல்லியது.*

(இ - ள்.) என்னை நயந்தவரை என்னிடத்திலே வைத்திருக்கப் பொருமல் அவர் பிரிந்துபோதற்கு உடன்பட்ட நான், அவர் பிரிந்துபோன பிறகு, அதுபொறுக்கமாட்டாமற் பசலையான என் இயல்பை யார்க்குச் சொல்வேன்? (எ - று). (க)

**1182.** அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு.

*ஆற்றுளெனக் கவன்ற தோழிககு 'ஆற்றுவல்' என்பதுபடச் சொல்லியது.*

(இ - ள்.) யான் பொறுத்துக்கொண்டிருக்கவும் இந்தப் பசலைநிறம், தன்னை உண்டாக்கினுர் அவரென்னும் பெருமிதத்தால், என் உடம்புமேலெல்லாம் பரவாநின்றது (எ - று). (உ)

**1183.** சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாரு
நோயும் பசலையுந் தந்து.

*'அழகும் நாணு மழியாமற் பொறுத்துக்கொணடிருக்கவேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது.*

(இ - ள்.) நாயகன் பிரிந்தவன்றே என் அழகையும் நாணத்தையும் தாம் வாங்கிக்கொண்டு, காமநோயினையும் பசலையையும் எனக்குத் தந்து போனுர் (எ - று). (ங)

**1184.** உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு.

(இ - ள்.) பிரிந்துபோனவர் சொன்ன சொற்களை யான் மனத்திலே நினைக்கிறேன்; வசனத்தாலே சொல்லுகிறதும் அவர்நன்மைகளையே; இப்படித் செய்யாநிற்கவும் பசலை வந்தது கள்ளமாயிருந்தது (எ - று).

யான் பொறுத்துக்கொண்டிருக்கவும், பசலை எப்படி வருகிறது! (எ - ம்). (ச)

1185. உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்
மேனி பசப்பூர் வது.

'காதலர் பிரிந்து அணித்தாயிருக்கவும் ஆற்றுகின்றிலை' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) என்னுடைய நாயகன் பண்டு பிரிந்து உங்கே போகவும், இங்கே என்மேனி பசலை யூர்கிறதன்றோ! இப்போதும் அப்படி யல்லாமல் வேறொன்றுமோ? (எ - று). (ரு)

1186. விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

இதுவுமது.

(இ - ள்.) விளக்கு அவிந்துவருகிறது பார்த்துக்கொண்டிருந்து இருள் வருகிறதுபோல, நாயகன் பிரிந்துபோகிறது பார்த்துக்கொண்டிருந்து பசலை வரும் (எ - று). (சு)

1187. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு.

இதுவுமது.

(இ - ள்.) முன்னொருநாள் நாயகனை கட்டித்தழுவிக் கொண்டு இருந்த நான் அறியாமல் விட்டு நெகிழ்ந்தேன்; நெகிழ்ந்தவுடனே, பசலை வந்து அள்ளிக்கொள்வதுபோல என் மேனியெல்லாம் நிறைந்தது (எ - று). (எ)

1188. பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில்.

'நீ இப்படிப் பசக்கலாகா' தென்ற தோழியொடு புலந்து சொல்லியது.

(இ - ள்.) 'இவள் பொறுத்திராமல் பசலையானாள்' என்று என்னைப் பழிக்கிறவர்களல்லாமல், 'இவளைத் துறந்து விட்டுப் போனார் அவர்' என்று சொல்லுகிறவர் ஒருவருமில்லை (எ - று). (அ)

**1189.** பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின்.

*இதுவும் அது.*

*(இ - ள்.) நாயகன் தான் பிரிந்துபோதற்கு நான் உடன் படும்வகை சொல்லியவர் இன்று உன் கருத்தால் நல்ல நிலை யினராவராயின், என் மேனி பட்டதுபடப் பசப்பதாக (எ-று).*

*முன் பிரிவின் கொடுமை அறியாத வென்னைப் பிரிவுக்கு உடன்படுத்தினவர் (இக்கொடுமைப்படுத்தினவர்) நன்று யிருக்க (எ - ம்). (கூ)*

**1190.** பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்ரு ரெனின்.

*(இ - ள்) அன்று தம் குறையைச் சொல்லிக் கூடின வருக்கு இன்று நல்காமையைச் சினேகிதர் தூற்ருராயின், பசலையாளுள் என்று பேர்பெறுகிறது எனக்கு நல்லது (எ - று).*

*அவரியல்பைப் பழித்துக் கூருது, 'இன்னும் பசந்தாள் இவள்' என்று 'என்மீது குறைகூறின், அது யான் பிரிவுத் துயராற்றும் வழி (எ - ம்). (ய)*

---

## *120. தனிப்படர்மிகுதி*

*அஃதாவது - நாயகன் தனியே யிருந்து வருந்துகின்ற தின்றி நாயகி தான் தனியே யிருந்து வருந்துகின்றதைச் சொல்லுகின்றதாம்,*

**1191.** தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்ருரே
காமத்துக் காழில் கனி.

*'நாயகன் உன்னிலும் பொருரராய்க் கடுக வருவர்: நீயும் அவரோடு பேரின்பமனுபவிப்பாய்' என்ற தோழிக்குச் சொல்லியது.*

***(இ - ள்.) தம்மால் காதலிக்கப்படும் கணவர் தம்மைக் காதலிக்கப் பெற்ற மகளிர் காமநுகர்ச்சி என்னும் பரலில் லாத பழத்தினைப் பெற்ருர் (எ - று).***

'இப் பரவில்லாத பழம் யாம் பெற்றிலேம்' என்ப தாயிற்று. (௧)

1192. வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி.

இதுவுமது.

(இ - ள்.) அறமும் பொருளும் நோக்கிப் பிரிந்தால் தம்மை இன்றியமையா மகளிர்க்கு அவரை இன்றியமையாக் கணவர் அளவறிந்து வந்து செய்யும் தலையளி, காலபக்குவம் அறிந்து மழை பெய்தாற்போலும் (எ - று).

காலபக்குவத்துக்கு மழையில்லாவிட்டால், அந்த மழையாலே பிழைக்கிறவர்கள் இறந்துபோவதுபோல, சொன்ன பிரமாணத்திற்கு நாயகன் வாராமற்போனால் நாமும் பிராணனை விடுவோம் (எ - ம்). (௨)

1193. வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு.

இதுவுமது.

(இ - ள்.) தம்முடைய நாயகனாலே வாஞ்சிக்கப்பட்ட ஸ்திரீகளுக்கு நம்பிக்கைசொல்லி நாயகன் பிரிந்தால் 'நம்மை நினைந்து கடுக வருவார்; அவர் வந்தால் நாம் இன்புற்று வாழ்வோ'மென்று சந்தோஷம் இருக்கும் (எ-று).

அவர் வாராவிட்டால் இறந்துவிடுவேன் (எ - ம்). (௩)

1194. வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்.

(இ - ள்.) கற்புடைய மகளிரால் நன்கு மதிக்கப்படுவாரும் தம்முடைய கணவரால் விரும்பப்படாவிட்டால், அது அவர் தீவினைப்பயன் (எ - று).

தீவினையுடைய எனக்கு அந் நன்குமதிப்பால் பலனில்லை (எ - ம்). (௪)

1195. நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை.

(இ - ள்.) நம்மாலே காதல்கொள்ளப்பட்டார் தாமும் நங்கண் காதல்கொள்ளாவிட்டால், அவர் நமக்கு என்ன இன்பத்தைச் செய்வர் (எ - று).

அவர் காதல்கொள்ளாவிட்டால், நாம் காதல்கொண்டது துக்கமேயாம் (எ - ம்). (ரு)

**1196.** ஒருதலையா னின்னாது காமங்காப் போல
விருதலை யானு மினிது.

இதுவுமது.

(இ - ள்.) ஸ்திரீகள் புருஷர்கள் என்னு மிரண்டிடத்திலேயும் ஆசை யுண்டாயிருந்தால் அது நல்லது. ஒருவரிடத்திலே உண்டாய் ஒருவரிடத்திலே ஆசையில்லாவிட்டால், அது நன்றாகாது. இருவரும் ஒத்ததே இன்பமாம் (எ - று). (சு)

**1197.** பருவரலும் பைதலுங் காணான்கொல் காம
னொருவர்க ணின்றொழுகு வான்.

இதுவுமது.

(இ - ள்.) காமம் அனுபவித்தற்குரிய ஸ்திரீபுருஷர்கள் இரண்டுபேரிடத்திலும் சரியாய் நில்லாமல், ஒருவரிடத்திலே நின்று பொருகின்ற மன்மதன் அவ்விடத்தில் உண்டான பசலையையும் தனிமையையும் காணானோ! (எ - று).

எல்லாரிடத்திலேயும் நடக்கிறதெல்லாம் அறிகிற மன்மதனும் என்னிடத்திலே வேறானான். இனி யான் பிழைக்கிற விதம் எப்படி? (எ - ம்). (எ)

**1198.** வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

தலைமகன் தூது வரக் காணாமல் சொல்லியது.

(இ - ள்.) தம்மால் விரும்பப்பட்ட காதலரிடத்துநின்றும் ஒரு நல்ல வார்த்தை வாராமலே பிரிவாற்றி உயிர்வாழ்கிற ஸ்திரீகளைப் போல கெட்டிமனசுடையவர்கள் இந்த வுலகத்தில்லை (எ - று). (அ)

**1199.** நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு.

(இ - ள்) என்னாலே காதலிக்கப்பட்ட காதலர் என்னிடத்திலே அன்பிலரேயாயினும், அவர்திறத்து ஒரு சொல்லும் செவிக்கு இன்பமாம் (எ - று).

அவர் வாரலர் என்னுஞ் சொல்லாயினும் அமையும்; அந்த வார்த்தையுங் கேட்டிலேன் (எ - ம்). (௯)

1200. உறுஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறுஅய் வாழிய நெஞ்சு.

*தலைமகன் தூது வாராதது கண்டு, தான் தூதுவிட நினைத்தவள் நெஞ்சொடு சொல்லியது.*

(இ - ள்.) உன்னுடன் கூடாதார்க்கு உன் துக்கத்தைச் சொல்லலுற்ற நெஞ்சே, நீ பிரிவு பொறுக்கமாட்டாவிட்டால், உனக்குத் துயரஞ் செய்கின்ற கடலைத் தூர்க்க நினைப்பாயாக; அது எளிது (எ - று).

நீ சொல்லுகிறது அளவு இல்லாத வியாதியானபடியினாலேயும், கேட்பார் உன்னிடத்திலே உறவிலரானபடியினாலே-யும், அதுமுடியாது; முடிந்தாலும் பயனில்லை என்பது கருதாது முயலாநின்றாய் (எ - ம்). (ம)

---

## 121. நினைந்தவர் புலம்பல்

அஃதாவது - முன் கூடியபோது பெற்ற இன்பத்தை நினைந்து, பள்ளியறையிலே தலைமகள் தனியாயிருக்கிறதும், பாசறையிலே தலைமகன் தனியா யிருக்கிறதுமாம். இவர்கள் இருவரும் தனிமையா யிருந்து வருந்துகிறது.

1201. உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது.

*தூதாக வந்த பாங்கனுக்குத் தலைமகன் சொல்லியது.*

(இ - ள்.) முன் கூடிய நாளையின்பத்தைப் பிரிந்த-போது நினைத்தாலும், அப்பொழுது கூடிய இன்பம் பெற்றாற்போல நீங்காத மகிழ்ச்சியைச் செய்தலால், குடித்தாலல்லாமல்

மகிழ்ச்சியைச் செய்யாத கள்ளினுங் காமம் இன்பமுடையது (எ - று). (க)

**1202.** **எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்**
**நினைப்ப வருவதொன் றில்.**

இதுவுமது.

(இ - ள்.) தனக்குப் பிரியமானவரைப் பிரிந்தபோது அவர்களை நினைத்தால், அந்த நினைவினாலே வருந் துக்கமில்லை-யாம்; ஆனபடியினாலே, காமம் எப்படியும் நல்லதாம் (எ - று).

**1203.** **நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்**
**சினைப்பது போன்று கெடும்.**

தலைமகனை நினைக்கின்ற தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) எனக்குத் தும்மல் எழுவதுபோலிருந்து கெடாநின்றது; அதனாலே, காதலர் என்னை நினைப்பார்-போன்று நினையாராகல் வேண்டும் (எ - று). (உ)

**1204.** **யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்**
**தோஒ வுளரே யவர்.**

(இ - ள்.) எம்முடைய நெஞ்சிலே அவர் எப்பொழுதும் இராநின்றார். அப்படிப்போலே, அவர்நெஞ்சிலும் யாமும் இரோமோ? (எ - று). (ச)

**1205.** **தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொ**
**லெந்நெஞ்சத் தோவா வரல்.**

(இ - ள்.) தம்முடைய நெஞ்சிலே யாம் போகவொட்டாமல் எம்மைக் காவல்கொண்ட காதலர், தாம், எம்முடைய நெஞ்சிலே எப்பொழுதும் வருதற்கு நாணாரோ? (எ - று). (ரு)

**1206.** **மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியா**
**னுற்றநா ளுள்ள வுளேன்.**

'அவரோடு புணர்ந்தநாளை இன்பத்தை நினைந்து மாய்ந்துபோகா-நின்றாய்; அந்த வின்பத்தை மறந்துவிடு' என்ற தோழிக்குச்சொல்லியது.

(இ - ள்.) யான் அவரோடு புணர்ந்தநாளையின்பத்தை நினைக்கிறதினாலே யிந்த துக்கமாகிற வெள்ளத்துக்குள்ளே பிழைத்திருக்கிறேன்; அந்த இன்பத்தை நினையாவிட்டால், பின்னை யெதனாலே பிராணனுடனே யிருப்பேன்? (எ - று).

1207. மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியே
னுள்ளினு முள்ளஞ் சுடும்.

இதுவுமது.

(இ - ள்.) அந்த இன்பத்தை மறக்கவறியேனாகி நினையாநிற்கவும், பிரிவு என் உள்ளத்தைச் சுடாநின்றது; அப்படிப் பிரிவாற்றாத யான், அந்த இன்பத்தை மறந்தால், இறந்து போகிறதல்லாமல், எதனாலே யிருக்கப் போகிறேன்? (எ-று).

1208. எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு.

'இந்தத் துக்கமறிந்து வந்து காதலர் நினக்கு இன்பஞ் செய்வ' ரென்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) காதலரை நாம் எத்துணையும் மிக நினைந்தாலும், அதற்கவர் கோபித்துக்கொள்ளார்; காதல ரெனக்குச் செய்யு மின்பமாவது அம்மாத்திரமன்றோ? (எ - று).

கோபித்துக்கொள்ளாமையாவது - நாம் நினைக்கிறதற்கு உடன்பட்டு நம் நெஞ்சிலேயிருக்கிறது. (அ)

1209. விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து.

(இ-ள்) முன்பெல்லாம் நாமிருவரும் வேறல்லே மென்று சொல்லுவாரது அளியின்மையை நினைந்து என்னுயிர் கழியாநின்றது (எ - று).

அவர் வேறல்லேம் என்ற யுறுதிபற்றி யிருந்த தென்னுயிர் (எ - ம்). (கூ)

1210. விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி.

(இ - ள்.) மதியே, என் நெஞ்சில் இடைவிடாது இருந்தே விட்டுப்போயினாரை யான் என் கண்ணளவாயினும் எதிர்ப்படும்வகை நீ படாதொழிவாயாக (எ - று).

'மதியே, உறுதி சொன்ன நாயகனைக் கண்களாற் காணு மளவும் மறையாதிருக்க' வென்று நினைந்ததாம். (ம)

---

## 122. கனவுநிலையுரைத்தல்

அஃதாவது - தலைமகள் தான் கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுகிறது. அந்தக் கனவும் நினைவுமிகுதியினாலே காணப்பட்டதாம்.

1211. காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து

தலைமகன் தூது வரக்கண்டவள் சொல்லியது.

(இ - ள்.) யான் வருத்தப்படுகிறது அறிந்து அது தீரக் காதலர் விடுத்த தூதினைக்கொண்டு என்னிடத்திலே வந்த கனவுக்கு, யான் விருந்தாக எதைச் செய்வேன்? (எ - று.)

விருந்து என்பது - புதிதாய் வந்தவர்களுக்குச் செய்யு முபசாரம். அது கனவுக்கு ஒன்று காணாதபடியினாலே 'யாது செய்வேன்' என்றாள். (க)

1212. கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்.

தூதுவிட நினைத்தவள் சொல்லியது.

(இ - ள்.) தூங்காமலிருக்கிற கயல்போலும் என் கண்கள் யானிரந்தாற் றுஞ்சுமாயின், கனவினிடையே காதலரைக் காணலாம். கண்டால், அவருக்கு யான் வருந்தி இருக்கிறதெல்லாம் யானே விரியச் சொல்லுவேன் (எ - று).

தூதுவரோடு சொல்லி யனுப்பினால் சுருங்கச் சொல்ல வேண்டும்; தான் சொன்னால் மனதில் உண்டானதெல்லாஞ் சொல்லலாம் (எ - ம்). (உ)

**1213.** நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டென் னுயிர்.

*ஆற்ருளெனக் கவன்ற தோழிக்கு 'ஆற்றுவல்' என்பதுபடச் சொல்லியது.*

*(இ - ள்.) நனவிலே வந்து என்னைச் சேராதாரைக் கனவிலே காண்கிறதினாலே, என் உயிர் நிற்கிறது; இல்லா-விட்டால் இறந்துபோம் (எ - று).* (௩)

**1214.** கனவினா னுண்டாகுங் காம நனவினா
னல்காரை நாடித் தரற்கு.

*இதுவுமது.*

*(இ - ள்.) நனவிலே வந்து சேராதவரை அவர் போன விடந் தேடிக் கொண்டுவந்து கனவு தருதலால், அந்தக் கனவி னிடத்திலே எனக் கின்பமுண்டாகாநின்றது (எ - று).* (௪)

**1215.** நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது.

*இதுவுமது.*

*(இ - ள்.) முன்பு நினைவினாலே காதலரைக் கண்டு கூடி யனுபவித்த இன்பமும் அப்பொழுதே இனிதாயிற்று; இன்று கனவிலே கண்ட இன்பமும் கண்டபொழுதே இனிதாயிற்று; ஆனபடியினாலே, எனக்கு இரண்டுவகையும் ஒத்துச் சரி-யாயிருந்தன (எ - று).* (௫)

**1216.** நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன்.

*இதுவுமது.*

*(இ - ள்.) நனவென்று சொல்லப்படுகின்ற வொருபாவி இல்லாவிட்டால், கனவிலே வந்து கூடிய காதலர் என்னை விட்டுப் பிரியார் (எ - று).* (௬)

**1217.** நனவினா னல்காக் கொடியார் கனவினா
னென்னெம்மைப் பீழிப் பது.

(இ - ள்.) ஒருநாளும் நனவிலே வந்து கூடாத பொல்லா-தவர் தினந்தினமும் கனவிலே வந்து நம்மை வருத்துகிறது என்ன வியைபுபற்றி? (எ - று). (எ)

1218. துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து.

(இ - ள்.) என் நெஞ்சை விடாமல் இருக்கிற காதலர் நான் தூங்குகிறபொழுது வந்து என் தோள்மேலராய், பிறகு விழிக்கிறபோது திரும்பி என் நெஞ்சிலே இருப்பர் (எ - று).

ஒருகாலும் என்னை விட்டுப் பிரியாதாரை நீ பொல்லாங்கு சொல்ல வேண்டா (எ - ம்). (அ)

1219. நனவினா னல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர்.

(இ - ள்.) தமக்கு ஒரு காதலர் இல்லாதபடியினாலே, அந்தக் காதலரைக் கனவிற் கண்டறியாத ஸ்திரீகள், தாம் அறிய நினைவில் வந்து கூடாத காதலரை, அன்பிலரென நோவர் (எ - று). (கூ)

1220. நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர்.

(இ - ள்.) இந்த வூரிலே இருக்கிற ஸ்திரீகள் நினைவிலே நம்மை விட்டுப்போனா ரென்று நம்முடைய காதலரைக் கொடுமை சொல்லாநிற்பர்; அவர் கனவின்கண் வருகிற தறியார் (எ - று).

கனவிலே கண்டறியாதவர்கள், நனவில் வந்தாலும், பிராணனை நிற்கப்பண்ணுகிற நாயகனைக் குறைசொல்லுவார்கள் (எ - ம்). (கO)

## 123. பொழுதுகண்டிரங்கல்

*அஃதாவது - சாயங்காலம் வந்தது கண்டு தலைமகள் விசாரப்படுதலாம்.*

**1221.** மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது.

*(இ - ள்.) மாலைப்பொழுதே, நீ முன்னாள்களிலே வந்த மாலையோ வென்னின் அல்லை. நாயகனைப் புணர்ந்து பிரிந்திருக்கிறவர்கள்உயிரைக் கொண்டுபோகிற கடைசிக்காலமாய் இருந்தாய் (எ - று).* (க)

**1222.** புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை.

*(இ - ள்.) மயங்கின மாலைப்பொழுதே, நீயு மெம்மைப் போல வாடின கண்களை யுடையையாயிருந்தாய்: நின் காதலரும் என் காதலர்போல வன்கண்ணரோ? (எ - று).*

*மயங்குகிறதாவது - பகலும் இரவும் தம்முள் விரவி - யிருத்தலாம்; கலங்குதலும் தோன்றநின்றது.* (உ)

**1223.** பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்.

*(இ - ள்.) இந்த மாலைப்பொழுது, காதலர் என்னுடனே கூடியிருக்கிற நாளெல்லாம், எனக்குப் பயந்துப் வந்தது; இப்போது காதலர் பிரிந்தபடியினலே, பயப்படாமல் என்னைக் கொல்லுவதாகிய துன்பத்தை மேன்மேலும் உண்டாக்கிக்- கொண்டு வருகின்றது (எ - று).* (ங)

**1224.** காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும்.

*(இ - ள்.) காதலர் கூடியிருக்கிறபோதெல்லாம் என் உயிர் தழைக்க வந்த மாலைப்பொழுது, அவர் இல்லாதபோது, கொல்லுகிற கொலைக்களத்திலே கொலைஞர் வருமாறு போல வாராநின்றது (எ - று).* (ச)

1225. காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை.

(இ - ள்.) காலையும் மாலையும் அவர் கூடின நாளைப்போல வாராமல், இப்போது வேறாய் வாராநின்றன. யான் காலைக்குக் செய்த உபகாரம் என்ன? மாலைக்குச் செய்த பகை என்ன? (எ - று).

காலைப்பொழுது விரகவேதனை செய்யாதிருக்க, மாலைப் பொழுது வருத்தஞ் செய்கிறபடியினாலே, பகையாம் (எ- ம்).

1226. மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன்.

(இ - ள்.) முன்னெல்லாம் நட்பாய் எனக்கு இன்பஞ் செய்துவந்த மாலைப்பொழுது இப்போது பகையாய்த் துன்பஞ் செய்கிறதை நாயகன் பிரிதற்குமுன்னே யறியேன் (எ - று).

அறிந்தால், காதலரைப் பிரிந்து போகவொட்டேன் (எ - ம்). (சு)

1227. காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை அலருமிந் நோய்.

(இ - ள்.) இந்தக் காமநோயாகிய பூ காலைப்பொழுதிலே அரும்பி, பகலெல்லாம் பெரிய அரும்பாகி முதிர்ந்து, மாலைப் பொழுதிலே மலராநிற்கும் (எ - று). (எ)

1228. அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை.

(இ - ள்.) முன்னெல்லாம் இனியதாய்ப் போந்த ஆயன்-குழல், இதுபொழுது நெருப்புப்போலச் சுடுவதாய மாலைப் பொழுதுக்குத் தூதுமாய், அந்த மாலை வந்து என்னைக் கொல்லுதற்குக் கொல்லும் படைக்கலமு மாயிற்று (எ-று). (அ)

1229. பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து.

(இ - ள்.) இதற்குமுன்னெல்லாம் யானே மயங்கி துக்கப் பட்டேன். இனிக் கண்டவர்களும் மதிமயங்கும்வகை மாலை

வரும்பொழுது இந்த ஊரார் எல்லாரும் மதிமயங்கி நோயுடையவர்க ளாவர் (எ - று). (௯)

1230. பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர்.

(இ-ள்.) காதலர்பிரிவைப் பொறுத்துப் பிராணனுடனே இருந்த என் உயிர், பொருளியல்பே தமக்கியல்பாக உடையவரை நினைந்து, இந்த மாலைப்பொழுதிலே இறந்துபோகாநின்றது (எ - று).

பொருள்தேடப் பிரிந்துபோனவர் சொன்ன பருவத்துக்கு வாராமையின், அவர் வாராதது பொருள் முடியாதபடியினாலே யல்லவா? பொருளையே நினைந்தாரல்லாமல், தான் சொன்ன பருவத்தை நினைந்தாரல்லர் (எ - ம்). (௧௰)

---

## 124. உறுப்புநலனழிதல்

அஃதாவது - தலைமகள்தன் கண்ணும் தோளும் முகமும் முதலான அவயவங்கள் தம் அழகழிதல். இது நாயகனை நினைந்து வருந்துகிறதினாலேயாம் என்பது.

1231. சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண்.

பிரிவாற்றுமல அழகழிந்த தலைமகட்குத் தோழி சொல்லியது.

(இ - ள்.) இந்த ஆற்றுமை நம்மிடத்திலேயே நிற்க, தூரத்திலே போன காதலரை நீ நினைந்து அழுகிறதினாலே, நின் கண்கள் பிரகாசம் அழிந்து, முன்னே தமக்கு நாணின மலர்களுக்கு இப்பொழுது தாம் நாணுநின்றன (எ - று). (௧)

1232. நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண்.

இதுவுமது.

(இ - ள்.) பசப்பெய்தன்மேல் நீர்வார்கின்ற நின் கண்கள் நம்மால் விரும்பப்பட்டவரது சேராமையைப் பிறருக்குச்

சொல்லுவபோலாநின்றன; இனி நீ பொறுத்திருக்கவேண்டும் (எ - று). (உ)

1233. தணந்தமை சால வறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள்.

இதுவுமது.

(இ - ள்.) காதலர் கூடிய நாள் இன்பமிகுதியாற் பூரித்த நின் தோள்கள், இப்போது அவர் பிரிந்துபோனதையெல்லாரு மறியச் சொல்லுகிறதுபோலே, வாடியிராநின்றன; இது தகாது (எ - று). (ந)

1234. பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

இதுவுமது.

(இ - ள்.) அன்றும் நாயகனைப்பிரிந்த தோள்கள், அவராற் செய்யப்பட்ட அழகே யன்றிப் பழைய இயற்கையழகையும் இழந்து, வாடி, வளைகள் கழன்றுபோகாநின்றன (எ - று).

1235. கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

இதுவுமது.

(இ - ள்.) கட்டிக்கொண்டிருக்கிற கை நெகிழ்ந்தாலும் பொறாதவளுக்கு இத்தனை நாள் பிரிந்தா லெப்படியோ வென்று நினையாத கொடிய நாயகனுடைய கொடுமையைச் சொல்லாநின்றன : வளைகளும் கழன்று பழைய இயற்கையழகும் இழந்த இத் தோள்கள் (எ - று).

அவரோடு கலந்த தோள்களே சொல்லுவனவானால், அயலார் சொல்லுதல் சொல்லவேண்டுமோ ? (எ - ம்). (ரு)

1236. தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடியரெனக்கூற னொந்து.

(இ - ள்.) நான் பொறுத்துக்கொண்டிருந்தாலும், என் - வயத்திலே நில்லாமல் வளைகள் கழலுமாறு, தோள்கள்

மெலிய, அவற்றைக் கண்டு, நீ காதலரைக் கொடியர் என்று சொல்லுதலைப் பொருது நோகின்றேன் (எ - று).

யாதற்றேனுகில் அது அவர் வாராததற்கன்று, நீ கூறு-கின்றதற்கு (எ - ம்). எனவே, நீ அவரைக் கொடியர் என்று சொல்லவேண்டாம் (எ - ம்). (சு)

1237. பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து.

(இ - ள்.) பொல்லாதவர் என்கிறவர்க்கு, நெஞ்சே, நீ போய், என் வாடிய தோளினால் விளைந்த சண்டையைச் சொல்லி வெகுமானம் பெறவல்லையோ; வல்லையானால், அதற்குச் சரியான தொன்றுமில்லை (எ - று). (எ)

1238. முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்.

தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்.) தன்னைக் கெட்டியாய்க் கட்டிக்கொண்ட என் கைகளை நெகிழ்த்தவுடனே, நாயகியுடைய முகம் பசலை-பூத்தது. அப்படிப்பட்ட முகம் இந்தப் பிரிவிற்கு யாது செய்-யுமோ? (எ - று).

ஆகவே, கடிதிற் செல்லவேண்டும் என்பது கருத்து.

1239. முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்.

இதுவுமது.

(இ - ள்.) அப்படிக் கைகளை நெகிழ்த்தபோது, நடுவே சிறுகாற்று நுழைந்தது; அந்தக் காற்றுப் பொருமல் நாயகி-யுடைய கண்கள் பசலைபூத்தன. அப்படிப்பட்ட கண்கள், மலைகளும் காடும் நாடுகளுமான இவைகளெல்லாம் நடுவேயிருக்க, எப்படிப் பொறுத்தன? (எ - று). (கூ)

1240. கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
யொண்ணுதல் செய்தது கண்டு.

இதுவுமது.

(இ - ள்.) குளிர்ந்த காற்றுப்பட வந்த கண்ணின் பசப்பு, தனக்கயலாயிருக்கிற நுதல் பசலைபூத்தது கண்டு, துன்பமுற்றது (எ - று).

'முன்புதான் புணர்ந்திருந்த நாளையில் புல்லின கை நெகிழவே, உறுப்பு நலனழியும். அப்படியிருக்கவே, இப்பொழுது நாம் பிரிந்து நெடுநாளாகையால், பசப்பு முதலானது வந்து நாயகியை வருத்தாநிற்கும். ஆதலின், யாம் கடிதிற் போய் நாயகியைச் சேரவேண்டும் (எ- ம்). (கo)

---

## 125. நெஞ்சொடு கிளத்தல்

அஃதாவது-பிரிவுபொறுமல் வருந்தியவழி, தன் குறை சொல்லுதற்கு ஒருவரையுங் காணுமல், செய்ய வேண்டிய வகை அறியாது, தலைவி நெஞ்சொடு சொல்லியதாம்.

**1241.** நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்று
எவ்வநோய் தீர்க்கு மருந்து.

தன் ஆற்றுமை தீருந் திறன நாடியது.

(இ - ள்.) நெஞ்சே, இந்தக் காமநோயினைத் தீர்க்கும் மருந்தொன்றை நீயே யறிந்து எனக்குச் சொல்லாயோ (எ-று).

**1242.** காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு.

தலைமகனைக் காண்பதில் விருப்பமிகுதியால சொல்லியது.

(இ - ள்.) என் நெஞ்சே, நீ வாழ்வாயாக. நாயகன் நம்பேரிலே காதல் இல்லாதபோது, நீ அவர்வரவு பார்த்து வருந்துவது நின் பேதைமையல்லாமல் பிறிதில்லை (எ - று).
யாம் அவர்பாற் செல்லுதலே அறிவாவது (எ - ம்). (உ)

**1243.** இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பிரிந்துள்ளல்
பைதனோய் செய்தார்க ணில்.

இதுவுமது.

(இ - ள்.) நெஞ்சே, அவர்அண்டைக்குப் போகாமலும் பிராணனை விடாமலும் இருந்து, காதலர்வரவை நினைந்து நீ வருந்துகின்றது என்ன ? இத் துன்பநோய்செய்தவரிடத்திலே நமக்கு இரங்கி வரக் கருதுதல் உண்டாகாது (எ - று).

1244. கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று.

*இதுவுமது.*

*(இ - ள்.) நெஞ்சே, நீ அவர்பால் செல்லலுற்றுயாயின், இக் கண்களையும் உடன்கொண்டு போவாயாக; அல்லாமல் நீ மாத்திரமே போனால், இக் கண்கள்தாம் அவரைக் காண்டல்வேண்டி, நீ காட்டென்று என்னைத் தின்பனபோன்று வாதைப்படுத்தாநிற்கும் (எ - று).* (ச)

1245. செற்று ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்று லுறுஅ தவர்.

*இதுவுமது.*

*(இ - ள்.) நெஞ்சே, யாம் தம்மை நினைக்கத் தாம் நம்மை நினையாத காதலரை, வெறுத்தாரென்று கருதி, புலந்து கைவிட்டிருக்கும் வலி நமக்கு உண்டோ? இல்லை (எ - று).* (ரு)

1246. கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்தியென் னெஞ்சு.

*நெஞ்சினைக் கழறியது.*

*(இ - ள்.) நெஞ்சே, யான் அவரோடு பிணங்கினால் அந்தப் பிணக்கைப் புணர்ச்சியினாலே நீக்கவல்ல காதலரைக் கண்டால், பொய்யேயாயினும் ஒருகால் பிணங்கி அவரைவிட்டுப் பிரியமாட்டாய். நீ அவரைப் பொல்லாதவர் என்று பொய்க்காய்வு காயாநின்றாய்; இதனை விட்டு அவர்பக்கல் போகத் துணிவாயாக (எ - று).* (சா)

1247. காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு.

*நாண் தடுத்தலின் அச் செலவு ஒழிவாள் சொல்லியது.*

*(இ - ள்.) நல்ல நெஞ்சே, காமம் விடமாட்டாயாகில், நாணுகிய வெட்கத்தை விடு; வெட்கத்தை விடமாட்டாயாகில், காமத்தை விடு. இரண்டும் விடமாட்டாயாகில், இரண்டையும் உடன் தாங்கும் வலிமை எனக்கில்லை (எ - று).*

இரண்டையும் விடாது பெண்மையை நிலைபெறுத்தலின் நல்லை என்னுங் குறிப்பிற்று (எ - ம்). (எ)

1248. பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு.

இதுவுமது.

(இ - ள்.) என் நெஞ்சே, இந்த ஆற்றாமையை அறியாத-படியினாலே வந்து புணர்தல்செய்யா ரென்று கருதி, அதனை அறிவிக்க நம்மைப் பிரிந்துபோய் அவர்பின்னே ஏங்கிச் செல்கிற நீ ஒன்றுமறியாய் (எ - று).

ஆற்றாமைஅறிந்தும் வாராமற் போயினாரை, அதனைக் காணுதவழி அவர்பின்னே சென்றுரைக்க வருவ ரென்று கருதினமையிற் 'பேதை' யென்றார். (அ)

1249. உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு.

இதுவுமது.

(இ – ள்.) என் நெஞ்சே, காதலர் நின் அகத்தராக, அது முன்பெல்லாம் கண்டுவைத்திருந்தும், இப்பொழுது நீ புறத்திலே தேடுகிறது யாரிடத்து ? (எ - று).

நின் அகத்து இருக்கின்றவரை அறியாது, புறத்துத் தேடிச் சேறல் நகையுடையது. அதனை ஒழி (எ - ம்). (கூ)

1250. துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
வின்னு மிழத்துங் கவின்.

அவரை மறந்தாறறல் வேண்டும என்பதுபடச் சொல்லியது.

(இ - ள்.) நம்மைக் கூடாதபடி துறந்து போயினாரை நாம் நம்முள்ளே உடையோமாக, அவரை விட்டுப் பிரியமாட்டாமல் நம் அகக்கவினு மிழப்போம் (எ - று).

நம்மைத் துறந்து போயினாரை நாம் மறத்தல்மாட்டேமாதலின், மெய்யழகு அழிந்ததுமல்லாமல், நின்ற நிறையு மிழப்போம் (எ - ம்). (கo)

## 126. நிறையழிதல்

**அஃதாவது-தலைமகள் மறைக்கத்தக்கவற்றை வேட்கை-மிகுதியால் மறைக்கமாட்டாமல் வாய்விடுதல்.**

1251. காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

'நாணும் நிறையும் அழியாமல் நீ பொறுக்கவேண்டு' மென்ற தோழிக்குத் தலைமகள் சொலலியது.

(இ - ள்.) நாணமாகிய தாழ்ப்பாளிட்ட நிறை என்னுங் கதவைக் காமம் என்னுங் குந்தாலி பிளந்துபோடாநின்றது (எ - று).

காமமிகுதியினாலே யான் ஆற்றமாட்டேன் (எ - ம்). (க)

1252. காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை
யாமத்து மாளுந் தொழில்.

(இ - ள்.) எல்லாருந் தொழில் ஒழிந்து சும்மா இருக்கிற பாதி இராத்திரியிலேயும்,என் நெஞ்சத்தைஒறுத்துத் தொழில்-கொள்ளாநின்றபடியினாலே, காமம் என்று சொல்லப்பட்ட ஒன்று தயையில்லாததாய் இருந்தது (எ - று). (உ)

1253. மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும்.

ஸ்திரீகள்காமம் மறைகசுப்படும எனறவளுக்குச சொலலியது.

(இ - ள்.) இந்தக் காமத்தை யான் என்னுள்ளே மறைக்க நினையாநின்றேன். அது நில்லாமல் தும்மல்போல வெளிப் பட்டுவிடுகின்றது (எ - று). (ங)

1254. நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காம
மறையிறந்து மன்று படும்.

இதுவுமது.

(இ - ள்.) யான் நிறையுடையேன் என்று இருப்பேன். அப்படி இருக்கவும், இன்று என் காமம் மறைக்கிறதைக் கடந்து வெளிப்படாநின்றது (எ - று).

மன்றுபடுதல் - பலரும் அறிதல். (ச)

1255. செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவ தொன்றன்று.

(இ - ள்.) தம்மை விட்டுப்போனார்பின்னே போகாது, தாமும் விட்டுப்பிரிந்து நிற்கும் நிலைமை, காமநோயினை யுறுதார்

அறிவதல்லாமல், காமநோயினை யுற்றவர்கள் அறிவதொன்றன்று (எ - று).

பின் செல்லுகிறதாவது - விடாமல் நினைத்து இருக்கிறதாம். (ரு)

1256. செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
எற்றென்னை யுற்ற துயர்.

(இ - ள்.) என்னைவிட்டுப் பிரிந்தார்பின்னே நான்போக வேண்டுதலால், என்னை அடைந்த துயர் மிகவும் நன்று! (எ-று).

இக் காமநோய் யான் சொல்லவுங் கேட்கவு மாவதொன்றன்று; மிகக் கொடிது (எ - ம்). (சு)

1257. நாணென வொன்றோ அறியலம் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின்.

'பரத்தையிற்பிரிந்து வந்த தலைமகனோடு பிணங்கியிராமல் மதிமயங்கிப் புணர்ந்த காரணம் என்' என்றவளுக்குச் சொல்லியது.

(இ - ள்.) நம்மால் விரும்பப்பட்டவர் வந்து காமத்தால் நாம் விரும்பினவற்றைச் செய்யுமளவில், நாணம் என்று ஒன்றையு மறியமாட்டோமா யிருந்தோம் (எ - று). (எ)

1258. பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை.

இதுவுமது.

(இ - ள்.) நம்முடைய நிறையாகிய காவலை அழிக்கிற சேனையாவது பலபொய் சொல்லவல்ல கள்வனுடைய தாழ்ந்த சொற்களன்றோ? அப்படியான பின்பு, அந்தக் காவல் நிற்குமோ? நில்லாது (எ - று). (அ)

1259. புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சம்
கலத்த லுறுவது கண்டு.

இதுவுமது.

(இ - ள்.) அவர் வந்தபோது பிணங்கிஇருக்கக்கடவேன் என்று கருதி, முன் நில்லாது அப்பாலே போயினேன். போன

இடத்திலேயும் என் நெஞ்சு நில்லாமல் அவருடனே கூட நினைத்தது. ஆனபடியினாலே, இனிப் பிணங்கிஇருக்கிறது முடியாது என்று புல்லினேன் (எ - று). (௯)

1260. நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல்.

இதுவுமது.

(இ - ள்.) நிணத்தை நெருப்பிலே போட்டால் அது உருகுகிறதுபோல, தம் காதலரைக் கண்டவுடனே நிறை அழிந்து உருகும் நெஞ்சினையுடைய ஸ்திரீகளுக்கு, 'நம் நாயகனுடனே பிணங்கிஇருப்போ' மென்கிறது உண்டாமோ? ஆகாது (எ - று).

யான் அத்தன்மையே னாகலின், எனக்கு அஃது இல்லை (எ - ம்). (௧௦)

---

## 127. அவர்வயின் விதும்பல்

அஃதாவது - தலைமகனும் தலைமகளும் பிரிந்தபோது ஒருவரையொருவர் காணவேண்டி ஆசையினாலே விசனப் படுகிறதைச் சொல்லுகிறதாம்.

1261. வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்.

தலைமகள் தலைமகனைக் காணவேண்டி விசாரத்தினால் சொலலியது.

(இ - ள்) அவர் நம்மைப் பிரிந்துபோன நாள்களைச் சுவரிலே கிழித்துவைத்து, அவற்றைத் தொட்டு எண்ணி எண்ணி விரல்கள் தேய்ந்து போயின; அதுவுமல்லாமல், அவர் வரும் வழியைப் பார்த்துப் பார்த்து கண்களும் பிரகாசம் மறைந்து போயின. இப்படியாகியும் அவர் வரவில்லை (எ-று).

1262. இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற்
கலங்கழியும் காரிகை நீத்து.

(இ - ள்.) விளங்காநின்ற இழையினையுடையாய், காதலரை இன்று மறப்பேனாயின், என் தோள்வளைகள் கழன்று போம் (எ - று).

அவரை மறவாமல் நினைந்தேனாயின், மறுமையிலே அவரை அடைந்து இன்புறலாம்; ஆனபடியினாலே மறக்க மாட்டேன் (எ - ம்). (உ)

1263. உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன்.

(இ - ள்.) இன்பம் அனுபவிக்கிறதை விரும்பாமல் வெல்லுதலை நினைந்து, நாம் துணையாகிறதை இகழ்ந்து, தம் ஊக்கம் துணையாகப் போயினார் அதனைவிட்டுத் திரும்பி வருவா ரென்கிறதினாலே, நான் இன்னும் பிராணனுடனே இருக்கிறேன் (எ - று).

அவர் வாரா ரென்பதறிந்தால் அன்றே இறந்துபோவேன் (எ - ம்). (ந)

1264. கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் னெஞ்சு.

(இ - ள்) நம்மேல் ஆசையை விட்டுப் பிரிந்துபோனவர் மேல் கூடிய காமத்துடனே வருகிறதை நினைந்து, என் நெஞ்சு வருத்தம் ஒழிந்து மென்மேலும் சந்தோஷத்தை அடையா நின்றது (எ - று). (ச)

1265. காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபி
னீங்குமென் மென்றோட் பசப்பு.

(இ - ள்.) கண்கள் சந்தோஷப்படும்வகை என் கணவனை யான் காண்பேனாக. அப்படிக் கண்டபின், என் தோளிலே பூத்த பசலை தானே நீங்கும் (எ - று).

கேட்டதனாலே நீங்காது (எ - ம்). (ரு)

1266. வருகமற் கொண்க னொருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட.

(இ - ள்.) இத்தனை நாளும் வாராத நாயகன் ஒருநாள் என் கண் எதிரே வருவானாக; வந்தால், என் காமநோயெல் லாம் கெட, அமிர்தத்தை ஐம்பொறிகளாலும் பருகக்கடவேன் (எ - று).

பருகுகிறதாவது-கண்களினாலே அவர்வடிவம் பார்த்தும், காதினாலே வசனத்தைக் கேட்டும், மூக்கினாலே மோந்தும், வாயினாலே முத்தமிட்டும், மெய்யினாலே தழுவியும் இன்புறுதல்.

1267. புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின்.

(இ - ள்.) கண்போலச் சிறந்த நம் நாயகன் வந்தால், அவர் கொடுமையென வரவில்லை என்று பிணங்கியிருப்பேனோ? அல்லாமல் பிரிவாற்றாமை நோக்கிப் புல்லுவேனோ? இந்த இரண்டுவகையும் வேண்டுதலான், இரண்டையும் கலந்து செய்வேனோ? யாது செய்யக்கடவேன்? (எ - று). (எ)

1268. வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து

வேந்தனைச் சேவிக்கிற தலைமகன் சொல்லியது.

(இ - ள்.) நம்முடைய வேந்தன் சண்டைபண்ணி வெல்வானாக; அவன் வென்றால், நாமும் மனைவியைச் சேர்ந்து மாலைப்பொழுதிற்கு அங்கு விருந்து அயர்வேமாக (எ - று).

விருந்தாவது - புதியதாய் வருகிறது. (அ)

1269. ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட்சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு.

(இ - ள்.) தேசாந்திரத்திலே பிரிந்துபோயிருக்கிற நாயகன் திரும்பிவரும் நாளைக்குறித்து அவர் வருமளவும் பிராணனுடனே இருக்கிற ஸ்திரீகளுக்கு, ஒருநாள் அனேக நாள்கள் போலே நெடிதாகக் காட்டும் (எ - று). (க)

1270. பெறினென்னும் பெற்றக்கா லென்னு முறினென்னு
முள்ள முடைந்துக்கக் கால்.

(இ - ள்.) நாயகி நம் பிரிவாற்றாமல் மனது நொந்து இறந்துபட்டவழி, நம்மைப் பெறக்கடவளானால் என்ன? பெற்றா லென்ன? பெறாவிட்டா லென்ன? மெய்யுறப் புணர்ந்தாலென்ன? இவையொன்றாலும் பலனில்லை (எ - று).

நான் சொன்ன காலத்துக்குமுன்னே போய்ச்சேர வேண்டும் (எ - ம்). (கo)

## 128. குறிப்பறிவுறுத்தல்

அஃதாவது - தலைமகன் தலைமகள் தோழி என்ற இவருள் ஒருவர்குறிப்பினை ஒருவர்க்கு அறிவுறுத்தல் என்பதாம்.

**1271. கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்க**
**ணுரைக்க லுறுவதொன் றுண்டு.**

பிரிந்துகூடிய தலைமகன் வேட்கைமிகவினை புதுமைபாராட்ட, தலைமகள் 'இது ஒன்றுடைத்' தென்று அஞ்சியவழி, அதனை அவள்குறிப்பா லறிந்து அவன் அவட்குச் சொல்லியது.

(இ - ள்.) உன் மனத்திலே இருக்கிறதை நீ சொல்லாமல் மறைத்தாலும், அதற்கு நின் கண்கள் உடன்படாதே உன்னையல்லாமல் எமக்குச் சொல்லுவதொரு காரியம் உண்டாயிரானின்றது. இனி நீயே அதனை எமக்குத் தெளியச் சொல்லுவாயாக (எ - று). (க)

**1272. கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்**
**பெண்ணிறைந்த நீர்மை பெரிது.**

நாணத்தினால் அவள் அது சொல்லாதவழி, நாயகன் தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) என் கண் நிறைந்த அழகினையும் மூங்கிலையொத்த தோள்களையு முடைய நின் பேதைக்கு மற்றைப் பெண்பாலாரிடத்து நிறைந்த மடமை அவ்வளவின்றி மிகுந்தது (எ - று). (உ)

**1273. மணியுட் டிகழ்தரு நூல்போன் மடந்தை**
**யணியுட் டிகழ்வதொன் றுண்டு.**

இதுவுமது.

(இ - ள்) கோக்கப்பட்ட பளிங்குமணிக்குள்ளேயிருந்து புறத்திலே காண்பிக்கிற நூல்போல, இந்த ஸ்திரீயினுடைய

ஆபரணத்துக் குள்ளேயிருந்து புறத்திலே பிரகாசிக்கிற குறிப்பு ஒன்று உண்டு (எ - று).

அணி - புணர்ச்சியினால் வந்த அழகு. 'அதனை யான் அறியேன் ; நீ யறிந்து சொல்' என்பது கருத்து. (ந)

1274. முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.

இதுவுமது.

(இ - ள்.) அரும்பினுள்ளே இருக்கிற வாசனை புறத்திலே மணந்து தோன்றுவதுபோல, உன்னுடைய பேதை என்னுடனே நகக் கருதும் நகை வாயினுள்ளேயல்லாமல் வெளிப்படாத-தொரு குறிப்பு உண்டு (எ - று).

நகை - புணர்ச்சியின்பத்தால் நிகழ்வது. (ச)

1275. செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து.

இதுவுமது.

(இ - ள்.) நெருங்கிய வளைகளையுடையவள், என்கண் இல்லாததொன்றனை மனத்திலே நினைத்துக்கொண்டு, அது காரணமாக என்னை மறைத்துப்போன குறிப்பு, என் மிகுந்த துக்கத்தினைத் தீர்க்கிற மருந்தொன் றுடைத்து (எ - று).

மறைத்தற்குறிப்பு - தானும் உடன்போக்கு உட்கொண்டது. (ரு)

1276. பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து.

(இ - ள்.) வெகுவாய்ப் பிரிய வசனங்கள் சொல்லி மிகவும் சந்தோஷத்துடனே கூடி இருக்கிறது, பிரிந்துபோகிற துக்கத்துக்கு நாம் பொறுத்துக்கொண்டு இருக்கவேண்டிச் செய்கிறதுபோலும் (எ - று).

பிரிந்துபோதற்குறிப்பினால் செய்கின்றதாகலான், இக் கலவி முடிவில் இன்னாதாகும் (எ - ம்). (சா)

**1277.** தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை.

*(இ - ள்.) குளிர்ந்த துறையினையுடையவன் நம்மை உடம்பினாலே கூடியிருந்தே மனத்தால் பிரிந்தமையை, அவன்-குறிப்பால் அறிதற்குரிய நம்மைப்பார்க்கிலும், இந்த வளைகள் முன்னே அறிந்தன (எ - று).*

*வளைகள் அறிதலாவது- அவர்குறிப்பறிந்து சரீரம் வாடினபடியினாலே, வளைகள் கழன்றுபோதல்.* (எ)

**1278.** நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து.

*(இ - ள்.) நேற்றுப் பிரிந்துபோனார் எம் காதலர்; யாம் பசலைகொண்டு ஏழுநாள் ஆயிற்று (எ - று).*

*பசந்தது ஏழுநாள் ஆவது - நாயகன்குறிப்பாற் பிரிந்து போகப்போகிறானென்று முன்னே யறிந்தது.* (அ)

**1279.** தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது.

*தலைமகளகுறிபபறிநத தோழி அதனை த தலைமகனுக்கு அறிவித்தது.*

*(இ - ள்.) யான் நின் பிரிவைத் தெளிவிக்கவும் தெளியாது 'அவர் பிரிய யான் இங்கே இருப்பின் இவை நில்லா' எனத் தன் வளைகளையும் பார்த்து, அதற்கு ஏதுவாக வாடுமெனத் தன் தோள்களையும் பார்த்து, பிறகு இந்த இரண்டும் நிகழாமல் நீர் நடந்து காக்கவேணும் எனத் தன் பாதங்களையும் பார்த்தாள். அவள் இப்படிச் செய்த குறிப்பு உன்னுடன்கூட வருகிறதாயிருந்தது (எ - று).* (கூ)

**1280.** பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு.

*தலைமகன பிரியாமைக்குறிப்பினைத் தோழிக் கறிவுறுத்தது.*

*(இ - ள்.) ஸ்திரீகள் தங்கள் காமநோயைத் தோழி-களுக்கும் வாயாற் சொல்லாமல் கண்ணினால் சொல்லி, அது*

தீர்க்கவேண்டித் தோழியை வேண்டிக்கொள்ளாமல் கூடப் போக நினைந்து தங்கள் பாதங்களை வேண்டிக்கொள்கிறது, தங்களுக் கியல்பாகிய பெண்மைமேலும் பின்னையும் ஒரு பெண்மையுடைத்து என்று சொல்லுவர் அறிந்தோர் (எ-று).

முல்லை நிலம் முற்றும்.

---

## 129. புணர்ச்சிவிதும்பல்

### மருத நிலம்

*அஃதாவது-தலைமகனும் தலைமகளும் புணர்ச்சிக்கண் விரைதல். மேல், புணர்ச்சிமிகுதியினாலே தலைமகன் பிரிந்துபோகத்தக்கதாக நினைத்த குறிப்பை யறிந்த தலைமகள் அவருடனே போகாமற் பின்னையும் புணர்ச்சியை விரும்புதலால், இது குறிப்பறிவுறுத்தலின்பின் வைக்கப்பட்டது.*

**1281.** **உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்**
**கள்ளுக்கில் காமத்திற் குண்டு.**

'பிரிதற்குறிப்பாயினரோடு நீ பிணங்காமலிருக்கிற காரணம என்ன ?' என்று நகையாடிய தோழிகருத் தலைமகள சொல்லியது.

(இ - ள்.) நினைத்தவுடனே களிக்கிறதும், கண்டவுடனே மகிழ்கிறதும் கள்ளுண்டவர்களுக்கில்லை; காமமுடையவர்களுக் குண்டு (எ - று).

களித்தல் - அறிவழியாதது. மகிழ்தல் - அஃதழிந்தது. (க)

**1282.** **தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்**
**காம நிறைய வரின்.**

இதுவுமது.

(இ - ள்.) ஸ்திரீகளுக்குக் காமம் பனையளவிலும் பெரிதாக உண்டாமாயின், அவரால் தினையளவும் தம் காதலரோடு பிணங்காமை வேண்டப்படும் (எ - று). (உ)

1283. பேணது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காண தமையல கண்.

*இதுவுமது.*

*(இ- ள்.) நம்மை அவமதித்துத் தான் வேண்டினபடியே செய்தாலும், நாயகனை என் கண்கள் காணமல் அமைகின்றன- வில்லை (எ - று).* (௩)

1284. ஊடற்கட் சென்றேன்மற் றேழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு.

*இதுவுமது.*

*(இ - ள்.) தோழீ, காதலரைக் காணுமுன் அவர் செய்த தவற்றை நினைந்து பிணங்கி இருக்கவேண்டுமென்று சென்றேன். அவரைக் கண்டபின் என் நெஞ்சு, பிணங்கு- கிறதை மறந்து, கூடுதற்கே சென்றது (எ - று).* (௪)

1285. எழுதுங்காற் கோல்காணுக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து.

*இதுவுமது.*

*(இ -ள் .) முன்னே எல்லாவடிவையுங் கண்டிருந்து எழுதுகிறபோது அஞ்சனக்கோலினுடைய வியல்பைக் காண- மாட்டாத கண்ணைப் போல, கொண்கனைக் காணுதவிடத் தெல்லாம் அவன் செய்த குற்றங்களைக் கண்டிருந்து, அவனைக் கண்டவிடத்திலே அந்தக் குற்றங்களைக் காணமாட்டேன் (எ - று).* (௫)

1286. காணுங்காற் காணேன் தவருய காணுக்காற்
காணேன் தவறல் லவை.

*இதுவுமது.*

*(இ - ள்.) நாயகனை யான் காணும்பொழுது அவன்குற் றங்களைக் காணேன் ; அவனைக் காணுதபோது அவன் செய்த குற்றங்களைக் காண்கிறதே யல்லாமல் வேறொன்றையும் காணேன் (எ - று).* (௬)

1287. உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து.

இதுவுமது.

(இ-ள்.) தம்மை இழுத்துக்கொண்டுபோகிறது அறிந்து-வைத்து ஓடுகிற தண்ணீரிலே நீஞ்சுகிறவர்கள்செயல் போல, பிணக்கு முடிவுபோகாமை யறிந்துவைத்து நாயகனோடு பிணங்கிப் பெறுகிறது என்ன? (எ - று). (எ)

1288. இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.

தோழி தலைவனுக்குச் சொலலியது.

(இ - ள்.) வஞ்சகா, தன்னை உண்டு களித்தார்க்கு இகழ்ச்சியைச் செய்யினும் அவரால் மேன்மேல் விரும்பப்-படுவதாகிய கள்ளைப் போலும் நின் மார்பு (எ - ம்).

இன்னாதன - நாணின்மை, ஒழுக்கமின்மை முதலாயின.

1289. மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்.

தலைமகன் சொல்லியது.

(இ - ள்) காமஇன்பம் மலரினும் மெல்லிதாயிருக்கும். அப்படி மெல்லிதாயிருக்கிறதை அறிந்து அதனுடைய செவ்வியைப் பெறுவார் உலகத்திலே சிலர் (எ - று). (கூ)

1290. கண்ணிற் றுனித்தே கலங்கினாள் புல்லுத
லென்னினுந் தான்விதுப் புற்று.

இதுவுமது.

(இ - ள்.) காதலி முன்னேயொருநாள், புணரவேண்டிச் சென்ற என்னுடனே, தன் கண்மாத்திரத்தினாலே பிணங்கி, என்னிலும் முந்தித் தான் புணரவேண்டி, அந்தப் பிணக்கை மறந்து என்னுடனே கூடினாள் (எ - று).

கண்ணினாலே பிணங்குதல்-கண் சிவந்து பார்க்கிறது. (கo)

---

## 130. நெஞ்சொடு புலத்தல்

அஃதாவது - பிணங்கக் காரண முண்டானவழியும் பிணங்க நினையாமல், புணரக் கருதுகின்ற நெஞ்சுடனே, தலைமகள் பிணங்கலும், தலைமகன் பிணங்கலுமாம்.

**1291.** **அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே**
**நீயெமக் காகா தது.**

*தலைமகளிடத்திலே தப்புண்டானபோதும் பிணங்க நினையாத நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது.*

**(இ - ள்.)** *நெஞ்சே, அவருடைய நெஞ்சு நம்மை நினையாமல் அவருக்காய் இருக்கிறது கண்டும், நீ எமக்காய் நில்லாமல் அவரை நினைக்கிற காரணம் யாது? (எ - று).*

**1292.** **உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்**
**செறாஅரெனச் சேறியென் னெஞ்சு.**

*இதுவுமது.*

**(இ - ள்.)** *என் நெஞ்சே, மேலும் நம்மிடத்திலே அன்பில்லாதவரை உள்ளவாறறிந்தவிடத்தும் நாம் போனாற் கோபித்துக்கொள்ளார் என்பதுபற்றி, அவர்பக்கல் போகாநின்றாய். அதுவும் அறிவில்லாமையாம் (எ - று).* (உ)

**1293.** **கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ**
**பெட்டாங் கவர்பின் செலல்.**

*இதுவுமது.*

**(இ-ள்.)** *நெஞ்சே, என்னிடத்திலே நில்லாமல் நீ நினைத்தபடியே அவரிடத்திலே போதற்குக் காரணம், கெட்டவர்களுக்கு உறவின்முறையார் உலகத்திலே இல்லை என்னும் நினைவோ? அல்லாமல் உன் சுபாவமோ? சொல்லுக (எ - று).*
*கெட்டதாவது - மனமழிவது.* (ங)

**1294.** **இனியன்ன நின்னொடு சூழ்வாரியார் நெஞ்சே**
**துனிசெய்து துவ்வாய்காண் மற்று.**

*இதுவுமது.*

**(இ - ள்.)** *நெஞ்சே, நீ அவரைக்கண்டபொழுதே இன்பம் அனுபவிக்க நினைக்கிறதல்லாமல், அவர் செய்த குற்றத்தை நினைத்து, அது தீரும்வகை பிணங்கிநின்று, பின்பு இன்பம் நுகரக் கருதாய். அப்படிப்பட்ட உன்னோடு எண்ணுவார் யார்? யான் அது செய்யேன் (எ - று).* (ச)

1295. பெறுஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
மறுஅ விடும்பைத்தென் னெஞ்சு.

*வாயிலாகச் சென்ற தோழி கேட்பத் தலைமகள் சொல்லியது.*

*(இ - ள்.) என் நெஞ்சு காதலரைச் சேராத நாள் அதற்கு வருத்தப்படும் ; சேர்ந்தால், அவர் பிரிந்து போகப்போகிரு ரென்றெண்ணி அப் பிரிவிற்கு வருத்தப்படும்; ஆதலால், எந்நாளுந் துக்கத்தையே யுடையது (எ - று).* (ரு)

1296. தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
தினிய விருந்ததென் னெஞ்சு.

*இதுவுமது.*

*(இ - ள்.) என் நெஞ்சு ஈண்டிருந்தது, காதலரைப் பிரிந்திருந்து அவர்கொடுமைகளை யான் தன்னோடு நினைத்தக்கால், அவ்வளவறிந்து என்னைத் தின்பதுபோலத் துன்பஞ் செய்தற்கே (எ - று).* (சு)

1297. நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
மாணு மடநெஞ்சிற் பட்டு.

*இதுவுமது.*

*(இ - ள்.) தன்னை மறந்த காதலரைத் தான் மறக்கமாட்டாத மாட்சிமையில்லாத மடநெஞ்சுடனே கூடி என் பிராணனிலும் அதிகமாய் இருக்கிற நாணத்தையும் மறந்துவிட்டேன் (எ - று).* (எ)

1298. எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற
முள்ளு முயிர்க்காத னெஞ்சு.

*இதுவுமது.*

*(இ - ள்.) உயிர்மேலே ஆசையுடைய என் நெஞ்சு, நம்மை இகழ்ந்துபோனு ரென்று அவரை நாமும் இகழ்ந்தோமானல் பிறகு நமக்கு இளிவாமென்று நினைந்து, அவரையே நினையாநின்றது (எ - று).* (அ)

1299. துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி.

உணர்ப்புவயின் வாரா வூடற்கண் தலைமகள் சொல்லியது.

(இ - ள்.) ஒருவருக்குத் துக்கம் வந்த காலத்து அது தீர்த்தற்குத் தமக்கு உரித்தாயிருக்கிற நெஞ்சு துணையாகாவிட்டால், வேறு துணையாவார் ஒருவருமில்லை (எ - று). (௯)

1300. தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி.

இதுவுமது.

(இ - ள்.) தமக்குரித்தாகிய நெஞ்சு ஒருவர்க்கு உறவல்லாவிட்டால், மற்றவர்கள் உறவல்லராதல் சொல்லவேண்டுமோ? (எ - று). (௧0)

---

## 131. புலவி

அஃதாவது - இருவர்நெஞ்சும் புணர்ச்சிவிதும்பாது பிணங்க நினைத்தவழி, ஒருவரோடொருவர் பிணங்குகிறதாம்.

1301. புல்லா திராஅப் புலத்தை யவருறும்
அல்லனோய் காண்கம் சிறிது.

நாயகனைச் சேவித்த தோழி தலைமகளோடு நகையாடிச் சொல்லியது.

(இ - ள்.) நீ அவரோடு விரைவில் கூடாதே பிணங்கிஇரு. அவருடைய விரகதுக்கத்தை நாம் சிறிது பார்ப்போம். (எ - று). (௧)

1302. உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல்.

புலவியொழிந்து வாயில நேரும்வகை அவள் சொல்லியது.

(இ - ள்.) பிணக்குக் கலவியின் பத்துக்கு இனிதாயிருக்கும்; அதுவும் கலவிக்கு வேண்டினமட்டிலே செய்யவேணும். அப்படிச் செய்யாமற் பின்னையும் பிணங்கினல், இன்பமில்லாமற் போம். அதெப்படியென்னின், கறிக்கு உப்பு

மட்டாய்ப் போட்டால் ருசியாயிருக்கும்; உப்பு அதிகமானால் ருசியில்லாமற் கெட்டுப்போம் (எ - று). (உ)

**1303.** **அலந்தாரை யல்லனோய் செய்தற்றூற் றம்மைப்**
**புலந்தாரைப் புல்லா விடல்.**

பரத்தையரிடத்தினின்றும வந்த தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லியது.

(இ - ள்.) தம்மைச் சேராமல் வாடியிருக்கிற ஸ்திரீகளைப் பிணக்கு நீக்கக் கூடாமற் புருஷர்கள் செல்லுதல், முன்னே துக்கப்பட்டுக் கெட்டவர்களைப் பின்னையும் வெகுதுக்கங்களைச் செய்வித்தாற்போலும் (எ - று). (ங)

**1304.** **ஊடி யவரை யுணராமை வாடிய**
**வள்ளி முதலரிந் தற்று.**

இதுவுமது.

(இ - ள்). பிணங்கியிருக்கிற பரத்தையரைப் பிணக்குத் தீர்த்துக் கலவிசெய்யாதொழிதல், தண்ணீரில்லாமல் வாடுகிற கொடியை வேரறுத்ததோடு ஒக்கும் (எ - று). (ச)

**1305.** **நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை**
**பூவன்ன கண்ணா ரகத்து.**

தலைமகளைப் பிணக்குநீக்கிக் கூடிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்) நற்குணங்களையே யுடைய தலைவர்க்கும் அழகாவது, பூவைப்போன்ற கண்களை உடைய நாயகிகளின் நெஞ்சிலே உண்டாகிற பிணக்குமிகுதி யன்றே (எ - று). (ரு)

**1306.** **துனியும் புலவியு மில்லாயிற் காமம்**
**கனியும் கருக்காயு மற்று.**

இதுவுமது.

(இ-ள்.) முதிர்ந்த பிணக்காகிய கோபமும் இளைய பிணக்காகிய புலவியும் இல்லாவிட்டால், காமம் செவ்வி முதிர்ந்த பழமும் இளங்காயும் போலும் (எ - று).

இவ்விரண்டும் வேண்டும் என்று வியந்து கூறியவாறு. (சு)

1307. ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று.

இதுவுமது.

(இ - ள்) இன்பத்தைக் கொடுக்கின்ற இந்தப் பிணக்கின்கண்ணே எனக்கொரு துன்பமும் உண்டாகாநின்றது : இனிப் புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோ என்று கருதுதலான், (எ - று). (எ)

1308. நோத லெவன்மற் றுநொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி.

தலைமகன்கூற்று.

(இ - ள்.) 'இவர் நம்முடைய நிமித்தமாக நொந்தார்' என்று அந்த விசாரத்தை அறியும் அன்புடையார் இல்லாதபோது, ஒருவர் விசாரப்படுகிறதினாலே என்ன பயன்? (எ - று). (அ)

1309. நீரும் நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது.

இதுவுமது.

(இ - ள்.) பிராணனுக்கு வேண்டியிருக்கிற நீரும் நிழலிலேஇருந்ததானால் மெத்தவும் நன்றாய்ச்சீவனுக்குத் தாகத்தை யடக்கும். அதுபோல, பிணக்கும் அன்புடையவர்களிடத்திலே நல்லதாம்; அன்பு இல்லாதவர்களிடத்திலே நன்றாகாது (எ - று). (கூ)

1310. ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா.

இதுவுமது.

(இ - ள்.) தான் பிணங்கிஇருக்கவும் அதனைத் தீராமற் சும்மா இருக்கிறவருடனே கூடவேணும் என்று என் நெஞ்சு முயலுதற்கு ஏது ஆசைமாத்திரமே (எ - று).

அன்பும் அருளும் இல்லாதாரைக் கூடுவோமென்று முயலுதல் வியர்த்தமாம் (எ - ம்). (க0)

—

## 132. புலவிநுணுக்கம்

அஃதாவது - தலைமகனும் தலைமகளும் ஓர் அமளி-யிலே கூடியிருக்கிறபோது, அவனிடத்திலே பிணங்கு-கிறதற்கு ஒரு காரணமும் இல்லாவிட்டாலும், காதல்-மிகுதியினாலே ஒரு காரணம் உண்டாக்கிக்கொண்டு அதனை அவன்மேலேற்றிப் பிணங்கியிருத்தல்.

**1311.** பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு.

உலாவித்திரிந்த தலைமகன் பள்ளியறையிலே வந்தானாக, தலைமகள் சொல்லியது.

(இ - ள்.) பெண்ணியல்பை யுடையாரெல்லாரும் தங்கள் கண்களினாலே நின் மார்பைப் பாராநின்றார்கள். ஆதலால், அவர்கள்பார்வையினாலே எச்சிலா யிருக்கிற உன் மார்பை யான் தீண்டேன் (எ - று). (க)

**1312.** ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து.

தலைமகள் தோழிக்குக் கூறியது.

(இ - ள்.) யான் தம்மோடு பிணங்கிப் பேசாமல் இருக்கிறது கண்டு காதலர் தும்மினார்: தம்மைச் சதாயுசு என்று சொல்லிப் பேசுவோம் என்று கருதி, (எ - று). (உ)

**1313.** கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று.

தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

(இ - ள்.) வளையமாலையைச் சூடினாலும் கோபிச்சுக் கொள்ளுகிறாள் : இல்லாத பூவணிகிறது ஒருத்திக்குக் காட்ட-வேண்டி என்று (எ - று).

இப்படிப் பிணங்குகிறவளுக்குக் காரணம் தானே யுண்டாம் (எ - ம்). (ங)

**1314.** யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினும் என்று.

இதுவுமது

(இ - ள்.) ('காமம் நுகர்தற்குரிய இருவராயினும் யாவரினும் யாம் மிக்க காதலை உடையேம்' என்பது கருதி) "யாரினும் காதலை யுடையேம்" என்றேனாக, (உன் தோழி அது கருதாது) ('என்னால் காதலிக்கப்பட்ட ஸ்திரீகள் எல்லாரிலும் யான் நின்மேல் உற்ற காதலை உடையேனென்றேனாகக் கருதி), (அம் மகளிர்) யாரினும் யாரினும் எங்கண் காதலுடையராயினீர் என்று சொல்லிப் பிணங்கினாள்.

யான் அன்பு மிகுதியாற் சொல்லியதனைக் கருத்து வேறுபடக் கொண்டதல்லது பிறிது காரணமில்லை (எ - ம்). (௪)

1315. இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.

இதுவுமது.

(இ - ள்.) காதல்மிகுதியினால் இந்தப் பிறப்பிலே யாம் பிரியேம் என்று யான் சொல்லக் கேட்டு மறுமைப் பிறப்பிலே பிரிவேன் என்றெண்ணித் தன் கண்கள் நிறைய நீர்சோர வழுதாள் (எ - று). (ரு)

1316. உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்.

இதுவுமது.

(இ-ள்.) (பிரிந்த காலத்து நின்னை இடைவிடாது நினைந்தேனென்னுங் கருத்தினால்) "உன்னை நினைத்தேனென்று சொன்னேன். அதுகேட்டு "ஒருகால் மறந்து ஒருகால் நினைத்திரோ" வென்று சொல்லிப் பிணங்கினாள் (எ - று). (௬)

1317. வழுத்தினா டும்மினே னாக அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று.

இதுவுமது.

(இ - ள்.) (கூடியிருக்கையிலே) நான் தும்மினேனென்று கண்டு வாழ்த்தினாள். (அப்படி வாழ்த்தினவள்) திரும்பி "உம்மை யார் நினைத்தார்களோ? அதனாலே தும்மினீர்" என்று கூறிப் புலந்து அழுதாள் (எ - று). (எ)

**1318.** தும்முச் செறுப்ப வழுதா ணுமருள்ளல்
எம்மை மறைத்திரோ வென்று.

*இதுவுமது.*

*(இ - ள்.) எனக்குத் தும்மல் வந்தது. அதுகண்டு யார் நினைத்தா ரென்று பிணங்கப்போகிறு ளென்று அந்தத் தும்மலை அடக்கினேன். அப்படி அடக்கியும் "உம்மை நினைத்தவளை மறைக்க வேண்டித் தும்மலை அடக்கினீர்" என்று பிணங்கி அழுதாள் (எ - று).* (அ)

**1319.** தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ரிந்நீர ராகுதி ரென்று.

*இதுவுமது.*

*(இ - ள்.) இப்படிப் பிணங்கின தன்னை வணங்கிக்கொண் டாடுகிறபோதுங் கோபிப்பள்: "மற்ற ஸ்திரீகள் பிணங்கின-போது இப்படி வணங்கிக் கொண்டாடுவீர்" என்று சொல்லி (எ - று).* (கூ)

**1320.** நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று.

*இதுவுமது.*

*(இ - ள்.) என் வசனங்களையும் செய்கைகளையும் கண்டு தான் கோபிக்கிறதினுலே பேசாமல் இருந்து, தன் அவயவங்களு டைய ஒப்பில்லாத அழகை நினைந்து அவற்றையே பார்த்தா லும் என்னைக் கோபிப்பள்: "எந்த ஸ்திரீயை நினைந்தோ என்னை அவமதித்துப் பார்த்தீர்" என்று சொல்லி (எ - று).*

*தான் எல்லாரினும் அதிகமான அழகென்று பார்க்கவும், தன்னை அவமதித்துப் பார்க்கிறு ரென்று பிணங்கிஞள். (எ-ம்).*

---

## 133. ஊடலுவகை

***அஃதாவது - அப்டிப்பபட்ட பிணக்கினுலே தமக்கு இன்பம் பிறந்தவழி, அதற்கு ஏதுவாகிய பிணக்கைத் தலைமகளும் தலைமகனும் உவத்தலாம்.***

**1321.** இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு.

*தலைமகள் காரணமின்றிப் பிணங்கினதைக் கேட்ட தோழி "இப்படி நீ பிணங்கினது என்?" என்று கேட்டவட்குத் தலைவி சொல்லியது.*

(இ - ள்.) நாயகனிடத்தில் தப்பில்லாவிட்டாலும் நமக்கு அவர் தலையளி செய்கின்ற முறை அவரோடு ஊடுதலை விளைக்க வற்றாகின்றது (எ - று). (க)

**1322.** ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்.

*தலைமகள் கூற்று.*

(இ - ள்.) பிணங்குகிறது காரணமாக நம்மிடத்திலே யுண்டாகிற சிறிய துனியினாலே காதலர் செய்யும் தலையளி வாடுமானாலும் அது பெருமையடையும் (எ - று). (உ)

**1323.** புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து.

*இதுவுமது.*

(இ - ள்.) நிலத்துடனே நீர்கலந்தாற்போல ஒற்றுமையுடைய காதலரிடத்திலே பிணங்குகிறதுபோல நமக்கு இன்பம் தருவதொரு தேவலோகம் உண்டோ? இல்லை (எ-று).

**1324.** புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை.

*"அப் புலவி இனி எதனாலே நீங்கும்?" என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.*

(இ-ள்) காதலரைப் புல்லிக்கொண்டு பின் விடாமைக்கு ஏதுவாகிய அப் பிணக்கினிடத்திலே யுண்டாம், என் மனத்தைக் கெடுக்கும் ஆயுதம் (எ - று). (ச)

**1325.** தவறில ராயினுந் தாமவீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து.

*தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.*

(இ - ள்.) புருஷர் தம்மிடத்திலே தப்பில்லாவிட்டாலும் தப்புஉள்ளவர்கள்போலே பிணங்கப்பட்டுத் தாம் விரும்பிய ஸ்திரீகளுடைய தோள்களைக் கூடப்பெறாமல் வருந்துகிற-போதும், அவருக்கு அத்தன்மையதோ ரின்பம் பயத்தலுடையது (எ - று). (ரு)

**1326.** உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது.

இதுவுமது.

(இ - ள்.) சீவன்களுக்கு மேல் உண்கிறதிலும் முன் உண்டு ஜெரிக்கிறதே சுகமாவதுபோல, காமத்துக்கு மேல் புணருகிறதிலும் பிணங்கிஇருக்கிறது இன்பமாம் (எ-று). (சா)

**1327.** ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னும்
கூடலிற் காணப் படும்.

இதுவுமது.

(இ - ள்.) காமம் அனுபவிக்கும் இருவருள் பிணங்கு-கிறதில் தோற்றவர் வென்றவராம். அது அப்போது அறியப் படாதாயினும், புணருகிறபோது அவர்களால் அறியப்-படும் (எ-று). (எ)

**1328.** ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு.

இதுவுமது.

(இ - ள்.) இப்பொழுது இவள்முகம் வெயர்க்கக்கூடிய கலவியின்கண் உண்டாய இன்பத்தைப் பிறகு அவள் பிணங்கி யாம் பெறவல்லேமோ? (எ - று). (அ)

**1329.** ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா.

இதுவுமது.

(இ - ள்.) நல்ல இழையினையுடையவள் என்னோடு இன்னும் பிணங்கவேணும். அந்தப் பிணக்கைத் தீர்க்கிறதற்கு இந்த இராத்திரியானது வெகுகாலம் நீட்டிக்கவேண்டும் (எ - று).

அவள் பிணங்குகிறதற்கும் யான் வணங்கிப் பிணக்குத் தீர்த்தற்கும் பொழுது விடியாமல் இருக்கவேணும் (எ - ம்).

**1330.** **ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்**
**கூடி முயங்கப் பெறின்.**

இதுவுமது.

(இ - ள்.) காமம்அனுபவிக்கிறதற்கு இன்பமாவது அதற்குரியவர் ஆராமையாலே பிணங்கி இருக்கிறதாம்: அளவறிந்து பிணக்கு நீங்கித் தம்முட் கூடிமுயங்குதல் கூடுமாயின் அம்முயக்கம் அப் பிணக்கின்பமாம் (எ - று).

அவ் விரண்டின்பமும் யான் பெற்றேன் (எ - ம்). (௩0)

ஈண்டுப் பிரிவினை வடநூன்மதம்பற்றிச் செலவு ஆற்றாமை விதுப்புப் புலவி என நால்வகைத்தாக்கிக் கூறினார். அவற்றுட் செலவு பிரிவாற்றாமையுள்ளும், ஆற்றாமை படர்மெலிந்திரங்கல்முதல் நிறையழிதல் ஈறாயவற்றுள்ளும், விதுப்பு அவர்வயின்விதும்பன்முதற் புணர்ச்சிவிதும்பல் ஈறாயவற்றுள்ளும், புலவி நெஞ்சொடுபுலத்தல்முதல் ஊடலுவகை ஈறாயவற்றுள்ளுங் கண்டுகொள்க. அஃதேல், வடநூலார் இவற்றுடனே சாபத்தினாய நீக்கத்தினையுங் கூட்டிப் பிரிவினை ஐவகைத்து என்றாரா லெனின்—அஃது, அறம் பொருள் இன்பம் என்னும் பயன்களுள் ஒன்றுபற்றிய பிரிவன்மையானும், முனிவராணையான் ஒருகாலத்து ஒருகுற்றத்துள தாவதல்லது உலகியல்பாய் வாராமையானும் ஈண்டு ஒழிக்கப்பட்டது என்க.



# திருக்குறள் முதற்குறிப் பகராதி

[எண் - குறள் எண்]

சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை - 14